உலகத் தமிழ்ச் சங்கம்,
மருத்துவர் தங்கராசு சாலை,
மதுரை,தமிழ்நாடு, இந்தியா.




தமிழ், தமிழர் - படைப்பும் ஆளுமையும்

E-ISSN : 2584-1238

மார்ச் 2025







# உலகத் தமிழ்ச் சங்கம், மதுரை

முத்தரசி — கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்,
மதுரை - 625016, தமிழ்நாடு, இந்தியா

அஞ்சிறைத் தும்பி இலக்கிய வட்டம், விருதுநகர்
மருதம் கலை இலக்கிய ஆய்வு மையம், கும்பகோணம்

# தமிழ், தமிழர் - படைப்பும் ஆளுமையும்

## பன்னாட்டுக் கருத்தரங்கம்

## தொகுதி - 1

வெளியீடு
உலகத் தமிழ்ச் சங்கம், மதுரை





# உலகத் தமிழ்ச் சங்கம், மதுரை

**அஞ்சிறைத் தும்பி இலக்கிய வட்டம், விருதுநகர்**
**மருதம் கலை இலக்கிய ஆய்வு மையம், கும்பகோணம்**

மற்றும்

**முத்தரசி – கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்**

E-ISSN: 2584-1238

# தமிழ், தமிழர் - படைப்பும் ஆளுமையும்

## பன்னாட்டுக் கருத்தரங்கம்

## தொகுதி – 1

**பதிப்பு**
**உலகத் தமிழ்ச் சங்கம், மதுரை**

**கருத்தரங்கத் தலைவர்**
**முனைவர். ஔவை ந. அருள்**
இயக்குநர் (பொ), உலகத் தமிழ்ச்சங்கம், மதுரை

**பதிப்புக்குழு**

**முனைவர்.சு.தங்கமாரி,**
முதன்மை ஆசிரியர்,
முத்தரசி – கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்,
மதுரை

**முனைவர் ஜ.ஜான்சிராணி,**
ஆய்வு வளமையர்,
உலகத் தமிழ்ச் சங்கம்,
மதுரை

**முனைவர் க.சோமசுந்தரி**
ஆய்வறிஞர்,
உலகத் தமிழ்ச் சங்கம்,
மதுரை

**முனைவர் செ.கணேசமூர்த்தி**
நிறுவனர்,
மருதம் கலை இலக்கிய ஆய்வு மையம்,
கும்பகோணம்

**முனைவர் சு.வினோத்**
செயலர், அஞ்சிறைத்தும்பி இலக்கிய வட்டம்,
விருதுநகர்

**MUTHTHARASI – Art Literary Culture Tamil Journal**
**E-ISSN: 2584-1238**

# நூல் விவரம்


| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | தமிழ், தமிழர் – படைப்பும் ஆளுமையும் |
| முதற்பதிப்பு | : | மார்ச், 2025 |
| பதிப்புரிமை | : | தங்கமாரி சுடலை,<br>12/6, மேலப்பொன்னகரம்<br>8வது தெரு,<br>4வது குறுக்கு, ஆரப்பாளையம்,<br>மதுரை – 625016. |
| வெளியீடு | : | உலகத் தமிழ்ச் சங்கம்,<br>மதுரை |
| மின்னஞ்சல் முகவரி | : | laks@muththarasi.org |
| வலைதளம் | : | https://muththarasi.org/ |
| E.ISSN No | : | 2584 – 1238 |
| புத்தக அளவு | : | A4 |
| பக்கங்கள் | : | 243 |
| விலை | : | 270/- |
| அச்சிட்டோர் | : | லேசர் பாயிண்ட்,<br>வசந்த நகர் முதன்மைச் சாலை,<br>மதுரை – 625 003 |







# உலகத் தமிழ்ச் சங்கம் மதுரை

மருத்துவர் தங்கராசு சாலை, சட்டக் கல்லூரி அருகில், மதுரை – 625020.
தொலைபேசி எண்: 0452 – 2530766; நிகரி: 0452 – 2530799; மின்னஞ்சல் முகவரி: utsmdu1@gmail.com;
வலைத்தளம்: www.utsmdu.org

---

ஔவை அருள்
இயக்குநர் (மு.கூ.பொ)

நாள்: 24.03.2025

'நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும் பண்புடையாளர் தொடர்பு' என்ற அய்யன் திருவள்ளுவரின் அருங்குறளின் வழியில் முத்தரசி கலை, இலக்கியப் பண்பாட்டு ஆய்விதழும், மருதம் கலை இலக்கிய ஆய்வு மையமும் அஞ்சிறைத்தும்பி இலக்கிய வட்டமும் மதுரை உலகத் தமிழ்ச் சங்கத்துடன் "தமிழ் தமிழர் படைப்பும் ஆளுமையும்" என்ற பன்னாட்டுக் கருத்தரங்கத்தினை இணையற்ற முறையில் இணைந்து நடத்துவதில் பெருமகிழ்வு அடைகிறேன்.

இக்கருத்தரங்கில் எழுச்சி வாய்ந்த எழுபது கட்டுரைகளை வழங்கியதை பாராட்டுகிறேன்.

நல்லாவின் பால் முழுதும் கன்றுக்கில்லை:
நறும்பூவின் மணமுழுதும் சோலைக்கில்லை:
நெல்லாகும் கதிர் முழுதும் நிலத்துக்கில்லை:
நிறைகின்ற நீர் முழுதும் குளத்துக்கில்லை:
பல்லாரும் கனி முழுதும் மரத்துக்கில்லை:
பண்ணரம்பின் இசை முழுதும் யாழுக்கில்லை:
எல்லாமே பிறர்க்குழைக்கக் காணுகின்றேன்:
என் வாழ்வும் பிறர்க்குழைக்க வேண்டும் வேண்டும்!!"

என்ற மூதறிஞர் செம்மல் வ.சுப. மாணிக்கனாரின் தொடருக்கு ஏற்ப கருத்தரங்கங்கள், அறிஞர்கள் வாயிலாக அறிவுச் செல்வத்தை பிறருக்கு வழங்கி செழிக்க வேண்டுகிறேன்.

(ந. அருள்)

# வாழ்த்துரை



தமிழ் மொழியையும் அதன் இலக்கிய செழுமையையும் உலக அளவில் முன்நிறுத்துவது என்பது ஆய்வாளர்களுக்கு முன் உள்ள முதன்மையான கடமை ஆகும். அவ்வகையில் தமிழை வாழ்வாகக் கொண்ட தமிழர்களை இலக்கியமாக்கிய படைப்பாளர்களின் ஆளுமையை நெருங்கி அறிவதற்கும் உலகிற்கு அறிவிப்பதற்கும் இக்கருத்தரங்கம் உகந்ததாக உள்ளது. ஆண்டு தோறும் மலர்ந்து மணம் வீசும் ஆய்விதழாக முத்தரசி திகழ்கிறது.

முத்தரசி – கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ் "தமிழ் தமிழர் - படைப்பு ஆளுமை" என்ற பொருண்மையிலான பன்னாட்டு ஆய்வுக் கருத்தரங்கை மதுரை உலகத் தமிழ்ச்சங்கத்துடன் இணைந்து நடத்திட திட்டமிட்டது பொருத்தமானது. மேலும், மருதம் கலை இலக்கிய ஆய்வு மையத்தையும் எங்கள் அஞ்சிறைத்தும்பி இலக்கிய அமைப்பையும் உடன் இணைத்துக் கொண்டு இக்கருத்தரங்கை நிகழ்த்துவது நெகிழ்வும் நிறைவும் அளிக்கிறது. இக்கருத்தரங்கில் கட்டுரை வழங்கி சிறப்பித்த சான்றோர்கள் அனைவருக்கும் வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

வாழ்த்துகளுடன்

முனைவர் சு.வினோத்

செயலாளர், அஞ்சிறைத் தும்பி இலக்கிய வட்டம், விருதுநகர்

## வாழ்த்துரை

உலக மொழிகளுள் தொன்மையானது தமிழ். அது பழமையான வரலாற்றையும், இலக்கண இலக்கிய வளத்தையும் கொண்டது. தமிழ் இலக்கியங்கள் காலம் தோறும் பல்வேறு வடிவங்களைப் பெற்று வந்துள்ளது அவ்விலக்கியங்கள் தமிழரின் வாழ்வியலைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. பண்பாட்டின் அடையாளமாகவும் திகழ்கின்றன. இன்றைய மனித சமுதாயம் வளம் பெற நல்ல வழிகாட்டியாகவும் திகழ்கின்றன. அவற்றை வெளிக்கொணரும் வகையில், மதுரை, உலக தமிழ் சங்கமும், முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழும், விருதுநகர், அஞ்சிறைத்தும்பி இலக்கிய வட்டமும், கும்பகோணம், மருதம் கலை இலக்கிய ஆய்வு மையமும் இணைந்து '**தமிழ், தமிழர் - படைப்பும் ஆளுமையும்**' என்ற பொருண்மையில் பன்னாட்டுக் கருத்தரங்கினை ஏற்பாடு செய்திருப்பது வரவேற்கத்தக்கது. கருத்தரங்கிற்குக் கட்டுரையாளர்களிடமிருந்து தரமான கட்டுரைகளைப் பெற்று முத்தரசி-கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழில் சிறப்பு மலராக வெளியிட்டு ஆவணப்படுத்தியிருக்கின்ற ஒருங்கிணைப்பாளர்கள் மற்றும் தொகுப்பாளர்கள் அனைவருக்கும் பாராட்டுக்கள். இப்பணி எதிர்கால இளைய சமுதாயத்திற்கு வழிகாட்டியாகத் திகழும் என்பதில் ஐயமில்லை. இந்நூல் ஆய்வு உலகத்திற்குச் சிறந்த வரவாகும். தரமான கட்டுரைகளை வழங்கி இருக்கின்ற பேராசிரியர்களுக்கும் ஆய்வாளர்களுக்கும் வாழ்த்துக்கள்.

வாழ்த்துகளுடன்

**முனைவர் செ.கணேசமூர்த்தி,**

நிறுவனர்,

மருதம் கலை இலக்கிய ஆய்வு மையம், கும்பகோணம்

# பதிப்புரை

**"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்**

**மெய்ப்பொருள் காண்பது அறிவு."**

உலகின் மூத்தக் குடிகளுள் ஒன்றாய்த் திகழ்கின்ற தமிழ்க்குடியின் பெருமையானது பன்னெடுங்காலமாகப் பெரியோர்களாலும் சான்றோர்களாலும் தொடர்ந்து எடுத்தியம்பப்பட்டு வருகின்றது. இனித்த நறும் பாட்டும்தொகையும், எந்நாளும் பொய்யாத் திருக்குறளும் அறநூல்களும், படித்தவேளை கண்பனிக்கும் காப்பியக் கூட்டமுதும், மெய்சிலிர்க்கும் பாசுரமும் திருமுறையும் எனத் தொடர்ந்து குன்றாப் பெரும்புகழினைப் பரப்பி நிற்கும் தமிழன்னையின் தொடர் பயணம் இன்றும் தொடர்வதில் வியப்பில்லை.

அந்தப் பன்னெடுங்கணக்கில், இப்பொழுது மதுரை, **உலகத் தமிழ்ச் சங்கம்** முன்னெடுத்துள்ள பணிகள் ஏராளம். அதில் சிறுதுளிப் பணியாக, **முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழாய்விதழ்** - கும்பகோணம், **மருதம் கலை இலக்கிய ஆய்வு மையம்** - விருதுநகர், **அஞ்சிறைத்தும்பி இலக்கிய வட்டம்** ஆகிய மும்மணிகளை இணைத்து நால்வர் நான்மணி மாலையாக, "**தமிழ், தமிழர் - படைப்பும் ஆளுமையும்**" என்ற சிறப்பிதழ் இன்று மலர்கின்றது. குழந்தையின் தவழும் முயற்சியாகத் தொடங்கிய இந்தப் பணியில் 82 தமிழாய்ந்த சான்றோர்களின் கைமணம் வீசுகின்றது. தொல்லியல் ஆய்வறிஞர்கள் தற்பொழுது இரும்பின் காலம் கண்டு தமிழரின் வரலாற்று எல்லைப் பரப்பினை 3,500 ஆண்டுகள் நீட்டித்ததைப் போல, பரந்து கிடக்கின்ற தமிழ்க்கடலில் தங்களுக்கு எட்டிய இன்முத்துக்களை எடுத்து எங்களிடம் தந்துள்ளனர். அதனைக் கோர்த்த பணி மட்டுமே எங்களுடையது.

இந்தக் கருத்தரங்க முயற்சிக்குத் தன் இடையறாத பணியிலும் ஆக்கமும் ஊக்கமும் அளித்த **மதுரை, உலகத் தமிழ்ச் சங்க**த்தின் இயக்குநர்(பொ) **முனைவர் ஔவை ந.அருள்** அய்யாவிற்கும், சங்கத்தின் ஆய்வறிஞர் மற்றும் ஆய்வு வளமையருக்கும் நன்றிகள் பல. உறுதுணையாய் நின்ற **முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழாய்விதழின் ஆசிரியர்க்குழு**விற்கும், **கும்பகோணம், மருதம் கலை இலக்கிய ஆய்வு மையத்தின் நிறுவன**ருக்கும், விருதுநகர், **அஞ்சிறைத்தும்பி இலக்கிய வட்டத்தின் பொறுப்பாளர்**களுக்கும் இச்சிறப்பிதழ்ப் பதிப்புக் குழுவின் சார்பாக நன்றிகளை உரித்தாக்கிக் கொள்கின்றோம். ஆன்றவிந்த சான்றோர் பெருமக்களாகிய தமிழர்களின் கையில் இவ்வாய்வுக்கோவை சிறப்பு செய்யும் என்று நம்புகின்றோம்.

நன்றி,

பதிப்புக்குழு

# பொருளடக்கம்

MUTHTHARASI – Art Literary Culture Tamil Journal
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
SPL-EDITION – IV VOLUME - 1
மார்ச்சு-2025 E-ISSN: 2584 - 1238

# 1. சங்க இலக்கியங்களில் முருகன்

**முனைவர் ப. விக்னேஸ்வரி,**
இணைப் பேராசிரியர்,தமிழ்த்துறை
நேரு கலை மற்றும் அறிவியல் கல்லூரி
கோயம்புத்தூர் 641105
vigneshwari.p@nehrucolleges.com - 9976576871

**ஆ. பிரபாகரன்**
உதவிப்பேராசிரியர்,தமிழ்த்துறை,
நேரு தொழில்நுட்பக் கல்லூரி,
காளியபுரம்,கோயம்புத்தூர்
nitprabakaran.a@nehrucolleges.com - 9159706380

DOI 10.5281/zenodo.15061858.

**Abstract:**

**The lifestyle of the Tamils has been evident from the Sangam period to the present day. The main contribution to this is the uniqueness of Tamil culture, tradition, culture, tradition, worship, etc. It is evident that worship has been a part of life. Although the worship is different, whether it is the worship of the main deity or the worship of minor deities, Murugan, who is the main deity, is called the 'Tamil God'. This is also reflected in the literature. The purpose of this article is to know the Murugan and the worship of Murugan through literature.**

**Keywords: Sangam Period - Murugan - Tamil Culture - Worship**

**முன்னுரை.**

மனிதர்களை அறவழியில் அழைத்துச் செல்வது இலக்கியங்கள்தான். சங்க காலம் இருந்து தற்காலம் வரை வாழ்வியல் நெறிமுறைகளையும், வழிமுறைகளையும் இலக்கியங்கள் போதித்த வண்ணம் உள்ளன. மக்கள் இலக்கியங்களை போற்றுதல் மூலம் அறவழியில் கொண்டு செல்லும் கடவுள்களையும் போற்றுகின்றனர். மனிதன் மனிதனாக வாழ இலக்கியங்கள் கூறும் வழிபாடுகளை இன்றும் மனிதர்கள் பின்பற்றுவது நாம் அறிந்ததே. 'கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன் தோன்றிய மூத்தக் குடி தமிழ்க் குடி" இந்தச் சிறப்புக்கு இணங்க தமிழ் குடிகளின் கடவுள் என்று சிறப்பிக்கப்படும் முருகனை அறிவது இவ்வாய்வின் நோக்கமாகும் அதில் **முருகனின் பெயர் காரணம், இலக்கியங்களில் முருகன், முருகன் வழிபாடுகள்** போன்ற தலைப்புகளில் இவ்வாய்வினைக் காணலாம்.

**முருகன் பெயர் காரணம்.**

முருகு என்ற சொல்லிற்கு அழகு, இளமை என்று பொருள்படும். ஆகவே, முருகன் என்றால் அழகன் என்பதாகும். சேயோன். சேய் என்றால் குழந்தை அல்லது மகன் என்பதாகும் முருகன் குழந்தையாகக் காட்சியளிப்பதால் இந்தப் பெயர் காரணம் வந்தாயிற்று. **வேலுகிறான்** வள்ளியை மணந்தாலும் அசுரர்களை அழிக்கும் முதலில் வேல் கொண்டு தோன்றியதாலும் வேலூர் ஆன் எனப் பெயர் பெற்றார். முருகப்பெருமான் அவ்விடம் தான் இன்று தமிழகத்தில் உள்ள வேலூர். வேலூரைச் சுற்றிலும் குன்றுகளும் குமரனின் கோவில்களாகவே காணப்படுகின்றன. வேலூர் - வள்ளிமலை என்ற இடத்தில் தான் வள்ளியை முருகன் மணந்தார் கார்த்திகேயன் - கார்த்திகைப் பெண்களால் பாலுட்டி சீராட்டி வளர்க்கப்பட்டவன்.

**சண்முகன்** - ஆறு முகங்களை ஒன்றாக அன்னை பராசக்தி சேர்த்து அழகுமுகமாக ஆனதால் சண்முகம் அல்லது திருமுகம் எனப்படுகிறது. கதிர்காமன் - வள்ளியை வேடுவர் குலத்தில் இருந்து காதல் திருமணம் செய்து கொள்ளும்போது அழகிய காமதேவனாகவும் முருகன்.

**வடிவேலன்** - வேலை ஏந்திய அழகிய முருகனை இத்திருபெயரால் அழைப்பார்கள்.

**சுப்ரமணியன்** - மேலான பிரமத்தின் பொருளாக இருப்பவன். அல்லது இனியவன் என்றும் பொருளாகும். சேந்தன் - தன்னை வணங்கும் பக்தர்களை இன வெறுபாடின்றி ஒன்றினைந்து சேர்த்து வைப்பதால் சேந்தன் என பெயர்.

மயில்வாகனன் - மயிலை தனது வாகனமாக கொண்டவன். வேந்தன் - மலை அரசன் , மலை வேந்தன் போன்ற பல பெயர்களால் வழங்கப்படுகிறார்.

**முருகனுக்குப் பல்வேறு பெயர்கள் உண்டு அதில் 42 பெயர்கள் வருமாறு:**

அரன்மகன், ஆசான், ஆண்டலைக் கொடியுயர்த்தோன், ஆறுபடை வீடுடையோன், ஆறுமகன், கங்கைமைந்தன், கடம்பன், கந்தசாமி, காங்கேயன், கார்த்திகேயன், குகன், குமரன், குழகன், குறிஞ்சிவேந்தன், சரவணபவன், சரவணன், சாமி, சிலம்பன், சுப்ரமணியன், சுரேஷன், சூர்ப்பகைவன், செட்டி, செந்தில்நாதன், செவ்வேள், சேந்தன், சேய், சோமாஸ்கந்தன், சோமாஸ்கந்தன், தாரகற்செற்றோன், தெய்வானைகாந்தன், புலவன், மஞ்ஞையூர்தி, மயில்வாகனன், மாயோன்மருகன், முத்தையன், முருகன், வரைபகவெறிந்தோன், வள்ளற்பெருமான், வள்ளிமணாவாளன், விசாகன், வேலினுக்கிறை, வேள். என முருகனுக்கு பல்வேறு பெயர்கள் உண்டு

**சங்க இலக்கியம் முழுவதும் முருகன் :**

> **“உருவப்பல்தேர்இளையோன்சிறுவன்**
> **முருகற்சீற்றத்துஉருகெழு குருசில்” (பொருநர்.131-132)**
> **“முருகன்தாள்தொழு தன்பரங்குன்று” (பரி.8-81)**
> **“முருகன்நற்போர்நெடுவேள் ஆவி” (அகம்.1.3 )**
> **“சினம்மிகுமுருகன்தன்பரங் குன்றத்து” (அகம்.59:11)**
> **“முருகன்ஆர்அணங்கு என்றலின்” (அகம்.98:10 )**
> **“முருகன் அன்ன” (அகம்.158:16 )**
> **“முருகற் சீற்றத்து உருகெழு குருசில்”** (புறம்.16:2)
> **“முருகன் சுற்றத்து அன்ன”** (புறம்.23:4 )
> **“அணங்குடை முருகன் கோட்டத்து”** (புறம்.299.6 )

முருகு என்னும் சொல் முருகன் என்னும் பொருளில் இடம்பெற்றுள்ளது. முருகு, முருகனழகு என்னும் பொருளைச் சுட்டி நிற்கும்.

> **“முருகு இயம் நிறுத்து, முரணினர் உட்க**
> **முருகு ஆற்றுப் படுத்த உருகெழு வியல்நகர்” (முருகு.243-244)**
> **“முருகு அயர” (மதுரை.38 )**
> **“அருங்கடி வேலன் முருகொடு வளைஇ”(மதுரை.611 )**

முருகு, முருகன் கடவுள் அல்லது நிலத்தலைவனின் பெயர் உணர்த்தி செவ்விய முருகியற் பொருந்திய இடத்தை எடுத்துக்காட்டுகிறது.

**இலக்கியங்களில் முருகன்:**

மனிதர் வாழ்வுமுறைகளுக்கு தேவையான அனைத்துமே இலக்கியங்கள் இன்று வரை பறைசாற்றுகின்றன. இலக்கியங்கள் ஒருபோதும் நெறிமுறைகளை கூற மறுத்ததே இல்லை. இலக்கியங்கள் கூறும் அனைத்துமே எல்லா உயிர்களுக்கும் பொதுவானதாகும் அவ்வகையில் நெய்தல் நில கடவுள் மற்றும் தலைவனான. முருகப்பெருமானை இலக்கியங்கள் எங்கனம் பறைசாற்றுகிறது என்பதை. சங்க இலக்கிய பாடல் வரிகள் உணர்த்துகின்றன. சங்க இலக்கியத்தில் முப்பத்து ஓரிடங்களில் இடம்பெற்று வந்துள்ளது. வேல் என்னும் கருவியினை உடையவன் என்னும் பொருளில் வேலுடையான் பொருளுணர்த்தி நிற்கிறது. கருவியை உடையவனாதலால் வேலின் பெயர் ஆளுக்காகி வேலன் என்றானது. வேல்+அன்= வேலன். வெறியாட்டு நிகழ்த்துதல் நிகழிடத்தில் கருவியானது முதன்மை. வழிபடு முறைகளுள் ஆள் ஒருவன் தன்மேல் முருகன் வருவதாய் ஆடி நிகழ்த்துவது சங்கப்பாடல்கள் பலவற்றில் பயின்று வந்துள்ளது.

**திருமுருகாற்றுப்படை**இந்நூல் ஆற்றுப்படை வகையைச் சார்ந்தது. இந்நூலின் வேறு பெயர்கள் 1. முருகு 2. புலவராற்றுப்படை என்பவை. இந்நூலானது கடவுள் வாழ்த்து போன்றது. பத்துப்பாட்டில் முதற்பாட்டாக இருப்பது திருமுருகாற்றுப்படை. பத்துப்பாட்டின் பத்து நூல்களுக்கும் கடவுள் வாழ்த்து போல் அமைந்துள்ளது. வேறு எந்த தெய்வத்திற்கும் வேறு எந்த நூலிலும் இவ்வளவு நீண்ட பாடல் இல்லை. முருகப்பெருமானைப் பாட்டுடைத்தலைவனாக் கொண்டு நக்கீரர் எழுதிய இனிய நூலாகும். இதற்குச் சிறந்த உரைகளாக நச்சினார்க்கினியர் உரையும் பரிமேலழகர் உரையும் விளங்குகின்றன.

**திருமுருகாற்றுப்படை**

**<u>முதல் பகுதி</u>** = திருப்பரங்குன்றம் என்னும் மலைக்கோவில், இயற்கை வளம், முருகனின் திருக்கோலம், சூரனுடன் முருகன் செய்த போர்.

இத்திருக்கோயில். மதுரைக்கு தென்மேற்கில் சுமார் எட்டு கி.மீ தொலைவில் உள்ள இங்குதான் முருகன் தெய்வானையை திருமணம் செய்து கொண்ட நிகழ்வு நடந்ததாகப் புராணங்கள் தெரிவிக்கின்றன. இக்கோவிலில் முருகன் மணக்கோலத்தில் காட்சி தருகிறார்.

**<u>இரண்டாம் பகுதி</u>** = திருச்சீர்அலைவாய்(திருச்செந்தூர்) தலம், முருகனுடைய ஆறுமுகங்கள், பன்னிரு தோள்களின் செயல்கள்.

**<u>மூன்றாம் பகுதி</u>** = திரு ஆவின்குடி(பழனி மலை), வழிபாடும் மகளிரின் சிறப்புகள், முருகனை வெளிப்படும் முனிவரின் பெருமைகள்.

முருகனின் மூன்றாம் படை வீடாகும். நாரதர் சிவனுக்கு அளித்த ஞானப்பழம் தனக்குக் கிடைக்காததால், முருகர் கோபம் கொண்டு ஆண்டியின் கோலம் பூண்டு இந்தத் திருத்தலத்தில் தங்கிவிட்டதாகப் புராணங்களில் கூறப்படுகிறது.

**<u>நான்காம் பகுதி</u>** = திருவேரகம்(சுவாமிமலை) என்னும் தலம், வெளிப்படும் மக்கள், மந்திரம் ஓதுவார் செயல்கள்,

இத்தலம் கும்பகோணத்தில் இருந்து 6 கி.மீ. தொலைவில் உள்ளது. இங்கு முருகன் சுவாமிநாத சுவாமி என்ற பெயரில் கோவில் கொண்டுள்ளார். இதனை திருப்பதி என்று நச்சினார்கினியர் கூறுகிறார்.

**ஐந்தாம் பகுதி** = திருத்தணி அல்லது குன்றுதோறாடல். மலைப்பகுதி, மகளிர், குரக் குரவை, முருகனின் அணி, ஆசை, அழகு

**ஆறாம் பகுதி** = பழமுதிர்ச்சோலை, முருகன் இருக்கும் நீர்த்துறை, பழமுதிர்ச் சோலையின் அருவி, முருகன் அருளும் முறை.

**"உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு**
**பலர்புகழ் ஞாயிறு கடல்கண் டாஅங்கு"** (முருகு. 1-3))
**"இழுமென இழிதரும் அருவிப்**
**பழமுதிர் சோலை மலைகிழ வோனே"** (முருகு. 316-317
**"ஆல்கெழு கடவுள் புதல்வ! மால்வரை**
**மலைமகள் மகனே! மாற்றோர் கூற்றே!"** (முருகு. 256-257)
**"முட்டாள் தாமரைத் துஞ்சி வைகறைக்**
**கட்கமழ் நெய்தல் ஓதி எல்படக்"** (முருகு. 73-74)

முருகாற்றுப்படையைத் தவிர திருப்பரங்குன்றம், திருச்சீரளைவாய் என்ற இரண்டையும் பற்றி பல சங்க இலக்கியங்களில் கூறப்பட்டு உள்ளன. திருப்பரங்குன்ற ஆலயம், அதன் திருவிழாக்கள் மற்றும் பிற செய்திகள் என அனைத்தும் பரிபாடலில் கூறப்பட்டு உள்ளன (பரிபாடல். 6:69-75; 95; 8:11-16; 21:15; பதிற்றுப்பத்து. 17:1-2;). அதை எழுதிய நல்லந்துவனார் என்ற புலவர் அந்த மலையின் பெருமையைக் கூறி மகிழ்கிறார் (பரிபாடல். 6, 8, 11, 20).

மதுரை மருதநீலகண்டனார் கீழ் உள்ளவாறு கூறி உள்ளார்

**"சூர்மருங்கு அறுத்த சுடர்இலை நெடுவேல்**
**சினம்மிகு முருகன் தண்பரங் குன்றத்து**
**அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை"** (அகம். 59: 10-12)

(அந்துவன் = நல்லந்துவனார் என்னும் புலவர்; சூர் = அரக்கன்; சந்து = சந்தனமரம்; வரை = மலை) அகநானுறு (59: 10-12) மற்றும் கலித்தொகை (கலித்தொகை. 27:16) இதை "வேலன் குன்று" எனக் கூறி உள்ளன. திருச்சிரலைவாய் பற்றியக் குறிப்பு அகநானுறு :266 மற்றும் புறநானுறு:55 போன்றவற்றில் உள்ளன.

**"திருமணி விளக்கின் அலைவாய்ச்**
**செருமிகு சேஎயொடு"** (அகம்.266:20-21)
**"வானத்து அன்ன வண்மையும், மூன்றும்,**
**உடையை ஆகி, இல்லோர் கையற,**
**நீநீடு வாழிய நெடுந்தகை! தாழ்நீர்!**
**வெண் தலைப் புணரி அலைக்கும் செந்தில்**
**நெடுவேள் நிலைஇய காமர் வியந்துறை"** (புறம். 55:17-21)

சிறுபாணாற்றுப்படை வேலூர் என்பது வேல் முருகன் என்பதில் இருந்தே வந்தது என்று கூறி உள்ளது.

**"திறல்வே னுதியிற் பூத்த கேணி**
**விறல்வேல் வென்றி வேலூ ரெய்தி" (சிறுபாணாற்றுப்படை: 172-173)**

இவ்வாறு இலக்கியங்களும் முருகனைப் பற்றியும் ம சிறப்புகள் பற்றியும் வழிபாடுகளை பற்றியும் சங்க இலக்கியங்கள். எடுத்துரைக்கின்றன.

**வழிபாடு**

அசைவ உணவை உட்கொண்டவர்களின் கடவுளாக இருந்த முருகனை வேலன் என்று மக்கள் வழிபட்டதாகவும், ஆட்டு ரத்தத்துடன் கலந்த தினை மாவை அவருக்கு படைத்ததாகவும், அதன் பின் வந்த சமற்கிருத வழிபாட்டு முறையில் முருகன் வழிபாடு சைவ வழிபாடாக மாறியதாகவும் முனைவர் சண்முகம் பிள்ளை குறிப்பிடுகிறார். (சங்க இலக்கியங்களில் முருகன் பழங்குடி இன வெறியாட்டு வழிபாடு கட்டுரை) தமிழகத்திலும் தமிழர்கள் வாழும் பிற இடங்களிலும் அமைந்துள்ள முருகன் ஆலயங்களில் நடைபெறும் பல்வேறு வகையான வழிபாடுகள் வருமாறு.

காவடிஎடுத்தல், அலகு குத்துதல், பால்குடம் எடுத்தல், முடி இறக்குதல் (மொட்டை போட்டுக் கொள்ள நேர்ந்து அதன்படி செய்தல்), பாதயாத்திரை.

**விழாக்கள்**

கார்த்திகை மாத கார்த்திகைத் திருநாள் முருகப்பெருமானின் விசேட தினமாகக் கொண்டாடப்படுகிறது. வைகாசி மாத விசாக நட்சத்திர தினம் இவரது ஜென்ம நட்சத்திர தினமாகக் கொண்டாடப்படுகிறது. முருகப்பெருமான் சூரபதுமன் என்னும் அரக்கனை அழித்ததை ஒட்டி கந்தசஷ்டி என்னும் திருநாள் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. மேலும், முருகன் கோயில்கள்தோறும் பங்குனி உத்திரத் திருநாள் முருகப்பெருமானுக்கு அணிசேர்க்கும் விழாவாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. கடவுளரில் சிறப்புக் கொண்ட முருகனுக்குக் கீழ்க்கண்டோர் அடியார்களாகத் திகழ்ந்தனர்.

அகத்தியர், நக்கீரர், ஔவையார், அருணகிரிநாதர், குமரகுருபரர், பாம்பன் சுவாமிகள், கிருபானந்தவாரியார்.

**முடிபு:**

தமிழருக்கே உரிய கடவுளான முருகன், சுமார் 10,000 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த மகான் ஆகக் கருதப்படுபவர் முருகக் கடவுள். தமிழ் மொழியை வடிவமைத்ததால் தமிழ்க் கடவுள் என்ற சிறப்பும் அவருக்கு உண்டு. தன்னுடைய வயதாகும் நிலையை நிறுத்தி, என்றும் குமரனாக, அழகனாக நீண்டகாலம் சுமார் 4000 ஆண்டுகள் பூத உடலுடன் வாழ்ந்து காட்டிய பெரும்மகான் என்ற பெருமையும் இவருக்கு உண்டு.'சரம்' என்றால் மூச்சு. 'சரத்தை வயப்படுத்தினால் காலத்தை வெல்லலாம்; காலனையும் வெல்லலாம்; கடவுளையும் காணலாம்' என்பது இவரது தத்துவம். சரத்தை வணப்படுத்திக் காட்டியதால் 'சரவணன்' என்ற சிறப்புப் பெயரும் உண்டு. மனிதன் வாழ்வின் இறுதியில் சவமாகக் கூடாது; சிவமாக வேண்டும். கற்பூரம் கரைவது போல் தன்னை வேறொரு பரிமாணத்திற்கு மாற்றிக்கொண்டு பிரபஞ்சம் எங்கும் வியாபிக்க வேண்டும் என்பது நிறைவான செய்தி.

அதை அவரே நிரூபித்துக் காட்டியதால், 'பெம்மான் முருகன் பிறவான்; இறவான்...' என்று அருணகிரி நாதரால் பாடப் பெற்றார்.

உலகில் தமிழர் வாழும் நூற்றிற்கும் மேற்பட்ட நாடுகளில் முருகக் கோயில்கள் தமிழர்களால் கட்டப்பட்டுள்ளன. உலகில் முருகனை அறியாத தமிழர்கள், முருகனை வணங்காத தமிழர்கள் எந்த நாட்டிலும் இல்லை எனலாம். எனவே, தமிழ்க்கடவுள் முருகனைப் போற்றி வணங்குவோம்.

**முடிவுரை**

சங்க காலம் என்பதை தமிழர் மட்டுமன்றி அனைத்து நாட்டு மக்களும் ஒன்றாக வாழ்ந்தனர். அவர்கள் கல்வி மூலமாகவும் வாணிபம் மூலமாகவும் பிற நாடுகளில் சென்றடைந்தனர். தமிழர்கள் போற்றும் வழிபாடுகள் பிற நாடுகளில் தலைத்தோங்க இதே முதன்மையாக நோக்கமாக உள்ளன. தமிழர்களின் மரபு வழிபாடுகள் போன்றவை சிறந்து விளங்க இலக்கியங்களை பெரிதும் துணை நிற்கின்றன. அங்கனம் பார்க்கையில் இலக்கியங்கள் கூறும் இப்பாடலின் வழி முருகனையும் முருகனுடைய வழிபாடுகள் பற்றியும் அறிய முடிகிறது. கடவுளின் வழிபாடுகளில் உள்ள அறங்களையும். மனிதத் தன்மையும். போற்று விதமாக. சங்க இலக்கியங்கள் பாடல்களில் மூலம் புலவர்களும் எடுத்து இயம்புகின்றனர். என்பதை இவ்வாய்வின் மூலம் அறியப்பட முடிகிறது.

**துணைநூற்பட்டியல்**

1. அருளம்பலவானர், சு., (ப.ஆ.)1937, திருமுருகாற்றுப்படை, யாழ்ப்பாணம்.
2. சாமிநாதையர்.உ.வே.(ப.ஆ.) 1894, புறனானூறு மூலமும் உரையும் உ.வே.சா நூல் நிலையம், சென்னை.(முதற்பதிப்பு)
3. இராஜகோபாலையங்கார்.வே. (ப.ஆ.)1923, அகநானூறு மூலமும் உரையும் (உ.வே.ரா.இராகவையங்கார் சோதித்தது)
4. சாமிநாதையர்.உ.வே(ப.ஆ.) 1918, பரிபாடல் மூலமும் பரிமேலழகருரையும் கமர்சியல் அச்சுக்கூடம், சென்னை.
5. சாமிநாதையர்.உ.வே.(ப.ஆ.) 1904, பதிற்றுப்பத்து மூலமும் பழைய உரையும் வைஜயந்தி அச்சுக்கூடம், சென்னை.
6. அருளம்பலம், பண்டிதர் சு., (ப.ஆ)1963, பதிற்றுப்பத்து ஆராய்ச்சி உரை யாழ்ப்பாணத்துக் காரை நகர் அ.சிவானந்தநாதன் வெளியீடு.
7. சுப்பிரமணியன்.ச.வே.(ப.ஆ.), 2008, தமிழ்ச் செவ்வியல் நூல்கள் மூலம் முழுவதும், மணிவாசகர் பதிப்பகம், பாரிமுனை சென்னை.

# 2. சங்க இலக்கியங்களில் உலகளாவிய வணிகத்தொடர்புகள்

**சு.கோபாலகிருஷ்ணன்**, M.A., M.ED., M.Phil.,
முதுகலைத் தமிழாசிரியர், அரசினர் மேல்நிலைப்பள்ளி,
கருவாக்குறிச்சி, மன்னார்குடி தாலுக்கா,திருவாரூர் மாவட்டம் 614 018.
அலைபேசி: 9750883557, மின்னஞ்சல்: sgakshaya7@gmail.com.
DOI 10.5281/zenodo.15061883.

**Abstract**

The history of the country is the history of the kings who ruled the country and the life history of the citizens who lived in the country. A part of the life history of the Tamils who lived in the Sangam period is related to trade. In the Sangam period, people lived according to the place and circumstances where they lived. Trade relations were based on that. In ancient times, barter was practiced not only in Tamil Nadu but also in all countries of the world. Only expensive items were bought with money. Tamil literature shows that the ancient Tamils traded with many countries such as Sri Lanka, Chavakanad (East Indies), Malaya, Burma, Arab countries, Egypt, Rome, etc. The Tamil kings of the Sangam period encouraged traders in their countries and developed trade. They established port cities in their countries for the arrival and departure of merchant ships, export and import. As land and sea trade increased, agricultural development and industrial development increased, and product production increased. Due to the production of goods and trade, the country's economy grew, the country prospered, and the people lived in prosperity. The purpose of this article is to study the global trade, which was the fundamental reason for the prosperity and civilized life of the people of Tamil Nadu, through the Sangam literature.

Key Words : Sangam Period - Money - Economy - Business

**முன்னுரை:**

ஆதி காலத்தில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் நிலத்து மக்கள் தங்களிடம் இருந்த பொருட்களை மற்ற நில மக்களோடு பண்டமாற்று முறையில் தங்களுக்குத் தேவையான பொருட்களைப் பெற்று வணிகத் தொடர்பு கொண்டிருந்தார்கள். சங்ககாலத்தில் தமிழர்கள் தங்களின் அன்றாடத் தேவைகளான அரிசி, பருப்பு, உப்பு, பால், தயிர், மீன், இறைச்சி முதலான பொருட்களைக் காசு கொடுத்து வாங்காமல் பண்டமாற்று முறையிலேயே பெற்றுக்கொண்டார்கள். பண்டமாற்று வாணிகம் நடந்த அதே காலத்தில் செம்பு, பொன், வெள்ளிக் காசுகள் விலையுயர்ந்த பொருட்களை வாங்கப் பயன்படுத்தியுள்ளனர். அரசர்கள் தங்களைப் புகழ்ந்து பாடிய புலவர்களுக்கு பரிசாகப் பொற்காசுகளை வழங்கிய செய்திகள் இலக்கியங்களில் காணப்படுகின்றது. வாணிகம் செய்து பெரும் பொருள் ஈட்டிய வணிகப் பெருமக்களுக்கு 'எட்டி' என்னும் சிறப்புப் பெயரும், 'எட்டிப்பூ' என்னும் பொற் பதக்கத்தையும் அளித்துச் சிறப்பு செய்தார்கள். சங்க காலத்தில் வாழ்ந்த தமிழர்களின் வாழ்க்கை வரலாற்றில் ஒரு பகுதி வாணிகத்தைச் சார்ந்தது. சங்க காலம் முதற்கொண்டு வாணிபம் மேற்கொள்வதில் தமிழர்கள் முனைப்புடன் இருந்தனர். பிராமி எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட ஈயக்காசுகளும் கி.பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு முன்பு வழக்கத்தில் இருந்துள்ளன. தமிழகத்தில் அகழாய்வின் மூலமாகக் கிடைத்துள்ள காசுகள் நாணயங்கள் புழக்கத்தில் இருந்ததைப் பறைசாற்றுகின்றன.

**தரைவாணிகம்:**

சங்ககாலத்தில் உப்பு உற்பத்தியும், உப்பு வாணிகமும் சிறப்பாக நடந்தன. ஆனால் உப்பை ஏற்றுமதி இறக்குமதிக்குப் பயன்படுத்தவில்லை. இக்காலத்தில் உள்ள உந்துவண்டிகள், இரயில்வண்டிகள், வானஊர்திகள் போன்ற விரைவான போக்குவரத்துச் சாதனங்கள் இருப்பதுபோல அக்காலத்தில் இல்லை. ஆகவே அவர்கள் எருது, கழுதை, வண்டி, படகு, பாய்மரக்கப்பல்களைப் பயன்படுத்தினார்கள். சிந்து, பாரசீகம், அரேபிய நாடுகளிலிருந்து குதிரைகள் அக்காலத்தில் கொண்டுவரப்பட்டன. குதிரைகளை நாட்டின் போர்ப் படைக்கும், தேர் இழுக்கவும், அரசர்களும் செல்வர்களும் குதிரை வண்டிகளுக்கும் பயன்படுத்தினர். குதிரை வண்டிகளைப் பற்றி சிறுபாணாற்றுப்படை (251-261), அகநானூறு (400:9-16, 244:12-13, 344:7-11, 314:8-10) மேலும் பல சங்க இலக்கிய நூல்களில் பாடப்பெற்றுள்ளன. ஆனால் அக்குதிரை வண்டிகள் வாணிகப் பொருட்களை ஏற்றிச் செல்லும் சரக்குவண்டிகளாகப் பயன்படுத்தவில்லை. வாணிகர்கள் வாணிபப் பொருட்களை மாட்டுவண்டிகளிலும், கழுதைகளிலும் ஊர் ஊராகக் கொண்டு செல்லும்போது வணிகச்சாத்து (வணிகக் கூட்டம்) ஒன்று சேர்ந்து போயிற்று. காட்டுவழிகளிலும், எல்லைப்புறங்களிலும் வழிப்பறியில் ஈடுபடும் கொள்ளைக்காரர்களை அடித்து ஓட்டுவதற்கு வில் வீரர்களையும், வாள் வீரர்களையும் துணையாக அழைத்துச் சென்றதை அகநானூறு (167:7-9), (89: 9-14), (343: 12-13) போன்ற பல சங்கஇலக்கிய நூல்கள் இச்செய்திகளை எடுத்துரைக்கின்றன. தரை வழியாக வாணிகம் செய்த பெருவாணிகருக்கு மாசாத்துவான் என்பது பெயர். இக்காலத்தில் உள்ள வசதிகள் போன்று அக்காலத்தில் இல்லாத சூழ்நிலையிலும் தரைவழி வாணிகமும், கடல்வழி வாணிகமும் மிகச் சிறப்பாக நடந்துள்ளன.

**கடல் வாணிகம்:**

'**திரைகடல் ஓடியும் திரவியம் தேடு**' என்பது தமிழர் வாக்கு. சங்ககாலத்தில் மரக்கலங்களாகிய நாவாய்களில் உள்நாட்டுச் சரக்குகளை ஏற்றிக் கொண்டு கடலில் கரை ஓரமாக செலுத்திக் கொண்டு போய் கரையோரமாக இருந்த ஊர்களில் தங்கி பொருட்களை இறக்குமதி ஏற்றுமதி செய்தார்கள். நாவாயில் கடல் வாணிகம் செய்தவர்கள் நாவிகர் எனப் பெயர் பெற்றிருந்தனர். கடல் வாணிகம் நடத்திய பெரிய வாணிகருக்கு மாநாய்கர் என்பது பெயர். வாணிகத்தில் பெருஞ்செல்வத்தை ஈட்டிய மாசாத்துவார்களுக்கும், மாநாய்கர்களுக்கும் எட்டிப்பட்டமும், எட்டிப்பூவும் நாட்டை ஆண்ட அரசர்கள் வழங்கி வணிகத்தை ஊக்குவித்தார்கள். கடல் ஓரமாகவே கப்பல்களை ஓட்டி நடத்திய வாணிகமும், நடுக்கடல்களில் கப்பல்களைச் செலுத்திக் கடல் கடந்து பல்வேறு நாடுகளுக்குச் சென்று வாணிகமும் செய்துள்ளனர். தொல்காப்பியர் காலத்துக்கு முன்பே தமிழர்கள் கடல் வாணிகம் செய்துள்ளார்கள் என்பதை அவர்தம் இலக்கணத்தில், '**முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை**' என்று பொருளதிகாரம் அகத்திணை இயலில் கூறியுள்ளதால் அறியமுடிகிறது.

**மிளகு ஏற்றுமதி:**

மிளகு உணவைப் பக்குவப்படுத்துவதற்கு இன்றியமையாத பொருளாக இருந்ததால் அது உலகம் முழுவதும் தேவைப்பட்டது. சேரநாட்டு மிளகு உலகம் முழுவதும்

பெயர்பெற்றிருந்தது. ஐரோப்பாக் கண்டத்திலிருந்து யவனர்கள் சேரநாட்டு மிளகை அதிகமாக வாங்கிக் கொண்டு போனார்கள். அதனால் மிளகுக்கு 'யவனப்பிரியா' என்ற பெயர் உண்டாயிற்று. பாரசீகம், எகிப்து, உரோமாபுரி, கிரேக்கம் முதலான தேசங்களுக்கும் மிளகு ஏற்றுமதி செய்யப்பட்டது. காவிரிப்பூம்பட்டினத் துறைமுகத்தில் மிளகு மூட்டைகள் தரை வழியாக வந்தன. பழங்காலத்தில் அரேபியர்கள் மேற்குக் கடற்கரைத் துறைமுகங்களுக்கு வந்து மிளகை வாங்கிக் கொண்டு போய் எகிப்து, ரோமாபுரி முதலான மத்தியதரைக்கடல் பிரதேசங்களில் விற்றனர். கி.மு.முதல் நூற்றாண்டில் யவனர் (கிரேக்கரும் உரோமரும்) அரேபியரிடமிருந்து மிளகு வாணிகத்தைக் கைப்பற்றினார்கள். அவர்கள் நேரடியாகத் தாங்களே கப்பல்களைச் சேரநாட்டுத் துறைமுகப் பட்டினங்களுக்குக் கொண்டு வந்து முக்கியமாக மிளகையும் அதனுடன் மற்ற பொருட்களையும் ஏற்றிக் கொண்டு போனார்கள். அவர்கள் முக்கியமாக முசிறித் துறைமுகப்பட்டினத்துக்கு வந்தார்கள்.

**முத்து ஏற்றுமதி:**

அரேபிய வணிகர்கள் சேரநாட்டின் முசிறித் துறைமுகத்துக்கு வந்து வாணிபம் செய்த இடத்தைப் பந்தர் என அழைத்தனர். இதைப் பதிற்றுப்பத்தில் '**பந்தர்ப் பயந்த பலர் புகழ் முத்தம்**', **பந்தர் பெயரிய பேரிசை மூதூர்**' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. முசிறித் துறைமுகத்துப் பந்தரில் முத்துக்களும், விலையுயர்ந்த நகைகளும் விற்கப்பட்டன. தமிழகத்து முத்துக்களில் பாண்டிநாட்டு முத்து உலகப் புகழ் பெற்றிருந்தது. முத்து நவரத்தினங்களில் ஒன்றாக மதிக்கப்பட்டது. யவனர்கள் தமிழகத்துக்கு வந்து சேரநாட்டு மிளகையும், கொங்கு நாட்டு நீலக்கல்லையும், பாண்டிநாட்டு முத்தையும் வாங்கிக்கொண்டு போனார்கள்.

**துணி வணிகம்:**

சங்க காலத்தில் பருத்தி பயிர் செய்வதும், நூல் நூற்பதும், துணி நெய்வதும், ஆடை விற்பதுமாகிய தொழில்கள் தமிழ்நாட்டில் சிறப்பாக நடந்துள்ளன. துணிகளை விற்ற வணிகர்கள் அறுவை வாணிகர் என்று அழைக்கப்பெற்றனர். தமிழகத்திலிருந்து வெளிநாடுகளுக்கும் துணி ஏற்றுமதியாயிற்று. பாடலிபுத்திரம், காசி போன்ற கங்கைக்கரைப் பிரதேசங்களுக்குப் பாண்டிய நாட்டு மதுரையிலிருந்து அனுப்பப்பட்ட துணிகளுக்கு மாதுரம் என்று பெயர் கூறப்பட்டது. கி.மு.3ஆம் நூற்றாண்டில் கௌடில்யரின் அர்த்தசாஸ்திரம் இச்செய்தியைக் குறிப்பிடுவதால் அக்காலத்திலேயே தமிழ்நாட்டு ஆடைகள் வடநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது அறியப்படுகிறது. தமிழ்நாட்டிலிருந்து சாவக நாட்டுக்கும், இந்தோனேஷியாவிற்கும் ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கவேண்டும். அக்காலத்தில் பஞ்சும், துணிகளும் அங்கு உற்பத்தி செய்யப்படவில்லை.(பழங்காலத்தமிழர் வாணிகம் ப.118)

பாண்டி நாட்டுத் தொண்டி துறைமுகத்தில் சாவக நாட்டிலிருந்து வந்த பொருட்களில் சீன நாட்டுப் பட்டுத் துணி இறக்குமதி செய்யப்பட்டதைச் சிலப்பதிகாரத்தில் (14:106-110) குறிப்பிடப்பட்டுள்ளது. துகில் என்னும் இப்பட்டுத் துணிகளைத் தமிழ்நாட்டிலிருந்து யவனரும், அரேபியரும் வாங்கிக் கொண்டுபோய் மேற்கு நாடுகளில் விற்றார்கள்.

**வெல்லமும் சர்க்கரையும்:**

சங்ககாலம் முதலே தமிழகத்தில் கரும்பு பயிர் செய்வதும், கரும்புக் கட்டி (வெல்லம்) காய்ச்சுவதும் நடைபெற்றுள்ளதை **'ஆலைக் கலமரும் தீங்கதழக் கரும்பே'** (மலைபடுகடாம்: 119) என்பதாலும் அறியமுடிகிறது. வெல்லம் சர்க்கரை விற்ற வாணிகருக்குப் பணித வாணிகர் என்பது பெயர். அந்தக் காலத்தில் ஐரோப்பாக் கண்டத்தில் வாழ்ந்தவர்களுக்கு கரும்பும், கரும்பு கட்டியும் தெரியாது. 15ஆம் நூற்றாண்டில்தான் கரும்பும், வெல்லமும் அவர்களுக்குத் தெரிந்தன. 18ஆம் நூற்றாண்டில் தங்கள் நாட்டில் விளைந்த பீட்ரூட் கிழங்கிலிருந்து சர்க்கரை காய்ச்சும் முறையை அறிந்தனர். தமிழ்நாட்டின் விளைபொருட்களும் உற்பத்திப்பொருட்களும் பிற நாட்டினரைக் கவர்ந்தன. அகில்மரங்கள், சந்தனமரங்கள் தமிழ்நாட்டின் மேற்குத் தொடர்ச்சி மலைகளில் காணப்பட்டன. ஆனால் இவை இரண்டும் சாவக நாட்டில் உற்பத்தி செய்யப்படுவது தரத்திலும், மணத்திலும் உயர்ந்ததாகக் கருதப்பட்டதால் சாவக நாட்டிலிருந்து இங்கு அகிலும், ஆரமும்(சந்தனம்) இறக்குமதி செய்யப்பட்டதாக இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. கிராம்பு, இலவங்கம், தக்கோலம், சாதிக்காய், பளிதம் (கற்பூரம்), துகில் (சீனப்பட்டு) போன்றவை சாவக நாட்டிலிருந்து தொண்டி துறைமுகத்தில் இறக்குமதி செய்யப்பட்டதைச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது. யானைத் தந்தங்கள் அக்காலத்தில் முக்கிய வாணிபப் பொருளாக இருந்துள்ளன.

அரேபியர்கள் தமிழ்நாட்டுப் பொருட்களை குறிப்பாக மிளகைக் கொண்டுபோய் எகிப்து நாட்டில் விற்றார்கள். அங்கிருந்த பொருட்களைக் கொண்டு வந்து தமிழ்நாட்டில் விற்றார்கள். அக்காலத்தில் அரேபியர் கிழக்கிந்தியத் தீவுகளுக்குச் சென்று வாணிபம் செய்யவில்லை. தமிழர்கள் கிழக்கிந்தியத் தீவுகளுக்குச் சென்று அங்கிருந்து கொண்டுவந்த பொருட்களை இங்கிருந்து அரேபியர் வாங்கிக் கொண்டு போய் வெளிநாடுகளில் விற்றார்கள். தூரக் கிழக்கு நாடுகளில் உண்டான பொருட்களை மேற்கு நாடுகள் வாங்கிக் கொண்டு போவதற்குத் தமிழ்நாடு அக்காலத்தில் மத்திய வாணிப இடமாக அமைந்திருந்தது. பாண்டிய நாட்டுத் தொண்டி துறைமுகம் பற்றி அகநானூற்று 10ஆம் செய்யுளில் சிறப்பாகக் கூறியுள்ளார். சேரநாட்டுத் தொண்டி துறைமுகம் பற்றி கடைச்சங்கப் புலவரான அம்மூவனார் ஐங்குறுநூற்றின் நெய்தல் திணையில் தொண்டிப்பத்து என்னும் தலைப்பில் 10 செய்யுட்களை இயற்றியுள்ளார். சங்ககாலத்தில் உலகப் புகழ்பெற்று விளங்கிய காவிரிப்பூம்பட்டினத் துறைமுகத்தில் வந்து இறங்கிய பொருட்களைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் கீழ்க்காணும் பாடலில் பாடியுள்ளார்.

> **நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்**
> **காலின் வந்த கருங்கறி மூடையும்**
> **வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்**
> **குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்**
> **தெறிகடல் முத்தும் குணகடல் துகிரும்**
> **கங்கை வாரியும் காவிரிப் பயனும்**
> **ஈழத் துணவும் காழகத் தாக்கமும்**
> **அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி**

**வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகு.** (பட்டினப்பாலை:185-193)

இந்தப் பொருட்கள் வெளிநாடுகளிலிருந்து கடல் வழியாகக் கப்பல்களில் வந்ததாக கூறப்பட்டுள்ளது. யவனர்கள் கிரேக்க மொழியில் அக்காலத்தில் எழுதி வைத்த 'செங்கடல்வாணிகம்' என்னும் நூலிலும், பிளைனி என்பார் எழுதிய நூலிலும் யவன-தமிழ் வாணிபச் செய்திகள் கூறப்பட்டுள்ளன. ரோமாபுரியிலிருந்து வாணிகத்துக்காக வந்த யவனர் திராட்சைப்பழச் சாற்றினால் செய்யப்பட்ட மதுபானத்தைக் கொண்டு வந்தார்கள். கொடிமுந்திரிச் சாறு எனப்பட்ட அது விலை அதிகமாகையால் அரசர் மட்டும் வாங்கி அருந்தினார்கள். இச்செய்தியை புறநானூற்றின் 55ஆவது பாடல் கூறுகிறது.

**முடிவுரை:**

தரைவாணிகத்தைவிட கடல் வாணிகத்தைத் தமிழர்கள் சிறப்பாக நடத்தினார்கள் என்பதைக் கல்வெட்டுகளும் புதைபொருட்களும் பறைசாற்றுகின்றன. தொண்டி, மருங்கை, காவிரிப்பூம்பட்டினம், எயிற்பட்டினம், அரிக்கமேடு, கொற்கை, கொல்லத்துறை, குமரித்துறைமுகம், முசிறி துறைமுகம், மங்களூர் துறைமுகம், மாந்தை போன்ற துறைமுகங்களில் ஏற்றுமதி இறக்குமதி மிகச் சிறப்பாக நடந்துள்ளதை இலக்கியங்களின் வாயிலாக அறியமுடிகிறது. இவற்றிலிருந்து அந்நாளைய தமிழர்களின் உலகளாவிய வணிகத் தொடர்பின் அறிவாற்றலே இன்றைய பன்னாட்டு வணிக வளர்ச்சி நிலைக்கு அடிப்படை என்பதில் ஐயமில்லை.

**துணைநூல் பட்டியல்:**

1. பழங்காலத் தமிழர் வாணிகம், மயிலை(சீனி)வெங்கடசாமி, (1978), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிட்., 41-பி, சிட்கோ இன்டஸ்ட்டிரியல் எஸ்டேட், சென்னை-98.

# 3. 21-ஆம் நூற்றாண்டு வாழ்வியலில் தமிழ் இலக்கிய (புறநானூற்று) எச்சங்கள்

**பேராசிரியர் தலிஞ்சன் முருகையா** M.A. B.Ed(India), M.S (Finance), M.S(Lingustic) Paris, France.
பிரான்சு உலக பன்னாட்டு மொழியியல் மற்றும் பண்பாட்டு கலாச்சார கல்வி நிறுவனம், சோர்போன் பல்கலைக்கழகம், பிரான்சு







DOI 10.5281/zenodo.15064450.

**Abstract:**

In the late 19th century, the association came under the control of vegetarianism only after many publishers came to the modern world by many publishers. Prior to that, it had been silent in the hands of the religiousists for nearly 500 years. Until then, the Sangam Literature was under Buddhist-Sanamadam. It was then that the Saiva-Valadam flourished. In 1894, the suburban was published by UW Saminathayar, a suburban, which was hailed as Tamil Nadu. Suburban is a historical book on the golden age of Saiva-Valadi Tamils. The most important book in the Sangam literature is suburban. This book was considered a source of the welfare of the Saiva-Vale caste. It explains not only the trio but also other social areas, the development of the ancient ethnic groups, their transformations and remnants. The collective families are broken and we see its remnants today. The remains of the monarchy are the chief ministers of today's kingdom.

**Key Words**: Sangam Literature - Puranaanooru - Buddhist

19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் [சங்கஇலக்கியம்] பாட்டும்தொகையும் பல பதிப்பாளர்களால் நவீன உலகத்திற்கு வரப் பெற்ற பிறகுதான் சைவசமயத்தின் கட்டுப்பாட்டுக்குள் சங்கஇலக்கியம் வந்தது. அதற்கு முன்பு அது ஏறக்குறைய 500 ஆண்டுகளாகச் சமயமடாதிபதிகளின் கைகளில் மௌனமாக்கப்பட்டிருந்தது. அதுவரைக்கும் சங்கஇலக்கியம் பௌத்த-சமணமதக் கட்டுப்பாட்டில் இருந்தது. அதன்பிறகு தான் சைவ-வேளாளமதம் தழைத்தோங்கியது. 1894- ஆம் ஆண்டு தமிழ்த்தாத்தா என்று போற்றப்படும் உ.வே.சாமிநாதய்யரால் தொகைநூலுல் ஒன்றான புறநானூறு தொகுத்து வெளியிடப்பட்டது. புறநானூறு என்பது சைவ-வேளாளத் தமிழர்களின் பொற்காலத்தைப் பற்றிய சரித்திர நூலாகும். சங்க இலக்கிய நூல்களில் மிக முக்கிய நூல் புறநானூறு. இந்த நூல் சைவ-வேளாள சாதிவர்க்கத்தினரின் நலனைப் பேணுகின்ற மூலநூலாகவே கருதப்பட்டது. மூவேந்தர்களை மட்டுமல்லாமல், பிற சமூகப் பகுதிகளையும், புராதானமான இனக்குழுச் சமூகங்களின் வளர்ச்சி நிலைகளையும் அவற்றின் உருமாற்றங்களையும் எச்சங்களையும் பற்றி விளக்குகிறது. கூட்டுக்குடும்பங்கள் முறை உடைந்து விட்டது, அதன் எச்சங்களையே இன்று நாம் காண்கிறோம். எச்சம் என்பது மிஞ்சி இருப்பது அல்லது அழிந்து போனது போக எஞ்சி இருப்பது தானே அதன்படிப் பார்த்தால், முடியாட்சியின் எச்சம் தானே இன்றைய அரசாட்சியின் முதலமைச்சர்கள்.

**இயற்கை** என்பதைச் சங்கப் புலவர், "ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும், புதுவதன்று இவ்வுலகத்து இயற்கை" [பு.நா.76] அதாவது, வீரத்தைக் கொண்டு ஒரு சாரார் மற்றொரு சாராரை அழிப்பது இயற்கை. இன்றுவரைக்கும் வலிமை பெற்ற நாடுகள் வலிமைகுன்றிய நாடுகளை அழிப்பதைக் கண்கூடாகக் காண்கிறோம். நிலகிழமை [நிலவுடமை] ஈட்டுதல் அறத்தின் வழியாகவோ அல்லது மறத்தின் வழியாகவோ நடைபெறுவதற்கு அரசியல் பண்பாட்டுத் தடைகள் இருக்கவில்லை

"அறவையாயின்நினதெனத்திறத்தல்
மறவையாயின்போரோடுதிறத்தல்"[பு.நா.44]

இரை தேடும் பொருட்டுப் பயன்பட்ட உடல்வலிமை மாறி வீரம் [மறம்] போர் சமூகத்தின் மதிப்பாக வளர்ச்சிப் பெற்றது. அது தான் வேடன்-வீரனாகவும் வீரன்-வேந்தனாகவும் வளர்ந்த அரசியல்-பொருளாதாரப் பண்பாட்டு மாற்றம். புறநானூற்றில் சொல்லப்பட்ட இந்த இயற்கைவிதியின் எச்சம் தான் இன்றைய நவீன உலகின் போர்க்கோலம். என்றும் போர், எங்கும் போர்.

**ஈகை**

வேடனுக்கு, உணவு, உடை என்பவை அடிப்படைத் தேவைகள். வேந்தனுக்கு இவை செல்வங்கள். வேடர்கள் இனக்குழுவில், ஆடிய வேட்டைவிலங்குகளை அந்தச் சமூகத்தினிடையே பகிர்ந்துண்ணப்பட்டது. அந்த வழக்கம் வேந்தர்களின் நிலக்கிழமை நாகரீகத்தில் பொருள் உள்ளவன் இல்லாதவனுக்கு வழங்கும் ஈகையாக மாற்றம் அடைந்தது.

**கல்லறை கட்டிய நாகரீகம்** பெருங்கல்லறை கட்டிய நாகரீகம்கி.மு.900 கி.பி 100 வரை நீடித்தது. புறநானூற்றுக் காலம் பெருங்கல்லறை நாகரீகத்திலும் பிந்தியது எனலாம். வெட்சி, கரந்தை போர்களில் மாண்ட பின் அவன் உடலைக்குழிக்குள் அடக்கி அதன்மீது பதுக்கை சேர்த்து நடுகல் நாட்டி அதற்கு மரல்[கற்றாழை] நாரால் தொடுத்த செம்பூங்கண்ணியும் மயிர்பீலியும் சூட்டி அக்கல் மீது அவன் பெயரையும் பொறித்த செய்தி ஒரு பாடலில் வந்துள்ளது [பு.நா. 264]. இந்த எச்சத்தை இன்றும் நாம் காணலாம். போரில் இறந்த வீரரை அடக்கம் செய்த இடத்தில் ஒரு சிலுவைக் கல்லை நட்டு அதில் அவர் பெயர் மற்றும் பிறப்பு இறப்பு ஆண்டு விபரங்கள் குறிக்கப்படுவது இன்றும் வழக்கத்தில் உள்ளது. இது புறநானூற்றுக் காலத்திலே ஏற்பட்ட ஒரு நாகரீகம் என்பதை நாம் மறக்கக்கூடாது.

**நடுகல் வழிபாடு** இறந்தோரை அடக்கம் செய்தல் - இறந்தோரை வழிபடுதல் - நினைவுச்சின்னம் எழுப்புதல் போன்ற சடங்கிற்குக் கற்களும் தாழிகளும் சிறப்பிடம் பெற்றன. புதைத்தல்-எரித்தல், இடுக-சுடுக, நடுகல் வழிபாடு என்பது உயர்தகுதி படைத்த ஒருவனுக்குச் செய்யும் ஆடம்பரமான ஈமச் சடங்கினையும் நினைவுச்சின்னம் எழுப்புதலையும் குறிக்கும். இதற்குச் சான்றாக எகிப்திய பிரமிடுகளையும் பௌத்த ஸ்தூபிகளையும் குறிப்பிடலாம். அதியமான் இறந்த போது அவன் குலவழக்கப்படி அவனை எரித்தனர். நடுகல் வழிபாடும் செய்யப்பட்டது. ஈமத்தாழியில் இட்டு மூடியால் கவிழ்த்த முறை பரவலாக இருந்தது. இடுகாடுகளில் கழுகு, காக்கை, நரி, பேய் ஆகியன பிணங்களைத் தின்றதாக ஒரு பாடல் இருக்கிறது. இதுவும் இறந்தோரை அடக்கம்

செய்யும் ஒரு முறையாகக் கருதப்படுகிறது. இந்த முறையில் இறந்தோரை அடக்கம் செய்வதைச் சமண மதத்தில் இன்றும் காணலாம். அதாவது இறந்தவர் உடலை ஒரு ஆற்றிலோ அல்லது கிணற்றிலோ போட அதுவே முதலைகளுக்கும் மற்றும் நீர்வாழ் ஜந்துக்களும் உணவாக அளிக்கப்படும். இதிலிருந்து எரித்தல்-புதைத்தல், தாழியிலிட்டுக் கவிழ்க்காத முறையும் இருந்தது என்று தான் கொள்ளவேண்டும், எஸ்.பி.குப்தா என்ற ஆராய்ச்சியாளர் 'பெருங்கல்லறைகள் என்பது சடலங்களின் ஒரு நினைவுச்சின்னம் அது சமயரீதியானவை' என்கிறார்.

**பெருங்கல்லறைகள் வகைகள்** நடுகல்லுக்கு முந்தியது பதுக்கை முறை காட்டுப்பாதைகளில் பயணம் செய்தோரைக் கள்ளர்களென நினைத்து அம்பெய்து கொன்ற வேடர்கள் வழியோரத்தில் இறந்தவரைக் கிடத்தி அவர்கள் மீது படுக்கைக் கற்களை வட்டவடிவத்தில் அடுக்கி அடக்கம் செய்தனர். இதற்குப் பதுக்கை என்றுபெயர்.

இனக்குழுவின் இறந்த தலைவனோடு அவனைச் சார்ந்த பெண்கள், அடிமைகள் நண்பர்கள் தங்களது உடல்களையும் சேர்த்து அடக்கம் செய்யும் விதமாக ஈமத்தாழியை அகன்றதாகச் செய்யுமாறு குயவனைக் கேட்டதாக ஒருபாடல்,

'**கலம்செய்கோவேகலம்செய்கோவே**
**தன்னொடு**
**சுரம்பலவந்தஎமக்கும்அருளி**
**வியன்மலர்அகன்பொழில்ஈமத்தாழி**
**அகலிதாகவனைமோ**'[**பு.நா**. 256]

புறநானூற்றில், வழுப்புண் பழிக்கு நாணி வடக்கிருந்த சேர வேந்தனோடு அவனைச் சேர்ந்த புலவர், சான்றோர் சிலரும் உயிர்நீத்து அடக்கமான செய்தி கூறப்பட்டுள்ளது.

இதனைச் சரித்திரச் சான்றாகவே பார்த்தோமானால் கி.மு. 900-800 ஆண்டுகளில் தென்னிந்தியாவில் தோன்றிய பெருங்கல்லறைகளில் பல பேர்களின் எலும்புக்கூடுகள் காணப்பட்டதாகப் புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். மேலும், இதனை [ Enterrement De Masse) ஒரே நேரத்தில் கூட்டமாக இறப்பதும் பிறகு அடக்கம் செய்யப்படுவதுமாகும் என்று நினைக்கின்றனர். இது இன்றும் சில சமய மார்க்கங்களில்(secte) இந்தமுறை கடைபிடிக்கப்படுகிறது, இதற்கு உதாரணமாக, சில ஆண்டுகளுக்கு முன்பு, அமெரிக்கா, கனடா போன்ற நாடுகளில் உள்ள சில சமய மார்க்கங்களில் அதன் தலைவரின் வேண்டுகோளுக்கிணங்க அவருடன் இருந்த ஆயிரங்கணக்கான சீடர்கள் [பெண்கள், குழைந்தைகள்உள்பட]

தன் தலைவனுடன் விஷம் அருந்தி உயிர்நீத்த செய்தியை யாரும் மறந்திருக்க முடியாது. இப்படி, தாழியில் இட்டது, எரித்தல், புதைத்தல் இதுதவிர **பாடை** ஏற்றும் முறையும் வழக்கில் இருந்தது. ஈமப் புறக்காட்டில் இறந்த வீரனை 'கால்கழிகட்டில்' பாடையில் கிடத்தி 'தூவெள்ளறுவை' போர்த்தி அடக்கம் செய்த்து பற்றி பாடல் [பு.நா. 286] கூறுகிறது. இறந்தவர்கள் வந்து சாப்பிடுவார்கள் என்ற நம்பிக்கை காரணமாக 'ஈமஉணவுபடைத்தல்' என்ற வழக்கம் இருந்தது. இதன் எச்சங்கள் தான் இன்றும் தொடர்ந்து தமிழர்களிடையே இறந்தவர்களை அடக்கம் செய்ய 'பாடை' கட்டுதல் மற்றும்

'ஈமஉணவு படைத்தல்' போன்ற பழக்கங்கள் நடைமுறையில் உள்ளது என்பது தெள்ளத்தெளிவு.

போரில் வீரமரணம் அடைந்த மன்னர்கள் மட்டுமே அமரத்துவம் அடைவர் என்ற நம்பிக்கை புறநானூற்றுக் காலத்தில் நிலவியது. ஆகையால், போரில் தோற்ற மன்னன் நோயுற்று இறந்த போது அவன் சடலத்தை ஆயுதத்தால் கீறி "போரில் வீரமரணம் அடைந்த மறவர் செல்லும் அமரர் உலகத்திற்குச் செல்க" என்று பிராமணர்கள் ஓதி அவ்வுடலின் தீட்டை அகற்றிப் பரிகாரம் செய்வர் என்று ஒரு பாடல் [பு.நா.93] கூறுகிறது.

**மாந்திரீக முறை** ஒரு இனக்குழுவின் சாவிற்குக் காரணமானவரை இன்னொரு இனக்குழுவானது ஆயுதமின்றி மாந்திரீக மூலமாகப் 'பழிதீர்த்தல்' முறை இருந்தது. இன்றும் கிராமங்களில் காத்துக்கருப்பு, ஏவல்விடுதல், பில்லிசூனியம் போன்ற மாந்திரீக மூலம் பிறரைப் பழிதீர்ப்பது போன்ற செய்வினைகள் எல்லாம் புறநானூற்றின் சமூகக்குழு எச்சங்களே.

**மணப்பெண்**

இருகுழுவினர்க்கிடையே பெரும்அழிவு ஏற்படக் காரணமாக இருந்தது மணப்பெண் கேட்கும்முறை. விரும்புபவர் மணம்முடிக்க பெண்கேட்பதும் அவர் கொடுக்க மறுப்பதும் பிறகு அப்பெண்ணைச் சிறை எடுப்பதும் அதனால் போர் மூள்வதும் அக்காலத்தில் நடந்தது. மணப் பெண் கேட்பது மறுப்பது இன்றும் நமது சமூதாயத்தில் இது ஒரு குலவழக்கு. இதனால் இரண்டு குடும்பங்களும் விரோதம் கொண்டு கொலையில் போய் முடிகிறது. ஆனால், சங்க இலக்கியத்தில் அது வீர அறமாகப் போற்றப்பட்டது. பெண் கொடையாகக் கொடுக்கப்பட்டது என்பதைப் புறநானூற்றுப் பாடல் [பு.நா.342] கூறுகிறது. மாவீரன் அலெக்ஸாண்டர் இந்தியாவை வெற்றிக் கொண்ட போது இந்தியாவை ஆண்ட மன்னன் புரூஷோத்தமன் தன் மகளைப் 'பெண்கொடையாக' அலெக்ஸாண்டருக்குத் திருமணம் செய்து கொடுத்தார். அந்தச் செயல், புறநானூற்றின் இனக்குழு எச்சம் தானே. இன்றும் இந்த 'பெண்கொடை' என்ற வழக்கம் 'கன்னிகாதானம்' என்ற பெயரில் தமிழ்ச் சமூதாயத்தில் நிலவி வருகிறது.

**உழுதொழில்**

முடியாட்சி சமூக அமைப்பு ஏர்வழியாக ஈட்டிய வலிமையான பொருளாதார அடிப்படையைக் கொண்டிருந்தது. 'சொல்லேர் உழவர்' 'வில்லேர் உழவர்'- சொல்லேர் உழவர் என்பவர் புலவரைக் குறிக்கும். வில்லேர் உழவர் என்பவர் வேடர்/வீரர். வீரரும் புலவரும் கூட உழவர்களாகச் சித்தரிக்கப்பட்டது. இதிலிருந்து உழுதொழிலுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. வெற்றிப் பெற்ற போர்க்களத்தை ஏர்க்களமாகவும் போர்க்களத்தில் பெற்ற வெற்றியை ஏருழுது விளைச்சலை அறுவடை செய்யும் வேளாண்மைச் சடங்காகப் புலவர்கள் புனைந்துரைத்தனர். 'ஏர்கள வழி' என்ற புறநானூற்றுப் பாடல் இதன் சிறப்பைக் கூறுகிறது. போருக்கும் ஏருக்கும் உள்ள தொடர்பு-உழவர்கள், ஏர் உழ காலையில் சென்று மாலையில் திரும்பினர். அதே போல வீரர்கள், போருக்குக் காலையில் சென்று மாலையில் திரும்பினர். வீரரும் உழவரைப் போன்றவர்களே. போர்தொழிலும் உழுதொழிலும் ஒன்று தான். அந்தக் கால போர் முறைப்படிப் போரில் வென்றவன் தோற்ற நாட்டின் விளைநிலங்களை அழிப்பது என்பது

மரபு. இன்றும் போரில் வெற்றி கொண்ட நாடுகள் தோற்ற நாடுகளை அழிக்கின்றன. இது புறநானூற்றின் இனக்குழுவின் எச்சம் என்பதை யாரும் மறுக்க முடியாது.

"திறைகொடா மன்னன் ஆரெயில் கடந்து நிணம்படு குருதிஈரத்து அணங்குடை மரபின்இருங்களம் தோறும், கழுதைப் புல்லினம் பூட்டி, வெள்ளைவரகும் கொள்ளும் வித்தும் வைகல் உழவவாழிய பெரிது" [பு.நா. 392] இந்தப் பாடலின் அர்த்தம், வரிகட்டாத மன்னனைத் தோற்கடித்து வெற்றிக் கொண்ட வேந்தன் போர்க்களத்தில் குருதி பரவிய ஈர நிலத்தில் இழிந்த கழுதைகளை ஏரில் பூட்டி பயன்தராத வெள்ளைவரகு, கொள்ளை விதைத்த உழவனாகப் பேரரசன் போற்றப்படுகிறான்.

**இம்மை-மறுமை நம்பிக்கை**

இறந்தோர்க்கு வழிபாடு- மூதாதையர் வழிபாடு தெய்வ வழிபாடு. அக்காலத்தில் வாழ்ந்தமக்கள் உயிர் வாழ்வோருக்கும் இறந்தோருக்கும் இடையில் நிரந்தரமானதொரு நெருக்கம் இருப்பதாக நினைத்தார்கள். இன்றைய சமூகத்தினருக்கும் இதில் நம்பிக்கை இருப்பதால், இறந்தோரை நினைத்து வணங்கி எந்த நல்ல காரியத்தையும் தொடங்குவார்கள்,

**அறக்கொள்கை**

வள்ளல் தன்மை பற்றி ஒரு பாடல்,

> "**அறுகுளத்துஉருத்தும்அகல்வயல்பொழிந்தும்**
> **உறுமிடத்துஉதவாதுஉவர்நிலம்ஊட்டியும்**
> **வரையாமரபின்மாரிபோலக்**
> **கழற்கால்பேகன்கொடைமடம்**"[**பு.நா**.142]

அதாவது, மழைக்கு உள்நோக்கமோ, பயன் எதிர்பார்ப்போ இல்லை. அது தன் இயல்பாய் எல்லோருக்கும் அளிப்பது இயற்கையானது. மலை நாட்டு மன்னர்களின் ஈகையும் இத்தகையதே. இவர்களுடைய ஈகை குழுமச் சமூக இயல்பாகக் கொண்டது.

'இம்மைச் செய்தது மறுமைக்காம்' அதாவது, இப்பிறவியில் தானம் செய்வது மற்ற பிறவியில் நன்மை அடைவதற்காக.

> **"மறுமை நோக்கின்றோ அன்றே பிறர்**
> **வறுமை நோக்கின்று அவன்கை வன்மையே"[பு.நா.141]**

மறுமைக்காகk செய்யப்படும் ஈகை பிறர் வறுமைபோக்கும் நோக்கமன்று. மேலும், ஈகை 'வணிகப் பரிசிலன் அல்லேல்' என்றனர். அதாவது பண்ட மாற்றுச் செய்து கொள்கின்ற ஒரு வணிகன் அல்ல. கொடுக்கல் வாங்கல் என்பது எதையும் எதிபார்த்து நடக்கக் கூடாத காரியம். புறநானூற்று இனக் குழுச் சமூகத்தில் மனிதன் தான் வேட்டையாடினதை மற்றவர்க்குப் பகிர்ந்து கொடுத்து, உண்டு மகிழ்ந்தான். அவனிடம் எந்த எதிர்ப்பார்ப்பும் இலன். ஆனால் அந்த இனக் குழுச் சமூதாயத்தின் எச்சம் தான் இன்று இல்லாதவனுக்கு இருப்பவன் கொடுத்து அடிமைப்படுத்துவது.

பெருஞ்சித்திரன் என்ற புலவர் பழைய குழுச் சமூகப் பண்பாட்டின் பகிர்ந்துண்ணும் பண்பு சீரழிந்து விட்ட நிலை கண்டு வெகுண்டு பாடினார்

> **"காணாது ஈத்த இப்பொருட்கு யான்ஓர்**
> **வாணிகப் பரிசிலன் அல்லேன்" [பு.நா. 208]**

**முடிவாக**

புராதனமான இனக்குழுச் சமூகம் அதன் பண்பாடும் வளர்ந்து வந்த வேளாண் சமூக அமைப்பால் மாறுதலுக்குள்ளாகிச் சொத்துறவுகள், நிலக்கிழமை உடமை பொருள்சார் மதிப்பீடுகளாக நிறமாற்றமடைந்தன. வேளாண் நாகரீகத்தின் செல்வமும் உடமையும் பெருகப்பெருகப் பழைய குழுச் சமூக நாகரீகத்தின் உறவுகளின் உணர்ச்சிமயமான மனித இணக்கமானது பொருள் மற்றும் பயன்சார்ந்த உறவுகளாக மாறின. சங்க காலத்திலேயே பழமையின் எச்சங்களாகத் தொடங்கி விட்டக் காரணம் வேடன் வீரனானதது வீரன் வேந்தனானது . மறுமை இன்பம் - பயன் கருதும் செயல் - சமூகத்தின் வேலைப் பாகுபாடுகள், வருணம், வைதீகச் சடங்கு சார்ந்த கருத்துக்கள், கடவுள் பிம்பங்கள், விரிவாக்கப்பட்ட சாகுபடி நிலங்கள். பாரம்பரியமான குழுச் சமூகங்களின் அழிவு-வைதீக பிராமணர்கள் மற்றும் சமண-பௌத்த துறவிகள் தோற்றம்

**துணைமை நூல்கள் :**


1. புறநானூறு, புலியூர்க் கேசிகன் (உரை ஆசிரியர்), கௌரா பதிப்பகம், சென்னை.
2. https://www.google.com/search?sca_esv=cda186bd45d2ee5d&q=%E0%AE%AA%E0%AF%81%E0%AE%B1%E0%AE%A8%E0%AE%BE%E0%AE%A9%E0%AF%82%E0%AE%B1%E0%AF%81+-+%E2%80%98%E0%AE%95%E0%AE%B2%E0%AE%AE%E0%AF%8D%E0%AE%9A%E0%AF%86%E0%AE%AF%E0%AF%8D%E0%AE%95%E0%AF%8B%E0%AE%B5%E0%AF%87%E0%AE%95%E0%AE%B2%E0%AE%AE%E0%AF%8D%E0%AE%9A%E0%AF%86%E0%AE%AF%E0%AF%8D%E0%AE%95%E0%AF%8B%E0%AE%B5%E0%AF%87%0A%E0%AE%A4%E0%AE%A9%E0%AF%8D%E0%AE%A9%E0%AF%8A%E0%AE%9F%E0%AF%81%0A%E0%AE%9A%E0%AF%81%E0%AE%B0%E0%AE%AE%E0%AF%8D%E0%AE%AA%E0%AE%B2%E0%AE%B5%E0%AE%A8%E0%AF%8D%E0%AE%A4%E0%AE%8E%E0%AE%AE%E0%AE%95%E0%AF%8D%E0%AE%95%E0%AF%81%E0%AE%AE%E0%AF%8D%E0%AE%85%E0%AE%B0%E0%AF%81%E0%AE%B3%E0%AE%BF%0A%E0%AE%B5%E0%AE%BF%E0%AE%AF%E0%AE%A9%E0%AF%8D%E0%AE%AE%E0%AE%B2%E0%AE%B0%E0%AF%8D+%E0%AE%85%E0%AE%95%E0%AE%A9%E0%AF%8D%E0%AE%AA%E0%AF%8A%E0%AE%B4%E0%AE%BF%E0%AE%B2%E0%AF%8D+%E0%AE%88%E0%AE%AE%E0%AE%A4%E0%AF%8D%E0%AE%A4%E0%AE%BE%E0%AE%B4%E0%AE%BF%0A%E0%AE%85%E0%AE%95%E0%AE%B2%E0%AE%BF%E0%AE%A4%E0%AE%BE%E0%AE%95+%E0%AE%B5%E0%AE%A9%E0%AF%88%E0%AE%AE%E0%AF%8B%E2%80%99%5B%E0%AE%AA%E0%AF%81.%E0%AE%A8%E0%AE%BE.+256%5D&spell=1&sa=X&ved=2ahUKEwj5q4qGmZuMAxVYj68BHctsBGwQBSgAegQIDhAB&biw=1366&bih=657&dpr=1

MUTHTHARASI – Art Literary Culture Tamil Journal
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
SPL-EDITION – IV VOLUME - 1
மார்ச்சு-2025 E-ISSN: 2584 - 1238

# 4. புலம்பெயர் இலக்கியம் விளக்கங்கள் மற்றும் : அறிமுகம் - விவரணைகள்

நாமணிகண்டபிரபு.,
முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ் உயராய்வு மையம்,
அமெரிக்கன் கல்லூரி, மதுரை .02-
அலைபேசி எண் 7871687534 : - மின்னஞ்சல் முகவரி :maniprabu266@gmail.com
DOI 10.5281/zenodo.15064501.

**Abstract**

We all know that the ancient Tamils have been migrated for a long time due to politics or economic problems. In general, human beings continue to migrate to educate or make up, as birds and cattle are named for their prey. This is the displacement of their wishes, previously planning and walking with appropriate products. But if one has never been planned, it will be some sort of unfortunate if he has to leave or be pushed away from his birthplace. In the current context, they point out that the migration or the asylum situation. Based on this, the process of this article is to highlight the meaning of the word migration, the underlying reasons for the diaspora, the definition of immigration, the description of the diaspora and the diaspora literature.

**Key Words:** Ancient Tamil - diaspora literatureHistory -

**முன்னுரை**

பண்டைய தமிழர்கள் அரசியல் காரணமாகவோ, பொருளாதாரப் பிரச்சினையின் காரணமாகவோ தங்களின் இருப்பிடத்தை விட்டுக் காலவரையறையோடு புலம்பெயர்ந்து சென்றுள்ளனர் என்பதை அனைவரும் அறிவோம்பொதுவாக ., பறவைகள், கால்நடைகள் தங்களின் இரைக்காகப் பெயர்வது போல, மனிதர்கள் கல்வி கற்கவோ, பொருளீட்டவோ தொடர்ந்து புலம்பெயர்ந்து வருகின்றனர்இது அவர்கள் தம் விருப்பத்தின் பேரில் ., முன்னர் திட்டமிட்டு, உரிய தயாரிப்புகளோடு நடக்கின்ற இடப்பெயர்வாகிறதுஆனால் ., ஒருவர் என்றுமே திட்டமிட்டிராத நிலையில், உடனே அவர் தன் பிறப்பிடத்தை விட்டு அகல வேண்டிய அல்லது தள்ளிவிடப்பட வேண்டிய நிலையை எட்டுவாராயின், அவருக்கு அது ஒருவித துரதிஷ்ட நிலையாக அமைந்து விடுகிறதுஅவ்வித நெருக்கடியை நடப்புச் . சூழலில்‘புலம்பெயர்தல்’ அல்லது ‘புகலிட நிலைமை’ எனச் சுட்டுகின்றனர்இவற்றின் . அடிப்படையில் புலம்பெயர்தல் என்ற சொல்லிற்கான பொருண்மைகளையும், புலம்பெயர்விற்கான அடிப்படைக் காரணங்களையும், புலம்பெயர்தல் பற்றிய வரையறையும், புலம்பெயர்ந்தோர் பற்றிய மற்றும் புலம்பெயர்ந்தோர் படைத்த இலக்கியங்கள் பற்றிய விவரணைகளையும் எடுத்துக் கூறும் வகையில் இந்தக் கட்டுரையின் செயல்நிலையானது அமைகிறது.

**புலம் சொல் விளக்கம் -**

‘புலம்’ என்ற சொல் திசை, இடம், நிலம் போன்ற பொருள்களைப் பொதுவாகத் தருகிறது க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி .“**பல்கலைக்கழகத்தில் தொடர்புடைய பல துறைகளை உள்ளடக்கிய பிரிவு, பக்கம், மின்காந்தப்புலம்**”[1] போன்ற விளக்கங்களை அளிக்கிறது மேலும் .ரா கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி என்ற நூலில்.

“**அறிவு, இடம், ஒளி, திக்கு, நுண்மை, மேட்டுநிலம், வயல், அரிசி**”[2] என்கிற பல்வேறு சொற்களை அவர் காட்டுகின்றார்இவ்விடத்து ., திசை, இடம், திக்கு முதலான சொற்கள் புலம்பெயர்தல் என்னும் சொல்லாடலுக்கு நெருக்கமாக அமைகின்றன.

**புலம்பெயர்தல் விளக்கமும் வரையரையும் -**

மனிதன் தான் பிழைக்க வழியின்றி தன் விருப்பத்திற்கு மாறாக, தனது சொந்த மண்ணில் வாழ இயலாமல், அந்நிய மண்ணில் வாழ்வதற்கென, எந்தவொரு முன்னேற்பாடும் இன்றி, அங்குத் தஞ்சம் புகுவதையே 'புலம்பெயர்தல்' என்கின்றனர் . இதற்குச ் சான்றாக, ஈழத் தமிழர்களின் புலம்பெயர்வு பற்றி விளக்க முற்படின், அவர்கள் இன்றி, தமிழ்க் கலாச்சாரத்தின் சூழலுக்கு முற்றிலும் மாறுபட்டுள்ள மக்களின் மத்தியில் இருந்து, பல்வேறு வாழ்வியல் நெருக்கடிகளுக்குள் தள்ளப்பட்டு வாழுகிற சூழல் அல்லது நிர்ப்பந்தத்தில் உலகெலாம் பரவித் துயருறுகிற நிலைமையைக் காட்டலாம்.

மேலை நாடுகளில் “ **'புலம்பெயர்தல்' என்பதைக் குறிக்கப் பயன்படுத்தப்படும் 'டயாஸ்போரா' என்ற சொல்லானது 'டயாஸ்பீர்' என்ற கிரேக்கச் சொல்லிலிருந்து பிறந்ததாகும் இச்சொல்லுக்குத் .'தூவுதல்' என்பது பொருளாகும்**”[3]. 1991இல் வெளிவந்த 'டயஸ்போரா' என்ற இதழின் ஆசிரியர் 'காச்சிக்டோலோலியான்' என்பவர், நாடு கடந்து முன்மாதிரியாக அமையும் ஒரு சமூகம் என இந்தப் புலம்பெயர் சமூகத்தை வரையறைப்படுத்துகிறார் .'சைட்டிக் வால்கர்' என்பவர் இந்தப் புலம்பெயர் சமூகத்தை இன்னும் தெளிவாக, “**தாய் மண்ணில் இருந்து பிரிந்துபோய் வெளிநாட்டில் வாழ்கின்ற ஒரு மக்கள் கூட்டம்** [4]”என்று வரையறுக்கிறார்புலம்பெயர்தல் என்ற சொல்லிற்கு . இணையாக இடம்பெயர்ந்தோர், குடிபெயர்ந்தோர், புகலிடம் தேடிச் சென்றோர் போன்ற பதங்களும் வழக்கத்தில் உள்ளன.

புலம்பெயர்தல் என்னும் இச்சொல்லாடலுக்கு மேலும் சில விளக்கங்களும் தரப்படுகின்றனகுடும்பத்துடன் அகலுதல் ., குடும்பக் கட்டமைப்புகள், வாழ்வியல் சிதைந்து போதல் அல்லது குடும்பத்தோடு வெளியேற்றப்படுதல், தங்களது குடியிருப்புகளைவிட்டு நீங்குதல் என்றெல்லாம் கூட அப்பொருள் கொள்ளல் அமைகிறது.

**புலம்பெயர்தலும் புகலிடமும்**

புலம்பெயர்தல் புகலிடம் என்கிற வார்த்தைகளானவை தற்போது ஒன்றான அர்த்தத்தளத்தில் பொதுவாக ஆளப்பட்டாலும் இவை ஒன்றுக்கொன்று நேரெதிரான பட்ட கருத்தியல்களைக் இரண்டும் வெவ்வேறான மாறு .தளத்தில் இயங்குபவையேயாகும் புலம்பெயர்தல் எ .கொண்டனவாகும்ன்பது பெரும்பாலும் வணிகம், கல்வி, சுற்றுலா திருவிழாக்கள் போன்ற பல காரணங்களை அடியொற்றி, பிற மண்ணிற்குச் சென்று, மீண்டும் தன் நிலம் திரும்புவதைக் குறிக்கும் இதனைத் .'தற்காலிக புலம்பெயர்தல்' என்றும் கூறுவர் இவ்விதப் .“**புலம்பெயர்தலில் எப்போதும் கட்டாயமான, வன்முறை சார்ந்த இடப்பெயர்வு என்பது இருப்பதில்லை**”[5]. புகலிடம் என்பது இதற்கு நேர் எதிரானது . இச்சொல், தீராத பஞ்சம், வறுமை, ஏதுமற்ற அந்நிய உணர்வு, நிற்கதியற்ற நிலை போன்ற விடயங்களின் காரணமாகச் சொந்த மண்ணை விட்டு, தன் இன்னுயிரை மட்டுமே உடமையாகக் கொண்டு தனது ஆயுளின் இறுதிவரை, அயல் மண்ணில் ஒருவர் தஞ்சம் அடைவதைக் குறிக்கும்.

ஒரு மனிதன் தன் வாழ்க்கையில், என்றுமே தான் திட்டமிட்டிருக்காத நிலையில், தன் வீட்டையும், தாயகத்தையும் விட்டு விட்டுச் செல்ல வேண்டிய திடீர் முடிவுக்கு ஆளாகும் நிலையையே இப்புகலிடம் என்னும் சொல்லாடல் உணர்த்த முயற்சிக்கு எனலாம் இப்புகலிடம் அடைதல் என்பது .**"சிக்கலானதாகவும், இயல்புக்கு மாறான புலம்பெயர்தலை விட மிக ஆழ, நீள, அகல, பரிமாணங்கள் கொண்டதாகவுமே என்றும் இருக்கும்."**[6] எனவே 'புகலிடம்', 'புலம்பெயர்தல்' என்கிற இவ்விரண்டு சொல்லாடல்களும் தனித்தனியாகப் பார்க்கப்பட வேண்டிய விடயங்களாகும்.

**புலம்பெயர்வதற்கான காரணங்கள்**

பொதுவாக, புலம்பெயர்விற்கான அடிப்படைக் காரணிகளான இயற்கைப் பேரிடர்கள், வறுமை, பஞ்சம், உள்நாட்டுக் கலவரம், அரசியல் சீர்கேடு, சமூகத்தால் புறந்தள்ளப்பட்ட நிலை, வேலைவாய்ப்பின்மை போன்ற சூழல்களே அமையப் பெறுகின்றனவாழ்க்கையில் . எவ்விதப் பிடிப்புமற்று தம் உயிரையாவது காத்துக் கொள்ளும் பொருட்டு, தவிர்க்கமுடியாமல் பிற நாட்டிற்குத் தஞ்சம் அடைதல், சுய இருப்புக் கேள்விக்குள்ளாகும் நிலைமையைப் பெறுதல், திடீரென அகதிகளாக்கப்படுதல், எதிர்பாராத போர்களினால் விளைந்திடும் உயிரிழப்புகளை எதிர்கொள்ளல், பொருளிழப்புகள் போன்றவைகளால் தங்களின் வாழ்வுநிலை கோரமாகப் பாதிக்கப்பட்டிடும் அத்தருணத்தில், மக்கள் தங்களின் இயல்பு வாழ்க்கைக்குத் திரும்பவே இயலாமல் வேற்றுப் புலங்களுக்கு குறிப்பாக, என்றுமே சென்றிராதப் பிரதேசங்களுக்குப் புலம்பெயர்ந்து சென்று நசிவது இப்புகலிடத்துள் உள்ளடங்குகிறது.

**இடப்பெயர்வும் அகதிமையும்**

எந்தவொரு நாட்டிலும் நிகழ்கின்ற உள்நாட்டு அரசியல் காரணங்கள் மற்றும் இயற்கைப் பேரிடர்கள் முதலானவற்றால் பெயர்வுக்கு ஆட்பட வேண்டிய நிலையும் உள்ளதுஇவ்வாறு உருவாகின்ற புலம்பெயர்வாசிகள் ., பல பிரதேசங்களுக்கும் சென்று, அங்குத் தங்களின் வாழ்வியல் நிலையை ஒழுங்குபடுத்திட முயல்கின்றனர்இதற்கு . உதாரணமாக, ஈழநாட்டின் உள்;ர் அகதிகளைக் கூறலாம்இவர்கள் தங்களுடைய நாட்டிற்கு . காரணமாகப் புலம்பெயர்ந்து அகதிகளாக மாற்றப்பட்டு ஒருவகையான உள்ளேயே போரின் .புலம்பெயர் சமூகமாக உருமாறி வாழ்ந்து கொண்டிருக்கின்றனர்**"அமெரிக்காவின் ஈராக் படையெடுப்பினால் ஏறத்தாழ இருபது இலட்சம் ஈராக் மக்கள் உள்நாட்டுக்குள்ளேயே புலம்பெயர்ந்து வாழும் அகதிகளாக வாழ்ந்து வருகின்றனர்"**[7]. என்பதும் கவனிக்கத்தக்க ஒரு விசயமாகிறது.

**புலம்பெயர்ந்தோர் வரையறை -**

நடப்புச் சூழலில் புலம்பெயர்ந்து வாழுகின்ற மக்கள், 'ஏதிலியர்', 'நாடுகடந்தோர்கள்', 'விட்டோடிகள்', 'யுத்த சன்யாசிகள்' என்பதான கலைச்சொற்களால் குறிக்கப்படுகின்றனர் . நிலைமை என்பது இவர்களின் வாழ்வியல், தமது தனிமனிதனின் அடிப்படைத் தேவைகள் பாதிக்கப்பட்டு உயிரைக் காத்துக்கொள்ள ஓடி ஒளிந்து, பிற நாட்டில் அகதிகளாகக் குடியேறி, அச்சத்துடனும், பாதுகாப்பற்ற உணர்வுடனும் வாழவேண்டிய துயரம் நிறைந்த வாழ்க்கை முறையாகவே உள்ளது.

பெரும்பாலும் சாதி, மதக்கலவரம், அணைக்கட்டுதல், நாட்டின் முக்கிய நகரம் தலைமையமாக்கப்படுதல், எரிமலை வெடிப்பு, பூகம்பம், வெள்ளப்பெருக்கு போன்ற காரணங்களால் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குக் கூட்டம் கூட்டமாக புலம்பெயர்ந்து செல்பவர்களைக் 'புலம்பெயர்ந்தோர்' என்னும் வார்த்தையானது குறிக்கத் தொடங்கி, தற்போது நிரந்தரமாகத் தம் இருப்பிடத்தை விட்டுப் பெயர்ந்து, திரும்பவும் வரவே முடியாத நிலைமையை எட்டுபவரை குறிக்கவெனப் பயன்படுத்தப்பட்டு வருகிறது . .ஆடம்பர வாழ்க்கை நிமித்தம் நிரந்தரமாகப் பெயருவோர் இவ்வரையறையில் வாரார்

வில்லியம் சாப்ரான் என்பவர் இவர்களை ஆறு வகைகளாக வகைப்படுத்;துகிறார்.

**"1..நாடு கடத்தப்பட்டவர்கள்**

**2. நாட்டை விட்டு வெளியேறிவர்கள்.**

**3..அரசியல் அகதிகள்**

**4. வேற்று நாட்டில் தங்கியிருப்பவர்கள்.**

**5. வெளிநாட்டில் குடியுரிமை பெற்றவர்கள்.**

**6. தேசிய இனச் சிறுபான்மையினர்".**[8]

என்கிற இவ்வறுகைப்பட்டோரை இவர் புலம்பெயர்ந்தோர் பட்டியலில் இணைக்கிறார் . ஆனால் இதனினும் கருத்து வேறுபாடு இருக்கவே செய்கிறது.

மேலும் புலம்பெயர்ந்தவர்களை நாம் இருவகைகளில் வகுக்கலாம்.

1. உள்நாட்டில் புலம்பெயர்ந்தோர்
2. பன்னாட்டில் புலம்பெயர்ந்தோர்

ர்ந்தோர் என்பது ஒவ்வொரு நாட்டிற்குள்ளும் நிகழும் உள்நாட்டில் புலம்பெய அரசியல் போன்ற சமூகக் காரணிகளால், தங்களின் நாட்டிற்குக்குள்ளேயே தங்கள் ஊரை விட்டு வேறு ஒரு ஊருக்கு அல்லது வேறொரு மாநிலத்திற்குச் செல்வதைக் குறிக்கும் . புதிய கலாச்சாரத்தைக் பன்னாட்டில் புலம்பெயர்ந்தோர் என்பது தன் தாய்நாட்டை விட்டு .கொண்ட அந்நிய நாட்டிற்குச் செல்வதைக் குறிக்கும்

**புலம்பெயர் இலக்கியம் விளக்கம் -**

தம் சொந்த மண்ணில் இருந்து வேறு மண்ணிற்குப் பெயர்த்தெறியப்பட்ட ஓரினம், பெயர்ந்த நாட்டின் புதிய சூழ்நிலைக்குத் தக்கவாறு, தங்களைத் தகவமைத்துக் கொள்ளும், நிலைமையை, வாழ்நிலைப் போராட்டங்களை மையமாகக் கொண்டு படைக்கப்படும் இலக்கியத்தையே 'புலம்பெயர் இலக்கியம்' அல்லது 'புகலிட இலக்கியம்' என்று அழைக்கின்றனர்குறிப்பாக ., தமது தேசத்தில் அல்லது தனது சமூகத்தில் வாழ்வு மறுக்கப்பட்டவர், தம் நாட்டையும், தம்மின மக்களையும், உடைமைகளையும் இழந்து, தங்களது பிரிவாற்றாமையையும், மனவேதனைகளையும் இலக்கியப் படைப்புகளின்வழி வெளிப்படுத்தும்போது அவ்விலக்கியம் 'புலம்பெயர் இலக்கியம்' என்று அழைக்கப்படுகிறது.

புகலிட வாழ்வில் பழக்கப்படாத உணவு, உடை, மொழி, பண்பாடு, கலாச்சாரம், புதிய வாழ்வியற் சூழ்நிலை என வெவ்வேறு வகையான பழக்கவழக்கங்கள் காணப்படுகின்றன . தங்களுடைய இயல்பை இழந்து தவிக்கின்ற தவிப்பும், அங்கு அந்நியமாக்கப்படுகின்ற நிலையும் புலம்பெயர் இலக்கியத்தின் சாரங்களாக அணமகின்றன.

புலம்பெயர்தலால் ஏற்பட்ட அனுபவங்களைப் பதிவுசெய்வதில் மற்ற நாட்டினரை விட, புலம்பெயர்ந்து வாழும் ஈழத்தமிழர்கள்தான், தங்களின் நாட்டில் நடைபெற்ற ஈழப் போராட்டத்திற்குப் பிறகு, தாங்கள் புலம்பெயர்ந்தமைக்கான காரணங்கள் மற்றும் தாம் எதிர்கொண்ட வாழ்வியற் நெருக்கடிகளை அழுத்தமாகவும் ஆழமாகவும் பதிவுசெய்து வருகின்றனர்இது குறித்தான சிந்தனை தமிழ்ச்சூழலில் ஆரம்ப காலகட்டங்களில் . குறிப்பாக, புலம்பெயர்ந்து வாழும் தமிழ் மக்களிடம் இல்லை என்றாலும், தற்காலத்தில் ஆவணமாகவும், படைப்புகளின் வழியேயும் வெளியுலகிற்கு எடுத்துரைக்கும் தேவையும் அவசியமும் அவர்களுக்கு ஏற்பட்டுள்ளதால், அவர்கள்தாம் பெற்ற இன்னல்களை எடுத்துக் கூறுவதில் வஜெயபாலன்.ச.ஐ., சேரன், ஷோபாசக்தி போன்ற புலம்பெயர்ந்த படைப்பாளிகள் முன்னோடியராகத் திகழ்கின்றனர்பிரேம் ரமேஷ் ., தோப்பில் முகம்மது மீரான், பாவண்ணன் போன்ற புலம்பெயராத படைப்பாளிகள் தம் புனைவுகள்வழி எடுத்துக்கூறி புலம்பெயர் இலக்கிய உலகில் பெரும் முனைப்புடன் செயல்பட்டு வருகின்றனர்.

புலம்பெயர்ந்தோர் பொதுவாகத் தங்களின் புகலிடச்சூழலில் புதிய சமுதாயம், பண்பாடு, பழக்கவழக்கம் இவற்றோடு கலந்துவாழவே முற்படுகின்றனர்அவ்வாறு வாழ . முற்படுகின்ற போது எழுகிற தமது இயலாமையையும் சகிப்புத்தன்மையையும் அவர்களின் .கலிட மொழியிலேயே அவர்களால் பெரிதும் கூறப்படுகின்றனபுஆகையால், ஒரு சில பதங்கள் குடியேறிய தேசங்களின் மொழியாகவே மொழிபெயர்க்காமல் அதில் உள்ளவாறே எழுதப்படுகின்றனஇதனால் ., புதுப்புது சொற்களும், புதிய அர்த்தங்களும் தற்போது தமிழில் உருவாகிக்கொண்டே வருகின்றன.

**நிறைவாக...**

புலம் என்பதற்கு திசை, இடம், நிலம், வயல், அறிவு என்னும் அகராதி தரும் விளக்கங்கள் பல இருப்பினும் திசை, இடம், திக்கு என்பனவே மிகப் பொறுத்தமாக இருக்கின்றன என்பதை அறிய முடிகிறதுபுலம்பெயர்தல் என்பது ., வாழும் இடத்தை விட்டு வேறு இடத்திற்கு குடிபெயர்தல் என்ற பொருளில் எடுத்துக் கொள்ளுதல் கூடாது . இடம்பெயர்தல் வேறு ; புலம்பெயர்தல் வேறுஇவ்விடத்துப் புலம்பெயர்தல் என்பது . புகலிடம் என்பது .புகலிடம் என்கிற பொருண்மையிலேயே ஆளப்பட வேண்டும் நிரந்தரமாகத் தம் இருப்பிடத்தை விட்டுப் பெயர்ந்து செல்லல் என்கிற அர்த்தத்தையே .கிற சொல்லாகும்தரு'புகலிடம்' மற்றும் 'புலம்பெயர்தல்' என்ற சொல்லாடல்கள் போர்ச்சூழல், வறுமை, பஞ்சம், இயற்கைப்பேரிடர் போன்ற பல காரணிகளை மையமிட்டே பெரிதும் அமைகின்றன எனலாம்புலம்பெயர்தலில் உள்நாட்டிற்குள் ., வெளிநாடு நோக்கி என இரு பகுப்புகள் உண்டு என்பதும், புலம்பெயர் இலக்கியங்கியங்களைப் புலம்பெயர்ந்தவர்களோடு, புலம்பெயராதவர்களும் கூட எழுதிவருகின்றனர் என்பதும் தெரியவருகிறதுபுலம்பெயர் இலக்கியத்தின் அடிப்படை அம்சங்களாக புலம்பெயர்ந்த . இடத்திலிருந்து எழுகிற உணவு, உடை, இருப்பிடம், மொழி, பண்பாடு, பழக்கவழக்கங்கள், சுயம், இருப்பு முதலானவற்றுக்கு பங்கம் வருகிற விதங்களில் எழுகிற பிரச்சினைகளே பெரிதும் அமைகின்றனஇத்துடன் தம் உறவிழப்புகள் குறித்த பரிதவிப்புகள் பிறந்த நிலம் . .மீதான ஏக்கம் என்பனவும் பேசுபொருட்களாகப் பெரிதும் அமைகின்றன எனலாம்

**சான்றெண் விளக்கக் குறிப்புகள்**

1. பா(.ஆ.(முத)சுப்பிரமணியம்.ரா., ‘க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி’, ப.750.
2. ராகதிரைவேற்பிள்ளை., ‘தமிழ் மொழி அகராதி’, ப.1084.
3. கபஞ்சாங்கம்., ‘இலக்கியமும் திறனாய்வுக் கோட்பாடுகளும்’, ப.346.
4. மேலது., ப.346.
5. தெவெற்றிச்செல்வன்., ‘ஈழத்தமிழர் புகலிட வாழ்வும் படைப்பும்’, ப.27.
6. மேலது., ப.27.
7. கபஞ்சாங்கம்., ‘முந்நூல்’, ப.347.
8. மேலது., ப.348.

**துணைநூற் பட்டியல்**

**முதன்மை நூல்கள்**

1. பஞ்சாங்கம்.க., - ‘இலக்கியமும் திறனாய்வுக் கோட்பாடுகளும்’ அகரம் வெளியீட்டகம் - அன்னம், தஞ்சாவூர், முதற்பதிப்பு - 2016.

2. வெற்றிச்செல்வன்.தெ., - ‘ஈழத்தமிழர் புகலிட வாழ்வும் படைப்பும்’, சோழன் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு- 2009.

**அகராதிகள்**

1. கதிரைவேற்பிள்ளை.ரா., - ‘தமிழ் மொழி அகராதி’, சாரதா பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு - 2011.

2. சுப்பிரமணியம்.ரா.பா.,(முத(.ஆ.,- ‘க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி’, க்ரியா வெளியீடு, சென்னை, இரண்டாம் பதிப்பு- 2011.

*********************

# 5. அலவாக்கோட்டை நாயனம் சின்னையா எனும் எளிய மனிதனின் கலைப்பயணம்

**கி.ராஜ்குமார்,**
மலை மேடு,அன்னை இந்திரா குடியிருப்பு,
அலவாக்கோட்டை,சிவகங்கை மாவட்டம்.630553.
kumar1990svg@gmail.com - 9655280231
DOI 10.5281/zenodo.15064612.

**Abstract:**

The purpose of this article is to explore the way and the environment of the Nayanam Chinnaiah, born in the village of Alavakkottai in Sivagangai district in Sivagangai district.

**Key Words**: Nayanam Chinnaiah - Sivagangai district

**முன்னுரை:**

கலையின் தேவையும் அதனால் உண்டாகும் பொருளாதார வளமும் எளிய மனிதனை அதன் போக்கில் ஈர்க்கிறது. இயல்பாக மனிதனுக்குள் ஆழப் புதைந்திருக்கும் கலை வெளிப்படவும் தன்னை வெளிக்காட்டிக் கொள்ளவுமான தருணத்திற்குள் எத்தனிக்கிறது. ஆழ்மன ஊசல்கள் அது தனக்குள் உருவாக்கிக் கொண்டனவும் உரையாடிக் கொண்டிருந்தனவுமான இவற்றை ஒருவாறு இசையாக அதனை இயக்குபவனை இசைக் கலைஞனாக மாற்றி அமைக்கிறது. சமூகத்தில் எழுந்த தேவையை தன் வயிற்றுப் பசியைப் போக்கிக் கொள்ள தன் ஏழ்மையை மறைத்துக் கொள்ள ஒரு ஆடையாக பயன்படுத்திக்கொண்ட எத்தனையோ கலைஞர்களை இவ்வுலகம் கண்டிருக்கிறது. அவ்வகை கலைஞர்களுள் ஒருவரான அலவாக்கோட்டை மு .சின்னையா( ஆறு ஆண்டுகளுக்கு முன்பு மரணமடைந்துவிட்டார்) என்னும் நாதச்சுரக் கலைஞர் கலைத்துறைக்குள் பயணித்த முறையை ஆராய்ந்து விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**கலைக்குள் பாகுபாடு:**

இந்த நாட்டில் எது எதில் தான் சாதிய ஏற்றத்தாழ்வுகள் பாகுபாடுகள் இல்லாமல் இருந்திருக்கின்றன. ஒவ்வொரு இந்தியனிடமும் சமத்துவம் என்பது ஆடையை போன்றும் அதற்குள் மறைந்திருக்கும் சாதியம் அவன் தோலைப் போலவும் இறுகிக் கிடக்கிறது. அவ்வகையில் கலைத்துறையிலும் சாதிய ஏற்றத்தாழ்வுகள் மலிந்து கிடக்கின்றன. அதனைக் களைவதற்கான முயற்சியும் சமூகத்தில் நிகழ்ந்து கொண்டே தான் இருக்கிறது. மேளம், நாதசுரம் முதலியவற்றை வாசிக்கின்ற கலைஞர்களுள் இவ்வகையான ஏற்றத்தாழ்வுகள் இருக்கிறது. ஒடுக்கப்பட்ட பட்டியலின சமூகத்துள் உள்ள பறையர் இனத்தைச் சார்ந்த நாயனம் சின்னையா கலைத்துறைக்குள் தன்னை நிலைநிறுத்திக் கொண்டது எளிய செயலன்று.

**இசையின் தேவை:**

மேலே கண்ட பட்டியல் இனத்து சமூகத்தினர் தங்களை தங்கள் இசை தொழிலின் காரணமாக இழிவுபடுத்தப்படுவதை எதிர்த்து மேளம்(கொட்டு) கொட்டுவதில்லை, பறை அடிப்பதில்லை, கொம்பு ஊதுவதில்லை என்று தீர்மானம் செய்து தீர்மானத்துக்கு எதிராக நடந்து கொள்ளும் ஊரிலிருந்து பெண் எடுப்பதில்லை என்று கட்டுப்பாடும் செய்தனர். அதுவரை கிராமங்களில் சாதி அடிப்படையில் இருந்த கட்டாய இசை நிகழ்த்துதல் வழக்கொழிந்தது. பட்டியலின தலைவராக இருந்த சிவகங்கை வெள்ளக்கண்ணு என்பவருடைய முயற்சியால் சாதி ரீதியான இவ்வகையான கட்டாய ஊழிய இசை பங்களிப்பு நிறுத்தப்பட்டது. ஆனால் இவ்வளவு காலம் கிராமங்களின் இசைத் தேவைகளைப் பூர்த்தி செய்து வந்த இம்முறைக்கு மாற்றாக ஒன்றைக் கண்டறிய வேண்டிய தேவை ஏற்பட்டது. இவ்வகையான இசையை வேறு யாரும் செய்ய முன் வராத காரணத்தினால் மீண்டும் அந்த பட்டியலின மக்களே மாற்று வடிவில் வரையறுக்கப்பட்ட முறையில் செய்ய வேண்டியது ஆகிவிட்டது.

**கிராமத்தில் நிகழ்ந்த விளைவுகள்:**

தப்புக் கொட்ட மாட்டோம் என்று சொன்ன உடன் ஊரில் கலகம் ஏற்பட்டது. பட்டியல் இனத்து மக்கள் வாழும் குடியிருப்புகள் தீ வைக்கப்பட்டன. கிராமத்திலிருந்து இசைக் கருவிகளான கொம்புகளை சின்னையா என்பவரும் அய்யாக்கண்ணு என்பவரும் விற்று விட்டார்கள். கலகத்துக்குப் பிறகு புரவி எடுப்பு கூட்டிட்டாங்க. நீங்க தப்புக் கொட்ட மாட்டேங்கறீங்க... புரவி எடுப்பு கூட்ட போறோம்... தப்பு மட்டும்தான் உங்களுடையது.. மற்ற கிராமத்து சாமான் ஏதெது இருக்கோ அதை ஒப்படைச்சிடுங்கன்டாங்க...

**இரண்டு கொம்பு**
**ஒரு வாங்க**
**ஒரு கை மணி**
**ஒரு கிடுகட்டி**

பச்சை அண்ணே, பழனி அண்ணே, கட்டைய மச்சான்( அருந்ததியர்) புது மண்டபத்துக்கு (மதுரை) போறாங்க. புது மண்டபத்துல கிடைக்கல..
டேய் எங்கடா சாமாங்க..ன்னாங்க..
அங்க இங்க ஓடிப் பார்த்தோம் கிடைக்கல...
இப்பவே நீங்க வைக்கணும் இல்லாட்டி நாளைக்கு நீங்க தப்பு அடிக்கணும்... இங்க புடிக்கிறாங்க.. ஒரு வாரம் கேட்டு.. கைமணிய ஈயம் பூசுறவன்கிட்ட தெப்பக்குளத்துக்கு (சிவகங்கை) அருகில் அரக்கு பூசி வாங்கி ஒப்படச்சுட்டோம். ஓலைக்குடியில நிப்பாட்டிப்புட்டு கிடக்கிற கொம்பு மூனையும் வாங்கி ஒப்படைச்சிட்டோம்(1). இந்த கலகம்தொடர்பாக இரண்டு பக்கமும் சேர்த்து 90 பேர் மீது தேவகோட்டை ரசுதா நீதிமன்றத்துல வழக்கு நடந்தது.

**இசைக் குழு உருவாக்கமும் சின்னையாவின் நிலையும்:**

சுற்று வட்டாரப் பகுதியில் எழுந்த இசைத் தேவையைப் பூர்த்தி செய்ய மீண்டும் பட்டியல் இனத்தவர்களையே பிறர் நாடினர். ஜமீன்தார் பட்டி கருப்பையா, மரக்கடை பெருமாள் ஆகியோர் இணைந்து பட்டியல் இனத்தவர்களிடம் சாமான்களை(

இசைக்கருவிகளை) வாங்கி தாரோம் இங்க பழகிக்கிட்டு அடிக்க போங்க.. கிராமத்துக்குனு ஊழியம் வேண்டாம்.. யாரு காசு கொடுக்குறாங்களோ அடிக்கப் போங்க"(1)என்று கூறி இசை வாத்தியங்களை பட்டியலினத்தவர்களிடம் வாங்கி கொடுத்தனர். அதன்படி

**மு.சின்னையா- நாயனம்( நாதசுரம்)**
**மூர்த்தி - மேளம்**
**ஆறுமுகம் - மேளம்**
**தீ.முத்தையா - உருமி**
**சேவுகன் - கிடுகட்டி**

இவ்வாறு ஒரு இசைக் குழு ஒன்று உருவாக்கப்பட்டது. இந்த இசைக் குழுவுக்குப் பயிற்சி அளிக்க அன்றைக்கு புகழ் பெற்று விளங்கிய சிவகங்கை காந்தி என்பவர் ஒரு வாரம் வந்தார். இவர்களின் பயிற்சி அலவாக்கோட்டை அன்னை இந்திரா குடியிருப்பில் அமைந்த சமுதாய கூடத்தில் மாலை நேரம் நடந்தது. பயிற்சி அளிக்க வந்த காந்தி என்பவருக்குப் போக்குவரத்துக்குக் கூடப் பணம் கொடுக்க முடியாத நிலையில் தொடர்ந்து பயிற்சி பெற முடியவில்லை. இந்த இசைக் குழு சில ஊர்களுக்குச் சென்று நிகழ்ச்சிகளை நடத்தியுள்ளது.

**நாயனம் சின்னையா:**

சிவகங்கை மாவட்டம் சிவகங்கை வட்டத்தில் உள்ள அலவாக்கோட்டை கிராமத்தில் முனியன்- அழகி தம்பதியினருக்கு பிறந்த ஐந்து ஆண் குழந்தைகள் இரண்டு பெண் குழந்தைகள் என ஏழு குழந்தைகளுள் இவர் இரண்டாவது குழந்தை ஆவார். தான் முதலில் திருமணம் செய்த பிறகு தன் அண்ணனுக்கு பெண் பார்த்து திருமணம் செய்து வைத்தார். இவ்விதம் குடும்பத்தின் பொறுப்புள்ள ஆண் மகனாக அறியப்படுகிறார். சிறுவயதில் இவரை சின்னப் பையன் என்று அழைத்துள்ளனர். குடும்பத்தில் வறுமை காரணமாகப் பல்வேறு ஊர்களில் பண்ணை வேலைக்குச் சென்று இருக்கிறார். இந் நிலையில் ஊரில் ஏற்பட்டக் கலகத்துக்கு முன்பாகக் கொம்பு ஊதும் கலைஞராக இருந்திருக்கிறார். பிறகு மேலே கண்ட இசைக் குழுவில் நாயனம் வாசிப்பாளராகத் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். சின்னையாவை ஊரில் உள்ளோர் நாயனம் , ஒத்து, சின்னப் பையன் என்றெல்லாம் அழைத்தனர்.

**சின்னையாவின் இசைப்பயணம்:**

அலவாக்கோட்டை கிராமசு வீட்டில் சின்னையா மாடு மேய்க்கும் வேலை பார்த்து வந்தார். மாடு மேய்க்கும் போது சீகில்(சீங்கில்) தட்டையை நாயனம் மாதிரி ஊதுவார். அதுல ஊதி ஊதி பழகிக்கொண்டார். "சின்னப்பையன் ஊதுறாண்டா.. ஆத்தோரத்தில் அவன் மாடு நிக்குதுடா.. அங்க ஊதுறாண்டா.."(1) என்று கிராம மக்கள் பேசிக் கொள்வார்கள்.

மேலே கண்ட இசைக் குழு உருவாக்கிய பிறகு அதில் உள்ள மற்ற உறுப்பினர்கள் இசையை கை விட்ட பிறகும் இசையின் மீதுள்ள தாகத்தினாலும் தன் வீட்டில் இருந்த வறுமையினாலும் தொடர்ந்து இருபது ஆண்டுகளுக்கு மேலாக இவ் வட்டாரத்தில் எழுந்த இசை தேவையை பூர்த்தி செய்யும் கலைஞனாக அவர் இருந்தார். கோவில் திருவிழாக்கள், இறப்பு நிகழ்வுகள், வீட்டு விழாக்கள்( திருமணம் போன்றவை) என அனைத்து நிகழ்வுகளிலும் இவரது நாயனம் இவ் வட்டாரத்தில் இசைத்துக் கொண்டே இருந்தது.

வேலை இல்லா நாள்களில் வீட்டில் அவர் தொடர்ந்து நாயனப்(நாதசுரப்)பயிற்சி மேற்கொள்ளும் ஓசை கேட்டு சிலர் சின்னய்யன் ஊத ஆரம்பித்துவிட்டான் எத்தனை இழவு விழப் போகிறதோ என்றெல்லாம் இழிவுபடுத்திப் பேசியுள்ளனர்.அந்த அளவுக்கு மற்றைய விழாக்களை விட இறப்பு நிகழ்வுகளே அவரது இசைக்கு அதிக வாய்ப்புகளையும் வளமைகளையும் தந்திருக்கிறது. இரண்டொரு திரைப்படங்களில் இவர் நாயனம் ஊதிச் செல்வது போன்று நடித்ததாகத் தெரிகிறது(2).

**சின்னையாவின் வீழ்ச்சி:**

மதுரையில் நடக்கும் சித்திரைத் திருவிழாவுக்கு ஆண்டுதோறும் நாயனம் ஊதுவதற்குச் செல்லக்கூடியவர். இறுதியாக இவ்வகையான சித்திரைத் திருவிழாவில்( அழகர் ஆற்றில் இறங்கும் நிகழ்வுக்கு) நாயனம் ஊதச் சென்ற இடத்தில் இவரது இசைக்கு நடனமாடிய உள்ளூர் மக்களுக்குள் ஏற்பட்ட சண்டையில் இவரது நாயனத்தைப் பறித்துக் கொண்டு ஒருவரை ஒருவர் தாக்கிக் கொண்டதில் நாயனத்தை உடைத்து விட்டனர். அதுவே இவரது இசைப் பயணத்தில் இறுதி நிகழ்ச்சியாக அமைந்துவிட்டது. அதற்குப் பிறகு எங்கும் அவர் ஊதச் செல்லவில்லை. சிறிது காலத்தில் மரணம் உற்றார்.

**முடிவுரை:**

ஒரு கலைஞனின் வாழ்வு வலி நிறைந்தது. அது நிகழ்த்தும் இடங்களிலும் குடும்ப சூழலிலும் ஏற்பட்டு தீராத காயத்தோடு கலைஞனின் வாழ்வு நகர்கிறது. கலைஞன் பெருமிதம் மிக்கவன் அவனுக்குள் தன்மானம் மிகுந்திருக்கிறது. நாயனம் சின்னையா அரசு வழங்கக்கூடிய ஓய்வூதியத்தைக் கூட பெறாமல் அதற்கான முயற்சி ஏதும் செய்யாமல் தன் இறுதிக் காலத்தில் மிகுந்த துயரத்தோடு காலத்தை நகர்த்தியவர். அத்தகைய கலைஞனை இங்கு பதிவு செய்ததில் நான் மனநிறைவை அடைகிறேன்.

**தகவலாளிகள்:**

1. தீ.முத்தையா (வயது 75), அன்னை இந்திரா குடியிருப்பு,அலவாக்கோட்டை.
2. பச்சை முத்து (வயது 72), அன்னை இந்திரா குடியிருப்பு, அலவாக்கோட்டை
3. நாதசுரக் கலைஞர் இரா. போஸ்( வயது 73), சோழபுரம்.
4. மேளக்காரர் சாமிக்கண்ணு (வயது 85), குறிச்சிப்பட்டி, மேலூர் வட்டம், மதுரை மாவட்டம். (இவரைச் சந்திக்க என்னை அழைத்துச் சென்ற அலவாக்கோட்டை திரு ச.பார்த்திபனுக்கு என் நன்றிகள்)

**கலைச்சொற்கள்:**

இழவு- இறப்பு
ஊழியம்- ஊதியம் பெறாத கட்டாய உழைப்பு
ஒத்து- நாயன வாசிப்புக்கு துணை வாசிப்பு
ஓலைக்குடி- ஓர் ஊர்
சாமான் - இசைக்கருவி
தப்பு- பறை இசை

# 6. சமுதாய வாழ்வியலில் மக்கள் நடைமுறைகளும் நம்பிக்கைகளும்

**முனைவர் ம.அருள்தாஸ்,**
இணைப்பேராசிரியர், தமிழாய்வுத்துறை,
பூம்புகார்க் கல்லூரி, மேலையூர் - 609 107,
மயிலாடுதுறை மாவட்டம்.
9790678071 draruldoss@gmail.com
DOI 10.5281/zenodo.15064703.

**Abstract:**

Many rituals of man are performing if people consider culture in the life of society. Habits, beliefs and practices are the basics of needs. The elderly and the witnesses reported the practical practices. Life goes on to trust people. These are a long -standing life. This life is growing as a social life. People's sites are still visible in the life of the life of the life of the society and the continuing of the omen in society. This article aims to explore these.

**Key Words:** People's practices - beliefs - social life

## முன்னுரை

மக்கள் பண்பாட்டினை வாழ்வு முறையாகக் கருதினால் மனிதனின் பல சடங்குகள் செய்து வருகின்றனர். பழக்கவழக்கங்களும், நம்பிக்கைகளும், நடைமுறைகளும் சமுதாயத்தின் தேவைகளின் அடிப்படைகளாகும். பழக்க வழக்கங்களை தனிமனிதனும், சமுதாயமும் இணைந்து உருவாக்கின. முதியோர்களும், சான்றோர்களும் நடைமுறை வழக்கங்களை மக்களுக்கு அறிவித்தனர். மக்களை நம்பியே வாழ்க்கை செல்கிறது. இது காலங்காலமாக நடந்து வரும் வாழ்வியல், இவ்வாழ்வு சமுதாய வாழ்வாகவே வளர்ந்து வருகின்றன. இவற்றைப் பற்றி ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

சகுணம் பார்த்தல்

மக்கள் தாங்கள் செய்யப் போகும் நிகழ்ச்சிகளைத் தொடங்குவதற்கும் முன், நாள் கோள் நோக்கியும் பல்வகை நிமித்தங்களை ஆராய்ந்தும் செயல்பட தொடங்கினர்.

**“புள்ளும் பொழுதும் பழித்தல் அல்லதை**
**உள்ளிச் சென்றோர்ப் பழியலர்”1 ( புறம் : 204 : 1011)**

“நாள் அன்று போகி, புள் இடைதட்ப (புறம் .124.1) என வரும் இவ்வழக்கத்தைப் புலப்படுத்துகின்றன. திருமணத்திற்குத் தீய கிரகங்களின் சேர்க்கையில்லாத காலமாகவும், இந்திரன் சுடர்விட்டு ரோகிணியுடன் கூடும் பெருநாளாகவும் இருப்பதைத் தேர்ந்தெடுத்தனர். (அகம் 86:57 136 : 46)

நிமித்தம் பார்த்தலைப் புள் என்றும் வழங்கி வந்தனர். முதலில் பறவைகளை நிமித்தம் பார்க்கும் வழக்கம் தோன்றின. உப்பு விற்கச் செல்லும் உமணர். கீழ்க்கடற்கரையில் விளைந்த உப்பை மேற்குப் பகுதிகளுக்குக் கொண்டு செல்லும் பொருட்டு புள் நிமித்தம் நோக்கித் தங்கள் பயணத்தைத் தொடங்கினர் என்றும் செய்தி அகநானூற்றுப் பாடல் ஒன்றில் அறியலாம்

**'அணங்குடை முந்நீர் பரந்த செறுவின்**
**உணங்கு திறம் பெயர்ந்த வெண்கல் அமிழ்தம்**

**குடபுல மருங்கின் உய்ம்மார். புள் ஓர்த்துப்**
**அமைத்து எழுந்த பெருஞ்செய் ஆடவர்" 2 (அகம் 20 : 1- 4)**

என்னும் பாடல்களின் மூலம் மக்கள் நல்ல காலம் நோக்கியும் புள் நிமித்தம் பார்த்தும் வாழ்ந்து வந்தனர்.

நிமித்தங்களில் நன்னிமித்தமும், தீ நிமித்தமும் உண்டு. சுவர்ப் பல்லியின் ஒலி, மனையின் நொச்சியில் உள்ள குயிலின் கூவல் குருக்கள் விசும்மில் எழுந்து பறத்தல், வண்டுகள் புதரில் சூழ்ந்து ஊதல், முன்கை வளையும் தோள்வளையும், இறுகுதல், இடக்கன் ஆடுதல், ஆயரது குழல் ஒலி போன்றவைகள் நன்னிமித்தங்களாகக் கருதப்பட்டனர்.

(நற் : 246 : 1-7 : 218 : 1-3 : 260 : 1-4, 5 : 104: 34-35)

தீ நிமித்தம் அச்சம் தரும் கூகை முதலிய பறவைகளின் ஒலி, களவில் பல் நிலத்தில் வீழ்வதைப் போலவும், எண்ணெயைத் தலையில் வார்ப்பது போலவும், பன்றியின் மேல் ஏறுவது போலவும், ஆடையைக் களைவதைப் போலவும், படைக்கலங்கள் தாம் இருந்த கட்டிலுடன் மறிவதைப் போலவும் காணப்படுதல் முதலியவைகள் எல்லாம் தீமைகள் அறிகுறிகளாக எண்ணினார்கள். பல்லி சொல்லையும் நிமித்தமாகக் கருதினார்கள்.

தலைவனைப் பிரிந்த நிலையில், தலைவி அவன் சென்ற முதல் நாள்தோறும் சுவரில் குறியிட்டு வருத்தத்துடன் வாழ்கிறாள். வருத்தத்தின் காரணமாக தன் முன்கையை கண்ணத்துடன் சேர்த்து ஊன்றிக்கொண்டு படுக்கையில் பிரிவு எண்ணி அழுது வருந்தியிருக்கிறாள். இந்நிலையில் அவளுடைய துயரத்தை நீக்குவதைப் போல பல்லி ஒலித்ததாம். அச்சொல் அவளுக்கு ஆறுலை தந்ததாம். பல்லியின் சொல் நன்னிமித்தமாய் கணவன் வருகையை உறுதி செய்வதாக நம்பினார்கள்.

**"இணைநலம் உடைய கானம் சென்றோர்**
**புனை நலம் வாட்டுநர் அல்லர் : மனைவியின்**
**பல்லியும் பாங்கு ஒத்து இசைத்தன**
**நல்எழில் உண்கணும் ஆடுமால் இடனே"3(கலி : 11.19-22)**

இப்பாடல் மூலம் பல்லி சொல் கேட்டு மகளிர் இருக்கும் நிலையைச் சங்கப் பாடல்களில் பல இடங்களில் காணலாம். சகுணம் பார்த்தல் இன்று சமுதாயத்தில் மக்களிடையே காணப்படும் நடைமுறை பழக்கமாக உள்ளது. எந்த ஒரு நிகழ்வு தொடங்கும் முன் இச்சகுனங்கள் பார்த்து தான் தொடங்குகிறார்கள் என இதன்வழியாக அறியலாம்.

**சமுதாய வாழ்வியலில் மக்கள் நேரும் நிகழ்வுகள்**

மக்கள் வாழ்வில் தெய்வ நம்பிக்கைள் கொண்டு வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் வாழ்வில் ஏற்படும் சில பிரச்சனைகளை தெய்வத்திடம் முறையிட்டு தாங்களின் பிரார்த்தனைகளை நிறைவேறிய பின் தெய்வத்திற்கு நேர்த்திக் கடன் செலுத்துகின்றனர். இவை காலம் காலமாக தொன்றுதொட்டு நடைபெற்று வருகின்றன.

கட்டு விச்சியிடம் நெற்குறி பார்ப்பதைப் போல வேலனை அழைத்துக் கழங்குழி பார்ப்பதும் உண்டு. முருகன் முன்னிலையில் கழற்சி விதைகளை பரப்பி, வேலன் தன்

கையிலுள்ள சிறுபைகள் கட்டிய கோலினால் அக்காய்களை அள்ளி எடுக்கும்போது நேரும் குறிப்புக் கொண்டு கூறுவதாகும். குறியை மக்கள் பெரிதும் விரும்பினர்.

குறி சொல்லுபவன் முறத்தில் நெல்லை வைத்து அதனை எண்ணி, அதனால் சில நிமித்தங்களை அறிந்து கூறுவது மரபு என கூறுகின்றனர். (குறு 23:1-3, : 268 8-9: 282: 3-6)

**மக்கள் வாழ்வியலில் இன்றைய நடைமுறைகள்:**

இன்றைய தமிழ் மக்கள் தாங்கள் வாழும் இடத்தாலும் பிற சூழ்நிலைக் காரணங்களாலும், சில வேறுபட்ட பழக்க வழக்கங்களைக் கொண்டிருந்தாலும் எல்லா மக்களிடத்திலும் பொதுப்படையாகக் காணப்பட்ட நிகழ்வுகள் பல, மக்கள் வாழ்வியலில் தாங்கள் வாழும் இடத்திற்கும், சூழ்நிலைக்கேற்ப நடைமுறைகளை மாற்றிக் கொண்டு வாழ்ந்து வருகின்றனர். இவ்வாழ்வு இன்றளவும் காலங்காலமாக நடந்து வரும் வாழ்வியல் உண்மை என்பதை அறியமுடிகின்றது.

**தனிமனிதனும் சமுதாயப் பொதுத்தொண்டும்**

சமுதாய சேவை செய்வோர்க்கு இருக்க வேண்டிய தலையாய குணம் தன்னலமற்றுப் பிறர் பணிபுரிவதேதான். உலகம் நிலை பெற்று வாழ்வதற்கும் காரணமாக இருப்பவர்களே, "பகுத்துண்டு பல்லுயிரையும் ஓம்புதலே குறிக்கோளாக கொண்டிருப்பர். பலருடன் இவர்கள் வெறுப்பைப் பெற்றுக் கொள்ளுதல் இல்லை. அஞ்ச வேண்டிய விஷயங்களுக்கு அஞ்சினர். துன்பம் வந்த காலத்துச் சோம்பி இராது முயன்று இதில் வெற்றி கண்டனர். புகழ்வும் செயலாயின் தமது உயிரையும் கொடுக்கச் சித்தமாய் இருப்பர். உலகமே பரிசாகக் கிடைத்தாலும் பழிச்சொல் புரியார். மனச்சஞ்சலம் அற்று என்றும் உறுதியுடன் இருப்பார்.

**மக்கள் வாழ்க்கையின் சமுதாயச் சிறப்பு**

மகளிரின் வாழ்க்கைச் சிறப்பால் தம் கணவருக்கும் பெருமையளித்தது. கற்புடைய மனைவியின் சிறப்பால் கணவன்மார் பெருமிதத்துடன் வாழ்வதற்கு காரணம் மாநலம் மிக்க மனைவியைப் பெற்றது எனக் கருதினார்கள்.

**'காமர் கடவுளும் ஆளும் கற்பின் சேண்,**
**நாறுநறு நுதல், சேயிழை கணவ"4 (பதி** 65 :910)
**'வான் உறை மகளிர், நலன், இகல் கொள்ளும்**
**வயங்கு குழை காத்த, வண்டு படு கதுப்பின்**
**ஒடுங்கு ஈர் ஓதிக் கொடுங்குழை கனவ"5 (பதி** : 14: 13-15)

இப்பாடற் பகுதிகளால் மனைவியரின் சிறப்பால் கணவர் போற்றப்படுதல் பெறப்படும். கணவன்மார்க்கு மட்டுமல்ல அவளுடைய தாய் தந்தையர்க்கும் மகளிரால் பெருமை வரும். அக்கணவன் மனைவி இடையே உள்ள வாழ்க்கையின் சிறப்பால் அக்குடும்பம், சமுதாயத்தில் சிறப்புடன் காணப்படுகின்றன. ஒருசில குடும்பங்களில் அச்சிறப்பை காணமுடிவதில்லை என கூறலாம்.

**முடிவுரை:**

மக்கள் தாங்கள் வாழ்வில் நேரும் நடைமுறைகளில் உள்ள இன்ப, துன்ப, நிகழ்வுகளையும் இன்றளவும் சமூகத்தில் சகுணம் பார்த்தல் தொடர்ந்து நடைபெற்றுவருவதை காணமுடிகிறது. சமுதாயத்தில் தனிமனிதன் சமுதாயப் பொதுத்

தொண்டு நிகழ்த்துவதையும். இவர்கள் வாழ்வு உலகத்திற்கு அர்ப்பணிக்கப்பட்டிருப்பதையும் இதன் வழியாக அறிய முடிகின்றது.

சான்றென் விளக்கம் :

1) அகநானூறு, பா.20: 1-4
2) புறநானூறு, பா.204: 1011
3) கலித்தொகை பா.11:19-22
4) பதிற்றுப்பத்து, பா.65: 910
5) கூஷ,. 14: 13-15

**ஆய்விற்கு உதவிய நூல்கள்:**

1) சங்க இலக்கியம் அகநானூறு (நித்திலக்கோவை) புலியூர் கேசிகன்; செல்லம் கிராப்பிக்ஸ் சென்னை.
2) சங்க இலக்கியம் பதிற்றுப்பத்து புலியூர் கேசிகன் செல்லம் கிராப்பிக்ஸ், சென்னை.
3) ஐங்குறுநூறு மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை, தெளிவுரை புலியூர் கேசிகன் புத்தக மாளிகை 15, (பழைய எண்.6) ஜெய்சங்கர் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை 600 038.



# 7. தெருக்கூத்துக் கலைஞர் அலவாக்கோட்டை ஆட்டக்காரப் பச்சை கலைத்துறைக்கு ஆற்றிய பங்கும் பணிகளும்

**கி. ராஜ்குமார்,**
மலை மேடு, அன்னை இந்திரா குடியிருப்பு,
அலவாக்கோட்டை, சிவகங்கை மாவட்டம்.630553
kumar1990svg@gmail.com – 9655280231
DOI 10.5281/zenodo.15064790.

**Abstract:**

The purpose of this article is to examine the role of a street artist who was born in the village of Alavakottai in Sivagangai district, Sivagangai Circle.

**Key Words:** Street Artist – Arts - Sivagangai

**முன்னுரை:**

'போலச் செய்தல்' என்பது மனித இனத்தின் கலையின் தொடக்கமாக அமைந்திருக்கிறது. அத்தகைய கலைகளை நிகழ்த்தியவர்கள் உழைத்து களைத்துப் போன மக்களின் உள்ளங்களை மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்த்துபவர்களாகவும் அடுத்த நாள் உழைப்புக்கு ஆயத்தம் செய்பவர்களாகவும் இருந்துள்ளனர். மக்களின் ரசனைத் திறனுக்கும் அவர்கள் தம் தேவைக்கும் தக்கபடி தங்களது கலைத்திறனை வெளிக்காட்டி வந்துள்ளனர். அவ்வகையில் தெருக்கூத்து கலைஞராக விளங்கிய அலவாக்கோட்டை ஆட்டக்காரர் பச்சை அவர்கள் கலைத்துறைக்கு ஆற்றிய பங்கும் பணிகளையும் பற்றி ஆராய்ந்து விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

**ஆட்டக்காரர் பச்சை:**

ஆட்டக்கார பச்சை சிவகங்கை மாவட்டம் சிவகங்கை வட்டத்தில் உள்ள அலவாக் கோட்டை கிராமத்தில் ஒடுக்கப்பட்ட பட்டியலினச் சமூகத்தில் பிறந்த ஒரு கலைஞர் ஆவார். இவரது தந்தையார் பெயர் நரி கருப்பர். இவரது பெயர் ஆறுமுகம் என்ற பச்சையப்பன். இவருக்கு நான்கு மனைவிகள். இவரது நான்காவது மனைவியாகிய சொர்ணவள்ளிக்கும் இவருக்கும் கிட்டத்தட்ட இவரது ஐம்பதாவது வயதில் பாலமுருகன் என்ற மகனை பெற்றுள்ளார். கலைத்துறைக்கு தன்னுடைய கலை ஆர்வத்தாலும் கலைத் தாகத்தாலும் தானே விரும்பி வந்துள்ளார். முதன் முதலில் சிவகங்கை மாவட்டம் திருக்கோஷ்டியூரில் அமைந்துள்ள சௌமிய நாராயண பெருமாள் கோவிலில் தான் தனது தெருக்கூத்தினைத் தொடங்கியுள்ளார். அதிலிருந்து தொடங்கி 50 ஆண்டுகளுக்கு மேலாக கூத்து கலைஞராக இவ்வட்டாரத்தில் பெயரும் புகழும் பெற்றுத் திகழ்ந்துள்ளார்.

**ஆட்டக்காரர் பச்சையுடன் ஆடிய கலைஞர்கள்:**

ஆட்டக்கார பச்சை ராச வேடம் (இராசபாட்) போடுபவர். நாட்டரசன் கோட்டை மெய்யனும்( மறைவு) இராச நடிகர்(ராசபாட்), கொட்டாப்பட்டி காளியன்( பெண் வேடம் தாங்கி நடித்தவர்), கீரனூர் ஜப்பான்( ஜப்பான் என்பது நகைச்சுவை நடிகர்), இக்குழுவுக்கு இசைவாத்தியம் வாசித்தவர்கள் சிவகங்கை காந்தி குழுவினர். ஆட்டக்காரர் பச்சையோடு பயணித்த மற்ற கலைஞர்கள் தஞ்சாவூர் மாலா, கரூர் இந்திரா, வரிச்சியூர் பழனியப்பன் ஆவர்.

**மின்னல் கலைக்குழு:**

தங்கள் கலை குழுவுக்கு மின்னல் கலைக்குழு என பெயரிட்டு இருந்தார். அந்தக் குழுவுக்கு இவர் தலைவராகவும் தலைமை ராசபாட்டாகவும் இருந்திருக்கிறார்.

"அவரு அவரு வந்து பெரிய ஆள் இல்லையா வட்டாரங்களில் பெயர் வாங்கினவர் இல்லையா. எனக்கு மாமன் வேணும் எனக்கு..

இராசா ராணி ஆட்டம்,

கரகாட்டம்

குறவன் குறத்தி ஆட்டம்

மேளம்"(2) இவையெல்லாம் இணைந்தது தான் மின்னல் கலைக்குழுவாக செயல்பட்டு உள்ளது.

**சாத்தங்குடி ஆட்டம்:**

சாத்தங்குடியில் தான் முதன் முதலாக இவ்வகையான புதுமையான ஆட்ட முறைகள் இவரால் அரங்கேற்றப்பட்டுள்ளது. இதற்கு நாலு பேர் ஆட்டம் என மற்றொரு பெயரும் உண்டு.

ராஜா ராணி

இரண்டு கரகம்(ஆண்), இரண்டு கரகம்( பெண்)

ஒரு குறவன் ஒரு குறத்தி

பபூன்

என இந்த ஆட்டம் அமைந்திருந்தது.

**தெருக்கூத்தின் நிகழ்விடமும் காலமும்:**

'கூத்தாடி கிழக்க பார்ப்பான்' என்னும் பழமொழிக்கு ஏற்ப இவர் நிகழ்த்திய தெருக்கூத்து விடிய விடிய நிகழ்ந்திருக்கிறது. தெருக்கூத்து எவ்வகையான மேடை அமைப்பும் இன்றி வெறும் தரையில் ஆடி இருக்கிறார்கள். கோவில் விழாக்கள், இல்ல விழாக்கள், இறப்பு நிகழ்வுகள், பிற விழாக்கள் இவற்றில் எல்லாம் இவரது தெருக்கூத்து ஆட்டம் நிகழ்ந்திருக்கிறது.

**ஆட்டக்கார பச்சை ஆடிய ஊர்கள்:**

சிவகங்கை மாவட்டத்தில் அனைத்து ஊர்களிலும் மற்றும் வெளி மாவட்டங்களில் பட்டுக்கோட்டை, அறந்தாங்கி, கட்டுமாவடி மீமிசல், ஆவுடையார் கோவில், திருவாடானை, தொண்டி, கமுதி, மதுரை, மேலூர், வெள்ளலூர், அபிராமம், கமுதி, கோட்டைப்பட்டினம், கொம்பேத்தி, பொன்னமராவதி, நச்சாண்டிப்பட்டி, சல்லியம்பட்டி கொன்னையூர் முத்துமாரியம்மன் கோவில் என பல இடங்களில் இவரது தெருக்கூத்து நிகழ்த்தப்பட்டிருக்கிறது என்பதை அறிய முடிகிறது.

**முடிவுரை:**

கிராமங்களில் தொலைக்காட்சி வானொலி போன்ற தொலைத் தொடர்பு சாதனங்கள் எட்டாத காலங்களில் இவ்வட்டார மக்களின் கலைத் தாகத்தைப் பூர்த்தி செய்தவர் ஆட்டுக்காரர் பச்சை என்பது மிகையல்ல. இவர் நிகழ்த்தும் கூத்தினைப் பார்ப்பதற்கென்றே ஒரு ரசிகர் கூட்டம் இவர் காலத்தில் இருந்துள்ளது.

**தகவலாளிகள்:**

1. ப.பாலமுருகன்,த/பெ. பச்சையப்பன்( ஆட்டக்காரர் பச்சை), பழைய வளவு, அலவாக்கோட்டை.
2. இரா. போஸ்( நாதசுவர கலைஞர்),த/பெ.இராமன், சோழபுரம்.

நேர்காணல். 1.

நேர்காணல் தருபவர்: ப. பாலமுருகன், த/பெ. பச்சையப்பன் (ஆட்டக்காரர் பச்சை), அலவாக்கோட்டை,

வயது :40

நேர்காணல் பெறுபவர்: கி ராஜ்குமார்

1. ஆட்டக்காரர் பச்சைக்கு நீங்கள் எத்தனாவது குழந்தை?

எங்க அப்பா ஆட்டக்காரர் பச்சைக்கு நான்கு மனைவிகள். மூன்று மனைவிகளுக்கு குழந்தை இல்லை. நான்காவது மனைவியான என் தாயாரான சொர்ணவல்லிக்கு எங்க அப்பாவின் 45- 50ஆவது வயதுல நான் ஒருவன் தான் பிறந்தேன்.

2. உங்க அப்பாவை கலைத்துறைக்கு அழைத்து வந்தது யார்?

அவருடைய சொந்த முயற்சியில் தான்.. கேள்வி ஞானம்.. செவி வழி செய்தி.. அதன்மூலம் வந்தவரு. மொத மொத ஆடத் தொடங்கிய இடம் சிவகங்கை மாவட்டம் சௌமிய நாராயண பெருமாள் கோவில் உள்ள திருக்கோஷ்டியூர்லதான். ராஜ நடிகரா (ராஜா வேடம் போட்டு) நடிப்பாரு.

3. உங்க அப்பா கூத்தாடியதை நீங்க பார்த்து இருக்கீங்களா?

எங்க அப்பா மூணு கல்யாணம் பண்ணது காட்டாம்பூர்ல... அந்த ஊர்ல ஆட வந்து இருக்காரு.. நான் வெட்கப்பட்டு கிட்டு பார்க்க போக மாட்டேன்.

4. உங்க அப்பா தெருக்கூத்து நிகழ்த்தும் போது உங்க மனநிலை எப்படி இருந்துச்சு?

தெருக்கூத்து ஆடுறாரே நான் கேவலமா நினைச்சேன். யூ டியூப்(youtube).. இந்த மாதிரி இருந்துச்சுன்னா எங்க அப்பாவ கோவிலில வைத்து கும்பிட்டு இருப்பேன். பாடல்கள் நிறைய இருக்கு இப்ப உள்ள காரங்களை விட நாலேஜ் கூட.... நீனா.. நானா.. அதுக்கு ஒரு பாட்டு பாடுருவாரு.. எந்த பொருளைக் கொடுத்தாலும் பாடுவாரு.. மைக் இல்லாத காலத்துல சொந்த குரலால பாடியும் பேசியும் ஆடி இருக்காரு..

5. அவர் பாடிய பாட்டு ஏதாவது நினைவுல இருந்தா சொல்லுங்க..

எம்ஜிஆர், காமராஜர் ,கக்கன் ,அண்ணா, காந்தி, முத்து ராமலிங்க தேவர், தனுஷ்கோடி அழிந்த வரலாறு இப்படி வரலாற்று பாடல்களெல்லாம் பாடி இருக்கிறார்..

"சேதுபதி நாடாம் சிவகங்கை நன்னாடாம்
சிவகங்கை நன்னாட்டில்...."( யோசிக்கிறார்) நினைவில் இல்லை.

6. இந்த அலவாக்கோட்டையில் அவர் ஆடி இருக்கிறாரா?

அலவாக்கோட்டை புரவி எடுப்பிலே வேப்பிலைக் கட்டிகிட்டு வரவேற்பு நடனத்தை எல்லாம் ஆடி இருக்கிறார். அம்மா படப்புல ஆடி இருக்கிறார். அவரோடு ஆடினது அவரது பங்காளியான சித்தப்பா கொம்பு காரன் (சிரிப்பு நடிகர்).

7. இவரு தெருக்கூத்து எத்தனை ஆண்டுகளா நிகழ்த்தி இருப்பாரு?

18 வயதிலிருந்து 65 வயது வரைக்கும் தெருக்கூத்துல ஆடி இருப்பார்.

8. தெருக்கூத்து கலைஞர் ஆன இவருக்கு அரசு ஏதாவது பெருமை செய்திருக்கிறதா?

தெய்வத்திருமகனார் முத்துராமலிங்க தேவரைப் பற்றி சிவகங்கை கலெக்டர் முன்னாடி பாடியதனால் அந்த கலெக்டர் சாங்ஸன் பன்னி அவருக்கு ஓய்வூதியம் மாதம் 5000 வந்துச்சு... முதற்கட்டமா 30,000 கொடுத்தாங்க.. அப்புறம் 5000.. 2000 ன்னு வந்துச்சு...

9. உங்க அப்பாவோட தெருக்கூத்துக் கலையில் பயணித்த கலைஞர்களைப் பற்றி தெரியுமா?

நாட்டரசன் கோட்டை மெய்யன்( இப்ப ஆள் இல்ல எங்க அப்பாவோட மூத்த ஆளு), கொட்டாபட்டி காளியன்... அவரு கல்யாணம் பண்ணது அலவாக்கோட்டை... பொம்பள வேடம் போடுபவர்.. கீரனூர் ஜப்பான்.. இசைவாத்தியம் வாசித்தவர்கள் சிவகங்கை காந்தி குழுவினர்.

10. கூத்துக் கலையை பற்றி இப்ப உங்களுடைய கருத்து என்ன?

சிறுவயதில் எனக்கு நாட்டம் இல்ல.. என் பிள்ளைகள் அதுல நாட்டமாய் இருக்காங்க.. என் பொண்ணு வந்து நிறைய எங்க அப்பா வாங்காதத.. சர்டிபிகேட் எல்லாம் வாங்கி இருக்கு... பள்ளிக்கூடம் அளவில.. எங்க நடன நிகழ்ச்சி கற்றுக் கொடுக்கிறார்கள் என்றால் அதில் போய் சேர்க்க வழி தெரியாம இருக்கேன் இப்ப நான்..

11. உங்களுடைய அப்பா எப்பொழுது இறந்தாங்க?

எங்க அப்பா இறந்து பத்து வருசம் இருக்கும்..95 வயசுல இறந்தாங்க... இயற்கை மரணம் தான்..

நன்றி

நேர்காணல் .2.

நேர்காணல் தருபவர்: இரா. போஸ்( நாதசுவர கலைஞர்),த/பெ. இராமன், சோழபுரம்.

வயது , :73

நேர்காணல் பெறுபவர்: கி. ராஜ்குமார்

1. ஆட்டக்காரர் பச்சை உங்களுக்கு என்ன உறவு வேண்டும்?

எனக்கு மாமன் வேணும்

2. ஆட்டக்கார பச்சைய தெருக்கூத்துல பார்த்திருக்கிறீர்களா?

30 ஆண்டுகளுக்கு முன்னாடி ஆடியவர். இவங்கள பார்க்கறதுக்கு வருவாங்க.. பெயர் வாங்கியவர்... தெருக்கூத்து வீதியில ஆடுவதுதான்.. ஆட்டக்காரப் பச்ச ராசா வேடம் போடுவாரு.... ஆம்பள பொம்பள வேடம் போட்டு ஆடுறத அருவமா பாப்பாங்க.. காளியண்ணே பொம்பள வேசம்.. அதை விரும்பி பார்த்தாங்க அன்னைக்கு காலம்.. அத சாத்தங்குடி ஆட்டம்கிறது.

3. சாத்தங்குடி ஆட்டம்னா என்னங்க?

இதுக்கு பேரு சாத்தங்குடி ஆட்டம் என்பது நாலு பேர் ஆட்டம் அப்படின்னு சொல்லுவாங்க... ரெண்டு ஆம்பள ரெண்டு( ஆம்பள) பொம்பள வேசம்... பிரியம்மா பார்ப்பாங்க.. அந்தப் பேச்சு வார்த்தை.. கோமாளி பேசுறது வைக்கிறது... இன்னைக்கு வடிவேலு நகைச்சுவையப் பார்க்கிறோம் இல்லையா அது போல... மேலூரு மாடசாமி( வண்ணார்) அவரு காமெடிக்கு ஊருக்கு பத்து பேரு ரசிகர்கள் இருப்பாங்க... அவரைப் பார்க்கவே ஆளு வரும் சாத்தங்குடி ஆட்டம் இப்படித்தான்...

4. சாத்தங்குடி ஆட்டம்னு இதுக்கு பேர் எப்படிங்க வந்துச்சு?

அப்பத்தான் முதன்முதல சாத்தங்குடி என்கிற ஊர்ல இந்த ஆட்டம் ஆரம்பிச்சு இருக்காங்க ..அதனால அதை சாத்தங்குடி ஆட்டம்னு சொல்லுவாங்க..

5. இவங்க ஆடுனதுல சாத்தங்குடி ஆட்டம்னு ஒரு ஆட்டத்தையே உருவாக்கிருக்காங்க... பரவாயில்ல...

.......ஆமாம்....

6.இந்த தெருக்கூத்துல கதை இருக்குமாங்கய்யா?

வயலுக்கு போறோம் மாமன் மகன் அத்தை மகன் எதுக்க வரான்.. இப்படி கதை போகும்...

7. தெருக்கூத்து எவ்வளவு நேரம் நடக்கும்ங்கையா?

நாலு பேர் ஆட்டம்...மேளம், நாயனத்தோட.... விடியும் வரைக்கும் இருந்து பார்ப்பாங்க..

8. விடியும் வரைக்கும் நடக்குமா?

பள பளன்னு விடிஞ்சாதான் எந்திரிச்சு போவாங்க.. மக்கள்... அந்த அளவுக்கு ரசனையோடு பேசுவாங்க.. அன்னைக்கு அது எடுத்துகிச்சு.... இன்னைக்கு இந்தா டிவியைப் பார்த்துகிட்டு இருக்கோம்.

நன்றி..



MUTHTHARASI – Art Literary Culture Tamil Journal
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
SPL-EDITION – IV VOLUME - 1
மார்ச்சு-2025 E-ISSN: 2584 - 1238

# 8. சிற்பி ஜெயராமன் அவர்களின் கலைப் படைப்புகள் ஒரு அறிமுகம்

முனைவர்ஸ்டுபர்ட் சிபி.பொ .
உதவிப் பேராசிரியர், கட்டடக்கலை துறை,
அண்ணா பல்கலைக்கழகம், சென்னை -25
stubertsibi@gmail.com, Mobile: 7339649334

G. முன்னாடியப்பன்
உதவிப் பேராசிரியர், நுண்கலைத் துறை,
அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி

DOI 10.5281/zenodo.15064842.

: **Abstract**

**The sculptor Jayaraman, who was born in Tamil Nadu and served in Pondicherry, is a multi -talented artist. Artists such as Lionardo Da Vinci and Michalangelo, who were found during the Western Art of Art, have acted in all the arts such as painting, sculpture, building and engineering, but sculptor Jayaraman has identified himself as a sculpture in his time. Her artistic works, which had trained realupa style during the college period, have evolved into a series of paintings that have been exposed from the realm of the realbub style. The impact of his paintings, which is highly involved in the quotoviums, is also reflected in the sculptures, resulting in the surfaces of the sculptures.**

**: Key WordsSculptor Jayaraman - Sculptor - Painting - Sculpture - Kavinkalai - Exhibition - Statue.**

## முன்னுரை

சிற்பி, ஓவியர், எழுத்தாளர், கவிஞர் என பன்முக திறன் கொண்ட கலைஞர் சிற்பி ஜெயராமன் ஆவார்இவர் புகழ் பெற்ற சிற்பியான வித்யா சங்கர் ஸ்தபதி அவர்களின் . .இவரை யுனெஸ்கோ சர்வதேச அளவில் சிறந்த சிற்பியாக அங்கீகரித்துள்ளது .மாணவர் இவர் தேசிய அளவிலும், மாநில அளவிலும் பல்வேறு விருதுகளை பெற்றுள்ளார் . தொழில்முறை பட்டத்தை அடிப்படையாகக் கொண்டு மருத்துவர் என்றும், பொறியாளர் என்றும் வழக்கறிஞர் என்றும் அழைப்பது போல தொழில் முறை சிற்பம் படித்ததனால் சிற்பி என்று அனைவராலும் அழைக்கப்படுகின்றார்.

## வாழ்க்கை

சிற்பி ஜெயராமன் அவர்கள் கடலூர் மாவட்டம், காட்டுமன்னார்கோயில் அருகில் உள்ள புளியம்பட்டி எனும் கிராமத்தில் பிறந்தார்இவருடைய தந்தை மொட்டையாப் . பிள்ளை, தாயார் இரத்தினம்பாள் ஆவார்கள்விவசாய குடும்பத்தில் சிறு கிராமத்தில் . கிராமிய சூழலில் .ந்த ஈடுபாடு கொண்டிருந்தார்பிறந்ததால் இயற்கை மீது மிகு நிகழ்த்தப்படும் கோவில் திருவிழாக்கள் இவரின் பார்வையை கலை, அழகியல் மற்றும் தமிழர் பண்பாடுகள் மீது பற்றை ஏற்படுத்தியதுஎனவே மிகவும் கலைநயம் மிக்க . ந்தரநாயகி சிற்பி ஜெயராமன் அவர்கள் சவு .அழகியல் சிந்தனை உள்ளவராக திகழ்ந்தார் இவர்களுக்கு சார்கோல் என்ற மகளும் .என்பவரை திருமணம் செய்து கொண்டார், மவுனி என்ற மகனும் உள்ளனர்இவர் குடும் .பத்துடன் புதுச்சேரி முருங்கப்பாக்கத்தில் உள்ள அரவிந்தர் நகரில் வசித்து வந்தார்.

## ஓவியக் கல்வி

சிறு வயது முதல் ஓவியத்தில் அதிக நாட்டம் கொண்ட சிற்பி ஜெயராமன் அவர்கள் புளியம்பட்டி அருகில் உள்ள ஆதனூர் கிராமம் ஆரம்பப் பள்ளியில் துவக்கக் கல்வி பயின்றார்ஒன்றாம ் வகுப்பு படிக்கும் பொழுது பொங்கல் விழாவின் போது கரிக்கட்டையால் கோவில் சுவற்றில் ஓவியம் வரைந்து அங்கிருந்த பெரியோர்களால் பாராட்டப்பெற்றார் .அதனால் உந்துதல் பெற்று தொடர்ந்து ஓவியம் வரையத் துவங்கினார் .

ரெட்டியூர் கிராமம் அரசு உயர்நிலைப் பள்ளியில் படிக்கும் பொழுது ஓவிய ஆசிரியர் திரு சுந்தரம் ஐயா அவர்கள் ஓவியம் வரைவதற்கு பள்ளி பருவத்திலேயே முறையாக பயிற்றுவித்து ஊக்கப்படுத்தினார்படிக்கும் போது உலகத் தமிழ் மாநாடு சார்பில் பள்ளியில் . பள்ளி படிப்பு .நடைபெற்ற ஓவிய போட்டியில் மாநில அளவில் முதல் பரிசு பெற்றார் முடித்த பின்னர் தன்னுடையஉயர் கல்வியை கும்பகோணம் அரசு கவின்கலைக் கல்லூரியில் துவங்கினார்த்து இங்கு சிற்ப துறையில் ஐந்தாண்டு பட்டயப் படிப்பை படி . இந்த காலகட்டத்தில் வித்யா சங்கர் ஸ்தபதி அவர்களை மானசீகக் குருவாக .முடித்தார் பின்னர் சென்னை அரசு க .ஏற்றுக் கொண்டார்வின்கலைக் கல்லூரியில் இரண்டு ஆண்டு முதுகலை பட்டயப் படிப்பை சிற்பத்துறையில் படித்தார்படிக்கும் பொழுதே சிறந்த . பாண்டிச்சேரி மத்திய பல்கலைக்கழகத்தில் .க திகழ்ந்தார்மாணவர் என்பதற்கு உதரணமா மாநில கைவினைப் பொருட்கள் எனும் தலைப்பில் ஆய்வு மேற்கொண்டார் இதற்காக பல்கலைக் கழகம் அவருக்கு முனைவர் பட்டம் வழங்கி சிறப்பித்ததுநல்ல . கலைஞர்களால் மட்டுமே நல்ல கலை படைப்புகளை படைக்க இயலும் என்பதை .க கொண்டு அதன்படி நடந்தார்கொள்கையா

**அரசுப் பணி**

சிற்பி ஜெயராமன் அவர்கள் கல்லூரிப் படிப்பை முடித்த பின்னர் புதுச்சேரி ஜிப்மர் மருத்துவமனையில் 1981 இல் சிற்பியாக அரசுப்பணியில் இணைந்தார்மருத்துவம் படிக்கும் . உடற்கூறுக் கல்வியை மாணவர்களுக்கு தேவையான உடற்கூறு மாதிரிகளை உருவாக்கி இவர் .எளிமைப்படுத்தியதுடன் உடற்கூறு குறித்து புலமைப் பெற்றார்1988 வரையான ஏழு ஆண்டுகள் சிற்பியாக மருத்துவக் கல்விப்பணி செய்தார் .

**பாரதியார் பல்கலைக் கூடம்**

புதுச்சேரி கலைப் பண்பாட்டுத்துறை சார்பில் நுண்கலைகளை வளர்க்கும் நோக்கில் சுதந்திரப் போராட்ட வீரர் கவிஞர் சுப்பிரமணிய பாரதியாரின் நூற்றாண்டு பிறந்த தினத்தின் நினைவாக கவின்கலை, இசை, நடனம் ஆகிய துறைகள் அடங்கிய நுண்கலைக்கல்லூரி ஒன்றை பாரதியார் பல்கலைக் கூடம் எனும் பெயரில் 1997 இல் நிறுவியதுஇதற்கு . பொறுப்பு சிற்பி ஜெயராமன் அவர்களிடம் முதல்வராக இருந்து கல்லூரியை வளர்க்கும் பாரதியார் பல்கலைக் கூடம் எனும் நுண்கலைக் கல்லூரியின் முதல் .ஒப்படைக்கப்பட்டது முதல்வராக1998 ஆம் ஆண்டு நியமிக்கப்பட்டார்இவருடைய காலகட்டத்தில் கல்லூரி . இது .மிகச் சிறப்பாக செயல்பட்டு பல்வேறு கலைஞர்கலை அடையாளம் காட்டியது பதினெட்டு ஆண்டுகள் முதல்வராக பணி செய்து .அவரின் நிர்வாக திறமைக்கு சான்று 2015ஆம் ஆண்டு பணிநிறைவு பெற்றார்.

**நிர்வாகப் பணி**

புதுச்சேரியில் கவின்கலை தளத்தில் சிற்பி ஜெயராமன் அவர்கள் பணி செய்தாலும் அவரின் பங்களிப்பு தேசிய அளவில் இருந்ததுகுறிப்பாக ., தேசிய லலித்கலா அகாடமியில் ஐந்து ஆண்டுகள் பொதுக்குழு உறுப்பினராகவும், சென்னை மண்டல லலித்கலா அகாடமியில் ஆலோசனை குழு உறுப்பினராகவும் பங்களிப்பு செய்துள்ளார்தஞ்சை . தென்னக பண்பாட்டு மையத்தின் உதவி இயக்குனராக2004-ம் ஆண்டு முதல் 2005-ம் ஆண்டு வரை பணியாற்றி பண்பாட்டு மையத்திற்கு பெருமை சேர்த்தார் .

**நூல்கள்**

15 க்கும் மேற்பட்ட புத்தகங்களை வெளியிட்டுள்ள சிற்பி ஜெயராமன் அவர்களின் கோடும் பாடும் எனும் புத்தகம் 2005 இல் வெளியிடப்பட்டு அவரை புகழ்பெற செய்தது . யல் அதுபோல அவர் எழுதிய கிராமியப் பண்பாடு என்ற புத்தகம் கிராமிய வாழ்வி சிம்மாசன சொப்பனம் எனும் கவிதை நூல் .சூழல்களை இயல்புற எடுத்துரைக்கிறது ஒன்றை சிற்பி ஜெயராமன் அவர்கள் எழுதி விளக்கப்பட ஓவியங்கள் வரைந்து வெளிட்டுளள்ளார்.

**கலை படைப்புகள்**

கவின் கலைகளைப் பொறுத்தவரை ஓவியம் சிற்பம் எனும் இரு பெரும் தளங்களிலும் இவர் பணியாற்றினார்இவருடைய கலை படைப்புகள் ஆரம்ப . காலகட்டத்தில் எதார்த்த பாணியை கொண்டிருந்தாலும் அது மெதுவாக வளர்ந்து க .வெளிப்பட்டுபாணி ஓவியங்களாக வளர்ச்சி பெற்றதுோட்டோவியங்கள், எண்ணை வண்ண ஓவியங்கள், கற்ச்சிற்பங்கள், நிறுவு சிற்பங்கள், சுடுமண் சிற்பங்கள் மற்றும் பல்வேறு நவீன பொருள்களையும் பயன்படுத்தி கலை படைப்புகளை படைத்தார்.

**வெளிப்பட்டுவாத ஓவியங்கள்**

20 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றிய யதார்த்தமான சித்தரிப்புகளை விட அகநிலை உணர்ச்சிகளையும் உள் அனுபவங்களையும் வெளிப்படுத்தும் ஒரு நவீனத்துவ கலை இயக்கமான எக்ஸ்பிரஷனிசம் எனும் கலை பாணியால் கவரப்பட்டு பெரும்பாலும் சிதைந்த வடிவங்கள், வலுவான வண்ணங்கள் மற்றும் மிகைப்படுத்தப்பட்ட கோடுகளைப் பயன்படுத்தி வெளிப்பட்டுவாத ஓவியங்களை வரைந்தார் .

**சுதந்திரப் பெண் சிலை**

பாண்டிச்சேரியில் பொதுவெளியில் அமைக்கப்பட்ட முதல் நவீன சிற்பம் சிற்பி ஜெயராமன் அவர்களின் சுதந்திரப் பெண்ணின் சிலை ஆகும் இது .17 அடி உயரம் கொண்டதுஅமெரிக்காவின் சுதந்திரதேவி சிலையை அடிப்படையாகக் கொண்டு இந்த . சிலை வட ிவமைக்கப்பட்டுள்ளதுபெண் ஒருவர் தனது இரண்டு கைகளாலும் தீபத்தை . மெலிதான மேலாடையுடனும் தலைக்கு மேல் ஏந்தியபடி விரித்த தலைமுடியுடனும் இது பெண்களின் சுதந்திரத்தை .வட்டமாக சுற்றிய ஆடையுடனும் காட்சி தருகிறார் பாண்டிச்சேரி அர .வெளிபடுத்தும் விதமாக கட்சித்தருகிறதுசு பெண்கள் தொழில்நுட்ப கல்லூரியில் இச்சிலை நிறுவப்பட்டுள்ளதுஇந்த சிற்பம் சிற்பி ஜெயராமன் அவர்களுக்கு . .பெரும் புகழை பெற்றுத் தந்ததுமிகப்

**அய்யனார் சிற்பம்**

சிற்பி ஜெயராமன் அவர்களின் அய்யனார் சிற்பம் ஒரு புகழ்பெற்ற சிற்பமாகும்இது . கழுத்து மற்றும் கிரீடத்துடன் கூடிய தலை ஆகியவற்றை மட்டுமே கொண்டுள்ளதுஇதன் . சுமார்20 அடி உயரம் கொண்டதுதெய்வமான அய்யனாரை இதன் முகசாயல் நமது கிராம . முறுக்கிய மீசை பெரிய நெற்றிப் பொட்டு .ஒத்துள்ளது, பெரிய காதுகள் மற்றும் அச்சுறுத்தும் கண்கள் போன்றவை அய்யனாரை நினைவுபடுத்துகிறதுஇச்ச .ிற்பத்தின் மேற்பரப்பு கிடைமட்ட வளைவுக் கோடுகளால் முழுமை பெற்று திகழ்கிறது.

**நிறுவுக்கலை**

சிற்பி ஜெயராமன் அவர்கள் கழிவு பொருட்கள் மேலாண்மை விழிப்புணர்வை ஏற்படுத்தும் பொருட்டு வீணான பொருட்களில் இருந்து ஒரு மாபெரும் கிராமியக் கதை

எனும் சிற்பத்தை உருவாக்கியுள்ளார்இது வீணான பொருள்களைக் கொண்டு . .அமைக்கப்பட்ட மிகவும் பிரமாண்டமான உள்ளீட்டுடன் கூடிய பறவை சிற்பம் ஆகும் இதனை பாண்டிச்சேரி பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் பேராசிரியர் பட்டீல் அவர்கள் 1999-ம் ஆண்டு பொதுமக்கள் பார்வைக்கு திறந்து வைத்தார்.

**முக உருவங்கள்**

சிற்பி ஜெயராமன் அவர்கள் நவீன முகஉருவ சிற்பங்கள் செய்வதில் சிறப்பு பெற்று திகழ்ந்தார்ல் விதவிதமாக முக உருவங்களை பல்வேறு வகையான ஊடகங்களி . நவீன ஊடகமான பைபரால் .சிற்பங்களாக செய்வதை வழக்கமாக கொண்டிருந்தார் செய்யப்பட்ட முக உருவம் மிகவும் சிறப்பு பெற்றது, இது சுமார் இரண்டு அடி அகலமும் மூன்றடி உயரமும் கொண்டதுஇதில் காணப்படும் முக அமைப்பு ஓர் கிராமிய சூழலில் . முகத்தில் காணப்படக்கூடிய ஏற்ற .லாளியின் முக அமைப்பை ஒத்துள்ளதுவளர்ந்த தொழி தாடை .இறக்கங்கள் போன்றவற்றை அவரின் கடினமான மனநிலையை பிரதிபலிக்கிறது வரையிலான இந்த சிற்பத்தின் மூலமாக சிற்பியின் உள்வாங்குதல் தன்மையும் படைப்பாற்றல் திறமையையும் அறிந்து கொள்ள இயலும்.

களிமண்ணலான பல்வேறு முக உருவங்களை பயிற்சி செய்துள்ளார்அவைகள் . வான்கோவின் கோடுகளை போல துண்டு துண்டாக காணப்பட்டாலும் அகஉணர்ச்சிகளை பிரதிபலிக்கும் முகங்களாக திகழ்கின்றன .

சிற்பியின் மற்றொரு முன் பக்க முக உருவம் கோடுகளால் கீறப்பட்டு கோட்டோவியம் போல காட்சித் தருகிறதுஇது இவர் கோட்டோவியத்தில் சிறப்பு பெற்று திகழ்ந்தமையால் . அதுபோல .அதன் தாக்கம் சிற்பத்திலும் பிரதிபலிக்கிறது என்பதை பறைசாற்றுகிறது மற்றொரு உணர்ச்சி வெளிப்பாட்டு முக உருவம் மிக சிறப்பாக களிமண்ணால் உருவாக்கப்பட்டுள்ளது அதில் காணப்படக்கூடிய முகம் உணர்ச்சிப் பிழம்பாக காணப்படுகிறது.

**கோட்டோவியங்கள்**

கோட்டோவியங்கள் வரைவதில் சிற்பி ஜெயராமன் அவர்கள் சிறப்பு பெற்றவர் . அவருடைய ஓவியங்கள் கிராமிய சூழல்களை அடிப்படையாகக் கொண்ட கருப்பொருட்களை கொண்டுள்ளதுகுறிப்பாக கிராமிய பெண்கள் ., நாட்டியமங்கை, புல்லாங்குழல், கிராமிய கலைஞர்கள், நாட்டியக்காரன், இசைக் கலைஞர்கள், வாசகன், ஆபரணப் பெண், தொழிலாளி, போன்ற பல்வேறு படைப்புகளை கூறலாம்இவருடைய . கோட்டோவியங்கள் பெரும்பாலும் சிற்பங்களைபிரதிநிதித்துவப்படுத்துவது போல காணப்படுவது சிறப்பியல்பு ஆகும்.

**பத்திரிக்கை ஓவியங்கள்**

பத்திரிகைகளில் வெளியிடப்படக்கூடிய சிறுகதைகள் கவிதைகள் கட்டுரைகள் போன்றவைகளை விளக்குவதற்காக விளக்கப்படங்கள் வரையப்படுகின்றனஇவ்வகை . பத்திரிக்கை விளக்கப்படங்கள் வரைவதில்சிற்பி ஜெயராமன் அவர்கள் மிகச்சிறந்த விளங்கினார்ளில் பல்வேறு தினசரி பத்திரிகைகள் மற்றும் மாத இதழ்கள் காலாண்டுகள்க . குறிப்பாக தளம் காலாண்டு இதழில் .இவருடைய ஓவியங்கள் வெளிவந்துள்ளன கோ சின்ரா கவிதைகள் எனும் .தொடர்ச்சியாக விளக்க ஓவியங்கள் வரைந்து வந்தார் ஓவியதத்திற்கு வரைந்த விவசாய பெண்ணின் ஓவியம், பூந்தொட்டி முக சிற்பம், மாடுகள்

மலை இறங்குகின்றன எனும் சாம்ராஜ் அவர்களின் கவிதைக்கு வரைந்த முகத்தொகுதி ஓவியமும் சிறப்பு பெற்றவை.



**வண்ண ஓவியங்கள்**

வண்ண ஓவியங்கள் வரைவதில் சிற்பி ஜெயராமன் அவர்கள் சிறப்பு பெற்று திகழ்ந்தார்பழுப்பு மஞ்சள் போன்ற வண்ணங்களை பயன்படுத்தி தனக்கான தனித்த . மொழியை உருவாக்கினர், இவை கண்களோடு பொருத்தி கருத்துக் கோடுகளோடு இசைவுப்படுகின்றனஉதாரணமாக வயலின் வாசிக்கும் கலைஞர் ., பெண்கள், விவசாயி, நாட்டியமங்கை, புல்லாங்குழல் கலைஞர், இசைக் கலைஞர், தொழிலாளி போன்ற பல்வேறு ஓவியங்களைக் கூறலாம்அதில் கோடுகள் பிரதிநிதித்துவப்படுத்தும் ஆற்றலை . கிராமிய சூழல்கள் அடர்ந்த நிறங்களுடன் .வெளிகாட்டி உள்ளார் ஓவியங்கள் வழியாக .தீட்டப்பட்டுள்ளது



தியானம்



தாளம்

**ஓவியக் கண்காட்சிகள்**

படிக்கும் பொழுதே சென்னை லலித்கலா அகாடமியில் கோட்டோவிய தனிநபர் கண்காட்சியை நடத்தினார், அதுபோல கல்லூரியில் முதன் முதலில் கிராபிக்மிஷன் செய்த ஓவியத்தை சண்டிகர் கண்காட்சிக்கு அனுப்பி அங்கு தேர்வு செய்யப்பட்ட அந்த ஓவியம் விற்பனையானது என்பது அவர் சிறந்த மாணவர் என்பதற்கு உதரணமாக திகழ்கிறது .
நூற்றுக்கும் மேற்பட்ட ஓவிய கண்காட்சிகளை புதுச்சேரி, சென்னை, பெங்களுர், ஹைதராபாத், புதுதில்லி மற்றும் அந்தமான் நிக்கோபார் தீவுகள் ஆகிய இடங்களில் நடத்தியுள்ளார் .

பாண்டிச்சேரியில் காணப்படக்கூடிய வரலாற்று சின்னங்களை ஓவியங்களாக வரைந்து 1997 ஆம் ஆண்டு தனிநபர் கண்காட்சியை நடத்தினார் .
அந்தமான் நிக்கோபார் தீவுகளில் காணப்படக்கூடிய பழங்குடியின மக்களின் வாழ்வியல் முறைகளை ஓவியங்களாக தீட்டி அந்தமானில் உள்ள சிறைச்சாலை அருங்காட்சியகத்தில் 1996-ல் காட்சிப்படுத்தினார்.

**சுதந்திர போராட்ட வீரர்கள்**

சிற்பி ஜெயராமன் அவர்கள் இந்தியாவின் 64வது சுதந்திர தினத்தை குறிக்கும் வகையில் 64 சுதந்திர போராட்ட வீரர்களின் உருவத்தை பேனா ஓவியங்களாக வரைந்து குடியரசு தினமான ஜனவரி 26ம் தேதியன்று புதுச்சேரி பல்கலைக்கழகத்தில் கண்காட்சியாக வைத்தார்அந்த ஓவியங்களின் கீழ் அந்த சுதந் .திரப் போராட்ட வீரரின் வாழ்க்கைக் வரலாற்று குறிப்புகளும் இடம் பெற்றிருந்ததுஅதில் புதுச்சேரி சுதந்திர போராட்ட . .வீரர்களும் இடம்பெற்றிருந்தார்கள்

**சினிமா நூறு**

சிற்பி ஜெயராமன் அவர்கள் 2012 ஆம் ஆண்டு சினிமா நூறு என்னும் தலைப்பில் தமிழ் சினிமா தொடர்புடைய 100 முக உருவங்களை வரைந்து புதுச்சேரியில் காட்சிப்படுத்தினார்அதில் தமிழ் சினிமாவின் மிகச்சிறந்த ஆளுமைகள் அனைவரும் . குறிப்பாக செல்வி ஜெயலலிதா .ஓவியமாக தீட்டப்பட்டு காட்சிப்படுத்தப்பட்டார்கள், மனோரமா, சரோஜாதேவி, குஷ்பூ, ரேவதி, ஸ்ரீதேவி போன்ற நடிகைகளும் சிவாஜி கணேசன், ஜெமினி கணேசன், ரஜினி, கமல் போன்ற நடிகர்களும் மற்றும் தமிழ் சினிமாவின் முக்கியமான கலைஞர்கள் அனைவரும் கோட்டோவியங்கள், புள்ளி ஓவியங்கள் போன்ற பல்வேறு நுட்பங்களுடன் கருப்பு வெள்ளை வண்ணத்தில் அழகாக வரைந்து காட்சிப்படுத்தினார்.






**விருதுகள்**

சிற்பி ஜெயராமன் அவர்கள் இந்திய அளவில் 25 க்கு மேற்பட்ட விருதுகளையும், மத்திய மற்றும் மாநில அரசுகளின் நிதி நல்கைகளையும் பெற்றுள்ளார்குறிப்பாக ஆந்திர . அரசின் பாரத கலாபரிஷத் விருதை1992 ஆம் ஆண்டு ஹைதராபாத்தில் பெற்றார் . அதுபோல புதுச்சேரி மாநில அரசின் சிறந்த சாதனையாளர் மற்றும் சிறந்த கல்வியாளர் துகளைவிரு2008 ஆம் ஆண்டு பெற்றார் .

**முடிவுரை**

எளிமையான கிராமத்து மக்களின் மகிழ்ச்சி, துக்கம், நம்பிக்கை போன்ற வாழ்வியல் நிகழ்வுகளுடன் கலை நேரடியாக தொடர்பு கொண்டுள்ளதுசிற்பி ஜெயராமன் அவர்களும் . எளிய தன்னுடைய சிற்பங்களுக்கும் ஓவியங்களுக்கும் தேவையான கருப்பொருளை அவரது படைப்புகள் போல .மக்களின் வாழ்வியல் இருந்து எடுத்து வெளிப்படுத்தியுள்ளார் இவ்வாறு அவருட .அவரும் ஓர் எளிமையான மனிதராக வாழ்ந்து மறைந்தார்ைய ஓவியங்களும் சிற்பங்களும் நிதர்சனமான வாழ்வியல் நிகழ்வுகளை தன்னகத்தை கொண்டு அவரை வாழ்வுற செய்கிறது.

**துணைநூல்பட்டியல்**

1. Sirpi Jeyaraman - A Profile of brilliance, Sakya J. Mohan, Puducherry, 2006.

2. நவீன துரிகை, சுந்தர புத்தன், பாரதி புத்தகாலயம், சென்னை, 2006.

3. தளம்கலை இலக்கிய இதழ் -, ஜூலை செப்டம்பர் -2013

4. 20ம் நுற்றாண்டு ஓவியம் சில குறிப்புகள், கோகொண்ஸ்ரன் ரைன் .றோ., தேசிய கலை இலக்கியபேரவை, சவுத் விஷன் -பெப்ரவரி .1998.



# 9. தமிழ் எழுத்து வரலாறு

ந. தட்சணாமூர்த்தி M.A (தமிழ்),
அஞ்சல்துறைகணக்கு அதிகாரி (ஓய்வு),
பட்டுக்கோட்டை - 614602
மின்னஞ்சல்: ndmoorthy30@gmail.com
ORCHID ID: https://orcid.org/0009-0004-5055-1713
DOI 10.5281/zenodo.15065219.

**Abstract:**

**Tamil is one of the most ancient language spoken in the world. Among the inscriptions available in the Tamil language are the Tamil Brahmic inscriptions, which are considered to belong to the 3rd century BC. There have been a lot of excavations, such as Tamil Brahmi -written pot tiles, etc. The development of Tamil writings has a long history. The purpose of this article is to summarizeit.**

**KeyWords : Language Tamil - Inscriptions - Brakmic**

**முன்னுரை**:

உலகில் பேசப்படும் மொழிகளில் மிகவும் தொன்மை வாய்ந்த ஒரு மொழி தமிழ். தமிழ் மொழியில் கிடைக்கும் கல்வெட்டுகளுள் கி.மு 3 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை எனக் கருதப்படும் தமிழ்பிராமிக் கல்வெட்டுகளே காலத்தால் முற்பட்டவை. அவற்றுக்கும் முற்பட்ட காலத்தைச் சேர்ந்த தமிழ்பிராமி எழுத்து பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் முதலியன அகழாய்வுகளில் நிறைய கிடைத்துள்ளன. தமிழ் எழுத்துகளின் வளர்ச்சி நீண்ட வரலாறு கொண்டது. அதைச் சுருக்கமாகக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

**ஓவிய எழுத்து, ஆப்பு எழுத்து, ஒலியியல் எழுத்து முறைகள்:**

உலகில் பழங்கால நாகரிகங்களில் ஓவிய எழுத்துமுறையே பயன்பட்டது. இவ்வெழுத்துகள் முழுச்சொல்லையும் குறிக்கும் தன்மை கொண்டவை. இந்தியாவில் சிந்துவெளி நாகரிகத்திலும் ஓவிய எழுத்துகளே (hieroglyphics) பயன்படுத்தப்பட்டன. சில பண்டைய நாகரிகங்களில் பின்பு ஓவிய எழுத்துகள் சுருக்கப்பட்டு ஆப்பெழுத்துகள் (cuneiform) போன்ற முறைகள் தோன்றின. அதன்பின் ஒலியியல் (phonetic) எழுத்துமுறை தோன்றியது. இது சொல்லின் ஒலிகளைப் பிரித்து அவற்றைக் குறிக்கும் குறியீடுகளால் எழுதப்படுவது. பொனீசியர்களால் கண்டுபிடிக்கப்பட்டதால் இது 'பொனடிக் எழுத்துமுறை' என்று கூறப்படுகிறது. தற்காலத்தில் சீனம் போன்ற எழுத்துக்களைத் தவிர உலகில் உள்ள எழுத்துகள் யாவும் இந்த வகையைச் சேர்ந்தவையே.

**பிராமி எழுத்து முறை:**

அசோகரின் கல்வெட்டுகளில் காணப்படும் எழுத்துமுறை, ஒலியியல் வகையில் அமைந்த பிராமி எனப்படும் எழுத்துமுறை ஆகும். இந்தியாவிலும், தென்கிழக்கு ஆசியாவின் பல பகுதிகளிலும் இக்காலத்தில் உள்ள எல்லா எழுத்து முறைகளும் பிராமி எழுத்தில் இருந்து காலப்போக்கில் உருமாறி வந்தவையே என்பது பெரும்பாலான

அறிஞர்கள் கூறும் முடிவு. பிராமி எழுத்து சமஸ்கிருதத்தையும், அதன் திரிபு மொழியான பிராகிருதத்தையும் எழுதப் பயன்பட்டது. கிடைக்கும் பிராமிக் கல்வெட்டுகளில் பழைமையானவை பிராகிருத மொழியில் அமைந்தவை. எனினும் சமஸ்கிருதமே பிராகிருதத்தின் தாய் என்பதால் பிராமியை ஆராய சமஸ்கிருதத்தைத் துணையாகக் கொள்வது தேவையாகிறது.

**தமிழ்பிராமி எழுத்து:**

தமிழில் மிகத்தொன்மையான காலத்திலேயே இலக்கிய, இலக்கணங்கள் இருந்துள்ளதால் பழங்காலத்தில் ஓவிய எழுத்துமுறை, குறியீட்டு எழுத்துமுறை போன்றவை தமிழுக்கு இருந்திருக்க வேண்டும். தமிழ்நாட்டில் நிறையக் கிடைக்கும் கீறல் குறியீடுகள் (Graffiti symbols) இக்கருத்தை வலுப்படுத்துகின்றன. எனினும் தமிழ்பிராமி எழுத்துக்கு முந்தைய தமிழ் எழுத்துகள் எதுவும் இதுவரைக் கண்டுபிடிக்கப்படவில்லை. பிராமி எழுத்துமுறையில் சமஸ்கிருதத்துக்கே உரிய, தமிழில் இல்லாத எழுத்துகள் பல உள்ளன. அதேசமயம் தமிழில் உள்ள ழ, ற, ன ஆகியவை அதில் இல்லை. பிராமி எழுத்துகளுள் சமஸ்கிருதத்துக்கு உரிய எழுத்துகளைத் தவிர்த்து தமிழுக்கே உரிய எழுத்துகளுக்குப் புதிய குறியீடுகளைச் சேர்த்து தமிழ்பிராமியானது தமிழகத்தில் எழுதப்பட்டது. சமஸ்கிருதத்தில் ஏ, ஓ என்ற நெடில்கள் மட்டுமே உண்டு; எ, ஒ என்ற குறில்கள் கிடையாது. தமிழ்பிராமியில் அவற்றுக்கு தனிக்குறியீடுகள் ஏற்படுத்தப்படவில்லை.

**தமிழ்பிராமியின் மூன்று வகைகள்:**

பிராமி எழுத்துமுறை சமஸ்கிருதத்தையும் பிராகிருதத்தையும் எழுத ஏற்றது. சமஸ்கிருதத்தில் மெய்யெழுத்துகள் சொல்லின் இறுதியில் வருதல் மிக மிகக் குறைவு. பிராகிருதத்தில் அறவே இல்லை என்பர். மகர மெய்யை முழுமையாக ஒலிக்காமல் வாயை மூடி மூக்கொலியாக ஒலிக்கப்படும் மகர மெய் சமஸ்கிருதத்தில் 'அநுஸ்வாரம்' எனப்படும். இது சொல்லின் நடுவிலும் வரும்; இறுதியிலும் வரும். இந்த அநுஸ்வாரத்தைக் குறிக்க பிராமியில் புள்ளி இடப்பட்டது. மெய்யெழுத்தைத் தனியாகக் காட்ட வேண்டிய தேவை ஏற்படும் போது அந்த எழுத்தின் அருகே சிறிய கோடு இடப்படும். இது அரிதானது. பிராகிருதத்தில் அதற்குத் தேவையே இராது. நடுவில் வரும் மெய்யெழுத்துகள் அடுத்துவரும் உயிரெழுத்தோடு சேர்த்து கூட்டெழுத்தாக எழுதப்படும். எனவே மெய்யெழுத்தை வேறுபடுத்தத் தேவையில்லை. கூட்டெழுத்தில் முதலில் வரும் எழுத்து மெய்யெழுத்து என்பது அந்த எழுத்துமுறையின் மரபு. தமிழுக்கு இந்த முறை சரியாகப் பொருந்தவில்லை. ஏனென்றால் சமஸ்கிருதம் போல் அல்லாமல் தமிழில் மெய்யெழுத்தில் முடியும் சொற்கள் மிகுதி. சொல்லின் கடைசி எழுத்து என்பதால் அடுத்த எழுத்துடன் சேர்த்து அதைக் கூட்டெழுத்தாக எழுத முடியாது. தனியாகவே எழுத வேண்டும். எனவே கூட்டெழுத்து முறையைப் பின்பற்றாமல் தனித்தனியாகவே எழுதும் முறையைத் தமிழ்பிராமி பின்பற்றியது. இம்முறையில் 'க்' 'க' போன்றவற்றை வேறுபடுத்தியாக வேண்டும். இம்முறையில் ஏற்பட்ட சிக்கல்களால் மூன்று மாறுபட்ட முறைகள் தமிழ் பிராமியில் பின்பற்றப்பட்டன என்பது அறிஞர் ஐராவதம் மகாதேவனின் விளக்கம்[1]. முதல்வகை மாங்குளம் கல்வெட்டுகள் போன்ற கல்வெட்டுகளில்

MUTHTHARASI – Art Literary Culture Tamil Journal
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
SPL-EDITION – IV VOLUME - 1
மார்ச்சு-2025 E-ISSN: 2584 - 1238

பின்பற்றப்பட்டது[2]. பிராமியில், மெய்யெழுத்தான 'க' வின் வடிவம் (), அகரம் ஏறிய மெய்யான 'க' வைக் குறிக்கும் தனி மெய்யான 'க்' ஐக் குறிக்காது. மாறாக, மாங்குளம் தமிழ்பிராமியில் இது 'க்' ஐக் குறிக்கும். இவ்வாறே பிற மெய்யெழுத்து வடிவங்களும். பிராமியில் 'க' என்பதன் மேல் வலதுபுறம் ஒரு சிறு கிடைக்கோடு இட்டால் () அது 'கா'வைக் குறிக்கும் இது மாங்குளம் தமிழ்பிராமியில் 'க', 'கா' இரண்டையும் குறிக்கும். பிராமி முறைக்கு நேர்மாறான முறை இது. மாங்குளம் முறையில் குறில், நெடில் இரண்டும் ஒரே வடிவில் இருப்பதால் குழப்பம் ஏற்படுகிறது. இந்தக் குழப்பத்தை நீக்க, ஆந்திராவில் பட்டிப்புரோலு என்ற இடத்தில் பயன்பட்ட ஒருவகை பிராமி வகை ஒரு தீர்வு கண்டது[3]. 'க' என்பதைக் குறிக்கும் மேல்வலது கோட்டுடன் ஒரு சிறு தொங்கும் கோட்டை இணைத்து அது 'கா' ஐச் சுட்டியது. இந்த முறை தமிழ்நாட்டில் பயன்படுத்தப்படவில்லை. மாங்குளம் பிராமியில் நெடிலுக்கும் குறிலுக்கும் இடையே உள்ள குழப்பத்துக்கு மாற்றாக இரண்டாவதாக ஒரு தமிழ்பிராமி வகை உள்ளது. புகளூர்ச் சேரர் கல்வெட்டுகளில் இது பின்பற்றப்பட்டுள்ளது[4]. பிராமியின் 'கா' இம்முறையில் முதல்வகை போல 'க' எனக் கொள்ளப்படாமல் 'கா' என்றே கொள்ளப்பட்டது. பிராமியின் 'க' இங்கும் 'க' எனக் கொள்ளப்பட்டாலும் 'க்' என்பதற்கும் இதுவே பயன்படுத்தப்பட்டது. எனவே இங்கும் 'க', 'க்' இரண்டுக்கும் இடையே குழப்பம் ஏற்பட்டது. மூன்றாவது முறை துல்லியமானது. நெகனூர்பட்டிக் கல்வெட்டிலும் சித்தன்னவாசல் கல்வெட்டுகள் சிலவற்றிலும் இது பின்பற்றப்பட்டுள்ளது[5]. பிராமியின் 'க' இங்கும் 'க' ஐச் சுட்டும். அதே போல் பிராமியின் 'கா' இங்கும் 'கா' வைச் சுட்டும். ஆனால் 'க' வின் மேல் புள்ளி வைக்கப்பட்டால் அது 'க்' ஐச் சுட்டும். 'எ', 'ஒ' என்பவை பிராமி போல் 'ஏ', 'ஓ' வைச் சுட்டும். இவற்றின் மேல் புள்ளி வைக்கப்பட்டால் அவை 'எ', 'ஒ' என்ற குறில்களைக் குறிக்கும். அதாவது பிராமி முறையை ஏற்று, ஆனால் கூட்டெழுத்து முறையைப் பின்பற்றாமல், மெய்யெழுத்துகளுக்கும் எகர, ஒகரக் குறில்களுக்கும் புள்ளியிடுவது இந்த முறையாகும். இதை வேறுவிதமாகப் பின்வருமாறு கூறலாம். பிராமியில் அனுஸ்வாரத்துக்குப் புள்ளியிடப்படும். அரிதாக, சொல்லின் இறுதியில் வரும் மெய்யெழுத்தின் அருகில் ஒரு சிறு கோடு போடப்படும். மூன்றாம் வகைத் தமிழ்பிராமியில் மெய்கள், மற்றும் எகர, ஒகரக் குறில்களுக்குப் புள்ளியிடப்படும். பிராமியில் மெய்யெழுத்தானது பின்னால் வரும் எழுத்துடன் சேர்த்துக் கூட்டெழுத்தாக எழுதப்படும். தமிழ்பிராமியில் எழுத்துகள் தனித்தனியாக எழுதப்படும். தமிழில், புள்ளியிட்ட தமிழ்பிராமி முறையே, பொதுவாக, பிறகு பின்பற்றப்பட்டது. 'காலதர்' என்ற சொல் வெவ்வேறு முறைகளில் எழுதப்படுவதைக் கீழே உள்ள படம் தெளிவாக்கும்.

பிராமி -
பட்டிப்புரோலு பிராமி -
தமிழ்பிராமி I - மாங்குளம் -
தமிழ்பிராமி II - புகளூர் - சேரர் -
தமிழ்பிராமி III- நெகனூர்பட்டி -

**எழுத்துகளின் வடிவ மாற்றங்கள்:**

எழுத்துகள் கையால் எழுதப்படும்பொழுது அவற்றின் வடிவங்களில் சிறுசிறு மாற்றங்கள் ஏற்படுவது இயல்பு. பிராமி எழுத்துகளில் ஏற்பட்ட இத்தகைய மாற்றங்கள் காலப்போக்கில் அவற்றின் வடிவங்களில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தின. இந்த மாற்றங்கள் நாட்டின் ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு விதமாக இருந்தன. காலப்போக்கில் இந்த மாற்றங்கள் மிகுந்து கொண்டே வந்தன. எனவே ஒவ்வொரு பகுதியிலும் முற்றிலும் மாறுபட்ட தோற்றம் கொண்ட பலவான எழுத்து வகைகள் உருவாகின. வடநாட்டில் 'சித்தமாத்ரிகா', 'நாகரி', 'சாரதா' முதலிய பல எழுத்துகள் உருவாகின[6].

**தமிழ்நாட்டு எழுத்துகள்:**

பாண்டிய நாட்டில் எழுதப்பட்ட தமிழ்பிராமி காலப்போக்கில் வடிவங்கள் மாறி வட்டமான தோற்றம் கொண்டதால் இது 'வட்டெழுத்து' என அழைக்கப்பட்டது. பாண்டிய நாட்டிலும் சேர நாட்டிலும் இது எழுதப்பட்டது. வட தமிழகத்திலும் இது சிறிது பரவியிருந்தது. பொதுவாக, தமிழ்நாட்டில் சமஸ்கிருதத்தை எழுத பிராமியும், தமிழை எழுத தமிழ்பிராமியும் பயன்பட்டன. வடதமிழகத்தில், குறிப்பாகத் தொண்டை மண்டலத்தில் பயன்படுத்தப்பட்ட பிராமி எழுத்து காலப்போக்கில் திரிந்து 'கிரந்த எழுத்து' எனப் பெயர் பெற்றது[7]. அங்கு பயன்படுத்தப்பட்ட தமிழ்பிராமி எழுத்து காலப்போக்கில் மாற்றங்கள் பெற்று பல்லவர் ஆட்சியிலும் சோழர் ஆட்சியிலும் பயன்படுத்தப்பட்டு இன்று நாம் பயன்படுத்தும் தமிழ் எழுத்தாக வளர்ச்சி பெற்றது. இதைத் 'தமிழ் எழுத்து' என்று குறிப்பிடுவது கல்வெட்டியல் மரபு. சோழர்கள் கி.பி 10 ஆம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டை வென்றபின் தங்களது தமிழ் எழுத்தை அங்கு நிலைநாட்டினர்[8]. அதன்பிறகு அங்கு வட்டெழுத்தின் பயன்பாடு குறைந்து மறைந்துவிட்டது. எனினும் சேரநாட்டில் சில நூற்றாண்டுகள் முன்புவரை அது பயன்பாட்டில் இருந்தது.

பிராமி, தமிழ்பிராமி III, வட்டெழுத்து, வடதமிழகத் தமிழ் எழுத்து, கிரந்தம், தேவநாகரி ஆகியவற்றில் 'பரிபாடல்' என்ற சொல்லின் வடிவத்தைக் கீழே காணலாம்,

தமிழ் - பரிபாடல்
பிராமி - [illegible]
தமிழ்பிராமி III - [illegible]
வட்டெழுத்து - [illegible]
வடதமிழக எழுத்து - [illegible]
கிரந்தம் - [illegible]
தேவநாகரி - परिपाटल्

**புள்ளிச் சிக்கல்:**

தமிழ் எழுத்து வரலாற்றின் நெடுகிலும் எழுத்துகளுக்குப் புள்ளியிடுதல் ஒரு சிக்கலாகவே இருந்து வந்துள்ளது எனலாம். மெய்யெழுத்துகளுக்குப் புள்ளியிடலும் எகர ஒகரக் குறில்களுக்குப் புள்ளியிடலும் தமிழின் பொதுவான எழுத்துமுறை ஆகும். தொல்காப்பியர் காலத்தில் மகரக்குறுக்கத்துக்கும் புள்ளி இடப்பட்டது எனத் தெரிகிறது[9]. குற்றியலுகரம், குற்றியலிகரம் ஆகியவற்றுக்கும் புள்ளி இடப்பட்டிருக்க வேண்டும்.

புள்ளியிடப்பட்ட எழுத்துகள் மாத்திரை அளவில் குறைந்து ஒலிக்கும் என்பது பொதுவான கொள்கையாக இருந்துள்ளது.

பிராமிக் கல்வெட்டுகளின் காலத்திற்குப் பின்பு தோன்றிய கல்வெட்டுகள், செப்பேடுகளில், பொதுவாக, மெய்யெழுத்துகளும் எகர, ஒகரங்களும் புள்ளி பெற்றுக் காணப்படுகின்றன. பூலாங்குறிச்சி கல்வெட்டு[10], பிள்ளையார்பட்டிக் கல்வெட்டு[11], சிம்மவர்மப் பல்லவனின் பள்ளன் கோயில் செப்பேடு[12], பராந்தக நெடுஞ்சடைய பாண்டியனின் வேள்விக்குடிச் செப்பேடு[13] போன்றவற்றில் இவ்வாறு காணலாம். ஆனால் இப்போது அச்சில் தவறாமல் புள்ளியிடுவது போன்ற ஒரு நிலை இவற்றில் இல்லை. சில இடங்களில் புள்ளி இருக்கும்; சில இடங்களில் இருக்காது. புள்ளிகளைத் தவிர்த்துவிட்டு எழுதுவதும், படிப்போர் அதை ஊகித்துப் புரிந்து கொள்வதும் மிகவும் இயல்பாக இருந்துள்ளது. தமிழில் 'ஔவையார்' என்பதை அனைவரும் 'ஔ'வையார் (Avvaiyar) என்றுதான் படிக்கிறோம். 'ஒ''ள'வையார் (Olavaiyar) என்று படிப்பதில்லை. 'ஒ''ள' (ola) எனத் தொடங்கும் சொற்கள் தமிழில் இல்லாததால் குழப்பம் ஏற்படுவதில்லை. இவ்வாறே, தமிழ் மொழியின் தன்மை காரணமாக, 'க்க', 'த்த', 'ச்ச', 'ட்ட' போன்ற இடங்களில் புள்ளியிடாமல் எழுதினாலும் படிப்போர் எளிதாகப் புரிந்துகொள்ள முடியும். ஓலைச்சுவடிகளில் எழுதும்பொழுது புள்ளிகள் எழுதும் வேகத்தைக் குறைக்கக் கூடியவை. இப்போது போல அப்போது அச்சு இயந்திரம் இல்லாததால் அப்போது ஒருவர் ஒரு நூலைப் படைத்து அரங்கேற்றினால் நூலைப் படியெடுப்பவர்கள் அந்த நூலின் பல படிகளை எழுதி உருவாக்குவார்கள். அவை மக்கள் பலரிடம் செல்லும். இவ்வாறு மிகப்பல படிகளை எழுத மிகுந்த வேகம் வேண்டும். புள்ளிகள் வேகத்தைக் குறைப்பதால் புள்ளிகளைக் தவிர்த்து எழுதும் பழக்கம் தோன்றியது என்பது தெளிவு. வேகக்குறைவைத் தவிர்ப்பதற்காக முதலில் 'க்க', 'ச்ச', 'ட்ட', 'த்த' போன்ற எளிதில் புரியக்கூடிய இடங்களில் புள்ளியைத் தவிர்க்கும் பழக்கம் ஏற்பட்டு, பிறகு எல்லா இடங்களிலும் புள்ளியைத் தவிர்க்கும் பழக்கம் வந்திருக்கக்கூடும்.

**ஓலைச்சுவடிகள்:**

பழமையான கல்வெட்டுகள், செப்பேடுகள் சிலவற்றில் புள்ளிகள் முழுமையாக இடப்பட்டும், சிலவற்றில் சில இடங்களில் புள்ளியிடப்பட்டும், சில இடங்களில் புள்ளியிடப்படாமலும் உள்ள ஒரு சீரற்ற நிலையும் இருந்தது. பிற்காலக் கல்வெட்டுகள், செப்பேடுகளில் புள்ளி அறவே இல்லாத நிலையைக் காண முடிகிறது. ஓலைச்சுவடிகள் 200, 300 ஆண்டுகள் மட்டுமே இருக்கக் கூடியவை. அவை மிகவும் பழையதாகும்பொழுது அவற்றைப் புதிதாக எழுதிப் படியெடுக்க வேண்டும். தொல்காப்பியம், திருக்குறள் முதலியவை இவ்வாறு பலமுறை படியெடுக்கப்பட்டு நம்மிடம் வந்து சேர்ந்துள்ளன. தற்காலத்தில் கிடைக்கப்பெறும் ஓலைச்சுவடிகளில் புள்ளியிடுதல் என்பது அறவே இல்லை. மேலும் இடைக்காலத்தில் ரகரத்துக்கும் துணைக்காலுக்கும் இருந்த வேறுபாடு குறைந்து அவை ஒரே மாதிரி ஆகிவிட்டன. எனவே ஓலைச்சுவடிகளைப் படிக்கும் பயிற்சி இல்லாதவர்கள் அவற்றைப் படித்தால் ஒன்றுமே புரியாது. சில எடுத்துக்காட்டுகளைக் கீழே காணலாம்.

'கண்ணன்' - 'கணணன'
'தேவன்' - 'தெவன'
'சேரர்' - 'செரா'
'தோற்றார்கள்' - 'தொறறாாகள'

ஆனால் அக்காலத்தில் மக்கள் இவற்றைப்படித்து எளிதாகப் புரிந்து கொண்டார்கள்.

கல்வெட்டுகள், ஓலைச்சுவடிகளில் சொற்களைப் பிரித்து எழுவதையோ, பத்திகளைப் பிரித்து எழுதுவதையோ காணமுடியாது. வரியின் கடைசியில் ஓரிரு எழுத்துகளுக்கு மட்டுமே இடம் இருந்தால் சொல்லின் ஓரிரு எழுத்துகள் மட்டும் அங்கு எழுதப்பட்டு மற்ற எழுத்துகள் அடுத்த வரியில் எழுதப்படும். இப்போது உள்ளது போல் நிறுத்தற்குறிகள் அப்போது இல்லையென்றாலும் சில வகைக் குறிகள் பயன்படுத்தப்பட்டன. ஓலைச்சுவடிகளின் இடதுபுறம் சிறிது வெற்றிடமாக விடப்பட்டு அதில் தலைப்புகள், குறிப்புகள் போன்றவை எழுதப்பட்டன.

**வட எழுத்துகள்:**

தமிழ்நாட்டுக்கும் வடநாட்டுக்கும் மிகப்பழங்காலம் முதல் தொடர்புகள் இருந்தன. அதனால் வடமொழி என்றழைக்கப்படும் சமஸ்கிருத மொழியின் சொற்கள் பலவும் தமிழ் மக்களின் புழக்கத்தில் இருந்தன. இது தொல்காப்பியர் காலத்துக்கு முன்பாகவே ஏற்பட்டிருந்தது. தமிழில் இல்லாத ஒலிகள் அம்மொழியில் உண்டு. தமிழில் செய்யுளுக்கு உரிய சொற்களை நான்கு வகையாக வகைப்படுத்திய தொல்காப்பியர் அவற்றில் ஒன்றாக 'வடசொல்' என்பதைக் குறிப்பிடுகிறார். தமிழில் இல்லாத வடமொழி எழுத்துக்கள் நீங்கி இரு மொழிகளுக்கும் பொதுவான எழுத்துகளால் ஆனதே வடசொல் என்று அவரது சூத்திரம் கூறுகிறது. அதாவது மணி, கமலம் போன்றவை. வடமொழிச் சொற்கள் சிதைந்து தமிழுக்கு இசைந்தனவாய் வரும் சொற்களும் 'வடசொல்' என்று ஏற்கப்படும். அதாவது பங்கஜம், ராம:, லக்ஷ்மண: போன்ற வடமொழிச் சொற்கள் பங்கயம், இராமன், இலக்குவன் என்று திரிந்து தமிழ் ஒலிக்கு இசைந்தபடி வந்தால் அவையும் ஏற்கப்படும் 'வடசொல்' ஆகும்.

"வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே"
"சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்"

என்பவை தொல்காப்பியச் சூத்திரங்கள் [14].

தொல்காப்பியர் கூறும் இவ்விதி செய்யுளுக்கு கூறப்பட்ட கட்டுப்பாடு ஆகும். புலவர்கள் இதைச் செய்யுள்களில் தவறாது கடைப்பிடித்தனர். அண்மை நூற்றாண்டுகள் வரை இந்தப் போக்கு மாற்றப்படவில்லை. ஆனால் மக்கள் பேச்சுவழக்கிலும் உரைநடை எழுத்திலும் இவ்வாறு செய்யாமல் வடமொழிச் சொற்களை அப்படியே பயன்படுத்துதல் உண்டு. புலவர்கள் எழுதிய உரைநூல்களில் செய்யுள் போலவே வடமொழிக்கே உரிய எழுத்துகள் தவிர்க்கப்பட்டன. ஆனால் மக்களின் பேச்சுவழக்கும், பேச்சுவழக்கின் அடிப்படையில் எழுதப்படும் கல்வெட்டுகள், செப்பேடுகளும் அந்த நிலைக்கு மாறுபட்டவை.

இன்று மேலைநாட்டின் தொடர்பு, அறிவியல் வளர்ச்சி போன்றவற்றால் ஆங்கிலம் கலக்காமல் பேச முடியாத நிலை உள்ளது. மொழிபெயர்க்கப்படாத அல்லது மொழிபெயர்க்க முடியாத ஆங்கிலச் சொற்களை அப்படியே பேசி, எழுத வேண்டி உள்ளது. ஹேவல்ஸ் மின்விசிறி என்பதை ஏவல்சு மின்விசிறி என்றும் காரோஷ்டி என்பதைக் காரோட்டி என்றும் ஸ்டாலின் என்பதைச் சுடாலின் என்றும் ஒலி மாற்றம் செய்வதை பொதுமக்கள் விரும்புவதில்லை. முற்காலத்தில் இந்தியா முழுவதும் பொதுமொழி போன்று சமஸ்கிருதம் இருந்தது. அதனால் பொதுமக்கள் பேச்சுவழக்கத்தில் பல வடமொழிச் சொற்கள் அப்படியே புழங்கின. கல்வெட்டு, செப்பேடுகளிலும் அவை செய்யுள் முறைக்கு மாறாக அப்படியே எழுதப்பட்டன.

தமிழ்நாட்டில் காலத்தால் முற்பட்ட தமிழ்பிராமிக் கல்வெட்டுகளில் பல பிராகிருத, சமஸ்கிருதச் சொற்கள் கலந்து எழுதப்பட்டுள்ளன. தமிழில் இல்லாத வடமொழி எழுத்துக்கள் அந்த எழுத்துகளுக்கு உரிய பிராமி எழுத்துகளால் எழுதப்பட்டன. எ.கா - ‘அஸூதன்’, ‘உதயணஸ’, ‘வெஸன்’, ‘ஸபமிதா’[15]. வடதமிழகத் தமிழ் எழுத்திலும் வட்டெழுத்திலும் எழுதப்பட்ட பல்லவ, பாண்டிய, சோழ, சேரர் கல்வெட்டு, செப்பேடுகளில் பல வடசொற்கள் தமிழ்பகுதியின் இடையிடையே எழுதப்பட்டுள்ளன. அவை வடமொழிக்குரிய கிரந்த எழுத்துகளால் எழுதப்பட்டன. சில சமயங்களில், சில சொற்களில் ஓரிரு எழுத்துகள் மட்டும் வடமொழிக்கு உரிய எழுத்துகள் இருந்தால் அவை மட்டும் கிரந்த எழுத்துகளால் எழுதப்பட்டன. தமிழில் இல்லாத வடமொழி எழுத்துகள் அனைத்தும் இவ்வாறு எழுதப்பட்டன. எனினும் நாளடைவில், **ஷ, ஸ, ஜ, ஹ, க்ஷ, ஸ்ரீ** என்ற ஆறு கிரந்த எழுத்துகள் மட்டும், தமிழ் எழுத்துகளுடன் சேர்த்துப் பயன்படுத்தப்படும் வடமொழி எழுத்துகள் என்ற நிலையை அடைந்து, தற்காலத்திலும் வழக்கத்தில் உள்ளன. தமிழில் இல்லாத வடமொழி எழுத்துக்களான வர்க்க எழுத்துக்கள் என்பவை முற்காலத்தில் தமிழின் நடுவில் எழுதப்பட்டாலும் தற்காலத்தில் அவை அப்படித் தமிழில் எழுதப்படுவதில்லை (kh, g, gh, ch, j, jh, d, dh, b, bh முதலியவை).

**எண்களும், குறியீடுகளும்:**

பிராமியில் பயன்படுத்தப்பட்ட எண் குறியீடுகள் பிராமியில் இருந்து தோன்றிய எல்லா எழுத்து முறைகளிலும் பல்வேறு காலங்களில் ஏற்பட்ட வடிவ மாற்றங்களுடன் பயன்படுத்தப்படுகின்றன. பிராமியில் இருந்து கிரந்த எழுத்துகளும் தமிழ்பிராமியில் இருந்து வடதமிழகத் தமிழ் எழுத்துகளும் ஒரே இடத்தில் உருவானதால் இரண்டுக்கும் பொதுவான எழுத்துகளும் உண்டு; ஒத்த வடிவம் கொண்ட எழுத்துகளும் உண்டு. உ, ஊ, ண, த, ந, ய, வ ஆகியவை கிரந்தத்துக்கும் தமிழுக்கும் பொதுவானவை. ஈ, ஒ, ஔ, க, ட, ர ஆகியவை இரண்டிலும் ஒத்த வடிவம் கொண்டவை. எண்களைப் பொருத்தவரை இரண்டுக்கும் எண்கள் பொதுவானவை. க,உ, ௩, ச, ரு, ௬, எ, அ, ௯, 0 ஆகியவை எண் குறியீடுகள். 10, 100, 1000 முதலியவற்றுக்குத் தனிக் குறியீடுகள் உண்டு ((முறையே ௰. ௱, ௲). வடமொழி முறைப்படி கிரந்தம் சுழியத்தை (Zero) பயன்படுத்துகிறது. தமிழ் முறைப்படி தமிழில் சுழியம் அண்மைக்காலம் வரை பயன்படுத்தப்படவில்லை[16]. கிரேக்க, ரோம முறைகளில் எண்கள் கூட்டுமுறையில் குறிப்பிடப்படுவதைப் போல தமிழிலும் கூட்டுமுறையில் எண்கள் குறிப்பிடப்பட்டன. எடுத்துக்காட்டாக 1804 என்பதைத் தமிழில் குறிப்பிடும் போது ஆயிரமும்

எட்டு நூறும் நான்கும் என்பதைக் குறிக்கும் வகையில் கூ அ ா ச என்று குறிப்பிடப்படும். இந்த முறையில் சுழியம் (zero) தேவையில்லை. சமஸ்கிருதம் இடமதிப்புப் பதின்ம எண்முறையை (Place value decimal number system) கி.பி 6 அல்லது 7 ஆம் நூற்றாண்டில் இருந்து பின்பற்றுகிறது[17]. இந்த முறையில் கடைசியில் இருந்து எண்கள் நிற்கும் இடத்தைப் பொருத்து அதன் மதிப்பு 1, 10, 100, 1000 என அமையும். இம்முறையில் 1804 என்பது கிரந்தத்தில் க அ ០ ச என்று குறிப்பிடப்படும். இந்த முறை சுழியத்தைப் பயன்படுத்துகிறது. இம்முறை இடைக்காலத்தில் வட இந்தியாவில் இருந்து அரேபியா சென்று அங்கிருந்து ஐரோப்பாவுக்குச் சென்று தற்காலத்தில் உலகம் முழுவதும் பின்பற்றப்படுகிறது. அதனால் தற்போது பயன்படுத்தப்படும் சுழியம் முதல் 9 வரை உள்ள எண்கள் இந்தோ அரேபிய எண்கள் (Indo Arabic numerals) எனப்படுகின்றன. 20 ஆம் நூற்றாண்டின் தொடக்கம் வரை தமிழ் நூல்களில் தமிழ் எண்களே பயன்படுத்தப்பட்டன. மேலும் தமிழ் முறைப்படியே எண்கள் குறிப்பிடப்பட்டன. பின்வந்த அச்சு நூல்களில் கிரந்த முறையையும் பின்பற்றி எண்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. தற்காலத்தில் தமிழ் நூல்களில் ஆங்கில முறை எண்களே (இந்தோ அரேபிய எண்கள் எனப்படுபவை) பயன்படுத்தப்படுகின்றன.

முழு எண்களைத் தவிர பின்னங்களுக்கும் குறியீடுகள் உண்டு. நிறை போன்ற அளவைகளைக் குறிப்பிடவும் குறியீடுகள் உண்டு. நாள், மாதம், வருடம், மேற்படி போன்ற சொற்களைக் குறிப்பிடவும் குறியீடுகள் உண்டு[18]. தற்காலத்தில் இவற்றைப் பயன்படுத்துதல் மிகவும் குறைந்துவிட்டது. ஓலைச்சுவடிகள், தொடக்க கால அச்சு நூல்கள் ஆகியவற்றில் இவ்விதமான எண்களையும் குறியீடுகளையும் காணலாம்.

**அச்சு இயந்திரம்:**

மேலைநாட்டில் கண்டுபிடிக்கப்பட்ட அச்சு இயந்திரம் இங்கு கொண்டுவரப்பட்டு நூல்களை அச்சடிக்கும் முறை உருவாகியது. கிறிஸ்தவப் பாதிரியார்கள் தங்கள் மத நூல்களை அச்சிட்டுப் பரப்பும் நோக்கத்தில் இதில் முனைந்து ஈடுபட்டார்கள். கி.பி 1578 ல் ‘தம்பிரான் வணக்கம்’ என்ற நூல் தமிழில் கேரளாவில் அச்சடிக்கப்பட்டது. எனினும் நீண்ட இடைவெளிக்குப் பின்பே தமிழ்நாட்டில் தரங்கம்பாடியில் அச்சகம் நிறுவப்பட்டு அச்சிடுதல் தொடங்கி 1714 ல் விவிலியம் தமிழில் அச்சிடப்பட்டது. வீரமாமுனிவர் (கி.பி. 1680 - 1747) பல மத நூல்களை அச்சிட்டு வெளியிட்டார். மத நூல்கள் மட்டும் அல்லாமல் பரமார்த்த குரு கதை, சதுரகராதி முதலிய நூல்களையும் அவர் இயற்றினார். அவர் காலத்திலும் அவர் காலத்துக்குப் பின்னும் புள்ளியிடாமல் எழுதும் முறையிலேயே நூல்கள் அச்சடிக்கப்பட்டன. எனவே அவர் எகர, ஒகரக் குறில்களுக்குப் புள்ளியிடும் இலக்கண மரபைப் பின்பற்றாமல் ஏகார, ஓகார உயிர்மெய்களுக்கு அக்காலத்தில் இடப்பட்ட வந்த கொம்பில் (ெ) மேலேயும் ஒரு சுழி கொடுத்து இரட்டைக் கொம்பு (ே) ஆக்கி ஒரு புதிய முறையை ஏற்படுத்தினார். இது மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இதை அவர் லத்தீனில் தான் எழுதிய கொடுந்தமிழ் இலக்கண நூலில் குறிப்பிட்டுள்ளார்[19]. மேலும் ‘ஓ’வில் கீழே ஒரு சுழியும் ‘ஏ’வில் கீழே ஒரு கோடும் ரகரத்தின் கீழே ஒரு கோடும் அவராலேயே ஏற்படுத்தப்பட்டவை என்று உணர முடிகிறது. அச்சு நூல்கள் பெருமளவில் பரவி இந்த மாற்றங்கள் நிலை பெற்றன.

அக்காலத்தில் பொதுமக்கள் நூல்களை அச்சிட்டு வெளியிட முடியாத நிலை இருந்தது. எல்லிஸ் துரையின் முயற்சியால் ஏற்படுத்தப்பட்ட அரசினர் கல்லூரியில் (St George Fort College) சென்னைக் கல்விச் சங்கம் என்ற அமைப்பு ஏற்படுத்தப்பட்டு அதன் மூலம் சில தமிழ் இலக்கிய நூல்கள் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டன[20]. பின்பு 1835 ல் பொதுமக்களும் அச்சிடலாம் என்று சட்டம் மாற்றப்பட்டபின் பலரும் தமிழ் நூல்களை அச்சிட்டு வெளியிட்டனர்[21].

கி.பி. 1810 ல் வெளிவந்த, 'புது உடன்பிடிக்கை ஆகமங்கள்'[22] என்ற நூலில் முழுவதும் புள்ளியிடாமல் அச்சடிக்கப்பட்டுள்ளதால் இக்காலம் வரை புள்ளியிடும் பழக்கம் ஏற்படவில்லை என்று தெரிகிறது. கி.பி. 1821 ல் தஞ்சை வேதநாயக சாஸ்திரியால் வெளியிடப்பட்ட, 'பால சரித்திரம்' என்ற நூலில் தற்காலம் போல முழுமையாகப் புள்ளியிடப்பட்டுள்ளது[23]. இடைப்பட்ட காலத்தில் புள்ளியிடும் பழக்கம் தோன்றியுள்ளது என அறிகிறோம். எனினும் கி.பி. 1826 ல் சென்னைக் கல்விச் சங்கம் வெளியிட்ட, 'பஞ்சதந்திரக் கதை' என்ற நூலில் சில இடங்களில் புள்ளியிட்டும் பெரும்பாலான இடங்களில் புள்ளியிடாமலும் உள்ளது[24]. தொடர்ந்த காலங்களில் புள்ளியிடும் பழக்கம் நிலைபெற்று சீராக, முழுவதும் புள்ளியிட்ட அச்சுநூல்கள் வெளிவந்தன.

இக்காலக் கட்டத்தில், ஓலைச்சுவடிகளில் இருந்த நூல்களைப் பல அறிஞர்கள் தற்காலத்துக்கு ஏற்றவாறு பதிப்பித்து அச்சிட்டு வெளியிட்டனர்.

**எழுத்துச் சீர்திருத்தம்:**

20 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் தமிழ் எழுத்துச் சீர்திருத்தத்தைப் பற்றி அறிஞர் பலரும் பேசியும் எழுதியும் வந்தனர். பெரியார் ஈ.வெ.ரா தனது அச்சகத்தில் அச்சுக்கோத்தலை எளிமையாக்குவதற்குப் பல சீர்திருத்தங்களை சிந்தனை செய்து சிலவற்றைச் தனது 'விடுதலை' இதழில் செயல்படுத்தியும் வந்தார். அவற்றுக்குக் காரணமாக இருந்தவர் அவருடன் இருந்த குத்தூசி குருசாமி என்று கூறப்படுகிறது. இம்மாற்றங்களில் சிலவற்றைத் தமிழக அரசு ஏற்றுக் கொண்டது. ணா, றா, னா, ணை, லை, ளை, னை, ணொ, றொ, னொ, ணோ, றோ, னோ ஆகிவற்றின் பழைய வடிவங்கள் மாற்றப்பட்டன[25].

**அழகிய எழுத்துகள்:**

அச்சு இயத்திரம் வந்த பிறகு தமிழ் எழுத்துகள் சீரான, அழகான வடிவம் பெற்றன. கணிப்பொறி இங்கு வந்து அதில் தமிழ்மொழிப் பயன்பாடு ஏற்பட்டபின் தமிழ் எழுத்துகளை பற்பல விதவிதமான அழகான வடிவங்களில் காட்டும் கணிப்பொறி எழுத்துருக்கள் (Fonts) உருவாக்கப்பட்டுள்ளன. இவற்றைப் பயன்படுத்தி மிக அழகான வெவ்வேறு வடிவங்களில் தமிழ் எழுத்துகளை தற்காலத்தில் அச்சடிக்க முடிகிறது.

**முடிவுரை:**

தமிழ் இனிமையும் செம்மையும் பழமையும் கொண்ட ஒரு மொழி. எப்படி எழுதப்பட்டிருக்கிறதோ அதை அப்படியே எந்த வேற்றுமைக்கும் இடம் தராமல் படிக்கக் கூடிய மொழிகள் சிறந்த மொழிகள். செமிட்டிக் மொழிகள், ஐரோப்பிய மொழிகள் போன்றவற்றின் எழுத்து முறைகள் பொனிஷிய எழுத்துகளை அடிப்படையாகக் கொண்டவை. இவற்றில் உயிரெழுத்துகளின் எண்ணிக்கை மிகவும் குறைவு. எனவே

இவற்றில் எழுதப்படுபவைகளை வெவ்வேறு விதமாகப் படிக்கலாம். எடுத்துக்காட்டாக, Orange என்பதை ஓரஞ்ச், ஒரஞ்ச், ஆரஞ்ச் என்று பல வகைகளில் படிக்கலாம். இந்தி மொழியிலும் எழுதப்படுவதற்கும் படிக்கப்படுவதற்கும் வேறுபாடு உண்டு. தமிழும் சமஸ்கிருதமும் எப்படி எழுதப்படுகிறதோ அப்படியே படிக்கக் கூடிய மொழிகள். இடைக்காலத்தில் இருந்த சூழ்நிலைகளாலும் உழைப்புச் சுருக்கம் கருதி செய்யப்பட்ட நடைமுறைகளாலும், தமிழில் எழுதப்படுவதற்கும் படிக்கப்படுவதற்கும் வேறுபாடு ஏற்பட்டது. தற்போது அந்தக் குறைபாடுகள் நீங்கி தமிழ் இந்த விதத்தில் தன் செம்மையை மீண்டும் அடைந்துள்ளது. மிகப் பெரும் பழமை கொண்ட தமிழ் மொழி தன்னைத்தானே புதுப்பித்து இளமையுடன் விளங்கக் கூடியது என்பதை மீண்டும் மெய்ப்பித்துள்ளது.

**மேற்கோள்கள்:**

1. Iravatham Mahadevan, Early Tamil Epigraphy, 2003, p. 226.
2. ibid p.227.
3. ibid p.227.
4. ibid p.229.
5. ibid p.230.
6. Richard Solomon, Indian Epigraphy, 1998, pp. 39-40.
7. ibid p.40.
8. I.ravatham Mahadevan, Early Tamil Epigraphy, 2003, p. 212.
9. தொல்காப்பியம், எழுத்ததிகாரம், நூல் மரபு, சூ.13-14.
10. https://www.tamilvu.org/tdb/titles_cont/inscription/html/pulankuricci_inscriptions.htm
11. http://www.varalaaru.com/design/article.aspx?ArticleID=607
12. பல்லவர் செப்பேடுகள் முப்பது, 1999, பக்.7.
13. பாண்டியர் செப்பேடுகள் பத்து, 1999, பக். 4
14. தொல்காப்பியம், சொல்லதிகாரம், எச்சவியல், சூ. 5-6.
15. தமிழ்நாடு அரசுத் தொல்லியல் துறை, 2006, தமிழ்பிராமிக் கல்வெட்டுகள், பக். 119, 134.
16. காசிநாதன், நடன., கல்லெழுத்துக் கலை, 1989, பக். 71.
17. சுப்பிரமணியன், தி.ந., பண்டைத் தமிழ் எழுத்துக்கள், 1996, பக். 96-97.
18. காசிநாதன், நடன., கல்லெழுத்துக் கலை, 1989, பக். 74-75.
19. வேங்கடசாமி, மயிலை. சீனி., கிறிஸ்தவமும் தமிழும், 2014, பக். 92.
20. வேங்கடசாமி, மயிலை. சீனி., பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம், 1962, பக். 20-27.
21. கார்த்திகேசு சிவத்தம்பி, தமிழில் இலக்கிய வரலாறு, 1988, பக். 88-89.
22. புது உடன்பிடிக்கை ஆகமங்கள், 1810.
23. வேதநாயக சாஸ்திரி, பால சரித்திரம், தஞ்சாவூர், 1821.
24. தாண்டவராய முதலியார் (மொழி-ர்), பஞ்சதந்திரக் கதை, 1826.
25. தமிழ்நாடு அரசின் அரசாணை நிலை எண். 1875 நாள் 19.10.1978.

**துணை நூல் பட்டியல்:**


1. காசிநாதன், நடன., **கல்லெழுத்துக் கலை**, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1989.
2. கார்த்திகேசு சிவத்தம்பி, **தமிழில் இலக்கிய வரலாறு**, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1988.
3. சுப்பிரமணியன், தி.ந., **பண்டைத் தமிழ் எழுத்துக்கள்**, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1996.
4. **தமிழ் பிராமிக் கல்வெட்டுகள்**, தமிழ்நாடு அரசுத் தொல்லியல் துறை,சென்னை, 2006.
5. தாண்டவராய முதலியார் (மொழி-ர்), **பஞ்சதந்திரக் கதை,** சென்னைக் கல்விச் சங்கம், சென்னை, 1826.
6. தொல்காப்பியர், **தொல்காப்பியம்**.
7. **பல்லவர் செப்பேடுகள் முப்பது,** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1999.
8. **பாண்டியர் செப்பேடுகள் பத்து**, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1999.
9. **புது உடன்பிடிக்கை ஆகமங்கள்**, மிசியோன் அச்சுக்கூடம், தரங்கம்பாடி, 1810.
10. மகாதேவன், வே., **சோழர் செப்பேடுகள்**, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2013.
11. வேங்கடசாமி, மயிலை. சீனி., **கிறிஸ்தவமும் தமிழும்**, இலங்கணி பதிப்பகம், சென்னை, 2014.
12. வேங்கடசாமி, மயிலை. சீனி., **பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம்**, சாந்தி நூலகம், சென்னை, 1962.
13. வேதநாயக சாஸ்திரி, **பால சரித்திரம்**, தஞ்சாவூர், 1821.
14. Archeological Survey of India, **Epigraphia Indica Series**.
15. Archeological Survey of India, **South Indian Inscriptions Series**.
16. Iravatham Mahadevan, **Early Tamil Epigraphy**, Harvard University Press, 2003.
17. Richard Solomon, **Indian Epigraphy**, Oxford University Press, 1998.

## 10. சாதியம் நீக்கம் சாத்தியமா?

**முனைவர் ரவி தமிழ்வாணன்,**
நிர்வாக இயக்குநர்,
மணிமேகலைப்பிரசுரம்.
DOI 10.5281/zenodo.15065389.

**Abstract:**

If Bharatiyar initiated many years ago in the caste attempt, would it not be surprising?The news of Bharatiyar's life is found in the book of Bharatiyar, who chose a lowly breeding boy called Kanagalingam and worn Omam.Is this? Ramaswamy, his close friend Ramaswamy, said that he was going to remove himself. Did you leave it? The time of the Parpanai Iyer! He sang.He called this Kanagalingam and said, "You are the Brahmin from today. Don't be afraid of anyone!He finished his Brahmapadasam and took off his pool. His relatives scolded Bharathi.

Key Words: Caste - Tamil Society - E.V.Ramasamy

சாதிய நீக்க முயற்சியில் எவ்வளவோ ஆண்டுகளுக்கு முன்பு பாரதியார் முன்னெடுப்புச் செய்தார் என்றால், அது வியக்கத்தக்க செய்தி அல்லவா?

உண்மை.கனகலிங்கம் என்கிற ஒரு தாழ்த்தப்பட்ட இனத்துச் சிறுவனைத் தேர்ந்தெடுத்து, ஓமம் வளர்த்து பூணூலும் அணிவித்தார் என்கிற செய்தி பாரதியாரின் வாழ்வு நூலில் காணக்கிடைக்கிறது.

இது மட்டுமா? தம் நெருங்கிய நண்பரான ராமசாமி என்பவரின் பூணூலைக் கழற்றச் செய்ததோடு, தாமும் நீக்கப் போவதாகச் சொன்னார். இதோடு விட்டாரா? பார்ப்பானை ஐயர் என்ற காலம் போச்சே! என்றும் பாடினார்.

இந்தக் கனகலிங்கத்தை அருகே அழைத்து, “சிறுவனே! இன்று முதல் நீ பிராமணன். யாருக்கும் பயப்படாதே! யார் உனக்குப் பூணூல் போட்டவன் என வினவினால் பாரதி தான் போட்டார் என்று துணிந்து சொல். எது நேர்ந்தாலும் இந்தப் பூணூலை மட்டும் கழற்றி விடாதே!”

அவனுக்குப் பிரம்மோபதேசம் செய்து முடித்து, தம் பூணூலையும் கழற்றிப் போட்டார். இவற்றையெல்லாம் பார்த்த இவரது உறவினர்கள் பாரதியைத் திட்டினார்கள்.

சிலஅரசர்கள், குறிப்பாக முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில் திருச்சியில் வாழ்ந்த கம்மாளர்கள் ஐவகையினரும் பூணூல் அணியும் உரிமையைப் பெற்றனர்.

இது அந்தக் காலத்தில் ஏற்கப்படக் காரணம் இருந்தது. ஆம்! இக்கம்மாளர்கள் சாஸ்திரங்களை முறையாகக் கற்றவர்கள் என்பதால். ஆனால், இவர்கள் அக்கினி ஹோத்திரம் போன்றவற்றைச் செய்யக் கூடாது என்கிற ஆட்சேபனையும் இருந்தது.

ஒரு முறை மார்க்க சகாய ஆசாரி என்பவர் ஒரு பந்தக்கால் நடும் நிகழ்வில் புரோகிதம் செய்ய, இதை எதிர்த்துச் சித்தூர் நீதிமன்றத்தில் இவரது சமூகத்தின் மீது வழக்குத் தொடரப்பட்டது. (ஆதாரம்: வழக்குஎண்: 254, சித்தூர்நீதிமன்றம், 1817)

பாரதியை யுகப் புரட்சியாளர் என்று சும்மாவா சொன்னார்கள்? பண்டைக் காலத்தில் எதை வளர்த்தார்களோ இல்லையோ சாதியை நன்கு வளர்த்தெடுத்தார்கள்.

இதன் ஆழமான வேரூன்றலை இன்றளவும் நீக்க மிகக் கடினமாக இருக்கிறது.

சமயத் தத்துவங்கள் சமுதாயக் கட்டமைப்பை வலுப்படுத்தவே அதிகம் வலியுறுத்தப்பட்டன. ஆனால், இதில் சாதிய உணர்வுகளையே மக்கள் அதிகம் எடுத்துக் கொண்டு விட்டனர்.

மனிதன் மனப்பக்குவம் பெறவும், நெறிமுறைகளோடு வாழவும், அறிவை மேம்படுத்திக் கொள்ளவும், சமூகக் கட்டமைப்பு மிகவும் உதவுகிறது. இதற்குத் துணை நிற்பதே சமயம். ஆனால், காலப்போக்கில் சாற்றை விடுத்துச் சக்கையைச் சேர்த்துக் கொள்ளும் தவற்றை, மனிதன் செய்யத் தலைப்பட்டு விட்டான்.

பல்வேறு மொழிக் குழுக்கள் இனங்களாகப் பாகுபட ஆரம்பித்து, தங்களுக்கென ஓர் அடையாளத்தை ஏற்படுத்திக் கொள்வதையே ஆரம்பத்தில் முயற்சிகள் நடந்தன. காலப்போக்கில் சாதியச் சாயத்தை இச்சமூகங்கள் பூசிக் கொண்டு விட்டன.

அறிவு அதிகம் உடையவனே பெரியவன்.
அரசரில் பலம் அதிகம் உடையவனே பெரியவன்.
வளங்களில் பணம் அதிகம் உடையவனே பெரியவன்.

என வியாச முனிவர் மஹாபாரதத்தில் குறிப்பிடப் போக இவற்றையே பெரிதென மக்கள் போற்றி ஒழுகத் தொடங்கி விட்டார்கள். 'சாதிகள் இல்லையடி பாப்பா!' என முழங்கிய குரல், அவனது ஆயுள் விரிவடையாததில் அடங்கிப் போனது.

சாதி வெறியை எதிர்த்த ராம்மனோகரும் சிறையில் வாடும்படி ஆகிவிட்டது. ராம்மனோகர் லோகியா போன்ற எதற்கும் அஞ்சாத அற்புத மனிதரைச் சிறையில் வைத்து விட்டு என்னால் வேறு வேலைகளைப் பார்க்க முடியவில்லை என்று வருந்தியவர் அண்ணல் காந்தியடிகள்.

"இருட்டறையில் உள்ளதடா உலகம்; சாதி இருக்கிறது என்பானும் இருக்கிறானே!" என வருந்திப் பாடியவர் பாவேந்தர் பாரதிதாசன்.

சமயப் பிணக்குகளை அறுத்திட இளைஞர்களால் முடியும். இதற்குத் துணிந்து பணியாற்றிட வேண்டும் என அழைத்த வரும் இவரே!

'பிறப்பொக்கும் எல்லாஉயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.'

என வள்ளுவரும், செய்கிற தொழில் வகையால் வரும் சிறப்பு ஏற்கத்தக்கதல்ல. முடிந்த கருத்தாகக் கூறியதை இங்கு நினைவுபடுத்திக் கொள்ள வேண்டியவர்களாக இருக்கிறோம்.

பிற்காலத்தில் மானுடமும், மனிதநேயமும் தான் வாழ்வின் ஆதார சுருதிகள் என்று போதித்தவர் ராமனுஜர். இவர் செய்யாத சமுதாயப் புரட்சியா? சாதிய மறுமலர்ச்சியா?

இப்படி அந்தந்தக் காலகட்டத்தில் நெஞ்சு பொறுக்குதில்லையே! எனப் பல்வேறு பெருமக்கள் சாதிஒழிப்பையும் மனிதநல்லிணக்கத்தையும் வலியுறுத்தாமல் இல்லை.

என் மூத்த சகோதரி திருமதி.லக்ஷ்மி முருகப்பனின் திருமணத்தின் போது (1970-களில்) சாதியைக் குறிப்பிட்டே அழைப்பிதழ் அச்சடிப்பது வழக்கமாக இருந்தது. என் தந்தை திரு.தமிழ்வாணன் தம் சாதியைக் குறிப்பிடாமல் அழைப்பிதழை அச்சடிக்க, பலர் இதற்கு எதிர்ப்பும், மறுப்பும் தெரிவித்தனர். குறைந்தது உங்கள் தந்தையார் பெயரை அடுத்தாவது

சாதியைக் குறிப்பிட்டிருக்க வேண்டும் என வலியுறுத்த என் தந்தை அதைத் தீர்மானமாக மறுத்தார்.

வாதம் செய்ய முன் வந்தவர்களிடம் “ஏன் சாதியைக் குறிப்பிட வேண்டும்? சொல்லுங்கள்” எனக் கேட்கவும் செய்தார்.

“வெறுமனே பெயரைப் போட்டால் அது மரியாதை இல்லை. சாதி சேர்ந்தால் தான் மரியாதை!”

“அப்படியா? வேறு காரணம் ஏதும்?”

“உண்டு.

இரு தரப்பினரும் சாதியைக் குறிப்பிட்டால் தான் நீங்கள் நம் சாதிக்குள் சம்பந்தம் செய்கிறீர்கள் என்பது பிறருக்குத் தெரிய வரும். சாதியைக் குறிப்பிடா விட்டால் நீங்கள் வேறு சாதியிலிருந்து மாப்பிள்ளை எடுக்கிறீர்கள் எனப் புரிந்து கொள்வார்கள். நீங்கள் இப்படியெல்லாம் செய்தால் நம் சாதியின் பெருமை போய்விடும்” என்றார்கள்.

ஆனால், சாதியைக் குறிப்பிடாமல் இன்று அச்சடிக்கப்படுகிற பல அழைப்பிதழ்களுக்கு என் தந்தை முன்னோடியாகத் திகழ்ந்தார் என்பதை நான் பதிவு செய்தாக வேண்டும்.

திருமண அழைப்பிதழ்களிலாவது சாதிப்பெயர் ஒழிந்து வருவதை நாம் அவசியம் வரவேற்றாக வேண்டும்.

சாதிப் பற்றிலிருந்து நம் சமூகம் மீளமுடியாமலிருக்க அரசியல் கட்சிகள் முக்கியக் காரணிகளாக இருக்கின்றன.

இது எப்படி என்பதை விளக்குகிறேன்.

சாதிகளின் அடிப்படையிலேயே சட்டமன்ற -பாராளுமன்றத் தேர்தலில் வேட்பாளர்கள் நிறுத்தப்படுகிறார்கள். எதிராளி என்ன சாதியாரை வேட்பாளராக்குகிறார்களோ முடிந்தவரை அதே சாதியைச் சேர்ந்தவரை அல்லது அதே மதத்தைச் சேர்ந்தவரை எதிராளியும் நிறுத்துகிறார். இதன் மூலம் சாதி ஓட்டுகளைப் பிரித்தாளும் தந்திரம் நடக்கிறது.

ஜாதிய -மத ஆதாரத்தில் குளிர் காயாத கட்சிகள் எவை என்கிறீர்கள்?

ஒரு தொகுதியில் எந்த ஜாதியின் ஓட்டுகள் அதிகமோ அதே ஜாதியைச் சேர்ந்த ஒருவரே வேட்பாளராக்கப்படுகிறார்.

பெரும்பான்மை சாதிக்காரருக்கு எதிராக சிறுபான்மை சாதியினரை நிறுத்தும் திராணி எத்தனைக் கட்சிகளுக்கு இருக்கின்றன என்கிறீர்கள்?

அரசியல் ஆதாயத்திற்காக அடித்தட்டு மக்களின் சாதி உணர்ச்சிக்கு உள்ளாக்கச் செய்து அவர்களை மறைமுகமாகப் பிரித்தாளும் சூழ்ச்சியைக் கையாண்டு அரசியலில் காலூன்ற நினைக்காத செயலைப் பெருங்கட்சிகள் மட்டுமன்று, புதிதாகப் புறப்படும் புற்றீசல் கட்சிகளும் கையாள்வதைப் பார்க்கிறோம். சாதி வளையத்தை விட்டு மக்கள் மெல்லமெல்ல வெளிவரத் தலைப்பட்டாலும் அரசியலாளர்கள் அதை விடுவதற்குத் தயாரில்லை என்பதே உண்மை.

ஜாதி என்பது அரசியல் கட்சிகளின் முக்கிய மூலதனம். ஆதாரம்மிக்க பகடைக்காய். அரசியலில் சாதி என்பது முக்கியக் கருவியாகப் பயன்பட்டு வருவதைத் தவிர்க்க முடியவில்லை.

சிஷெல்ஸ், மொரிஷியஸ், தென்னாப்பிரிக்கா போன்ற நாடுகளுக்குச் சென்ற போது ஓர் அதிசயத்தைக் கண்டேன். அங்கு, மிஸ்டர் படையாச்சி, மிஸ்டர் முதலியார், மிஸ்டர் பிள்ளை என்றே மக்கள் சாதிப்பெயரால் அறியப்பட்டிருக்கிறார்கள். இன்றளவும் இது தொடர்கிறது.

இதை அவர்கள் இங்கெல்லாம் தவறு என்று கருதுவது இல்லை. இதில் வியப்பு என்னவென்றால் இவர்களின் பெயரில் தான் சாதி இருக்கிறதே தவிர, உணர்வில் இவர்கள் பெருந்தன்மையாளர்களாக இருக்கிறார்கள். மண வினைகளின் போது சாதி பாராமல் எவரும் எவரோடும் சம்பந்தம் செய்து கொள்கிறார்கள்.

சாதி உணர்வால், நீ உயர்ந்த சாதி, நீ தாழ்ந்த சாதி என்கிற வேறுபாடும் மனஉணர்வும் இல்லாத பெருந்தகையாளர்களாக இருக்கிறார்கள்.

அவ்வளவு தூரம் போவானேன்? அந்தமானுக்குச் சென்று பாருங்கள்!

சாதி பேதம் இல்லாத சமத்துவப் பூமி இந்தியாவில் உண்டு என்றால் அது, அந்தமான் தான். கிட்டத்தட்ட மேற்கூறிய நாடுகளில் நான் கண்ட நிலையை நான் இங்கும் கண்டேன்.

பெயரில் தான் சாதி. பெயருக்குத் தான் சாதி. எந்தவித வித்யாசமும் இன்றி எல்லோரும் எல்லோருடனும் மணவினை கொள்வதை நான் பார்த்த போது, நான் வந்திருப்பது என்ன இந்தியாவின் ஒரு பகுதியா! வேறு எங்குமா? என்கிற ஐயமே எனக்கு வந்து விட்டது.

சாதிக் கலப்பு என்பது இங்கு சகஜம். நம்மிடமிருந்து 1400 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள இந்த மண்ணில் நிகழும் அதிசயம் இங்கு தமிழகத்திலும் வந்திடாதா! என்கிற ஏக்கமும் பெருமூச்சுமே எனக்கு மிஞ்சின.

இன்னும் இரு தலைமுறைகளுக்குப் பிறகு அந்தமானில் சாதி என்பதே இராது என்பது என் கணிப்பு. சாதிய நீக்கம், சாதியப் புரட்சி, சாதிய மறுப்பு ஆகியவை சாத்தியமே இல்லை எனக் கூறுவோர்க்கு அந்தமான் மண் நம்பிக்கை ஒளி ஊட்டுகிறது.

நவீன உலகில் பெண்கள் ஏகமாய்ப் படித்து, மாபெரும் நிறுவனங்களில் பணிபுரிகிற வேளையில் தங்களுடன் பணிபுரிகிற ஆண்களைக் காதலித்துத் திருமணம் செய்து கொள்வது பெருகுகிறது.

நீ என்ன சாதி? என்று கேட்டுக் கொண்டு இவர்கள் ஒருவரை ஒருவர் காதலிப்பது இல்லை.

பணிபுரிகிற இடத்தில் என்றா சொன்னேன்? கல்லூரி வளாகங்களில் தான் எவ்வளவு காதல் உலகங்கள்...!

உயர்குடிப் பிறந்த ஒரு பெண்ணைக் கேட்டேன். உன் சாதிப் பையனை, பெற்றோர் பார்த்து முடிவு செய்த பையனை மணக்க முன் வராமல் வேறு சமூகத்துப் பையனை விரும்பி ஏற்கக் காரணம் ஏதும் உண்டா? என்றதற்கு எங்கள் சமூகமரபுகள், நடைமுறைகள் எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லை வெறுக்கிறேன் என்றும் சொல்லலாம். என் பெற்றோர்

என் முடிவை ஏற்கமாட்டார்கள். தெரியும். எனினும் எடுத்துச் சொல்வேன். அவர்கள் ஏற்காவிடில், எதிர்ப்புத் தெரிவித்தால் துணிந்து வெளியேறுவேன் என்றாள்.

அவளது குரலில் இருந்த உறுதி எனக்குப் பல செய்திகளைச் சொல்லிற்று. அவற்றுள் ஒன்று அவள் உயர்சாதிப் பெண் எனினும் சாதியக் கட்டுப்பாடுகளை அவள் அடியோடு வெறுக்கிறாள் என்பதே.

இன்று காதல் திருமணங்களின் விகிதாசாரம் என்ன என்கிற புள்ளிவிவரம் என்று எனக்குத் தெரியாது. ஆனால் இவ்விகிதாசாரம் மேற்கூறியபடி உள்ளது என்பதை மறுக்க முடியாது.

இந்தப் போக்கில் சமுதாயம் நகர்ந்தபடியே இருந்தால் அந்தமானைத் தொட முடியாவிட்டாலும் லிட்டில் அந்தமானையாவது தொடலாம்! என்று கணிக்க வேண்டியுள்ளது. பெண்களின் பிறப்பு விகிதம் குறைவதாலும் அந்தந்தச் சாதியில் பெண் கிடைக்காததால் எந்தச் சாதியானாலும் பரவாயில்லை, பெண் கிடைத்தால் போதும் என்கிற மனநிலைக்குப் பல சாதியினர் முடிவிற்கு வந்து விட்டனர்.

திருமண விளம்பரங்களைப் பாருங்கள். எந்தச் சாதியும் சம்மதம் என்கிற வாசகங்கள் பெருத்து விட்டனவா இல்லையா?

ஒரு யுகப் புரட்சியின் தொடக்கத்தில் நாம் இருக்கிறோம். நம் காலத்தில் சாதி சமய பேதமற்றச் சமுதாயத்தை நம் ஆயுள்காலத்தில் பார்த்துவிடுவோமா…என்பது தெரியாது. ஆனால், இத்தகைய புரட்சிகரமான உலகை நோக்கி நடை பயில ஆரம்பித்து விட்டோம் என்கிற நம்பிக்கை ஒளிக்கீற்று மட்டும் உள்ளம் உணர ஆரம்பித்து விட்டது.

**துணைமை நின்ற செய்திகள் :**


1. http://aathitamilan.weebly.com/2970300629803007296529953021/35
2. https://www.dinamani.com/weekly-supplements/magalirmani/2021/Dec/15/egan-as-bharati-3753968.html

# 11. சங்க காலப் புற இலக்கியத்தில் போரும் அறமும்

**ரா.திலகவதி,**
பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
கோபி கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
கரட்டடிபாளையம், கோபி - 638453.
அலைபேசி +919786244924
EMailID :senthilrajasanju@gmail.com

**முனைவர் எஸ்.சுந்தரன்,**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
கோபி கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
கரட்டடிபாளையம், கோபி - 638453

DOI 10.5281/zenodo.15066839.

**Abstract:**

Various literatures created by creators from ancient times to the present have a long tradition. They are a mirror that clearly expresses the lives of the people. In Tamil, literature is not only aesthetic but also gives prominence to the life, culture and tradition of the people. Moreover, the purpose of literature was a high goal such as virtue, meaning and pleasure. The purpose of literature also highlights ethical concepts. Sangam songs are a treasury of the life and ideology of Tamils in Sangam society. Sangam literary songs are sung with internal and external news as their subject matter. In Sangam literary literature, virtue is related to public life such as war, charity, heroism and governance. The purpose of this article is to examine war and the ethical concepts expressed in war.

**Key Words:** Sangam literature - War - Ethics - Heroism

**முன்னுரை:-**

இன்றைய வழக்கில் உள்ள மொழிகளில் தமிழ்மொழி காலப் பழமையும், இலக்கியச் செழுமையும் கொண்டு காலங்கடந்தும் கன்னித்தன்மையுடன் வளர்ந்து வருகின்றது. புலவர்களின் சிந்தனையில் கருக் கொண்டு செஞ்சொற் தொடர்களால் உருக்கொள்ளும் இன்றமிழ் இலக்கியங்களில் அகமும்,புறமும் அடித்தளமாகப் படபாடப்பட்டுள்ளன. தலைவன் தலைவியின் வாழ்க்கையைப் பற்றிக் கூறுவது அகஇலக்கியமென்றும் போர், வீரம், கொடை இவற்றைப் பற்றிக் கூறுவது புற இலக்கிய மென்றும் கூறுவர். வீரத்தின் வெளிப்பாடாகப் போர்க்களம் இருந்தபோதும், அப்போரும் அறத்தின் வழிப்பட்டதாகவே காணப்படுகிறது.

**போருக்கான காரணங்கள்:-**

சங்க காலத்தில் குறுநில மன்னர்களே அதிகம் காணப்பட்டனர். இதற்கு அக்கால நிலவியற்கையும், அதனை ஒட்டிய இனக்குழுத் தன்மை வாய்ந்த சமூக அமைப்புமே இதற்கு அடிப்படையாகும்.

வேந்தர்கள் குறுநில மன்னர்களிடம் அன்புடனும் நட்புடனுமே வாழ்ந்து வந்தனர். எனினும் குறுநில மன்னர்கள் பெரும்புகழ் பெற்றவர்களாகவே விளங்கியுள்ளனர். மூவேந்தர்களுமே மலையமான் திருமுடிக்காரியிடம் படையுதவி வேண்டினர்.

இதனை,

> **“மூவரில் ஒருவன் துப்பாகிலர் என**
> **ஏத்தினர் தருஉங் கூழே”** -1

என்ற புறப்பாட்டால் அறிய முடிகிறது. இருப்பினும், சில வேளைகளில் அவர்களுடன் போர் நடத்தியதும் உண்டு.

**அதியமான்,பெருஞ்சேரல்இரும்புறையாலும்**
**பாரிமூவேந்தர்களாலும்கொல்லப்பட்டசெய்தி**
**அறியமுடிகிறது.**-2

அரசு செம்மையாகச் செயல்பட வேந்தர்கள், குறுநில மன்னர்களின் அன்பையும், நட்டையும் எதிர்பார்த்திருந்தனர்.

நிலை பெற்ற அரசை ஆண்டிருந்தாலும், வேந்தர்களிடையே அடிக்கடி போர் மூண்டு தான் இருக்கிறது. இவ்வாறு போர் நிகழ்வதற்கு முக்கிய காரணம் அரசியல் சூழ்நிலைகளே என்று கூறலாம். எல்லைக்கோடு தெளிவாகவோ உறுதியாகவோ வரையறை செய்யப்படாதது, இதனால் எல்லைத்தகராறுகள் தொடர்ந்து இருந்துள்ளது. போக்குவரத்துக் குறைபாடு, அக்கால மன்னர்கள் தற்கால சட்டத்தின் ஒழுங்கை நிலைநாட்ட முடியாமை, ஒழுங்கை நிலைநாட்ட விரும்பிய மன்னர்கள் போர்களைப் புரிந்த வண்ணம் இருக்க வேண்டியது.

**போர்க்குணம்:-**

பண்டைய மன்னர்கள் ஒற்றுமை உடையவர்களாய் இருந்த போதும் போர்க்குணம் காரணமாக அவர்கள் எப்போதும் ஒற்றுமையாய் இருந்ததில்லை. போர்க்குணம் அவர்களை ஒற்றுமையாய் இருக்க விட்டதில்லை.

சங்ககாலத்தில் வாழ்ந்த மக்கள் இயற்கையிலேயே போர்க்குணம் படைத்தவர்களாகவே இருந்தனர். அவர்களுடைய பழக்கவழக்கங்கள், தொழில், விளையாட்டு யாவும் வீரப்பண்புடன் திகழ்ந்தன. மகளிர் தம் பிள்ளைகளின் மார்பில் ஐம்படைதாலி அணிவித்திருந்தனர். சங்கு, சக்கரம், தண்டம், வில், வாள் ஆகிய ஐந்து கருவிகளைச் சிறுபிள்ளைகளுக்குத் தாலியாக அணிவித்திருந்தனர். இதனைப் புலவர் இடைக்குன்றூர்கிழார்.

**“கிண்கிணி கலைந்தக் கால் ஒண்கழல் தொட்டுக்**
**குடுமிகளைந்துநுதல் வேம்பின்ஒண்தளிர்**
**நெடுங்கொடிஉழிஞைப்பவரோடுமிலைந்து**
**குறுந்தொடிகழித்தகைச் சாபம்பற்றி**
**நெடுந்தேர்க்கொடிஞ்சிபொலியநின்றோன்”**-3

என்று ஒரு வீரனைப் பார்த்து அவனது வீரத்தைப் பாராட்டிப் பாடுகின்றார்.

இதுமட்டுமன்றி, ஊரில் உள்ள மன்றத்தின்கண் பாணர்களால் கட்டப்பட்டுத் தொங்கும் முழவு காற்று அசைத்தலால் மரக்கிளையில் மோதி ஒலியுண்டாக்கும். அந்த முழவின் ஓசையைக் கேட்க போர்ப்பறை ஓசை எனக் கேட்டு தலைவன் மகிழ்வதை ஔவைப் பெருமாட்டியார்,

**“ பொதுவில்தூங்கும்விசியுறுதண்ணுமை**
**வலிபொருதென்கண்கேட்பின்**
**அதுபோர்என்னும்என்ஐயும்உளனே”**! -4

எனப் பாடுகிறார்.

**பெண்டிரின் மறப்பண்பு:-**

புறநானூற்றுப் பாடல்வழி பெண்டிரும் மறப்பண்பு நிறைந்தவர்களாகக் காணப்பட்டனர். தன் வயிற்றில் பிறந்த மக்கள் குன்றாத மானமும், வீரமும் உடையவர்களாக இருக்க வேண்டும் என விரும்பினர். தன் மகன் போரில் புறமுதுகிட்டான் என்ற பொய்யான செய்தி கேட்டு அவனுக்குப் பாலூட்டிய மார்பை அறுத்திடுவேன் என்று வஞ்சினம் கூறி வாளுடன் போர்க்களம் நோக்கிப் புறப்பட்ட முதியவளின் வீரத்தைப் பாராட்டிய காக்கைப்பாடினி நச்செள்ளையார்,

**"படையழிந்துமாறினனென்றுபலர்கூற**
**மண்டமர்க்ககுடைந்தன னாயினுண்டவென்**
**முலையறுத் திடுவென் யானெனச் சினைகிக்**
**கொண்டவாளொடு படுபிணம் பெயரச்**
**செங்களத் துழவுவோன் சிதைந்துவே றாகிய**
**படுமகன் கிடக்கை காணூஉ**
**ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே.** -5

என்று பெண்டிரின் மறப்பண்பினைப் படுகிறாள். இதுபோல எண்ணற்ற செயல்கள் புறநானூற்றில் பெண்டிரின் மறப்பண்பினைக் காணமுடிகிறது.

இனி போருக்குரிய காரணங்களை நோக்குமிடத்து மக்கள் வாழப் போதிய இடமின்மையால் நாட்டை விரிவுபடுத்த வேண்டிப் போர் தொடுப்பர். இதனை,

**" எஞ்சா மண்நசைவேந்தனைவேந்தன்**
**அஞ்சுதகத்தலைச்சென்றுஅடல்குறித்தன்றே"** -6

என்று தொல்காப்பியரும்,

சேரமான் கடுங்கோ வாழியாதன், இந்த உலகத்தை ஆட்சிப் புரிந்தவர்கள் ஒவ்வொருவரும் என்னுடைய நிலப்பகுதி தனக்கே உரியது என்கிற பொதுத்தன்மையை ஏற்றுக் கொள்ளாமல் தன்னை எதிர்ப்பவர் யாராக இருந்தாலும் எதிர்த்துப் போரிட்டு வெற்றி கொண்டு தன்னுடைய நாட்டை விரிவுபடுத்தி ஒப்பற்றஆட்சி நடத்தியவன் என்பதனை,

**"வையம்காவலர்வழிமொழிந்துஒழுகப்**
**போகம்வேண்டிப்பொதுச்சொல்பெறாஅது**
**இடம்சிறிதுஎன்னும்ஊக்கம்துரப்ப"** -7

என்று கபிலர் பாடுகிறார்.

இவ்வகைப் பாடல்கள் புறநானூற்றில் வஞ்சித்திணையில் அமைந்துள்ளன. அரசன் வஞ்சிப்பூவைத் தலையில் சூடிப் பகைவருடைய நிலத்தைக் கைகொள்ள போர் தொடுத்த செய்தியினைக் கூறுகின்றன.

**இகழ்தல்:-**

மாற்றரசர்கள் தன்னுடைய ஆற்றலை இகழ்ந்து கூறுவது கண்டு, அதனைப் பொறுக்காமல் போர்த்தொடுப்பது உண்டு. இதனைத் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியன்,

**"சிறுசொல்சொல்லியசினங்கெழு வேந்தரை**
**அருஞ்சமம்சிதையத்தாக்கிமுரசமொடு**
**ஒடுங்குஅகப்படேன்என்ஆயின்** "-8

என்று பாடலாலும்,

**"சோழன்நலங்கிள்ளி,**
**..............................இந்நிலத்து**
**ஆற்றல்உடையோர்ஆற்றல்போற்றாதுஎன்**
**உள்ளம்எள்ளியமடவோன்,தெள்ளிதின்**
**துஞ்சுபுலிஇடறியசீதடன்போல"** -9

என்ற பாடலால் இகழ்ந்தவர்கள் மீது போர்த்தொடுப்பது புலனாகிறது.

**தன்நிலை நிறுத்தல்** :-

அரசர்கள் தான் கொண்ட புகழை நிலைநிறுத்த வேண்டியும் போர்த்தொடுப்பர். இது புகழ் வேட்கையின் காரணமாக நடக்கும் போர். பாரி மன்னன் தன் புகழை நிலைநிறுத்த மூவேந்தர்களோடு போரிட்டான். இப்போர் மதில் காக்கப் போரிட்டதால் நொச்சித்திணை .மூவேந்தர்களையும் முன்னிறுத்திப் பாடியது.

**மகன்மறுத்தல்**:-

பெண் கேட்டு மறுத்தல் காரணமாகவும் போர் நிகழ்வதுண்டு. இக்காரணம் பற்றி பாடப்படும் பாடல்கள் மகற்பாற்காஞ்சித் துறையைச் சார்ந்தது. புறநானூற்றில் பதினெட்டுப் பாடல்கள் தொடர்ந்து காணப்படுகின்றன. பிறன் ஒருவனுடைய மகளிரைத் தனக்குத் திருமணம் செய்து கொடுக்குமாறு அரசன் ஒருவன் வற்புறுத்திய போது அம்மகளிரை உடையான் மறுத்த போது போர்நிகழும். பாரியின் மகளை வேண்டி மூவேந்தரும் பறம்பு மலைக்கோட்டையை முற்றுகையிட்டு அவனைக் கொன்று, பறம்புமலையைப் பாழ்ப்படுத்தி அப்பெண்களை அலையவிட்டனர்.

சங்ககாலத் தமிழகத்தின்நில அமைப்பும், தமிழர்களுக்கு இயற்கையிலேயே இருந்த போர்ப்பண்பும் போருக்குரிய பொதுவான காரணங்களாகும். புறநானூற்றின் வழி போர்க்குரிய காரணங்களை ஆராய்ந்தால், போர்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று அக்கால நிலவியற்கையும், அரசியல் சூழ்நிலையும். இரண்டாவது இகழ்தல், மகற்கொடை, மகன்மறுத்தல் என்பனவாகும்.

முதலாவது சமுதாயம் சார்ந்த போர் எனவும், இரண்டாவது தனிமனித விருப்பு சார்ந்தவை என்றும் கொள்ளலாம். இதுவே போருக்குரிய அடிப்படைக் காரணங்களாகும்.

**போர்அறம்**:-

வீரத்தின் வெளிப்பாடாகப் பண்டைய காலத்தில் போர்புரிந்தாலும் அற அடிப்படையிலான சில வரையறைகள் அக்காலத்திலும் இருந்திருக்கின்றன. ஒத்த வலிமை இல்லாதவனோடு போர் செய்தல் நெடுங்காலம் கோட்டையை அடைத்து வளைத்திருத்தல் ஆகிய செயல்கள் அறமாகக் கருதப்படவில்லை.போர் தொடங்குவதற்கு முன்னர் போர்ச்செய்தியினை முரசறைந்து அறிவிப்பர். ஆநிரை, பார்ப்பனர், பெண்டிர், பிணியுடையோர், மக்கட்பேறற்றோர் ஆகியோர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கப்பட்டது.

**“ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்**
**பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்**
**தென்புலவாழ்நர்க்கருங்கட னிறுக்கும்**
**பொன்போற்புதல்வர்ப்பெறாஅ தீரும்**
**எம்மம்புகடிவிடுதுநும்மரண்சேர்மினென**
**அறத்தாறு நுவலும் பூட்கை மறம் ”** -10

எனப் புறநானூற்றிலும்,

**“பார்ப்பா றவோர்பசுபத்தினிப் பெண்டிர்**
**மூத்தோர்குழவியெனு மிவரைக் கைவிட்டுத்**
**தீத்திறத்தோர்பக்கமேசேர்க ”** -11

எனச் சிலப்பதிகாரத்திலும் போர் அறம் பற்றிக் கூறியிருத்தலைக் காணலாம்.

மேற்குறிப்பிட்ட அனைவரும் பாதுகாக்கத்தக்கவர்களாகக் கருதப்பட்டனர். இவர்கள் போரில் இறந்துபடக் கூடாது என்று எண்ணியே போரின் முன்அறிவிப்பு செய்தனர்.

தொல்காப்பிய உரையாசிரியர் நச்சினார்க்கினியர் போர்முறையைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது“ கோழைகளையும், மயிர்குலைந்தோரையும், பெண்பெயர் கொண்டோரையும்,படைக் கருவிகளை கை நழுவவிட்டவரையும், ஒத்தப்படை எடாதோரையும் தமிழ்வீரர் கொல்லார் ” என்கிறார்.

வீரரல்லாதோர், புறமுதுகிடுவோர், போரில் புண்பட்டோர், வயோதிகர், இளையோர் இவர்கள் மீது படைத்தொடுத்தல்“ **படைமடம்** ”எனப்படும் என்று புறநானூறு கூறுகிறது. இதனை ஆசிரியர் பரணர்,

**“கடாஅ யானைககழற்கால்பேகன்**
**கொடைமடம்படுதல்அல்லது**
**படைமடம்படான் பிறர்படைமயக் குறினே** !” - 12

என்று குறிப்பிடுகின்றார்.

முக்காலப் போருக்கும், பிற்கால போருக்கும் வேற்றுமை உண்டு. ஓர் அரசனது படை மற்றோர் அரசனது படையைத் தாக்கி வீரம் விளைக்குமே அன்றி, குடிகள் எல்லோரையும் அழித்து நாட்டைக் காடாக்குகின்ற கொடுமை நிகழ்ந்ததில்லை. **“பகைவர் நாட்டின் மீது படையெடுக்கும் மன்னர், போருக்கு ஆற்றாதவரைப் போக்குவார்கள். முதியவர் மீதும் படைக்கலங்களைத் தொடுக்க மாட்டார்கள். பயன் தருகின்ற பசுக்களை வதைக்க மாட்டார்கள், என்று ரா.பா.சேதுப்பிள்ளை தன் நூலில் குறிப்பிடுகிறார்”** -13 இதிலிருந்து பண்டைய கால மன்னர்களின் போர் அறத்தினைப் பற்றி நன்கு தெரிந்து கொள்ளலாம்.

**முடிவுரை** :-

பண்டைய தமிழர்கள் வீரமுடனும், போர் பண்புடனும் வாழ்ந்தவர்கள். நாட்டை விரிவாக்கவும், நாட்டு மக்களைக் காத்திடவும் போர்தொழிலைக் கையாண்டனர். இருப்பினும், போர் முறையில் கட்டுப்பாடுடன் அறப்போர் புரிந்தவர்களாகவும் விளங்கினார்கள் என்பதை இக்கட்டுரையின் வாயிலாகக் காட்டப்பட்டுள்ளன.

**மூலநூல்கள் :-**

1. சிலப்பதிகாரம் : ந.மு.வேங்கடசாமி நாட்டார்(உரை). கழக வெளியீடு,.சென்னை நான்காம் பதிப்பு-1953
2. புறநானூறு : பழைய உரை. உ.வே.சாமிநாதய்யர் பதிப்பு, சென்னை. ஆறாம் பதிப்பு -1964
3. தொல்காப்பியம் : பொருளதிகாரம்,நச்சினார்க்கினியர் உரை, கழகம் சென்னை.இரண்டாம்பதிப்பு-1956

**துணைநூல்கள் :-**

1. ந.சுப்ரமணியன் : சங்ககால வாழ்வியல். நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட் சென்னை. முதல்பதிப்பு -1986
2. ரா.பி.சேதுப்பிள்ளை : தமிழ் விருந்து பழனியப்பா பிரதர்ஸ், திருச்சி.ஏழாம்பதிப்பு-1958

**சான்றாதாரங்கள் :-**

1. புறநானூறு பாடல் -122 : 5, 6
2. ந.சுப்பிரமணியன் : சங்கால வாழ்வியல் பக்கம்-44
3. புறநானூறுபாடல் - 77 : 1-5
4. மேலது பாடல்- 89 : 7-9
5. மேலது பாடல்- 278 : 3-9
6. தொல்காப்பியம்பொருள் : நூற்பா 64
7. புறநானூறுபாடல் - 8 : 1-3
8. மேலது பாடல்- 72 : 7-9
9. மேலது பாடல்- 73 : 5-7
10. மேலது பாடல்- 9 : 1-6
11. சிலப்பதிகாரம், மதுரைக்காண்டம், வஞ்சினமாலை 53 - 55
12. புறநானூறுபாடல் - 142 : 4-6
13. ரா.பி. சேதுப்பிள்ளைதமிழ் விருந்து பக்கம் -10,11

# 12. பழந்தமிழரின் சைவ சமய மரபுகள்

**திருமதி க கற்பகவல்லி,**
பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வாளர்,
முதுகலை மற்றும் ஆய்வுத்துறை,
எஸ் எஃப் ஆர் மகளிர் கல்லூரி (தன்னாட்சி),
சிவகாசி.
மின்னஞ்சல் :karpagamurugan 02@gmail.Com
அலைபேசி எண் :962960659

**முனைவர் மா.பத்மபிரியா,**
ஆய்வு நெறியாளர்,இணைப்பேராசிரியர்,
முதுகலை மற்றும் தமிழ்ஆய்வுத்துறை,
எஸ்.எஃப்.ஆர்.மகளிர் கல்லூரி(தன்னாட்சி),
சிவகாசி.

DOI 10.5281/zenodo.15066857.

Abstract:

The life thoughts of the ancient Tamils can be known through ancient traditions, customs and cultures. Today's human life has become a mechanical neo-civilized life. It is a fact that in such a technological life, man does not take time to take care of himself. Therefore, since the structure of the Saiva tradition will provide an opportunity for today's generation to learn the behavioral methods for living with morality by highlighting it, the main purpose of this article is to record the ideas of the Saiva tradition, which includes thoughts such as the history of the emergence of Saiva religion, nature as God, the subjugation of the five senses, the tradition of maintaining the body, the meaning of birth, the rules of life shown by Thirumoolar, and the elimination of desire.

**Keywords:** Saivam, Shiva Symbol, Love is Shiva.

## முன்னுரை:

பன்னெடுங்காலமாக நிலைத்து நிற்கும் பேராற்றல் கொண்டவை சைவ சமய இலக்கியங்கள். இவ்விலக்கியங்கள் வாயிலாக பழந்தமிழரின் வாழ்வியல் சிந்தனைகள் மரபுகள் பழக்க வழக்கங்கள் பண்பாடுகள் பற்றி நன்கு அறிய இயலும். சிவபெருமானை முழுமுதற்பொருளாகக் கொண்ட சைவமரபு வாழ்வியல் சார்ந்த கருத்துக்கள் பெரும்பாலும் பக்தி மூலமாகவே வலியுறுத்துகின்றது. நாயன்மார்களின் பக்திப் பதிகங்களில் இயற்கையே இறைவனாக காட்சிப்படுத்தப்பட்டுள்ளார். ஞானம், பேரின்பம் போன்ற நிலை பெறுவதற்கு யோகம் மூலமான செயல்முறைப் பயிற்சிகளை திருமூலர் கூறுகின்றார். உயிர்களின் மீதான அன்பு செலுத்தும் நடத்தைமுறை கூறப்பட்டுள்ளது.ஆசைகளை விட்டொழிக்க வற்புறுத்தப்பட்டுள்ளது. இத்தகைய சைவ மரபினை இக்கட்டுரை ஆராய்கிறது.

## சைவம் - பொருள் விளக்கம்

இறை நம்பிக்கை, மறை நம்பிக்கை, சடங்கு சம்பிரதாயங்கள், பண்பாட்டுக்கூறுகள் இன்ன பிறவற்றின் மொத்த வடிவமே சமயம் எனலாம்.சமயம் என்பது சமைதல் என்ற சொல்லடியாகத் தோன்றியது. சமைதல் என்பது பதமாகுதல், நுகருதற்கேற்ற நிலையை அடைதல், அணியமாதல் (ஆயத்தமாதல்) என்று "மனிதன் கடவுள் நிலையை அடைவதற்கான கோட்பாடுகளை நம் கைபிடித்து அழைத்துச் சென்று தெளிவுபடுத்தும் ஒரு வழிகாட்டி!

வையகத்தில் வாழ்கிறவன், விலங்குகளைப்போல வாழாமல், வாழவேண்டிய வழிமுறைகளில் வாழ்ந்தால் தெய்வமாகவே மதிக்கப்படுவான் என்பது வள்ளுவன் வாக்கு.

இதன்படி வாழ வேண்டிய வழிமுறைகளை வகைதொகைப்படுத்திக் கொடுப்பதே சமயம் ஆகும்.சமை > சமையம் > சமயம் = மனிதனின் ஆன்மா இறைவனை அடையத் தகுதியாகும் ஒழுக்கம் அல்லது நெறி."[1] இத்தகைய சமயம் பற்றிய வரலாறு அறிஞர்களால் விளக்கப்பட்டுள்ளன. "உலகத்திலே பல சமயங்கள் உள்ளன. அவற்றுள், ஈழத்தில் வழங்கும் சமயங்கள் நான்கு. அவை சைவம், பௌத்தம், இஸ்லாம், கிறீஸ்தவம் என்பன. இவற்றுள்,பௌத்த சமயம் 2518 வருடங்களுக்கு முன் கௌதமபுத்தராலும், இஸ்லாம் சமயம் 1394 வருடங்களுக்கு முன் முகமது நபியாலும், கிறிஸ்து சமயம் 1975 வருடங்களுக்கு முன் கிறிஸ்துவினாலும் தோற்றுவிக்கப்பட்டன. இவ்வாறு ஒருவராலே தோற்றுவிக்கப்பட்ட சமயத்துக்கு மாத்திரம் தொடக்க காலம் கூறலாம். சைவ சமயத்துக்குத் தொடக்க காலம் கூறுவதானால், அது யாரோ ஒருவரால் ஏதோ ஒரு காலத்திலே தோற்றுவிக்கப்பட் டிருத்தல் வேண்டும். அங்ஙனம் அது எவராலேனும் எக்காலத்திலேனும் தோற்றுவிக்கப்படாமையால், அதற்குத் தொடக்ககாலம் இல்லையாம்."[2] கொழும்பு விவேகாநந்த சபையார் சைவ சமயம் பற்றிக் கூறுகையில் சைவசமயத்திற்கு தொடக்க காலம் கூறஇயலாது என்றே சுட்டியுள்ளனர். "சிவபெருமான் என்றும் உள்ளவர். உயிர்களும் என்றும் உள்ளவை, என்றும் உள்ள சிவபெருமானை என்றும் உள்ள உயிர்கள் அடைந்து, பேரின்பம் அனுபவிப்பதற்கான வழியும் என்றும் உள்ளது. அந்த வழி சமயம். அதுதான் சிவ சமயம்-சிவத்தை அடைவிக்கும் சமயம் சைவ சமயம். ஆதலால்,சைவ சமயம் என்றும் உள்ளது; அநாதியானது; எவராலும் தோற்றுவிக்கப்படாதது என்பது தெளிவாம்."[3] என்று தம் கருத்தை நிலைநிறுத்தியுள்ளனர்.

**சைவ சமயச் சின்னங்கள்**

சிவ வழிபாட்டில் சிறப்பிடம் பெறுவன சிவச்சின்னங்களாகும். இவற்றைச் சாதனங்கள் என்றும் குறிப்பிடுவர். "சிவச்சின்னங்களில் முதன்மை பெறுவது உருத்திராக்கம் ஆகும். உருத்திராக்கம் என்பது உருத்திரனது கண் எனப் பொருள்படும்.திரிபுரத்தை எரித்த பொழுது சிவபிரானது மூன்று கண்களிலிருந்துசிந்திய மணியை உருத்திராக்கம் என்று கூறுவது முண்டு. எனவே இறைவனுடைய கருணையை நினைவூட்டும் சாதனமாக உருத்திராக்கத்தைக் கொள்வதுமுண்டு. சைவர்கள் இத்திருச்சின்னத்தை அணிந்தால்தான் சைவராகக் கருதப்படுவர்."[4]

**சிவ சின்னங்கள் இருவகைப்படுகின்றன.**

1. **அக சிவசின்னங்கள்**
2. **புற சிவசின்னங்கள்**

அக சிவசின்னம் என்பது திருவைந்தெழுத்தாகும்.புறம் என்றால் வெளியே என்று பொருளாகும். எனவே உடலில் அணியக்கூடிய சிவ சின்னங்களை புற சிவசின்னங்கள் என்பர். "சிவச்சின்னங்களில் அடுத்ததாகிய திருநீறு என்பது குற்றமற்ற பசுவின் சாணத்தை நெருப்பினால் சுடுவதால் உண்டாகும் நீறாகும்(சாம்பல்). இத்திருநீற்றை அணிவது சைவர்களின் கடமையாகும்.சாணம் ஆன்மாவையும், சாணத்திலுள்ள அழுக்குகள் மலங்களையும்,சாணத்தை எரிக்கின்ற நெருப்புத் திருவருளையும், எரித்தபின்கிடைக்கும் திருநீறு மலம் நீக்கப் பெற்ற ஆன்மாவையும் குறிக்கும்என்பர். சாதாரணமாகத் திருநீறை அணிந்தால் அதற்கு அணிதல் என்று பெயர். நீரில் குழைத்து அணிந்தால் உபதேசம் பெற்றுஅணிதல் என்று பொருள்படும். இவ்வாறு உபதேசம் பெற்றுஅணிகின்ற திருநீற்றை மனித உறுப்புக்களின் இன்னின்ன இடத்தில்அணிய வேண்டும் என்ற விதிமுறைகள் உண்டு. இவற்றைச்சாத்திரங்களும் தோத்திரங்களும் கூறுகின்றன."[5] பக்தி வாயிலாக மனிதனுக்கு

வாழ்வியல் அறம் சுட்டும் சமயமாக சைவசமயம் உள்ளதுடன் தொன்மையான சமயமாகவும் விளங்குகின்றது. "பழங்காலம் தொட்டு இன்றுவரை உயிரோட்டமான நம்பிக்கையாக வரலாற்றுக்கு முற்பட்ட சமயம் எனும் சிறப்பினை உடையதாக திகழ்வது சைவ சமயம். "அமெரிக்காவின் இயற்கை வரலாற்று அருங்காட்சியகத்தின் விஞ்ஞானிகள் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சிவனின் பெருங்கோயிலை குளோரிடா மாவட்டத்தில் கண்டுபிடித்து உலகுக்கு தெரிவித்தமை" சிவ வழிபாட்டின் பழமையைத் தெரிவிக்கிறது."[6] சைவசமயத்தின் தொன்மையைச் சுட்டும் விதமாக சிவபெருமானை ஆதியும் அந்தமும் இல்லாத அநாதி என்றே அழைக்கின்றனர்.

**இயற்கையே இறைவன்:**

சைவநெறியில் இயற்கையே நமது இறைவன் என்ற சிந்தனையை திருநாவுக்கரசரின் பாடல் கருத்துக்களில் காண இயலும். அதாவது மனிதன் தனது மனதில் எதை நினைக்கிறானோ அதுவாகவே அனைத்தும் காட்சியளிக்கும் என்பதை நாவுக்கரசரின் பாடல் வாயிலாக அறிய இயலும்.இயற்கையை விரும்பும் ஒருவன் தான் பார்க்கக்கூடிய அனைத்திலும் இறைவன் இருப்பதாகவே உணர்கிறான். எப்போதும் இறைவனைப் பற்றிய சிந்தனை உடையவராய் விளங்கிய திருநாவுக்கரசர் தான் காணக்கூடிய அனைத்து பொருள்களிலும் இறைவன் காட்சி அளிப்பதாக அவர்களுக்கு கூறியுள்ளார்.

**"மாசில் வீணையும்**
**மாலை மதியமும்**
**வீசு தென்றலும்**
**வீங்கிள வேனிலும்**
**மூசு வண்டறை**
**பொய்கையும் போன்றதே**
**ஈசன் எந்தை**
**இணையடி நீழலே."** [7]

இப்பாடலில் இயற்கையாக இறைகருணை வியந்துரைக்கப்பட்டுள்ளது. இறைவனின் பாதம் தரும் நிழலானது, மாலை,மதி,தென்றல்,பொய்கை என்று இயற்கை கூறுகளின் தன்மையாகப் போற்றப்பட்டுள்ளது.

**திருமூலரின் வாழ்வியல் மரபுகள்**

இன்றைய மனித வாழ்க்கை என்பது இயந்திரத்தனமான நவநாகரிக வாழ்க்கையாக மாறியுள்ளது. இத்தகைய வாழ்க்கையில் மனிதன் தன்னை பேணுவதற்கு நேரம் ஒதுக்குவது இல்லை என்பது தான் நிதர்சனமான உண்மை . அதிலும் குறிப்பாக தனது உடல்நலம் என்பது அவர்களது நினைவில் இல்லை என்று தான் கூற வேண்டும்.

**உடலைப் பேணும் மரபு:**

நம் உடலில் பஞ்சபூதங்களும் அடக்கம் என்பதை சைவ இலக்கியங்கள் பிரதிபலிக்கின்றன. நம் உடலின் மூல ஆதாரமே நீர் உடலை பேணும் நல்லொழுக்கத்தை திருமூல தமது திருமந்திரத்தில் சுட்டிக்காட்டியுள்ளார்.

**"உள்ளம் பெருங்கோயில் உன் உடம்பு ஆலயம்**
**வள்ளற் பிரானார்க்கு வாய்க்கோ புரவாசல்**
**தெள்ளத்தெளிந்தார்க்குச் சீவனே சிவலிங்கம்**
**கள்ளப் புலன்ஐந்தும் காளா மணிவிளக்கே "** [9]

கண்களை மூடி மனதை ஒருமுகப்படுத்தி உள்ளத்தில் சிவனை நினைத்தால் உள்ளப் பெருங்கோயிலில் சிவன் காட்சியளிப்பார் என்று கூறியுள்ளார்.

நாம் வாழும் வாழ்க்கை நிறைவான நிலையான வாழ்க்கையாக மாற வேண்டுமானால் அதற்கு நிலையில்லாத இவ்வுடம்பு நிலையாக இருக்கும் போது அற செயல்களை செய்து உடம்பை நாம் பேணி பாதுகாக்க வேண்டும் என்ற சிந்தனையை திருமூலரது திருமந்திரப் பாடல் வாயிலாக அறிய இயலும்.

**"உடம்பார் அழியின் உயிரார் அழிவர்**
**திடம்பட மெய்ஞானம் சேரவும் மாட்டார்**
**உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்து**
**உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே "** 10

என்ற பாடல் வரியில் உடம்பு அழிந்து விட்டால் உயிர் என்பது அழிந்து விடும் . ஆகவே நிலையில்லாத உடம்பு நிலையாக இருக்கும் போது நற்செயல்கள் செய்து உடலை பேணி பாதுகாக்க வேண்டும் என்று கூறியுள்ளார்.

**அன்பே சிவம்:**

திருமூலரது திருமந்திரத்தில் தனிமனித ஒழுக்கம் பல இடங்களில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. அதாவது உடல்நலம், மனநலம், இறைநலம், சமூகநலம் போன்ற கருத்துக்களை மிகச் சிறப்பாக எடுத்துக் காட்டியுள்ளார். திருமந்திரத்தில் அன்பு, கருணை, இரக்கம், உதவி பிறர் துன்பம் கண்டு இறங்குதல், அனைத்து உயிர்களையும் தன் உயிர் போல் மதித்தல் போன்ற பண்புகளின் வழி எப்படி வாழ வேண்டும், எப்படி வாழக்கூடாது, எதை செய்ய வேண்டும், எதை செய்யக்கூடாது என்பனவற்றை சுட்டிக்காட்டி உள்ளார்.

அனைத்து உயிர்களிடத்திலும் அன்பாக இருக்க வேண்டும் அன்பாக இருந்தால் இறைவன் நமக்கு காட்சியளிப்பான் அந்த அன்பை இறைவனாக அனைவருக்கும் காட்சியளிக்கும் என்பதை

**"அன்பு சிவம் இரண்டு என்பார் அறிவிலார்**
**அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்**
**அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்**
**அன்பே சிவமாக அமர்ந்திருந்தாரே "** 11

என்று கூறுகிறார் . தன்னலமற்ற அன்போடு பிறருக்கு உதவும் மனப்பக்குவம் பெற்றால் அவர்களை இறைநிலையை அடைவார் என்பதை சுட்டிக்காட்டி உள்ளார்.

**ஆசை நீக்குதல்:**

உலகில் வாழும் மக்கள் சின்ன சின்ன விருப்பத்திற்கு தன்னை முழுவதுமாக அர்ப்பணித்து விடுகின்றனர். சிற்றின்ப ஆசையில் ஈடுபட்டு பல தவறுகளை செய்யக் கூடிய நிலைக்கு தள்ளப்படுகின்றன. இந்த ஆசையை நீக்க வேண்டும் என்பதை திருமூலர் தனது பாடலில் சுட்டிக்காட்டி உள்ளார்.

**"ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்**
**ஈசனோடு ஆயினும் ஆசை அறுமின்கள்**
**ஆசைப் படப்பட ஆய்வருந் துன்பங்கள்**
**ஆசை விட ஆனந்த மாமே "** 12

என்ற பாடல் வரியில் மக்கள் அனைவரும் ஆசையை விடுத்து துன்பம் என்ற துயரத்தில் உழலாமல் விலக முடியும் என்று கூறியுள்ளார். மனிதர்கள் சிற்றின்ப ஆசைக்கு

அடிபணிந்து விடாமல் இறை நம்பிக்கையில் முழுமையாக தன்னை ஈடுபடுத்தி பேரின்ப வீடுபேறு அடைய வேண்டும் என்று கூறியுள்ளார்.

**முடிவுரை :**

மனித வாழ்வில் நற்பண்புகளால் மட்டுமே இன்பம் நிறைவாய் கிடைக்கும். அத்தகைய நிறைவான வாழ்வு வாழ வழிகாட்டியாய் அமைவன சைவ சமய இலக்கியங்கள் என்று கூறலாம். சைவத்திருமுறைகளில் நாயன்மார்கள் வழங்கிய கருத்துக்கள் தனி மனித வாழ்வில் உடல் நலம் பேணுதல், மனநலத்திற்குரிய செயல்களில் ஈடுபடுதல், பிறவியின் பயனாய் விளங்கும் இறைவனின் வீடு வேறு நிலையை பூரணமாய் பெறுதல், நற்செயல்கள், சிந்தனைகள், பழக்கவழக்கங்கள் மூலமாக நல்வாழ்வு வாழ வகுத்துக்காட்டியுள்ளனர். வளரும் இளம் தலைமுறையினர் படிக்கும் போதே சைவ மரபு வகுத்துக் கொடுத்த வாழ்வியல் கருத்துக்களைப் படித்து தங்களது சிற்றின்ப ஆசையை விடுத்து பேரின்ப வாழ்விற்கான முன்னேற்பாடுகளை செய்ய வேண்டுவன எனலாம்.

**குறிப்புகள்**

1. இரவிசிவன், கல்கி, சமயம், சமையல், சமைதல் மூன்றுக்கும் என்ன தொடர்பு? Publishedon: 06 Mar 2024, https:// kalkionline.com/ magazines/kalki/samayam-samaiyal-samaithal-moonrukkum-eṉṉa-thodarpu
2. கொழும்பு விவேகாநந்த சபையார், சைவ சமயம்,கொழும்பு விவேகாநந்த சபை வெளியீடு,கொழும்பு,முதலாம் பதிப்பு 1973,ப.1
3. மேலது,
4. முனைவர் பழ.முத்தப்பன்,சைவம்-சமயமும் தத்துவமும், https://www.tamilvu.org/ta/courses-diploma-p202-p2021-html-p2021406-47583
5. மேலது,
6. கொழும்பு விவேகாநந்த சபையார், சைவ சமயம்,கொழும்பு விவேகாநந்த சபை வெளியீடு,கொழும்பு,முதலாம் பதிப்பு 1973,ப.34
7. திருநாவுக்கரசர் தேவாரப் பாடல்கள்,ஐந்தாம் திருமுறை , பொதுபதிகம் பாடல்.1
8. பி.தட்சணாமூர்த்தி, சுந்தரரின் இறைநெறிக்கோட்பாடு,ப.52
9. திருமந்திரம்,பாடல்.1823
10. திருமந்திரம்,பாடல்.724
11. திருமந்திரம்,பாடல்.270
12. திருமந்திரம்,பாடல்.6

# 13. தமிழ் இலக்கியமும் நடுகல் வழிபாட்டு வரலாறும்

**முனைவர் மு.ஜீனதாஸ்,**
உதவிப்பேராசிரியர், வரலாற்றுத்துறை,
விருதுநகர் இந்து நாடார்களுக்குப் பாத்தியப்பட்ட
செந்த்திக்குமார நாடார் கல்லூரி(தன்னாட்சி), விருதுநகர்.
அலைபேசி எண் : 98431-87526
DOI 10.5281/zenodo.15066860.

**Abstract:**

Just as the era of heroism is referred to in Greece, the era of heroism can also be referred to in Tamil as the era of heroism. During that period, society praised and glorified warriors. The Tamils, who considered death in battle to be a 'worthy act', lived their lives in oblivion. They erected nadugalas and worshipped those who died heroically on the battlefield. They praised and glorified nadugalas worship more than religious thought and worship. We know this through the literature of the Sangam period and through the writings engraved on nadugalas. Archaeological evidence is continuously being found that nadugalas or veerakalas existed not only in Tamil Nadu but also in the whole of India. Among these two types, this article aims to reveal the history of nadugalas worship, which is revered in the Tamil land, through Tamil literature.:

Key Words: **Sangam Literature - Nadukal Worship - Mythology**

### முன்னுரை :

நடுகல் போரில் அல்லது இனக்குழுவினைக் காப்பதற்காக நடந்த சண்டையில் இறந்தவர்களின் நினைவாக எடுக்கப்படும் நினைவுக்கல் ஆகும். இவற்றை "வீரக் கற்கள்" என்றும் கூறுவர். நினைவுக் கற்கள் எடுக்கும் வழக்கம் ஒரு குறிப்பிட்ட காலப்பகுதிக்கோ அல்லது ஒரு பிரதேசத்துக்கோ அல்லது தனிப்பட்ட பண்பாட்டைச் சேர்ந்தவர்களுக்கோ உரிய வழக்கம் இல்லை என்று அறிஞர் பலர் விளக்கம் கொடுத்துள்ளனர். உலகின் பல பகுதிகளிலும் பெருங்கற்காலம் முதலே இவ்வழக்கம் இருந்து வந்துள்ளது. இந்தியாவிலும் வடக்கு, தெற்கு என்ற பேதமின்றி நெடுங்காலமாகவே நடுகற்கள் எடுக்கப்பட்டு வந்துள்ளன. இறந்தவர் எவருக்குமே நடுகற்கள் எடுக்கப்படலாமாயினும், வீரமரணம் அடைந்தவர்களுடைய நடுகற்களுக்கே பெருமதிப்பு கொடுக் கப்பட்டு வந்தது. வீரர்களுக்காக எடுக்கப்படும் நினைவுக் கற்களை மக்கள் வணங்கி வந்தமை பற்றியும் பண்டைக்கால இலக்கியங்களில் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளன. சங்க இலக்கியக் காலத்தில் போற்றப்பட்ட நடுகல் வழிபாட்டையும் அதன்வழிப்பட்ட வாழ்வியல் அறக்கூறுகளையும் தமிழறிஞர்கள் தொடர்ந்து போற்றியும் புகழ்ந்தும் எடுத்துரைத்தும் வந்துள்ளனர். இந்த நிலையில் தமிழ் இலக்கியங்களில் நெடுங்காலம் தொழிற்படும் நடுகல் வழிபாட்டு வரலாற்றை எடுத்தியம்பும் வண்ணம் இக்கட்டுரை அமைகின்றது.

### இந்தியாவில் நடுகற்கள்

இந்தியாவில் நடுகற்கள் அல்லது வீரக்கற்கள் வடக்கே இமாச்சலப் பிரதேசம் தொடங்கி தெற்கில் தமிழ்நாடு வரையிலும் காணப்படுகின்றன. வடக்கில் இமாச்சலப் பிரதேசம், குசராத், மகாராட்டிரம் ஆகிய மாநிலங்கள் உட்பட்ட பல இடங்களில் இவை உள்ளன. தென்னிந்தியாவிலும் ஆந்திரா, கர்நாடகம், தமிழ்நாடு, கேரளா ஆகிய நான்கு

மாநிலங்களிலும் பழங்கால நடுகற்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. 2008-ஆம் ஆண்டில் முனைவர் கேசவராஜ் எழுதிய நூலில், தென்னிந்தியாவில் கருநாடக மாநிலத்திலேயே அதிக அளவாக 397 நடுகற்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன என்று குறிப்பிடுகின்றார். தமிழ்நாட்டில் 202 கற்களும், ஆந்திராவில் 126 கற்களும், கேரளாவில் ஒரு கல்லும் அறியப்பட்டுள்ளன.

**தமிழ்நாட்டில் நடுகற்கள்:**

தமிழ்நாட்டில் நடுகல் எடுக்கும் வழக்கம் மிகப் பழங்காலம் முதலே இருந்துள்ளமை, தொல்லியல் ஆய்வுகள் மூலம் தெரியவந்துள்ளது. இது தவிர சங்கப் பாடல்களிலும், பின்னர் எழுதப்பட்ட நூல்களிலும் நடுகற்கள் பற்றிய தகவல்கள் உள்ளன. செங்கம், தருமபுரி, தேன்கனிக்கோட்டை ஆகியவற்றை அண்டிய பகுதிகளிலேயே பெருமளவில் நடுகற்கள் காணப்படுகின்றன. இப்பகுதிகளில் ஆட்சி செய்த அதியமான் போன்ற அரசர்கள் காலத்தில் நடுகற்கள் எழுப்பப்பட்டு உள்ளது தெரிகின்றது. தமிழ் நாட்டில் சேரன், சோழன், பாண்டியன் காலத்திலும் நடுகற்கள் எடுக்கப்பட்டுள்ளன. தமிழகத்தில் வீரமரணம் அடைந்த மனிதர்களுக்கு மட்டுமல்லாமல், போர்ச் சேவலுக்கு அந்த சேவலின் உருவம் பொறிக்கப்பட்ட நடுகல் அமைக்கப்பட்டுள்ளது.

**இலக்கண நூல்களில் நடுகல்:**

தொல்காப்பியர் ஐந்திணை அடிப்படையில் தெய்வங்களைக் கட்டினாலும் நடுகல் வீரனையும் கூறிச் செல்கிறார். சங்கப்புலவருள் ஒருவர், நடுகல் வழிபாட்டிலும் சிறந்த வழிபாடு இல்லை என்கிறார்.(புறம்335) ஆநிரைப்போர் குறித்தும் நடுகல் வழிபாடு குறித்தும் சங்கப்பாக்களில் பெரிதும் காண்கிறோம்.

பல்லவர் காலத்தில் வட்டெழுத்தில் கல்வெட்டுகளும் புடைப்புச் சிற்பங்களும் கொண்டு நடுகற்கள் ஏற்படுத்தப்பட்டன. சங்ககால நூல்கள் தொடககம் குறித்த கால வரைறை செய்வது சிரமமாகும். தொல்காப்பியர், தமிழ் எழுத்துகள் தொடர்பாகக் கூறும் கருத்துகள் தமிழ் பிராமியைக் காட்டிலும் வட்டெழுத்திற்கே குறிப்பாக நடுகற்களில் இடம் பெற்ற வட்டெழுத்துகளுக்கே பொருந்தி வருகின்றன. ஆநிரைக் களவும் ஆநிரை மீட்பும் தொல்காப்பியத்தில் கூறப்படுவது போன்றே பெரும்பாலும் பல்லவர் கால நடுகற்களில் உள்ளன.

சிலப்பதிகாரத்தில் நவகண்டம் இடம் பெறுவதுடன் பக்தி வழிபாடும் இடம் பெறுகிறது. மணிமேகலையிலும் பத்தினி வழிபாடு பேசப்படுகிறது. நாயன்மார்களும் ஆழ்வார்களும் முறையே சிவ வழிபாட்டையும் திருமால் வழிபாட்டையும் நாடெங்கும் பரப்பினர். பொதுவாக, நடுகல் வழிபாட்டை இவர்கள் ஆதரிக்கவில்லை. சேரமான் பெருமாள் நாயனார் மட்டும் நடுகல் வழிபாட்டைக் குறிபிட்டுள்ளார். அதாவது

**"பட்டோர் பெயரும் ஆற்றலும் எழுதி நட்ட கல்லும்"**

என்று குறிப்பிடுகிறார். திருவண்ணாமலை அருணாசலேச்சுரர் கோயிலில் உள்ள சாசனப் பாடல் நடுகல்லைக் குறிப்பிடுகிறது.

**பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்:**

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றான திருக்குறளில் போர் வீரன் நடுகல்லாக மாறிய விதம் ஒரு குறளில் (771) உள்ளது. ஐந்திணை எழுபதில் ஒரு பாடலும் ஐந்திணை ஐம்பதில் ஒரு பாடலும் நடுகல் வழிபாட்டைக் குறிப்பிடும்.

**"நடுகல் விரிநிழல் கண்படுக்கும் வெங்கானம் என்பர்"**

வீரர்களும் நாட்டுத் தெய்வங்களும்:

"கொல்லேற்றுக் கோடு அஞ்சுவானை மறுமையும்
புல்லாளே ஆய மகள்"

என்ற நிலையில், வீரர்களைத் தமிழ்ப் பெண்கள் விரும்பி வீரமில்லாதவர்களை வெறுத்தனர். கொல்லேறு தழுவுதல் என்று காளையை அடக்குதல், புலி முதலிய விலங்குகளைக் கொல்லுதல் போரில் வீரர்களை – யானைகளைக் கொல்லுதல் போரில் வீரர்களை- யானை- - குதிரைகளை அடக்குதல் யாவும் வீரச் செயல்களாகக் கருதப்பட்டன. வீரமரணம் எய்தியவருக்கு நடுகல் உருவாக்கி வழிபடும் மரபு உருவாயிற்று. மதுரை வீரன் , நொண்டிக் காடன் , சப்பாணி, அண்ணன்மார், பட்டவன் போன்ற நாட்டுப்புறத் தெய்வங்கள் வீரர்களாக இறந்தவர்கள் பின்பு நடுகற்களாகி நாட்டுப்புறத் தெய்வங்களாக மாறினார்கள்.

**"வையத்துள் வாழ்வாங்கு வாழ்வர் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்"**

என்ற திருக்குறளில் வரும் ஆடவர் நடுகல் வீரருடன் ஓரளவு ஒப்பிடத்தக்கவர். கணவன் இறந்தபிறகு தீப்பாய்ந்த பெண்ணும் நடுகல் தெய்வமானாள்,

முதுமக்கள் தாழி:

பெரிய பானைக்குள் இருந்து தவம் செய்;பவர்கள் மண்ணோடு மண்ணாகப் போகிறார்கள். அப்படியின்றி மலையில் நீ நின்றபடியே செய்த தவம் பெரிது. வீரனின் புகழைப் பொறிக்க உன்னிடம் ஒரு கல்லைக் கண்டேன் என்ற பொருளில்

"தாழி கவிப்பத் தவம்செய்வோர் மண்ணாக வாழிய"

என்ற பாடலைப் புறப்பொருள் வெண்பாமாலையில் காணலாம்.

கல்லைத் தூய்மை செய்வதற்காகப் புனித நீர்நிலையில் போட்டு வைப்பர். இதை நீர்ப்படை என்பர். பிறகு கல்லை உரிய இடத்தில் நட்டு, பெயர் முதலிவற்றைப் பொறிப்பர்.

சங்க காலத்தில் வீரர்களும் நடுகல்லாகி உள்ளார்கள். அதியமான் நெடுமான் அஞ்சி கிள்ளிவளவன் போன்ற மன்னர்களும் நடுகல் ஆகி உள்ளார்கள். ஆநிரைப் போற்றும் மறித்தொறுப் போர்களில் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனும் திருமுடிக்காரியும் பங்கு கொண்டுள்ளனர். போர் வீரர்களும் தொறுப்பூசல்களில் ஈடுபட்டுள்ளார்கள்.

நடுகற்களின் எண்ணிக்கையும் வகைப்பாடும்:

பெண்ணையாறு, பாலாறு, சேயாறு ஒட்டிய பகுதிகளில் அதாவது கிருஷ்ணகிரி, தருமபுரி, திருவண்ணாமலை, வேலூர், விழுப்புரம் ஆகிய மாவட்டங்களில் ஏறக்குறைய 80 விழுக்காடு நடுகற்கள் கண்டறியப்பட்டு ஆய்வு செய்யப்பட்டன. ஆந்திரப்பிரதேசம், கருநாடக மாநில எல்லைப்புறங்களில் மிகுதியான நடுகற்கள் கண்டுபிடிக்கப்பட்டன.

தமிழக நடுகற்கள் சுடுகாடுகளையொட்டி அதாவது பெருங்கல் சின்னங்களுக்கிடையே பெரும்பாலும் நீர்நிலைகளையடுத்து உள்ளன. தருமபுரியிலிருந்து பிரிந்த கிருஷ்ணகிரி மாவட்டத்தில் ஓசூர் அருகே நளகொண்டபாளையம் என்ற ஊரில் பல்வேறு ஊர்களில் இருந்து கொண்டுவந்து வைத்துள்ள ஐம்பத்திரண்டு நடுகல் சிற்பங்கள் பலருடைய கவனத்தைக் கவர்ந்துள்ளன. தருமபுரி, வேலூர் ஆகிய அருங்காட்சியகங்களில் பல ஊர்களில் இருந்து

சேகரிக்கப்பட்ட தொன்மையான நடுகற்கள் வெவ்வேறு தன்மை கொண்ட நடுகற்கள் மக்களைக் கவருகின்றன.

தமிழகத்தில் கி.பி.5-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.9-ஆம் நூற்றாண்டு வரை வட்டெழுத்தில் நடுகற்கள் இருப்பினும் பின்னர் தமிழ் எழுத்துகளிலேயே வெட்டப்பட்டுள்ளன.

**நடுகல் எடுக்கும் முறைகள்:**

தொல்காப்பியம் கூறும் ஆறு கூறுகளை ஆராய்ந்தால், அதில் நடுகல் எடுக்கும் முறை குறித்து வருவதை உணரலாம்.

1. (காட்சி) இறந்த வீரனுக்கு நடுகல் எடுக்க விரும்புவோர், நல்ல வகையான கல்லைத் தேடி செல்வர்.
2. (கால்கோள்) கல்லைத்தேடி தேர்ந்தெடுத்தவுடன், மாலையிட்டு, மது படைத்து, அக்கல்லை கொண்டு வருதல். கல்லைக் கொண்டுவரும்பொழுது பறையிசை ஒலிக்க அதை எடுத்து வருதல்.
3. (நீர்ப்படை) கல்லை கொண்டுவந்த பின், அதனை நீர்நிலைப் பகுதியில் கிடத்தி அக்கல்லை முதலில் குளிர்வித்தல், கல்லின் வெம்மை தணிந்தபின், அக்கல்லில் இறந்தவரின் பெயர், குலம், என்ன காரணமாக இறந்தார் என்பதை எழுத்தாக வெட்டுதல்.
4. (நடுதல்) கல்லை வடிவுபடுத்தி, எழுத்து பொறித்தபின் செம்மறியாடு பலியிட்டு, மலரும் மயிற்பீலியும் அலங்கரிக்க அக்கல்லை நடுதல். பின்பு மது படையல் இடுதல்.
5. (பெரும்படை) நட்டக்கல்லிற்குக் கூரை அமைத்து வழிபடுதல்.
6. .(வாழ்தல்)இறந்தவர் வழியினரும், நட்டவரும் நடுகல்லை வணங்குதல். அந்தக் கூரையே பின்னர் கோயிலாக மாறுதல்.

சங்க இலக்கிய நூல்கள் பலவும் நடுகல் வழிபாட்டின் சிறப்பை எடுத்து இயம்புகின்றன. பெருங்கற்காலச் சின்னங்கள் பலவற்றிலும் நடுகல் பற்றிய தகவல்கள் காணப்படுகின்றன!

**நடுகல் தெய்வம்**

வழிபாடு செய்பவர்கள் கோயிலும் மதிலும் ஏனைய சிறப்புகளும் படைப்பார்கள். இப்படி அமைந்த வீரக்கற்களை வழிப்போவோர் கும்பிட்டுச் செல்வர். வள்ளலைநாடி நிறையவே ;பரிசில் பெற்று வந்த ஒரு புலவன் பரிசில் பெறச் செல்லும் புலவனிடம் உன்னுடைய துன்பம் மிகுந்த சுற்றத்தோடு அந்த நடுகல் வீரனுடைய புகழைப் பாடிப் பிறகுக்கு நிறையக் கொடுத்து அவனுடைய கல்லைத் தொழுது செல்வாயாக. பாணனே அவன் எட்டுத் திசைக்கும் தெய்வமாக அந்தக்கல்லில் இடம் பெற்றிருக்கிறான் என்று மலைபடுகடாம். கூறுகிறது. "கடும்பொடு கைவண் குருசில்கற் கைதொழுஉச் செல் பாண தெய்வமாய் நின்றான் திசைக்கு" இவ்வாறெல்லாம் வீரர்களைப் போற்றுகிறது.

**நடுகல் வழிபாடு:**

தொல்காப்பியர் குறிப்பிடும் பெரும்படையே நாளடைவில் நாட்பலி (அகம் 35) காலை வழிபாடாகிறது. பின்னர் ஆண்டிற்கொருமுறை செய்யும் வழிபாடாக மாறுகிறது. சோற்றில் இருந்து தயாரிக்கப்படும் தூப்பிக்கள் நடுகல்லுக்குப் படைக்கப்பட்டது. தற்போதும் மத்திய பிரதேசத்தில் மத்திய இனக்குழுவினரும் நினைவுக்கற்களுக்கு ஒரு வகை மதுவை( லண்டா) என்று பெயர் வைத்துப் படைக்கின்றனர்.

**மரத்தில் நடுகல்:**

இந்தியா முழுவதும் வீரக்கல் அல்லது நடுகல், கருங்கல் கொண்டு ஏற்படுத்தப்பட்டாலும் இமாச்சலப்பிரதேசத்தில் மரத்தூண்களில் வீரர்களின் உருவங்கள் செதுக்கப்பட்டு நடப்பட்டுள்ளன.

**பல்லவர்களுக்குப் பிந்திய நடுகற்கள்:**

பல்லவர்களுக்குப் பிறகு சோழர், சாளுக்கியர், பாண்டியர், தெலுங்குச் சோழர், விஜயநகர வேந்தர், நாயக்கர் எனப் பல்வேறு அரச மரபினர் பெயர்களைத் தாங்கிய நடுகற்கள் கண்டறியப்பட்டுள்ளன. தமிழகம் மட்டுமில்லாமல் ஆந்திர, கருநாடக மாநிலங்களிலும் ஏராளமான நடுகற்கள் கண்டுபிடிக்கப்பட்டன. கல்வெட்டின்றி வெறும் சிற்பங்களைக் கொண்ட நடுகற்களும் உள்ளன. இவை தவிர போரில் மாண்ட ஆங்கிலேயர்களுக்கும், பிரெஞ்சுக்ககாரர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் நினைவுக்ககற்கள் தமிழகத்தில் ஏற்படுத்தப்பட்டன. சான்றாகத் தஞ்சாவூர் மாவட்டம் வல்லத்தில் ஆங்கில வீரர்களின் நினைவுக்கற்கள் உள்ளன.

**தேவிகாபுரம் நடுகற்கள்:**

போரில் வீரமரணம் எய்திய மறவர்களுக்கு நடுகல் வைத்து வணங்கும் வழக்கம் தமிழகத்தில் சங்ககாலத்திற்கு முன்பிருந்தே இருந்துவருகிறது. தொல்காப்பியத்தில் நடுகல் வைத்து வழிபடுவதற்குரிய இலக்கணம் வகுக்கப்பட்டிருக்கிறது. நடுகற்கள் தமிழகத்தின் பல பகுதிகளில் விரவிக் காணப்படுகின்றன. அவற்றில் திருவண்ணாமலை மாவட்டம் செங்கம் பகுதியிலிருந்து தர்மபுரி வரையிலும் மிக அதிக அளவு நடுகற்கள் காணப்படுகின்றன. தமிழகத்தில் மொத்தமுள்ள நடுகற்களில் இப்பகுதியில் மட்டும் 75 விழுக்காடு காணப்படுகின்றன. தேவிகாபுரமும்[1] [2]அதைச் சுற்றியுள்ள நரசிங்கபுரம், தச்சாம்பாடி, முருகமங்கலம் போன்ற பகுதிகளிலும் தொன்மையான நடுகற்கள் காணப்படுகின்றன. இவற்றில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வித வடிவத்தையும் அமைப்பையும் கொண்டுள்ளன. (இவற்றை நாயக்கன் காலத்தில் வைத்தது போல் 14 மற்றும் 15ம் நூற்றாண்டு என சித்தரித்துள்ளது இவர்களின் முழுப்பொய்யை பூசணிக்காயின் உள் அடக்குவது தெளிவாகத் தெரிகிறது.அக்காலத்தில் நடுகல் மரபு முற்றிலும் குறைந்திருக்கும் என்பதே உண்மை.நடுகற்கள் மருதநில நாகரீகங்களுக்கும் முந்தைய மரபு.ஆநிரை கவர்தல் மீட்டல் என்பது அப்பொழுது ஆநிரைகள் மட்டுமே செல்லமாகக் கருதப்பட்ட பொழுது.பின்னர் மருதநில நாகரீகங்களுக்குப் பின் செல்வங்கள் என்பது விதை நெல்லும் பண்ட மாற்றில் கிடைத்த நவ இரத்தினங்களும்.ஆக பழைய மரபை 14 ம் நூற்றாண்டு எனப் புணைந்துள்ளனர்.) நடுகற்களின் காலம் மற்றும் அமைப்பின் அடிப்படையில் வேறுபடுத்தலாம். தேவிகாபுரத்தில் உள்ள நடுகற்களில் பெரும்பான்மையானவை 14/15 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. சில 12 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. நடுகற்களின் வகையைக் கொண்டு கீழ்க்கண்டவாறு பட்டியலிடலாம்.

- தொறு நடுகல்,
- சதிக்கல்
- வேடியப்பன் கோயில்,

- ஏரிகாத்த வீரன் நடுகல்,
- அய்யனார் நடுகல்,
- நவகண்டம்.

**பட்டினத்தார் – பாம்பன் சுவாமிகள் நடுகல்:**

சமாதிகள் ஆற்றோரத்தில் சேரியருகில் குளத்தருகில் கடற்கரை ஓரத்தில், காட்டின் நடுவில் மற்றும் மலையடிவாரத்தில் அமைக்கலாம் என்று ஆகம நூல்கள் கூறுகின்றன. பட்டினத்தாருக்குத் திருவொற்றியூர் கடற்கரை ஓரமாகவும் பாம்பன் சுவாமிகளுக்குத் திருவான்மியூர் கலா ஷேத்ரா சாலயைருகே கடற்கரை ஒட்டியும் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

"புதியதோர் உலகு செய்வோம் - கெட்ட
போரிடும் உலகத்தை வேரொடும் சாய்ப்போம்"

என்று பாவேந்தர் பாரதிதாசன் முழங்கினாலும் உலகில் போர்கள் ஓய்ந்தபாடில்லை. அறப்போராகவும் மறப்போராகவும் இருந்த போர்கள் தற்போது வஞ்சகப் போர்;களாக- பயங்கரவாதப் போர்களாக- பயனற்ற முடிவில்லாத போர்களாக இருந்து வருகின்றன. பண்டைத் தமிழகத்தில் போர்களுக்கு ஒரு நெறி வகுத்து வீரமும் விவேகமும் தம்மிரு கண்களாகத் தமிழர் கருதி வந்துள்ளனர். போரில் உயிர்விடுவதைப் பெரும்பேறாகத் தமிழர் கருதியதைக் கவியரசு கண்ணதாசனும் குறிப்பிடத் தயங்கவில்லை.

**"அச்சம் என்பது மடமையடா
அஞ்சாமை திராவிடர் உடைமையடா
ஆறிலும் சாவு நூறிலும் சாவு
தாயகம் காப்பது கடமையடா"**

நாட்டைக் காப்பது தமிழராகிய திராவிடர்க்கு மட்டுமின்றி இந்தியத் திருநாட்டில் வாழும் ஏனைய மொழி, இன, சமய மக்களுக்கும் கடமையேயாகும்.

**முடிவுரை:**

நாட்டிற்காக, அல்லது தன் குடும்பத்திற்காகவோ, பெருவீரம் காட்டி இறப்போரை, மக்கள் மறவாது வணங்கினர். அவ்வாறு இறந்தோர் நினைவாய்க் கல்லெடுத்து வணங்கும் வழக்கத்தை நம் முன்னோர் போற்றி வந்துள்ளதற்குப் பல சான்றுகள் நம்மிடையே உள்ளன. தற்காலம் வரையிலுமே தம் குடும்பத்தில் எவரேனும் இறந்தால், அவர் நினைவாக நீத்தார்கடன் செலுத்தும்போது கல்லை வைத்து, அதனைச்சுற்றி அவர் உடுத்திய உடை, அவருக்கு பிடித்த உணவுப்பொருள்களை படைக்கும் வழக்கம் பெருமளவில் காணப்படுகிறது.

**பார்வை நூல்கள்:**

1. தொல்லியல் ஆய்வுநூல், தமிழக நடுகற்கள், காக்கைக்கூடு பதிப்பகம், சென்னை.2025
2. ச.கிருஷ்ணமூர்த்தி, நடுகற்கள், மெய்யப்பன் பதிப்பகம்,சென்னை.
3. https://ta.wikipedia.org/wiki/%E0%AE%A4%E0%AF%87%E0%AE%B5%E0%AE%BF%E0%AE%95%E0%AE%BE%E0%AE%AA%E0%AF%81%E0%AE%B0%E0%AE%AE%E0%AF%8D_%E0%AE%A8%E0%AE%9F%E0%AF%81%E0%AE%95%E0%AE%B1%E0%AF%8D%E0%AE%95%E0%AE%B3%E0%AF%8D
4. https://www.vikatan.com/spiritual/gods/article-about-tamil-history-and-civilization
5. https://www.exoticindiaart.com/book/details/natukarkal-tamil-uax839/

MUTHTHARASI – Art Literary Culture Tamil Journal
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
SPL-EDITION – IV VOLUME - 1
மார்ச்சு-2025 E-ISSN: 2584 - 1238

# 14. கலித்தொகை காட்டும் முல்லை நில மக்களின் வாழ்வியல்

**வ.கனகசுந்தரவள்ளி**., எம்.ஏ.,எம்பில்.,நெட்
தமிழ் ஆர்வலர், மதுரை -20
DOI 10.5281/zenodo.15066878.

**Abstract:**

Our Tamil people are the ancestors who emerged with swords before the stone was formed and the soil was formed. Sangam literature, which has always given birth to the Tamil language, explains everything about the culture, civilization, love, bravery, and lifestyle of the Tamil people. Sangam literature has played a significant role in depicting the lives of the people of the Sangam period who lived with love and bravery as two eyes. Among the literature that shows the lives of the people of the Sangam period from various angles, Kalithokiya is a literature that describes in detail the heroic sport of the Tamils and the climbing that is still admired by the Tamil people of the world.

**Key Words:** Sangam literature - kalithogai - Tamil Forest

## முன்னுரை

கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளோடு முன் தோன்றிய மூத்தகுடி நம் தமிழ்க்குடி. தமிழ் மொழிக்கு என்றும் இறவாப்புகளை அளிக்கும் சங்க இலக்கியம் தமிழ் மக்களின் பண்பாடு, கலாச்சாரம், நாகரிகம், காதல், வீரம், வாழ்வியல் என அனைத்தையும் விளக்கிக் காட்டுகிறது. காதலையும் வீரத்தையும் இரு கண்களாக எண்ணி வாழ்ந்த சங்ககால மக்களின் வாழ்வியலைப் படம் பிடித்துக் காட்டுவதில் சங்க இலக்கியத்தின் பங்கு அளப்பரியது. சங்ககால மக்களின் வாழ்வியலைப் பல்வேறு கோணத்தில் காட்டும் இலக்கியங்களுள் தமிழர்களின் வீர விளையாட்டாகவும், உலகத் தமிழினத்தால் இன்றளவும் போற்றப்படும் ஏறுதழுவுதல் பற்றியும் விரிவாக விவரிக்கும் இலக்கியம் கலித்தொகை.

## முல்லை நிலம்

காடும் காடு சார்ந்த இடமுமான முல்லை நிலத்தில் வாழும் மக்கள் ஆயர் இடையர் என்று அழைக்கப்பட்டுள்ளனர். தங்களின் வீரத்தை உணர்த்தவும் திருமணத்தின் முன்னேற்பாடாகவும் ஏறு தழுவுதல் என்னும் நிகழ்வினை நிகழ்த்தியுள்ளனர். கலித்தொகையில் முல்லைக்கலியில் 17 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. முதல் ஏழு பாடல்கள் ஏறுதழுவுதல் பற்றியும், காளைகளின் நிறம் பற்றியும், காளைகளை அடக்கும் இளைஞர்களின் வீரம் பற்றியும் மிகவும் விரிவாகவும் தெளிவாகவும் எடுத்துக் கூறுகின்றது. மீதமுள்ள 10 பாடல்களில் முல்லை நில மக்களின் தொழில்கள், அவர்களின் காதல் வாழ்வு, திருமணமுறை, கடவுள் வழிபாட்டு முறை, முல்லை நில மக்களின் வாழ்வியல் செய்திகள், ராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாசச் செய்திகள் பற்றியும் விளக்கிக் கூறுகின்றது.

## ஒப்பனை

ஒப்பனை அலங்காரம் இயற்கையாகவே பெண்களின் வாழ்வியலோடு பிரிக்க முடியாத ஒன்றாகக் கலந்துவிட்டது. அதிலும் கூந்தல் அலங்காரம் பெண்களை அதிகம் ஈர்த்த ஒன்றாகும் . பெண்களின் கூந்தலை வைத்து சங்க காலத்தில் விவாதமே நடத்தி இருக்கின்றனர் நம் முன்னோர். விவாதத்தின் முடிவாக பெண்களின் கூந்தல் இயற்கையாகவே மனமுடையதல்ல என்று நக்கீரர் நிரூபித்தார். சங்ககாலத்தில் பெண்கள் தங்களின் கூந்தலை வெண்ணெய் தடவி

பராமரித்துள்ளனர். மேலும் கூந்தலை ஐந்து பகுதிகளாக பிரித்து கூந்தல் அலங்காரமும் செய்துள்ளனர். இதனை,

**ஐங் கூந்தல் உளரச்**
**சிறுமுல்லை நாறிய தற்குக்** **(மு.கலி.11- 16-17வரி)**
**முல்லை இவை ஆயின் முற்றிய கூழையாய்**
**வெண்ணெய் உரைஇ விரித்த கதுப்போடே** **(மு.கலி.17 - 12வரி)**

**ஆடை அலங்காரம்**

உண்பது நாழி உடுப்பவை இரண்டே என்று கூற்றின்படி ஆடை என்பது இன்றியமையாத ஒன்றாக மனிதனின் வாழ்வில் இருக்கின்றது. இன்றைய காலகட்டத்தில் பலவிதமான துணி வகைகள், ஆடை வகைகள் உள்ளன. ஆனால் சங்க காலத்தில் பருத்தியின் பஞ்சில் இருந்து நூல் எடுத்து அதிலிருந்து ஆடை தயாரித்துள்ளனர் நம் சங்க கால மக்கள். இதனை புறநானூற்றுப் பாடலின் மூலம் நாம் அறிந்து கொள்ள முடிகின்றது.

ஆடை உருவாக்கி அதனை உடுத்தியதையும் தாண்டி ஒரு படி மேலே சென்று ஆடைகளுக்கு சாயம் ஏற்றியும் கரை வேலைபாட்டை உடைய ஆடைகளில், பூந்தொழில் வேலைப்பாட்டையும் சங்ககால மக்கள் செய்துள்ளனர் என்ற செய்தியினை முல்லைக்கலியின் வாயிலாக நாம் உணர முடிகின்றது.

**யாய் தந்த**
**பூங்கரை நீலம் புடைதாழ மெய் அசைய** **(மு.கலி.11- 2-3வரி)**

துவர் என்பதற்குச் சாயம் என்று பொருள். கருந்துவர் என்றால் கருமை நிற சாயம் ஏற்றிய ஆடை என்று பொருள்படுகிறது. சங்ககாலத்திலேயே ஆடைகளுக்கு சாயம் ஏற்றி அழகுபடுத்தி, ஆடையை உடுத்தும் தொழில்நுட்பத்தை அறிந்து வைத்துள்ளனர் நம் சங்ககால மக்கள் என்பதனை முல்லைக்கலியின் மூலம் நாம் உணரலாம்

**தொய்யில்**

மகளிரின் தோள்களிலும், மார்புகளிலும் சந்தனம் மற்றும் குங்குமத்தைக் குழைத்து வரையும் கொடி போன்ற அமைப்பே தொய்யில் எனப்படுகிறது. இதனை 'வள்ளிக்கொடி' என்றும் கூறுவர். "தொய்யில் எழுதும் உரிமையானது பெரும்பாலும் காதலனுக்கே உரியது" என்று 'தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும்' என்ற நூலில் டாக்டர் ஆ.ராமகிருட்டிணன் குறிப்பிட்டுள்ளார். தொய்யில் வெண்மை நிறத்திலும் வரையப்பட்டுள்ளது. பெண்களின் மார்பில் தொய்யில் வரைந்த செய்தியினை முல்லைக்கலியும் குறிப்பிடுகின்றது.

**"...........மென்முலை மேல்**
**தொய்யில் எழுதுகோ"** **(மு.கலி.11- 16-17வரி)**
**"நடஅக் கரும்பு அமன்ற தோளார்"** **(மு.கலி.12- 6வரி)**
**"தொய்யில் பொறித்த வனமுலையாய்"** **(மு.கலி.17- 4 வரி)**

என்று தொய்யில் வரைந்த செய்திகள் முல்லைக் கலியில் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் பெண்கள் நடாத கரும்பு போன்ற வடிவத்தையும் தோள்களில் வரைந்துள்ளனர் என்ற செய்தியும் விளக்கப்பட்டுள்ளது. நெய்தற் கலியிலும் தொய்யில் வரைதல் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

**"மகிழ் செய் தேமொழித் தொய்யில் சூழ் இளமுலை"**
**(கலி.நெ.கலி.125-8வரி)**

**உணவு**

முல்லை நில மக்கள் வரகு, சாமை, முதிரை ஆகியவற்றை உணவாக உட்கொண்டுள்ளனர். ஆநிரைகளை பாதுகாத்து வளர்த்த அவர்கள் தயிர், மோர், வெண்ணை ஆகியவற்றையும் உணவாக உட்கொண்டுள்ளனர். மேலும் மாங்காயை வைத்து ஊறுகாய் செய்து அவர்கள் உட்கொண்டுள்ள செய்தியினையும் முல்லைக்கலியின் வாயிலாக நாம் அறிந்து கொள்ள முடிகின்றது. மோர் விற்று அதற்குப் பண்டமாற்றாக நெல்லையும் பெற்று அதனையும் உண்டுள்ளனர்.

**“மாங்காய் நறுங்காடி கூட்டுவேம் யாங்கும்” (மு.கலி.9.பாடல்.23 வரி)**

என்று மாவடுவினை வைத்து ஊறுகாய் செய்து அதனை மக்கள் உணவோடு சேர்த்து உண்டுள்ள செய்தியையும் நாம் அறிய முடிகின்றது. மேலும் மீன் குழம்பில் மாங்காயை சேர்த்து சமைத்ததும், வடு மாங்காய் வைத்து ஊறுகாய் செய்த செய்திகளையும் புறநானூறு, பெரும்பாணாற்றுப்படை ஆகிய சங்க இலக்கிய நூல்களும் குறிப்பிடுகின்றன.

**“காடி வெள் உலை கொளீஇ நீழல்
ஓங்கு சினை மாவின் தீம் கனி நறும் புளி
மோட்டு இரு வராஅல் கோட்டு மீன் கொழும் குறை”**

**(புறம்.பாடல் 399.)**

எனும் புறநானூற்றின் பாடல் வரிகள் மூலம் விரால் மீன் குழம்பில் மாங்காயைச் சேர்த்து சங்ககால மக்கள் சமைத்து உண்டுள்ள செய்தியினை நாம் அறிய முடிகின்றது. இதே போல்,

**“நெடு மர கொக்கின் நறு வடி விதிர்த்த
தகை மாண் காடியின் வகைபட பெருகுவிர்”**

**( பெரும்.பாண் 309-310)**

எனும் வரிகளின் மூலம் வடுமாங்காய் வைத்து ஊறுகாய் செய்த செய்தியினை பெரும்பாணாற்றுப்படை விளக்குகிறது.

**பொழுதுபோக்கு**

முல்லை நில மக்களின் வாழ்வில் கால்நடைகள் முக்கிய அங்கமாக இருந்திருக்கின்றன. முல்லை நிலத்தில் ஏறு தழுவுதல் சிறப்பான இடத்தைப் பெற்றிருக்கின்றது. ஏறு தழுவுதலுக்காகவே காளைகளை வளர்த்து வந்துள்ளனர் முல்லை நிலப்பெண்கள். திருமணத்தின் பொருட்டு நடத்தப் பெற்ற ஏறுதழுவுதல் முல்லை மக்களின் சிறப்பான பொழுதுபோக்காக இருந்துள்ளது.

மதுரையில் அலங்காநல்லூர், பாலமேடு, அவனியாபுரம் ஆகிய ஊர்களில் பொங்கலை முன்னிட்டு உலகப்புகழ் பெற்ற ஜல்லிக்கட்டு நடைபெறுவது. முல்லை நிலத்தின் ஏறுதழுவுதல் நிகழ்வின் தொடர்ச்சியாகவே பார்க்கப்படுகிறது.

முல்லை நிலத்தில் ஏறுதழுவுதல் என்னும் நிகழ்வு திருமணத்திற்காகவே நடைபெற்றுள்ளது. எனவே ஏறுதழுவுதலைக்கான பெண்களும் ஆர்வமுடன் சென்றுள்ளனர். அவர்கள் அமர்வதற்கு என்று பரண்கள் அமைத்து பாதுகாப்பாக அமர்ந்து ஏறுதழுவுதலைக் கண்டு ரசித்துள்ள செய்தியினையும் முல்லைக்கலிப் பாடல் நமக்கு உணர்த்துகின்றது.

**நல்லவர் கொண்டார் மிடை (மு.கலி.3- 3-9வரி)**

**நாள்மீன்வாய் சூழ்ந்த மதிபோல் மிடை மிசைப்**
**பேணி நிறுத்தார் அணி (மு.கலி.4- 27-28வரி)**

மிடை என்பதற்குப் பரண் என்று பொருள். பரண் அமைத்து தினைப்புனம் காத்த செய்திகளே சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. ஆனால் முல்லை நிலத்தில் ஏறு தழுவுதலை காண்பதற்கு பெண்கள் பரணில் அமர்ந்துள்ள செய்தினை கலித்தொகையின் வாயிலாக நாம் அறிகிறோம்.

**திருமண முறை**

சங்க காலத்தில் தலைவனும் தலைவியும் சந்தித்து, களவில் ஈடுபடுவர். பின்னர் இருவரும் திருமணம் செய்து கற்பு வாழ்க்கையை மேற்கொள்வர். திருமணம் என்பது தலைவன், தலைவி உடன்போக்கு மேற்கொண்டும் அல்லது பெற்றோர் முன்னிலையிலும் நடைபெறும்.. முல்லை நிலத்தில் ஒரு பெண் பிறந்த பொழுதே அவளுக்கென்று ஒரு காளையும் அவள் வீட்டில் வளர்க்கப்படுகிறது. காளையை அடக்குபவனே அப்பெண்ணிற்குக் கணவனாக வருவான். அவன் அப்பெண்ணின் மனம் கவர்ந்தவனாகவும் இருப்பான் என்பது குறிப்பிடத்தக்கது. பின்னர் தலைவன், தலைவி இருவருக்கும் அனைவரின் முன்னிலையிலும் திருமணம் செய்ய ஏற்பாடுகள் நடக்கும்.

முல்லை நிலத்தில் பெண்ணின் தமையனும் தந்தையும் இணைந்து திருமணத்தை நடத்தியுள்ளனர். திருமணத்தின் போது செய்யப்படும் சடங்குகளை வதுவை என்று கலித்தொகை சுட்டுகிறது. அகன்ற முற்றத்தில் புதுமணலைப் பரப்பி, வீட்டிற்கு செம்மண் பூசி, திருமண ஏற்பாடுகளை செய்துள்ளனர். திருமணத்தின் போது இறந்த பெண் எருமையின் கொம்பினை வைத்து வழிபட்டு திருமணம் செய்துள்ளனர்.

**பொய்யில் பொதுவற்கு அடை சூழ்ந்தார் தந்தையோடு**
**ஐயன்மார் எல்லாம் ஒருங்கு (மு.கலி.7- 34-35வரி)**
**வரைவில் மணல் தாழப் பெய்து திரைப்பில்**
**வதுவையும் ஈங்கே அயர்ப (மு.கலி.15- 19-20வரி)**

**தருமணல் தாழப்பெய்து இல்பூவல் ஊட்டி**
**எருமைப் பெடையோடு எமர் ஈங்கு அயரும் பெருமணம்**
**(மு.கலி.14- 12-14வரி)**

இன்றளவும் பலரின் வீட்டில் இறந்த மாடுகளின் கொம்பினை வைத்து வழிபடும் வழக்கத்தினை நாம் காண முடிகின்றது. சங்ககால வழிபாட்டு முறையில் தொடர்ச்சியாகவும் இது பார்க்கப்படுகின்றது.

**தொழில்கள்**

காடுகளிலேயே தங்களின் வாழ்க்கையை வாழும் முல்லை நில மக்களின் பிரதான தொழிலாக ஆநிரைகளை மேய்த்தல், தினை விதைத்தல் அவற்றை பாதுகாத்தல், ஏறு தழுவுதல் ஆகியவை இருந்துள்ளன. இயற்கையாக கிடைத்த பழங்கள், கிழங்குகள், விலங்குகளின் இறைச்சி போன்ற கிடைத்த உணவுகளை உண்டு, வாழ்ந்து வந்த சங்க கால மக்களுள் ,உணவுகளை உற்பத்தி செய்யும் நுட்பத்தினை அறிந்தவர்களாக முல்லை நில மக்கள் இருந்திருக்கின்றனர். குறிஞ்சி நிலத்தில் இயற்கையாகக் கிடைத்த கிழங்குகளை

அகழ்ந்தெடுத்தல், தேனெடுத்தலே தொழிலாக இருந்திருக்கின்றன. ஆனால் முல்லை நிலத்திலோ திணை, வரகு, சாமை ஆகியவற்றை விதைத்தல், அவற்றைப் பாதுகாத்தல் தொழிலாக இருந்துள்ளது. தானியங்களை விளைவிக்க, நிலத்தை சமன்படுத்தி, உழுது, சீராக்கி, பின்னரே விவசாயம் செய்ய வேண்டியுள்ளதால், முல்லை நில மக்கள் குறிஞ்சி நில மக்களை விட சற்று முன்னேறியவர்களாகவே இருந்துள்ளனர் என்பதை நாம் அறிய முடிகின்றது.

**முயற்பரழ் உகளும் முல்லையம் புறவில்**
**கவைக்கதிர் வரகிம் சீறூர் ஆங்கன்** **அகம்** 384 .5-6

**புனத்த்துளான் எந்தைக்கு புகா உய்த்துக் கொடுப்பதோ**
**இனத்துளான் என்னைக்குக் கலத்தொடு செல்வதோ**
**தினைக் காலுள் யாய் விட்ட கன்று மேய்க் கிற்பதோ**
**((மு.கலி.**8- 36-38**வரி)**

ஆநிரைகளைப் பாதுகாத்து வளர்த்து அவற்றிலிருந்து கிடைக்கும் பால், தயிர், மோர், வெண்ணெய் ஆகியவற்றை அருகில் இருக்கும் ஊர்களுக்குச் சென்று விற்று தங்களுக்கான வருவாயையும் ஈட்டியுள்ளனர் முல்லை நிலப் பெண்கள்.

**பேரூரும் சிற்றூரும் கௌவை எடுப்பவள் போல்**
**மோரோடு வந்தாள்**

பணம் என்கிற மிகப் பெரும் பாகுபாடு உருவாகாத பொற்காலமான சங்க காலத்தில் தன்னிடம் உள்ள பொருளைக் கொடுத்துவிட்டு, தனக்குத் தேவையான பொருளைப் பெற்றுச் செல்லும் பண்டமாற்று முறை இருந்துள்ளது. முல்லை நிலத்தில் பெண்கள் தன்னிடம் உள்ள பாலையும் மோரையும் கொடுத்துவிட்டு அதற்குப் பதிலாக தானியத்தையும் நெல்லையும் பெற்று வந்துள்ளனர்,

**இவள்தான் திருந்தாச் சுமட்டினள் ஏனைத் தோள்வீசி**
**வரிக்கூழ வட்டி தழீஇ** **((மு.கலி.**9- 13-14**வரி)**
**வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றி**
**நெல்லொடு வந்த வல்வாய் ப..றி** **(ப.பாலை** 29-30)
**யவனர் தந்த வினைமாண் நன்கலம்**
**பொன்னொடு வந்து கறியொடு பெயரும்**
**வளங்கெழு முசிறி** **(அகம்** 149.9-11)

சங்ககால மக்கள் நுட்பமான வேலைத் திறன்களான கைவினைப் பொருட்கள் செய்வதிலும் திறமை மிக்கவர்களாக இருந்துள்ளனர்

**மாதர்ப் புலைத்தி விலையாகச் செய்ததோர்**
**போழில் புனைந்த வரிப்புட்டில்** **((மு.கலி.**17- 7-8**வரி)**

பனங்குருத்தினால் முடையப்பட்ட கூடை செய்துள்ள செய்தியினை கலித்தொகை பாடல் வழி அறிய முடிகின்றது.இதன் மூலம் சங்ககால மக்கள் நுட்பமான தறன்களைக் கொண்டுள்ள செய்தியினை அறிய முடிகின்றது.

**முடிவுரை**

காடும் காடு சார்ந்த இடமுமான முல்லை நிலம், மக்களிடம் நாகரிகம் தோன்றுவதற்கான அடித்தலமாக அமைந்துள்ளது எனலாம்.விவசாயம் செய்து, அதன் மூலம் வருவாய் ஈட்டியுள்ளனர்.கலித்தொகையில் மொத்தம் 150 பாடல்கள் உள்ளன.அதில் 17 பாடல்களில் முல்லை நில மக்களின் வாழ்வியல் கூறுகள் விளக்கப்பட்டுள்ளன.முல்லை நிலம் மனித நாகரிகத்தின் தொடக்கமாக அமைந்துள்ளது என்றும் கருதலாம்.

**துணை நூல் பட்டியல்**:

1. புலியூர்க்கேசிகன் (உரை), சங்க இலக்கிய நூல் வரிசை, கலித்தொகை மூலமும் உரையும்,
   சாரதா பதிப்பகம், சென்னை.
2. புலியூர்க்கேசிகன்(உரை),சங்க இலக்கிய நூல் வரிசை, அகநானூறு மூலமும் உரையும், சாரதா பதிப்பகம், சென்னை.
3. புலியூர்க்கேசிகன்(உரை),சங்க இலக்கிய நூல் வரிசை, ஆற்றுப்படை நூல்கள் மூலமும் உரையும், சாரதா பதிப்பகம், சென்னை.



# 15. புறநானூற்றில் அரசரும் புலமையும்

**பேரா. க. பார்த்தீபன்,** M.A., M.Phil., NET
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
சுவாமி தயானந்தா கலை மற்றும்
அறிவியல் கல்லூரி,மஞ்சக்குடி - 612 610
DOI 10.5281/zenodo.15066902.

**Abstract:**

Sangam literature is the repository of the life of the ancient Tamils. It divides the life of the people into internal and external stages. Theft and chastity are elements of internal life. Culture, civilization, politics, customs, warfare, etc. are symbols of external life. During the Sangam period, external literature emphasizes the ruling ability of the kings, gifts, war, valor, and victory. In addition, poets have sung the virtues of the kings. They have given moral advice to the kings and consoled them. They also contain various historical records. It is unique that not only the poets but also the kings of that time were capable of composing poetry. In this way, the songs of the kings shine in the Purananuru. This article aims to reveal the creativity of the kings through such songs.

**Key Words:** Sangam Literature - Purananuru - Kingdom - Poets

## முன்னுரை

பழந்தமிழரின் வாழ்வியல் களஞ்சியமாகத் திகழ்வது சங்க இலக்கியம். அவை மக்களின் வாழ்விலை அகம், புறம்என நிலைகளில் பகுத்துள்ளது. களவு, கற்பு என்பது அகவாழ்வின் கூறுகளாகும். பண்பாடு, நாகரிகம், அரசியல், பழக்கவழக்கங்கள், போர்முறைகள் முதலியன புறவாழ்வின் அடையாளங்களாகத் திகழ்கின்றன. சங்க காலத்தில் புற இலக்கியங்கள் மன்னர்களின் ஆட்சித்திறம், கொடை, போர், வீரம், வெற்றி ஆகியவற்றை முன் நிறுத்திப்பாடுகின்றன. அதோடு அரசர்களின் சிறப்பைப் புலவர்கள் பாடியுள்ளனர். அரசர்களுக்கு அறவுரை வழங்கியும் ஆற்றுப்படுத்தியுள்ளனர். அவற்றுள் பல்வேறு வரலாற்றுப் பதிவுகளும் அடங்கியுள்ளன. புலவர்கள் மட்டுமின்றி அக்கால மன்னர்களும் கவிபாடும் ஆற்றல் பெற்றிருந்தனர் என்பது தனிச்சிறப்பு. அவ்வகையில் புறநானூற்றில் மன்னர்களின் பாடல்கள் மிளிர்கின்றன. அத்தகு பாடல்களின் வழி மன்னர்களின் படைப்பாளுமையை வெளிக்கொணரும் வகையில் இக்கட்டுரை அமைகின்றது.

## கவிபாடிய வேந்தர்கள்

புறநானூற்றில் அரசர்களின் பாடல் எண்ணிக்கை பதினெட்டு. பாடியவர்கள் பதினைந்து மன்னர்கள் ஆவர். அம்மன்னர்களின் பெயர்கள் :-

1. ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் (71)
2. கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி (182)
3. கோப்பெருஞ்சோழன் (214, 215, 216)
4. சேரமான் கணைக்காலிரும் பொறை (74)
5. சேரமான் கோட்டம் பலத்துத் துஞ்சிய மாக்கோதை (245)
6. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் (173)

7. சோழன் நல்லுருத்திரன் (190)
8. சோழன் நலங்கிள்ளி (73, 75)
9. தொண்டைமான் இளந்திரையன் (185)
10. பாண்டியன் அறிவுடைநம்பி (188)
11. பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் (183)
12. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் (72)
13. பாலைப் பாடியப் பெருங்கடுங்கோ (282)
14. பூதப் பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு (246)
15. பாரிமகளிர் (112)

**சோழன் நலங்கிள்ளியின் புலமையும் வீரமும்**

வீரமிக்க தலைவன் சோழன் நலங்கிள்ளி. அவன் மீது பகைவர்கள் போர்த்தொடுத்தல் அரிது. இத்தகு வீரமுடைய சோழன் நலங்கிள்ளி தம் வலிமையை,

**``உள்ளம் எள்ளிய மடவோன் தெள்ளிதின்**
**துஞ்சிபுலி இடறிய சிதடன் போல**
**உய்ந்தனன் பெயர்தலோ அரிதே”** (புறம் - 73)

என்று உரைத்தான். பகைவர் தம்மை மதியாது போர்ப்புரிய வருமாயின் தூங்குகின்ற புலியின்மீது இடறி விழுகின்ற குருடரைப் போல பகைவர் மீளுதல் அரிது என்றான். மேலும்,

**``கழைதின் யானைக் காலகப் பட்ட**
**உன்திணி நீண்முளைப் போலச் சென்றவன்**
**வருந்தப் போரே”** (புறம் - 73)

என்று சினந்தான். யானைகள் இளமூங்கிலைத் தின்னும். அப்போது திரண்ட மூங்கிலின் முளைகள் காலின் கீழே அகப்பட்டு நசுங்கும். அதுபோல தன்னை எதிர்க்கும் பகைவரும் அழிந்து ஒழியும்படி தான் போரிட்டு வெல்வேன் என வஞ்சினம் மொழிகின்றான்.

**சோழன் நலங்கிள்ளி உணர்த்தும் அரசநெறி**

தகுதியற்றவன் ஆட்சிக்கு வந்து மக்களிடம் அதிகமாக வரி கேட்டு அவர்களைத் துன்புறுத்தி ஆட்சி செய்வது அரசனுக்கு மட்டுமல்லாமல் குடிமக்களுக்கும் பெருஞ்சுமையாக இருக்கும். ஆனால் தகுதியுடையவன் ஆட்சிக்கு வந்தால் அவ்வாட்சி அவனுக்கும், குடிமக்களுக்கும் சுமை இல்லாத நல்லாட்சியாக இருக்கும். இக்கருத்தினை சோழன் நலங்கிள்ளி,

**``மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப்**
**பால்தர வந்த பழவிறல் தாயம்**
………………………………………………………….
**முரசுகெழு வேந்தர் அரசுகெழு திருவே”** (புறம் - 75)

என்று உணர்த்தியுள்ளான். இச்செய்தியை,

**வேலொடு நின்றான் இடுவென்றது போலும்**
**கோலொடு நின்றான் இரவு** (குறள் - 552)

என்னும் குறளோடு ஒப்பு நோக்கத்தக்கது.

**பாண்டியனின் வஞ்சினமொழி**

போரிட வருவோரை வென்று புறமுதுகிட்டோடச் செய்வது வேந்தன் தொழில். அதைச் செய்ய தவறாதவன் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன். அவன் சோழ மன்னர்களுடன் போரிடப் புறப்பட்டான். அப்போது, போர்க்களத்தில் பகைவரை ஓடும்படி செய்வேன் என வஞ்சினம் மொழிந்தான். மேலும், தவறினால் தன் தேவியைப் பிரிந்தவன் ஆவேன் எனவும் சினந்தான். இக்கூற்று,

**``மடங்கலின் சினைஇ, மடங்கா உள்ளத்து**
**அடங்காத் தானை வேந்தர் உடங்கு இயைந்து,**
**என்னொடு பொருதும் என்ப, அவரை**
**ஆர்அமர் அலறத் தாக்கி, தேரொடு**
**அவர்ப் புறங் காணேன் ஆயின் - சிறந்த**
**பேர்அமர் உண்கண் இவளினும் பிரிக"** (புறம் - 71)

என்பதாகும். மேலும், முறை தவறிச் செங்கோல் செலுத்திய பாவத்தைச் செய்தவனாவேன் என்பதை,

**``அறன்நிலை திரியா அன்பின் அவையத்துத்**
**திறன்இல் ஒருவனை நாட்டி முறைதிரிந்து**
**மெலிகோல் செய்தேன் ஆகுக"** (புறம் - 71)

என வரும் வரிகள் மெய்ப்பிக்கின்றன.

**உலகம் இயங்கக் காரணம்**

கடலுள் மாய்ந்த இளம்பெரும் வழுதி, இவ்வுலகம் இயங்குவதற்குக் காரணமாகச் சான்றோர்களைப் பட்டியலிடுகிறான்.

**``உண்டால் அம்ம, இவ்வுலகம்; இந்திரர்**
**……………………………………………………………,**
**தமக்கென முயலா நோன்தாள்,**
**பிறர்க்கென முயலுநர் உண்மை யானே"** (புறம் - 182)

என்பது அம்மொழி உலகில் வாழும் நற்பண்புடையவர்கள் தமக்கு என்று முயற்சி செய்யாது, பிறருக்காகவே வாழ்வர். மேலுலகத்திலுள்ள அமிழ்தமே கிடைத்தாலும் தனித்து உண்ணாதவர். மேலும், வாழ்க்கையில் வெறுப்பில்லாதலர், மனச்சோர்வு இல்லாதவர், தீய செயல்களுக்கு அஞ்சுபவர். புகழ் என்றால் உயிரையும் கொடுக்கும் பண்பாளர். பழியெனின் உலகத்தையே பெற்றாலும் கொள்ளாத பெருந்தகையாளர். மனக்கவலை இல்லாதோர். இத்தகு பண்புடையாளர்கள் வாழ்வதால் இவ்வுலகம் இயங்குவதாக பாண்டிய மன்னன் சிறப்பிக்கின்றான். இக்கருத்தை,

**``பழிஎயாடு வரூஉம் இன்பம் வெஃகார்"** (அகம் - 112)

என வரும் அகநானூற்றுப் பாடலடியும் உணர்த்துகின்றது.

**கல்வியின் மேன்மை**

ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் கல்வியின் சிறப்பை ஒரு பாடலாக வெளிப்படுத்தியுள்ளான். ஆசிரியருக்கு தேவையான பொருள்கொடுத்து உதவவேண்டும்.

அவருக்கு நிறைந்த செல்வம் கொடுக்கவேண்டும். அவரைப் பின்பற்றி நடப்பதற்குத் தயங்கக் கூடாது. இப்படிக் கல்வி கற்பது முறையாகும். இது பெரிதும் நன்மை பயக்கும். ஏனென்றால், தன் வயிற்றில் பிறந்த உடன்பிறப்புக் கொண்ட பலரில் சிறப்புப் பெற்றிருப்பவனிடம் தாயின் மனமும் திரிந்து செல்லும். ஒரே குடியில் பிறந்த பலரில் மூத்தவனை வருக என அழைக்காமல் அவர்களில் அறிவுடையவன் வழியில் அரசாட்சியும் நடைபெறும். பிறப்பால் நான்கு பிரிவுகள் உண்டு. அவற்றில் கீழ்க்குலத்தில் பிறந்த ஒருவன் கற்றிருந்தால் மேல்குலத்தில் பிறந்தவனும் அவனிடம் அடக்கமாவான். இச்செய்தியைக் கூறும் பாண்டிய மன்னன்,

**``உற்றுழி உதவியும், உறுபொருள் கொடுத்தும்,**
**-------------------------------------------------------**
**மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே"** (புறம் - 183)

என்று மொழிகின்றாள். அக்காலத்தில் கல்வியறிவுடையாரை அரசும் போற்றும் என்பதற்கு இப்பாடல் சான்றாம். கல்வியின் மேன்மையை நாலடியார்,

**``களர்நிலத் துப்பிறந்த உப்பினைச் சான்றோர்**
**விளைநிலத்து நெல்லின் விழுமிதாகக் கொள்வர்**
**கடைநிலத்தோ ராயினும் சுற்றறிந் தோரைத்**
**தலைநிலத்து வைக்கப்படும்"** (நாலடி - 133)

என்று மொழிவதை ஈண்டு காணத்தக்கது.

**குழந்தைச் செல்வம்**

பல வகையான செல்வங்களையும் பெற்றுப் பலரோடு உண்ணும் பெருஞ்செல்வந்தராயினும், மெல்ல நடந்து, குறுகிய அடிகளை வைத்து, தன் சிறிய கைகளை நீட்டி, அதை உணவில் இட்டு, தொட்டு, வாயால் கல்வி, கையால் துழாவி, நெய்யுடன் கலந்த சோற்றைத் தன் உடம்பில் பூசிப் பெற்றோரை இன்பத்தில் மயக்கும் குழந்தைகள் இல்லாதவர்களின் வாழ்நாட்கள் பயனற்றவையாகும். இக்கருத்தைக் கூறும் பாண்டியன் அறிவுடை நம்பி தம் பாடலில் குழந்தைச் செல்வத்தின் இன்பத்தை மொழிகின்றான். அப்பாடலானது,

**``படைப்புப்பல படைத்துப் பலரோடு உண்ணும்**
**உடைப்பெருஞ் செல்வர் ஆயினும் இடைப்படக்**
**...............................................................**
**பயக்குறை இல்லை தாம்வாழும் நாளே"** (புறம் - 188)

என்று அமைகின்றது. மக்கட்பேற்றால் வரும் இன்பத்தை வள்ளுவர்,

**``அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்**
**சிறுகை அளாவிய கூழ்"** (குறள் - 64)

என்று மொழிகிறார்.

**மறக்குலத்தின் மரபு**

சேரமான் கணைக்கால் இரும்பொறை, சோழன் செங்கணானோடு திருப்போர்ப் புறத்துப் பொருதினான். போரில் சேரன் கணைக்கால் இரும்பொறை தோல்வியுற்றச் சோழனால் சிறைப்படுத்தப்பட்டான். ஒருநாள், சேரமான் பசியின் கொடுமை தாங்காமல்,

சிறைக்காவலரிடம் நீர் வேண்டினான். ஆனால் காலம் தாழ்த்திச் சென்று கொடுத்ததை வாங்க மறுத்தான். அதனால் வெட்கமும் வேதனையும் அடைந்த சேரமான் ஒரு பாடலை எழுதி வைத்துவிட்டு உயிர்த்துறந்தான்.

**``குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்**

--------------------------------------------

**ஈன்ம ரோஇவ்வுலக தானே"** (புறம் - 74)

என்பது அம்மொழி. இப்பாடலில் சேரமான், குழந்தை இறந்து பிறந்தாலும், உருவமற்ற தசைப்பிண்டமாகப் பிறந்தாலும், அதை மார்பில் வாளால் வெட்டிப் புதைத்து மறக்குல மரபாகப் பழந்தமிழ் நாட்டில் இருந்ததாக கூறுகின்றான். அரசர்களிடத்தில் இவ்வழக்கம் இருந்தமையை ஔவையார்,

**``நீள்கழல் மறவர் செல்வுழிச் செல்கஎன**
**வாள்போழ்ந்து அடக்கலும் உய்ந்தனர் மாதோ"** (புறம் - 93)

என்றவாறு சுட்டுகிறார்.

**அரசனின் தகுதி**

தொண்டைமான் இளந்திரையன் காஞ்சியைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சி புரிந்து வந்தான். இவனே பெரும்பாணாற்றுப்படைக்குத் தலைவன் ஆவான். அரசனாகவும், கொடை வள்ளலாகவும், தமிழ்ப்புலமை உரையவராகவும் விளங்கினான். ஓர் அரசன் எவ்வாறு ஆட்சி செய்யவேண்டும் என்பதை ஒரு பாடலாக தந்தான். அப்பாடலில்,

**``கால்பார் கோத்து ஞாலத்து இயக்கும்**
**காவற் சாகாடு உகைப்போன் மாணின்**

--------------------------------------------

**மிகப்பல் தீநோய் தலைத்தலைத் தருமே"** (புறம் - 185)

என ஆற்றுப்படுத்தியுள்ளான். சக்கரத்தோடு அடிமரமும் சேர்ந்து இயங்கும் வண்டியைப் போன்றது இவ்வுலகம். வண்டியைச் செலுத்துபவன் திறமை உடையவனாக இருந்தால் வண்டி இடையூறு இல்லாமல் செல்லும். அவன் திறமை இல்லாதவனாக இருந்தால் வண்டி சேற்றில் சிக்கிக் கொள்ளும். அதுபோல் மன்னன் அரசாளும் திறமையுடையவனாக இருந்தால் நாடு வளம்பெறும். இல்லையேல், பலவிதமான கொடிய துன்பங்கள் வந்துசேரும். இவ்வாறு தொண்டைமான் கூறுவதை காணுமிடத்து, சங்ககால மன்னர்களின் திறமையும் புலனாகின்றது.

**கோப்பெருஞ்சோழனின் நட்பு**

கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்த பொழுது, அவனைச் சூழ்ந்திருந்தவர்கள், பிசிராந்தையார் பாண்டிய நாட்டிலிருந்து சோழ நாட்டிற்கு வந்து வடக்கிருக்கும் கோப்பெருஞ்சோழனைக் காண வருவாரோ என்று கேட்டனர். அதற்கு பதிலுரைத்த கோப்பெருஞ்சோழன்,

**``கவைக் கதிர் வரகின் அவைப்புறு வாக்கல்**
**தாதொரு மறுகின் போதொடு பொதுளிய**

--------------------------------------------

**அல்லற் காலை நல்லலன் மன்னே"** (புறம் - 215)

என மொழிந்தான். இதில், கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையாரை என் உயிரைப் பாதுகாப்பவர் என்று புகழ்கிறான். ஆட்சியிலிருந்த காலத்தில் பார்க்காவிட்டாலும், துன்பத்தில் தவிக்கும்போது தன்னை பார்க்க வராமல் இருக்கமாட்டார் என்று உரைத்தான். இத்தகு மொழிகளைக் காணும்போது கோப்பெருஞ்சோழன் நட்பும், புலமையும் புலனாகிறது. மற்றொரு பாடலில்,

**``இகழ்விலன்; இனியன்; யாத்த நண்பினை;**
**புகழ்கெட வரூஉம் பொய்வேன் டலனே;**
**..............................................................................**
**இன்னே வருகுவன்; ஒழிக்க அவற்கு இடமே!”** (புறம் - 216)

என்றவாறு சிறப்பிக்கிறான். பிசிராந்தையார் தன்னை ஒருபோதும் இகழாதவன். மிகவும் இனியவன். நெருங்கிய அன்புடையவன். புகழை அழிக்கும் போலித்தனங்களை விரும்பாதவன். அவன் பெயர் கேட்டால் தன் பெயர் களங்கமில்லாத சோழன், என்று கூறும் சிறந்த அன்பும் உரிமையும் உடையவன். அவன் இப்போதே வருவான் என கோப்பெருஞ்சோழன் புகழுமிடத்து இருவரின் நட்பும் வெளிப்படுகின்றது.

**அரசியின் மனதிட்பம்**

ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் இறந்தவுடன் அவன் உடல் சுடுகாட்டில் எரிக்கப்பட்டது. அவன் மனைவி பெருங்கோப்பெண்டு, தானும் அந்த ஈமத்தீயில் மூழ்கி இறக்கத் துணிந்தாள். அங்கிருந்த சான்றோர் பலரும் அவளைத் தீயில் விழாமல் தடுத்தனர். ஆனால், அவள் கணவன் இல்லாமல் கைம்மை நோன்பை மேற்கொண்டு வாழ்வதைவிட இறப்பதே சிறப்பு எனக் கூறினாள். அந்நிலையில் ஒரு பாடலை தத்துள்ளார்.

``பல்சான் றீரே! பல்சான் றீரே!
செல்கெனச் சொல்லாது, ஒழிகவென விலக்கும்
.................................................................
வள்இதழ் அவிழ்ந்த தாமரை
நள்இரும் பொய்கையும் தீயும்ஓர் அற்றே! (புறம் - 246)

என்பது அரசியின் மனவுறுதி, கணவனை இழந்து கைம்மை மேற்கொள்ளும் வாழ்வை தான் விரும்பவில்லை என அரசியார் கூறுகிறார். மேலும், ஈமத்தியும் தனக்கு தாமரைகள் நிறைந்த பெரிய குளம் போன்றது என்கிறார். இதுபோன்ற மனவுறுதியுடைய அரசியரின் பாடலைக் காணும்போது அவரது புலமையும் அதனுள் ஒளிவிடுகின்றது.

**முடிவுரை**

சங்க காலத்தில் செங்கோல் ஆட்சி புரிந்த மன்னர்களின் வரலாற்றை நாம் பலவழிகளில் அறிகின்றோம். அத்தகு வரலாற்றினை ஆய்ந்துணரும் நிலையில் மன்னர்கள் அரசாளும் திறமையுடன் கவிபாடும் புலமையும் பெற்று சிறப்புற்று விளங்கியமையும் புலனாம். வீரம், அரசநீதி, குழந்தைச் செல்வம், கல்வியின் மேன்மை, அரசர் புலவர் நட்பு, மனவுறுதி போன்ற பல்வேறு கருத்துகளை தம் பாடல்களின் வாயிலாக பதிவு செய்துள்ளனர். புலவர்களின் பாடல்களுக்கு ஒப்பாக பாடல் இயற்றும் நயம் மிகுந்துள்ளன. மேலும், மன்னர்களின் அக்கால வழக்கங்கள் அதனுள் மிளர்கின்றன. தமிழரின் பண்பாட்டுக்

களஞ்சியமாகத் திகழும் புறநானூற்றில் அரசர்களின் பாடல்களை ஆராயும்வழி அவர்களது வரலாறும், ஆளுமையும் புலனாவதைக் காணமுடிகின்றது.

**துணைநின்ற நூல்கள்**

1. ஞா. மாணிக்கவாசகன் - புறநானூறு (மூலம் உரையும்)
உமா பதிப்பகம், சென்னை - 600 001.
2. கா. சுப்பிரமணியம்பிள்ளை - திருக்குறள் (மூலமும் உரையும்)
பூம்புகார் பதிப்பகம், சென்னை - 600 108.
3. முனைவர் இரா. செயபால் - அகநானூறு (மூலமும் உரையும்),
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை - 600 098.
4. இளவழகனார் (உரை) - பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்,
திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை



# 16. பெரும் பெயர் உலகம் பெறீஇயரோ

முனைவர் **கி. துர்காதேவி**,
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, வேல்ஸ் பல்கலைக்கழகம், சென்னை.
DOI 10.5281/zenodo.15066935.

**Abstract:**

As soon as we hear Kurinji, we know that it means a mountain and a mountainous place! The life of the Kurinji people, who lived in harmony with nature in the Kurinji valley, which is rich in natural resources, was a pioneer of civilization. The ancient Tamils knew the nature of the landscape well and conveyed it to the world.

**Key Words:** Sangam Literature - Kurinji Land - Kapilar - Civilization

குறிஞ்சி என்றவுடன் மலையும் மலை சார்ந்த இடமும் என்பது நாம் அறிந்ததே! இயற்கை வளம் நிறைந்த குறிஞ்சித் திணையில் இயற்கையோடு இயற்கையாக வாழ்ந்த குறிஞ்சி மக்களின் வாழ்க்கை நாகரீகத்தின் முன்னோடியாக திகழ்ந்தது எனலாம். நிலத்தோற்றத்தின் தன்மையை பண்டைய தமிழர் நன்கு அறிந்து உலகிற்கு உணர்த்தி உள்ளனர்.

**“நிலம் நீர் தீ வழி விசும்போடு ஐந்தும்
கலந்த மயக்கம் உலகம்”**

எனத் தொல்காப்பியர் சுட்டுகிறார்.

புவியானது மிகுவெப்பநிலையில் புறத்தில் வெளி தள்ளப்பட்ட நிலையில் மலை தோன்றி, பின்னர் மழைநீர், பனி முதலியவற்றால் கரைந்து மண்ணாக ஆகுவதையும் அறிந்தோமானால் மலையின் தோற்றம் உலகத் தோற்றத்தில் எவ்வளவு பழமையானது என்பதை அறிந்து கொள்ளலாம்.

மண் தோன்றும் முன் மலை தோன்றிய பழமையை எண்ணியே **ஐயனாரிதனார் கல் தோன்றி மண் தோன்றா முன்னர்** என்றார் போலும். நீரின் தன்மையால் மலைகள் பொடிந்து கடலுள் பொதிந்து அங்கிருந்தும் மலைகள் தோன்றும். மலைகள் புதியனவாகத் தோன்றலும் தேய்ந்து மறைதலும் இயற்கையின் விளைவுகள் என்று ஜேப்ரி ஹார்ல்ட்ஸ் The future of the earth" என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

மலைகள், நீரிலிருந்து தோன்றும் தோற்றத்தினைப் பழந்தமிழில் புலவர்கள்,

**”மலை நாறிய வியன் ஞாலம்”
"மாமலை நாறிய ஞாலம்**“

என்றும் குறிப்பிட்டுள்ளனர்.

மாமலையும் கடலுள் மூழ்கும் என்கிற நிலவியல் உண்மையை குறுந்தொகை அழகாக எடுத்துக் கூறியுள்ளது. குமரிமலையோடு பல மலைகள் இருந்தமையும், அவற்றில் குமரிமலை உயர்ந்து தனித்தன்மையுடன் விளங்கியமையும், அவை ஒருசேரப் பின்னாளில் கடலால் கொள்ளப்பட்டமையும் சிலப்பதிகாரத்தால் உணர்த்தப்படுகின்றன.

மலையில்தான் மக்கள் முதனமுதலாக வசிக்கத் தொடங்கினர் பழந்தமிழரும் மலையில்தான் முதன்முதலில் வாழ்வு பெற்றனர் என்பர்."என்கிற திரு வி க . (இமயமலை

அல்லது தியானம்) மேற்கூறிய கருத்துகளிலிருந்து பண்டைய தமிழர்களின் நிலத்தோற்றம் மற்றும் மலைத்தோற்றம் பற்றிய கூற்றுக்கள் நிலவியல் கருத்துக்களோடு பொருந்துவதை அறியலாம்.

நிலம் என்பது திணை அடிப்படையில் நான்காக அமைய பகுதியை உணர்த்திற்று. பத்துப்பாட்டில் திணை என்பது நிலத்தை குறித்து வந்துள்ளது. பஃறிணை எனவும்" ஐம்பால் திணை எனவ சுட்டப்படுகின்றது.சங்க நூல்களில் திணை பற்றிய பொதுவான இயல்பு பாடல்களில் காணக் கிடைக்கிறது. அவற்றில் திணை பற்றிய பொது அறிவினையும், முன்னிலமாகக் குறிஞ்சி நிலத்தினையும் வைத் பாடியதையும் அறியலாம்.

குறிஞ்சி என்பது முதலில் புணர்தல் ஒழுக்கத்தைக் குறித்துப் பின்னர் மலைநிலத்தைக் குறித்தது என்றும், குறிஞ்சி என்னும் ஒழுக்கத்தின் பெயரே குறிஞ்சி நிலத்திற்கும் குறிஞ்சி மலர்க்கும் பெயராயிற்று என்றும் வலியுறுத்துவர். சங்க காலப் புலவர்கள் மலை பற்றிய காட்சிகளில் தோய்ந்து இன்புற்று மனித உணர்ச்சிகளுக்கு முதலிடம் தந்து பாடியதை அவர் தம் கவிதையில் காணலாம். மலையினைக் கண்டு மனித உணர்ச்சியின் வெளியீடாக மலையை நோக்கிப் பாடியும், இரங்கியும், ஆறுதல் அளித்ததுமான, நிலைகளில் செய்யுள் இயற்றுவாராயினர். சிறந்த பண்பிறகு, ஒர் எடுத்துக்காட்டாக மலை இலங்குவதை விவிலிய நூல் குறிப்பிடுகிறது. மனித உள்ளங்களில் மேன்மைக்கு எடுத்துக்காட்டாக விலங்குவதைக் "**குணமென்னும் குனறு**", "**குன்றன்னார்**" என்னும் வள்ளுவரின் தொடர்கள் உணர்த்துகின்றன.

**குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி**
**கணமேயும் காத்தல் அரிது**.(**குறள்** - 29)
**குன்றன்னார் குன்ற மதிப்பின் குடியொடு**
**நின்றன்னார் மாய்வர் நிலத்து**. .(**குறள்** - 898)

மலையை நோக்க, அதன் உயர்ச்சியையும், பரப்பினையு திண்மையையும் கண்டு பவணந்தி முனிவர்,

**"அளக்க லாகா அளவும் தோற்றமும்**
**துளக்க லாகா பொருளும் மேன்மையும்**
**வறப்பினும் வளந்தருமவண்மையும் மலைக்கே"**
**(நன்னூல் - சிறப்புப் பாயிரம்)**

என்று மலையின் இயல்புகளைப் போற்றி அதனை நல்லாசிரியனுக்கு உவமையாக நன்னூல் சிறப்புப் பாயிரத்தில் கூறுகின்றார்.

குறிஞ்சிப் புலவர்கள், மலையைப் பாடுகின்றபோது, மலை, மேகம் மழை, அருவி, ஆறு, சுனை, பொழுது, மலைவழி ஆகியவற்றை எழில்மிக்க சொல்லோவியங்களாகத் தீட்டியுள்ளனர். மலைக்காட்சியில் ஈடுபாடுகொண்ட புலவர்கள் மலையின் உயர்ச்சி, அருவியின்வீழ்ச்சி, மலைமிசைபடியும் முகில் முதலியவற்றைச் சிறப்பித்துள்ளனர்.

தமிழகத்தின் மலைகள் மிகவும் தொன்மை வாய்ந்ததாகத் திகழ்கின்றன. தாழ்ந்து பிளவுபட்டு சமச்சரிவுடனும் பரந்த பள்ளத்தாக்கினை கொண்டும் நிலநடுக்குமோ மலைச்சரிவோ பெரும்பாலும் இல்லாத வாழ்வும் அமைந்த மலைகளையே முதிர்ந்த மலைகள் எனலாம். இதன்படி நோக்கும்பொழுது தமிழக மலைகளின் தொன்மை நன்கு

விளங்கும். குமரிமலையோடு பல மலைகள் இருந்தமையும், அவற்றில் குமரிமலை உயர்ந்து தனித்தன்மையுடன் விளங்கியமையும், அவை ஒருசேரப் பின்னாளில் கடலால் கொள்ளப்பட்டமையும் சிலப்பதிகாரத்தால் உணர்த்தப்படுகின்றன.

மலையில்தான் மக்கள் முதனமுதலாக வசிக்கத் தொடங்கினர் பழந்தமிழரும் மலையில்தான் முதன்முதலில் வாழ்வு பெற்றனர் என்பர்."என்கிறார் திரு.வி.க. (இமயமலை அல்லது தியானம்) மேற்கூறிய கருத்துகளிலிருந்து பண்டைய தமிழர்களின் நிலத்தோற்றம் மற்றும் மலைத்தோற்றம் பற்றிய கூற்றுக்கள் நிலவியல் கருத்துக்களோடு பொருந்துவதை அறியலாம்.

திணை அமைப்பை மலை நின்ற வழிக் குறிஞ்சியாகவம், காடு மண்டிய வழி முல்லையாகவும், ஆறு பாய்ந்த நெறி மருதமாகவும், கடல் சார்ந்த வெளி நெய்தலாகவும் பழந்தமிழர் கண்டு நானிலம் என உலகிற்கு உணர்த்தினர். குறிஞ்சியம், முல்லையும் முறைமையில் திரிந்து நல்லியல்பு இழத்தலைப் பாலையாகக் கண்டனர். இவ்வாறு அமைந்த ஐந்திணை அமைப்பு, இயற்கை நில அமைப்பை ஒட்டியதாகும்.

பண்டைக் கிரேக்க நாட்டாரும் நிலச் சூழலை ஒட்டியே தங்கள் வாழ்வமைப்பை மேற்கொண்டனர். இசையின் பொருட்டு நிலத்தை ஐந்து பகுதிகளாகப் பிரித்தனர் என்று தமிழ் கல்ச்சர் என்னும் நான் குறிப்பிடுகிறது.

வடமொழியிலும் ஐந்திணை மக்களைக் குறிக்கும் தொடர்கள் ரிக் வேதத்தில் உள்ளதாகக் குறிப்பிடுவர்.

**இயற்கையும் புலவர்களும்**

நிலத்தோற்றமும் வான் தோற்றமும் இயற்கையின் களன்களாகும். மனிதன் தோன்றுவதற்கு பன்னெடுங்காலம் முன்பே நிலவி வருகின்ற இத்தோற்றங்கள் அனைத்தும் தோற்றம் பெற்றதே இயற்கையாகும். மலை, கடல், காற்று, கல், மண், மரம், மா, புள் என்பவை நிலத்தோற்றத்தின் இயற்கைப் பொருள்கள். ஞாயிறு. திங்கள், விண்மீன், மழை, முகில், மின்னல் என்பவை வான்தோற்றத்தின் இயற்கைப் பொருள்கள் ஆகும்.

நிலத்தோற்றத்தையும் வான் தோற்றத்தையும் கண்டு, உணர்ந்து, தெளிவு பெறுவது மனிதப் பண்பு. இவற்றிற்கும் மனிதனுக்கும் உள்ள உறவு மனிதன் தோன்றிய நாள் தொட்டே இருந்து வரும் ஒன்றாம்.

இயற்கை பற்றிய எண்ணங்களால் அதன் காட்சிகளைக் கண்டு அகம் மகிழ்கிறது. இந்த அகமகிழ்ச்சியில் திளைத்தவர்கள், இயற்கை பற்றிய உணர்வுகள் பலவற்றை வெளியிட்டனர். இயற்கையில் பல்வேறு கோலங்கள் பாங்குற அமைந்துள்ளன எனக்கண்டனர்.

மலையையும், கடலையும், வானையும் கண்டு அவற்றின் போக்கிலே நின்று வியப்பதை விட, அவற்றைத் தம் உள்ள உணர்வோடு இயைபுபடுத்தி அடைகின்ற உணர்ச்சி அளவிட முடியாதது. உள்ளத்து உணர்வுகளைப் புலவர்கள் தங்கள் பாடல்களில் குறித்தனர்.

பெரும் பெயர் உலகம் பெறீஇயரோ என்ற தலைப்பில் குறிஞ்சி நில மக்களின் இயற்கையோடு இணைந்த வாழ்க்கையைப் பற்றி காண்போம்.

**"காம மொழிவ தாயினும்**
**யாமத்துக் கருவி மாமழை**

**வீழ்ந்தென வருவி விடரகத்**
**தியம்பு நாடவெம் தொடர்புந்**
**தேயுமோ நின்வயி னானே" (குறுந் - 42)**

மழை நீங்கினும் மழையால் உண்டான அருவி இடையறாது வீழும்.அது போலத் தலைவனொடு ஒருநாள் பழகினும் அந்நாள் பயின்ற நட்புப் என்றும் அழியாது என்று விளக்குதற்குக் குறிஞ்சிக் கருப்பொருளான அருவிச் சூழலைக் கபிலர் எடுத்துக் காட்டுகின்றார்.

சங்க இலக்கியத்தைக் காணும்போது, குறிஞ்சி நிலத்தின் இயற்கையைப் பாடுவதில் புலவர்கள் விழைவும் வேட்கையும் கொண்டிருந்தனர் என்பது விளங்கும். புலவர்கள் ஏனைய காட்சிகளைத் தீட்டுவதைக் காட்டிலும், குறிஞ்சிக் காட்சிகளைத் தீட்டுவதில் சிறப்பான ஆர்வம் காட்டியுள்ளனர். குறுந்தொகையைப்பற்றியும் குறிஞ்சிப் பற்றியும் பேசும்போது கபிலர் பற்றி நாம் பேசாமல் நகர முடியாது.

**குறிஞ்சியும் கபிலரும்**

கபிலர் குறிஞ்சி வாழ்க்கையர்; வேள்பாரியின் விழுமிய நண்பர்; பாரியின் பறம்பு மலையில் வாழ்ந்தவர், பறம்பு மலையின் இயற்கை எழிலில் தோய்ந்தவர்; குறிஞ்சி நிலத்தின் செல்வ வளங்களைக் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறியும் பெற்றி படைத்தவர்.

சங்க நூல்களில் மிகுதியான பாடல்களைப் பாடிய பெருமை கபிலருக்கு உரியதாகும். அவருடைய பாடல்களில் குறிஞ்சி வளமும் அவர்தம் புலமையும் பின்னிக்கிடக்கின்றன. குறிஞ்சி நிலத்தில் காணப் படும் மரம், செடி, கொடிகள், விலங்குகள், பறவைகள் முதலியன பற்றித் தெளிவாக உணர்ந்து அழகுற விளக்கியுள்ளார்.

குறிஞ்சித் திணைப் பாடல்களை மிகுதியாகப் பாடிய புலவர்களில் கபிலரே முதன்மை யானவர். இவர் பாடிய இருநூற்று முப்பத்தைந்து பாடல்களில் அகப் பொருள் குறித்தவை நூற்றுத் தொண்ணூற்று ஏழு. அவற்றுள் நூற்றுத் தொண்ணூற்றொரு பாடல்கள் குறிஞ்சித் திணைக்கு உரியன. புறப்பாடலாகப் புறநானூற்றில் இடம் பெறும் இருபத்தெட்டுப் பாடல்களில் பதின்மூன்று பாடல்களில் குறிஞ்சியின் கூறுகளைக் காணலாம். இருநூற்றறுபத்தோர் (261) அடிகளையுடைய குறிஞ்சிப் பாட்டில் எங்கும் புறப்பொருள் கூற்றைக் காணவியலாது. ஒவ்வோர் அடியும் அகப்பொருள் பற்றியதாகும். வோர்ட்ஸ்வொர்த்திற்கு, இயற்கை எழில்மிக்க மலைக்காட்சி அமைந்தது போன்று, கபிலருக்குப் பறம்பு அமைந்தது எனலாம்.

மலைக் காட்சியினை நோக்கும் கபிலர், அக்காட்சியில் பெரிதும் ஈடுபாடு கொண்டவர் என்பதனை அவர்தம் பாடல்களால் அறியலாம். இரண்டு மலைகள் எதிரெதிராக அமைந்துள்ளன. பாறையில் இருந்து அருவிநீர் இருபுறத்தும் வீழ்கின்றது. உயர்ந்த வேங்கையின் கிளைகள் மேல் அருவி நீர் தாக்குகின்றது. இக்காட்சியினைக் கூர்ந்து நோக்குகின்றார் கபிலர். திருமகளை இருயானைகள் இருபுறமும் நின்று நீராட்டிப் பூச் சொரிந்து போற்றுவது போன்று இருப்பதாகக் கபிலர் கலித்தொகைப்பாடலில் (44) கவினுறப் புனைந் துரைக்கின்றார்.

**கதிர் விரி கனை சுடர்க் கவின் கொண்ட நனம் சாரல்**
**எதிர் எதிர் ஓங்கிய மால் வரை அடுக்கத்து,**
**அதிர் இசை அருவி தன் அம் சினை மிசை வீழ,**
**முதிர் இணர் ஊழ் கொண்ட முழவுத் தாள் எரி வேங்கை,**
**வரி நுதல் எழில் வேழம் பூ நீர் மேல் சொரிதரப்,**
**புரி நெகிழ் தாமரை மலர் அம் கண் வீறு எய்தித்**
**திரு நயந்து இருந்தன்ன தேம் கமழ் விறல் வெற்ப! (கலி-44)**

இயற்கையைப் பாடிய புலவர்கள் சிலர் தம் பாடல்களில் அமைந்த தொடர்கள் சிலவற்றினாலேயே பெயர் பெற்றுள்ளார்கள். செம்புலப் பெயல் நீராகக் கலந்த காதல் நெஞ்சங்களைக் காட்டுகின்ற புலவர் செம்புலப் பெயனீரார் என அழைக்கப்படுகின்றார் (குறுந்.225). இரவுப் போதில் களவிற்கு இடையூறாய் நின்று ஒளி காட்டும் நிலவினை நெடுவெண்ணிலவ எனக்குறிப்பிடும் புலவர், நெடுவெண்ணிலவனார் என்னும் பெயர் பெறுகிறார். வளைத்துப் பின் விடப்பட்ட மூங்கில், விரைந்து மேலெழும் காட்சிக்கு அவிழ்த்து விடப்பட்ட குதிரை, துள்ளி எழும் காட்சியை உவமையாகக் கூறுகின்ற புலவர் விட்ட குதிரையார் என்னும் பெயர் பெறுகிறார்.

தாம் பாடிய பாடற் செய்திகள் வாயிலாகவும் சிலர் சிறப்பிக்கப் பெறுகின்றனர். வெறியாடல் நிகழ்ச்சியினை விரிவாகப் பாடிய புலவர் வெறிபாடிய காமக்கண்ணியார் எனச் சிறப்பிக்கப் படுகின்றார். மடல ஏறுவதை இருபாடல்களில் குறிப்பிட்டுள்ள புலவர் மடல் பாடிய மாதங்கீரனார் என்னும் பெயரினைப் பெறுகின்றார்.

குறிஞ்சியின் எத்தகைய காட்சியாயினும், புலவர்கள் தாம் கண்ட நோக்கில் மனம் ஒன்றிப் பாடியுள்ளதை அறியலாம்.

குறிஞ்சி நில மக்களின் வாழ்க்கை என்று பார்க்கும்பொழுது, மக்கள் அவரவர் வாழும் சூழலுக்கேற்பவும், செய்தொழிலுக் கேற்பவும் பெயரிட்டழைக்கப்பட்டனர்.குறிஞ்சி மக்கள், வேட்டைத் தொழில் புரிவோர், தினை பயிரிடுவோர் என இருவகைப் பிரிவினராவர். குன்றவர், குறவர் என்பன பொதுவாகக் குறிஞ்சி மக்களுக்குப் பெயர்களாய் அமைந்தன. குறிஞ்சி நிலத்தவருள், கானத்தில் வாழ்வோர் கானவர் என்றும், குறிஞ்சியில் வாழ்வோர் குறவர் என்றும், குன்றுகளிலும் கொடுமுடிகளிலும் வாழ்வோர் குன்றவர், கொடிச்சியர் என்றும் வழங்கப் பெறுவர். கணணியன், வில்லன், கழலன், "தாரன்," என்னும் பெயர்கள் முறையே வேட்டுவருள் தலையில் பூ அணிந்தவனையும், கையில் வில்லுடையவனையும், காலில் கழல் அணிந்தவனையும், மார்பில் மாலை அணிந்தவனையும் குறித்தன.

சுவனர் என்போரும், கிணையர் என்போரும் தாம் கொண்ட கருவிகளால் பெயரிட்டழைக்கப் பட்டனர். வேட்டுவருள் வலையர் என்னும் பிரிவினர் இருந்தனர். இவர்கள் விலங்குகளின் சோர்வைச் செவ்விதின் நோக்கும் திறமுடையராவர், புலைத்தொழில் செய்வோர் புலையர் எனப்பட்டனர். கானவர், வீளையர், மறவர்," மலையர்," எனப் பொதுநிலையில் வேட்டம் புரிவோர் அழைக்கப்பட்டனர். குறிஞ்சி நிலத்து ஆடவன் நாடன்" வெற்பன் " சிலம்பன்,"என அழைக்கப்பட்டனான். குறிஞ்சிநிலத்துப் பெண் கொடிச்சி" குறமகள் என அழைக்கப்பட்டாள்.

குறிஞ்சி நில மக்கள் தொழிலால் தங்கள் வாழ்வை மேம்படுத்தினர். அவர்களின் வலிமைக்குக் காரணம் இயற்கையாக எளிதில் பெற்ற காய்கனிகளும், பிறவுமேயாகும். வேட்டைப் புரிந்து விலங்குணவு பெற்றனர். மக்கள் உணவின் மேன்மையினை அறிந்திருந்தனர்.

**உணவு**

குறிஞ்சி, நிலம் உழவர் உழாமலேயே மிக்க பயன் தருவதாகத் திகழ்ந்தது. வெதிர் நெல்,பலா, வள்ளிக் கிழங்கு, தேன் முதலியன இயற்கை வழி எளிதாக கிடைத்தன.

குறிஞ்சி நிலத்தவரின் பொது உணவான தேனும்,கிழங்கும் நிறையச கிடைத்தன. அதனைப் பிற நிலத்தார்க்கு விற்று மீனும், நறவும் பெற்றனர். பலாவின் கொட்டை, மா, புளி, மோர் ஆகியவற்றாலான குழம்பை ங்கில் அரிசிச் சோற்றுடன் கலந்து உண்டனர்.விழாக் கொண்டாடும் இப்பு நாள்களில் நெய் மிகுந்த உணவு உட்கொண்டனர். மரத்தின் உராய்வால் தீ உண்டாவதை அறிந்த மக்கள், தீக்கடைக் கோலால தீயினை உண்டாக்கி, அத்தீயில் இறைச்சியை வாட்டி உண்டனர். முங்கிலில் உண்டான தீயை இதற்குப் பயன்படுத்தினர். பலால் நாறாதவாறு புகையினை மூட்டிப் பக்குவப்படுத்தி உண்டனர். 30 கோழி ஆரல் மீன், மான் இவற்றைச் சந்தன விறகில் சுட்டு விருந்தினர்க்கு வழங்கினர்.

குறிஞ்சி மாந்தர் சமுதாயத்தில் சிறக்க வாழ்ந்தவர் என்பதனை அவர்களின் விருந்தோம்பல் முறையாலும், கவர்ந்து வந்த விலங்கின் ஊனைப்பகுத்துச் சிறுகுடியில் உள்ளோர்க்கு வழங்குதலாலும் அறியலாம்.

**உடை**

குறிஞ்சிவாழ் மக்கள் மரப்பட்டையிலிருந்து உரித்தெடுத்தநாரால் நெய்யப்பட்ட உடையினை அணிந்தனர். காந்தள், அசோகு, விளா,புன்கு முதலிய தளிர்களைக் கொண்டு ஆடை புனையக் கற்றிருந்தனர். அசோகின் தழையினையும், 8 குவளை மலர்களை விரவித் தொடுத்த தழையினையும்"மகளிர் அணிந்தனர். வேங்கைப் பூவால் ஆடை தொடுத்து மகளிர் அணிந்த செய்தியினை ஐங்குறுநூற்றால் அறியலாம். கொய்த தழையினை மகளிர் இடுப்பில் அணிவது வழக்கம். அக்கால மக்கள் நுண்ணிய நூலாலான பருத்தியாடையை அணிந் திருந்தார்கள். பூவேலைப்பாடு நிறைந்து விளங்கிய பருத்தியாடைவை அவர்கள் அணிந்திருந்தமையினைக் கலித்தொகை உணர்த்துகிறது அழகிய கச்சினை ஆடை ஆடவர், நெகிழாதவாறு இறுகக் கட்டிக் கொண்டனர்

நீராடலுக் கென்று தனியுடையும், புணர்ச்சிக் கென்று இரவில் தனியுடையும் அணிந்து கொண்டனர். பண்டை நாளில் மகளுக்குத் தாய் தழையுடை தருகின்ற வழக்கம் இருந்தது. தலைவிக்குத் தலைவன் தழையுடை அளிப்பன்." ஏற முடியாத மலைமீது ஏறித் தலைவிக்காக ஒரு தலைவன் தழையுடையினைக் கொணர்ந்த செய்தியை ஒரு நற்றிணைப் பாடலால் அறியலாம்.

**உறையுள்**

உணவு உடை, உறையுள் என்பவற்றில் உணவிற்கு முதலிடம் தந்து மனிதன், உடையணியக் கற்றான். இயற்கை விளைவிக்கும் அச்சங்களிலிருந்து விடுபட அவனுக்கு இருப்பிடம் தேவைப்பட்டது. மறைவிடங்களில் தங்கி விலங்குகளிடமிருந்து தன்னைக்

காத்துக் கொள்ளப் பழகிய மனிதன், பறவையின் கூடுகளையும், விலங்குகள் வாழ்ந்த குகைகளையும் கண்டு அவற்றைப் போன்ற உறைவிடங்களில் தானும் வாழலாம் என உணர்ந்தான்.

குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த குறவர் ஊகம் புல்லால் குடிசை வேய்ந்தனர். மிகவும் உயரமான இடத்தில் குறவரது குடில், மலைப் பல்லால் அமைந்திருந்தது. மலையின்கண் கற்களுக்கிடையில் குறவர் இல்லம் அமைத்தனர். அவர்களின் குடில் குரம்பை என அழைக்கப்பட்டது. அணிகலன்கள், தொழில்கள், விழாக்கள், நம்பிக்கைகள், சடங்குகள், பொழுதுபோக்கு என அனைத்திலும் குறிஞ்சிமக்கள் சிறந்திருந்தனர். அவர்களின் வாழ்வு முறை பெரும் பெயர் உலகம் பெற்றதாக சிறப்புற்று அமைந்திருந்தது.

**அரும் பெறல் அமிழ்தம் ஆர்பதம் ஆகப்**
**பெரும் பெயர் உலகம் பெறிஇயரோ அன்னை**
**தம் இல் தமது உண்டன்ன சினை தொறும்**
**தீம் பழம் தூங்கும் பலவின்**
**ஓங்கு மலை நாடனை வரும் என்றாளே!(குறுந் . 83) வெண்பூதனார்**

வரைவுக்குரிய முயற்சிகளோடு வந்த தலைவனைச் செவிலி ஏற்றுக் கொண்டமையை கண்ட தோழி அச்செவிலியை வாழ்த்தும் வாயிலாகத் தலைவிக்கு உணர்த்தியது.இதனால் தோழி தலைவிக்குத் தலைவன் வரைதற்குரிய முயற்சிகளைச் செய்து விட்டதையும் அன்னை முதலியோர் அதற்கு உடன்பட்டதையும் உணர்த்தினாள்.

உயர்ந்த மலைநாட்டுத் தலைவன் வரைதற்குரிய பொருளோடு வருவான் என்று கூறிய அன்னை பெறுதற்குரிய அமிழ்தத்தை உண்ணும் உணவாகப் பெற்றுப் பெரும்புகழுடைய சுவர்க்கத்தைப் பெறுவாளாக!

**நிறைவாக**

- மலைவாழ்க்கையரான குறிஞ்சி மக்களின் வாழ்வை உணர்த்திய குறிஞ்சித் திணைப் பாடலகளின் வழி இன்றைய மலைவாழ் பழங்குடியினரின் பண்புகளையும் காணலாம்.
- குறிஞ்சித் திணைப் பாடல்கள் இலக்கிய வளர்ச்சிக்குப் பெரிதும் துணையாயிருந்தமையை அறியலாம். குறவஞ்சி, தூது, கோவை முதலிய சிற்றிலக்கியங்கள் தோன்றச் சங்க இலக்கியக் குறிஞ்சித் திணைப் பாடல்கள் துணைபுரிந்தமையையும் அறியலாம்.
- குறிஞ்சிநில மக்கள் பெரும் பெயர் உலகினில் நல்வழ்க்கை வாழ்ந்தனர் என்பது இவ்வாய்வின் வழி அறியலாகிறது.

**பார்வை நூல்கள்**

1. இராகவையங்கார், மு. குறுந்தொகை விளக்கம்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம் (1959)
2. இராசமானிக்கனார், மா. டாக்டர்
தமிழ்மொழியின் இலக்கிய வரலாறு பாரி நிலையம் (1965)
3. கலியாணசுந்தரம், எம்.எஸ். தென்னாட்டு மலையூர்கள்,
தமிழ்ப் புத்தகாலயம், சென்னை (1961)
4. கலியாணசுந்தரம், திரு.வி. இமயமலை அல்லது தியானம்,
சாது அச்சுக் கூடம், சென்னை (1941).

## 17. சித்தர் இலக்கியமும் வரலாற்றுப் பதிவுகளும்

**முனைவர் ஏ.சாந்தகுமார்,**
**பட்டதாரி ஆசிரியர்,**
**தே பிரித்தோ மேல்நிலைப் பள்ளி, தேவகோட்டை, சிவகங்கை மாவட்டம் - 630 303, தமிழ் நாடு .மின்னஞ்சல் :santhakumar22061977@gmail.com - அலைபேசி : 97894 39212.**

**Abstract**

The evidence of Siddha literary evidence has been analyzed and compiled under ten headings for historical records. In the Siddha collection, especially the books of Siddhas like Nandisar, Agasthiyar, Thirumoolar, Bogar, Pulipani, Karuvurar, Konkanar, Theraiyar, Sattai Muni, Valluvar, etc., are recorded as evidence documents through a comparative checklist of book types based on the title in the books such as Padartha Guna, Targakam, Pranavam, Kanavu Nool, Gnanam, Yogam, Diksai, Jalam, Neekkuri. The concept, meaning, explanation, and examples under the above heading have been given as evidence. The titles are analyzed and compiled with the aim of being useful to new researchers in the future.

: Key WordsMaterial nature - logic - Pranavam - Kannavull - Gnanam - Yogam - Diksa - Jalam - Neekkuri.

### முன்னுரை

சித்தர் தொகையில் குறிப்பாக நந்திசர், அகத்தியர், திருமூலர், போகர், புலிப்பாணி, கருவூரார், கொங்கணர், தேரையர், சட்டை முனி, வள்ளுவர் போன்ற சித்தர்களின் பதார்த்த குணம், தர்க்கம், பிரணவம், கனவு நூல், ஞானம், யோகம், தீட்சை, ஜாலம், நீர்க்குறி .நோய், கர்ப்பம், வாகாரம், கன்மம்) காண்டம்(, சிந்தாமணி, திறவு கோல், தண்டகம், வாகடம் போன்ற நூல்களின் தலைப்பின் அடிப்படையில் ஒப்பீட்டு சரிபார்ப்புப் பட்டியல் வழியாக சான்று ஆவணமாக பதிவு செய்கிறது .சித்தர் இலக்கியப் பட்டியலின் நூல் வகைகளை கருத்து, பொருள் அடிப்படையில் சான்றுகளை ஒப்பீட்டு ஆய்வை செய்கிறது .

### பதார்த்த குணம்

புவியில் கிடைக்கக்கூடிய தாவர வகைகள், மூலிகைகள், மரங்கள் இவற்றின் இலை, பூ, காய், கனி, விதைகள், (வேர்கள் (இவற்றின் முழுமையையும் மருத்துவப் பயன்களை கண்டறிந்து தெளிவாக பகுத்தும் தொகுத்தும் சித்தர்கள் தந்திருக்கின்றனர் .எடுத்துக்காட்டாக : அகத்தியர் பதார்த்த குணாதிசய சூத்திரம் பதினாறு, அகத்தியர் அன்னசாரம் - தானிய வர்க்கம் .

தர்க்கம்

சித்தர்கள் தங்கள் அறிவை விரிவடையச் செய்வதற்காகவும், தெரிந்து தெளிந்து கொள்வதற்காகவும் தர்க்கம் செய்தனர் .சித்தர்கள் மாற்றுச் சிந்தனையாளர்கள் என்பது அவர்களின் தர்க்க விளங்கங்கள் வழியாக அறியமுடிகிறது .மனித நலம் கருதியே தர்க்கங்கள் நிகழ்த்தப்பட்டன என்று கருதமுடிகிறது .தவறான மனிதர்களிடம் இரகசியங்கள் மறை பொருளை வெளிப்படையாக சொல்லக்கூடாது என்பதே அவர்களின் நோக்கமாம் .போகர் மறை பொருளை வெளிப்படையாக கூறுவது நல்லதல்ல என்கிறார் அகத்தியர் .எடுத்துக்காட்டாக : அகத்தியர் தர்க்கம், அகத்தியர் தர்க்க சாஸ்திரம், சட்டை முனி தர்க்கம் .

### பிரணவம்

உலக இயக்க ஆற்றல்களின் மூலமாக பிரணவம் இருக்கிறது .அண்டமாம் உலகத்திற்கும் பிண்டமாம் உடலுக்கும் இடையே உள்ள தொடர்பே பிரணவமாம் .

வான்வெளியில் ஓசோன் அடுக்கு மண்டலக் காற்றாகவும், பிண்டத்தில் உயிர்க்காற்றான ஆக்சிஜனாகவும், கார்பன்டையாக்சைடு என்ற கரிம காற்றாகவும், ஹாட்ரஜன் மூலக்கூறில் நீராகவும், சூரிய ஆற்றலாகவும் அமையும் .தாவர வர்க்கங்களாகவும், நீராகவும் இடைநிலையில் அமையும் .வளி மண்டல காற்று அழுத்தம், உப்பின் சமநிலைத்தன்மையில் )அமிலம், காரம், உப்பு (அமையும் .ஐம்பூதங்களும் அடக்கமாக அமையும் .எடுத்துக்காட்டாக : நந்திசர் முப் பிரணவ சூத்திரம், நந்தீசர் பிரணவம், நந்தீசர் பிரணவ நூல் மூல நிகண்டு, நந்தீசர் பிரணவ சூத்திரம், கொங்கணர் நாயனார் பிராணோற்பத்தி லயம் .

**கனவு நூல்**

மனிதனின் விழி திறந்த நிலையில் நினைவும், விழி உறங்கிய போது கனவும் ஏற்படும் . தூங்காமல் தூங்கி அறிதுயிலில் இருக்கும் போது வெளி மனதின் வெளிபாடு உள் மனதின் வெளிப்பாடாக வரும் .ஆசைகள், தேவைகள் .சிக்கல்களுக்கான தீர்வுகள் கனவுகளில் வெளிப்படுகிறது .சிக்மண்ட் பிராய்டு என்ற உளவியல் அறிஞர் கனவுகளுக்கான விளக்கத்தை தருவதற்கு முன்பே கனவு குறித்த நூல்கள் தமிழ் சித்தர்களின் சிந்தனையில் வந்திருக்கின்றன என்பதை திருமூலர் கனவு நூல் வழியாக அறிய முடிகிறது .

**ஞானம்**

நன்கு நெறிப்படுத்தப்பட்ட மனம் ஒடுங்கி பக்குவநிலையடைந்த மாணக்கர்களுக்கு ஆசான்கள் ஞான நிலை அடையும் வழி முறையைக் கற்றுக் கொடுத்தனர்) .வேலுசாமி .துரை., சித்தர்களைப் பற்றி அறிந்துகொள்வொம், ப.30). ஒழுக்கநெறி தவறாத மாணவர்களுக்கே கற்றுக்கொடுத்தனர் .சித்தர் நிலையின் இறுதி நோக்கம் ஞானநிலை அடைவதாம் .உயிர் உள்ள காலத்தே ஊண் உடம்பைக் கொண்டு ஞானநிலையை அடைந்தனர் .எடுத்துக்காட்டாக : நந்தீசர் ஞானம் 10, நந்தீசர் ஞானம் 100, நந்தீசர் ஞானம் 1000, நந்தீசர் கலை ஞானம், அகத்தியர் கலை ஞான சுருக்கம், அகத்திய நாயனார் அருளிச் செய்த சகல கலை ஞானம் 1200, அகத்தியர் கலை ஞான சூத்திரம், அகத்தியர் கலை ஞான சூத்திரம் 1200 (வாத காண்டம்(, திருமூலர் ஞான சுருக்கம், போகர் ஞானம், கருவூரார் ஞானம் 500, கருவூரார் ஞானம், சட்டை முனி ஞான சூத்திரம் 200, சட்டை முனி நிகண்டு ஞானம், கைலாய சட்டை முனி ஞானம், சட்டை முனி முள் பின் ஞானம்.

**யோகம்**

ஓகம் என்ற தமிழ் சொல்லின் திரிபே யோகம் என்று மறுவி வந்திருக்கிறது .ஓகம் என்ற சொல்லுக்கு இருபொருள் படுத்துவர் .உடல், உள்ளம், (மனம் (உயிர் சேர்தல் என்றும் பிரிதல் என்றும் பொருள் படுத்துவர் .மனதை ஒருநிலைப் படுத்த உதவுகிறது .ஓகம் - ஆசனம் என்ற சொல்லின் சேர்க்கேயே யோகாசனமாம் .ஆசனங்களின் விதிகள் 108 சேர்ந்து இயங்குதலைக் குறிக்கிறது) .வேலுசாமி .துரை., சித்தர்களைப் பற்றி அறிந்துகொள்வொம், ப.30). சமாதி நிலை என்பதும் உயிர்க் காற்று ஒடுக்க நிலையைக் குறிக்கிறது .சமாதி நீடித்த நிலைத்த தன்மையைக் குறிக்கிறது .எடுத்துக்காட்டாக : போகர் வெண்பா யோக) ஓகம் (நூல்.

**தீட்சை**

தீட்சை என்பதற்கு சித்த மருத்துவத்தில் ஒரு சொல் குறித்த இரு பொருளாம் .சித்த மருத்துவத்தில் பாதரசத்தின் நீர் தன்மையை நீக்கும் முறை என்று பொருள்படும் .ஆசானாகிய குரு தன் மாணவனாகிய சிஷ்யனுக்கு வழங்கும் குருவின் ஆசிர்வாதமாம் .பாடம் பயிலும்

தொடக்க சடங்கே தீட்சையாம் .குரு தொட்டுக்காட்டாத வித்தை பாழ் என்பதற்கேற்ப அமையும் . தீட்சை என்பது குரு நாடியமையும் ஆக்ஞா சக்கரத்தையும் குறிக்கும் .குரு தனது கட்டை விரலால்சீடனின் புருவமத்தியில் அழுத்தி ஆதாரசக்திகளை தொடுப்பதுவாம் .எடுத்துக்காட்டாக :அகத்தியர் தீட்சை நாடி சூத்திரம், அகத்தியர் தீட்சை விதி 200, அகத்தீசுவரர் தீட்சைவிதி வைத்திய நூல், திருமூலர்) சிவ (யோக தீட்சை, திருமூலர் தீட்சா விதி, புலிப்பாணி தீட்சை, கொங்கணர் தீட்சை விதி, சட்டை முனி தீட்சா விதி .

**ஜாலம்**

மாயாஜாலம்) சால வித்தை (என்ற சொல்லின் பகுதியாக ஜாலம் என்ற சொல் வருகிறது . )வேலுசாமி .துரை., சித்தர்களைப் பற்றி அறிந்துகொள்வொம், ப.22). வித்தை இருவகைப்படும் . ஒரு பொருளை மறைத்துக் காட்டுவதும் வேகமாக நகர்த்தும் கைப்பிரட்டாம் .கருப்பு வித்தைக் கலை அறிவியல் தன்மையற்றது .சித்தர் நூல்களில் குறிப்பிடும் வெள்ளை வித்தைக் கலை அறிவியல் தன்மையுடையது .வாயில் வெற்றிலை பாக்கு போடுதல், தாம்புலத் தட்டில் ஆராத்தி எடுத்தல் சடங்கில் வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு, மஞ்சல் சேர்க்கும்போது சிவப்பு நிறமாக மாறுவதில் அமில - காரத்தன்மையில் அறிவியல் தன்மை நிறைந்திருக்கிறது .இரும்பு கத்தியில் செம்பருத்திப் பூவினை பலமுறை தேய்த்து எடுத்து, எழும்பிச்சைப் பழத்தில் அறுத்தால் சிவப்பு நிறத்தில் இரத்தம் போல் வரும் .மேற்கண்டவை இரசாயன மாற்றங்களைக் குறிக்கிறது .கோழி இறகுத் தண்டில் பாதரசத்தை ஏற்றி உள்ளே வைத்து அடைத்து, அதனை சூடு படுத்தினால், இறகு காற்றில் பறக்கும் .சூட்டினால் பாதரசம் விரிவடைவதே காரணமாம் .தற்கால அறிவியல் உலகில் பாதரச திரவமானியாக பரிணமித்திருக்கிறது .எடுத்துக்காட்டாக : அகத்தியர் இந்திரஜால நிகண்டு, அகத்தியர் கேசரி நூல் ஜாலத்திரட்டு, புலிப்பாணி ஜாலம் 325 (சிமிழ்வித்தை - 25).

**நீர்க்குறி**

ஒரு பீங்கான் தட்டில் சிறுநீர் கழித்து, அது தெளியும் வரை காத்திருந்து, நல்லெண்னையை ஒரு சொட்டு அதன் நடுவே விட, சிறு நீரில் சில மாற்றங்கள் நிகழும் .சில தன்மைகள் வெளிப்படும் .அதன் கண்டறிவு சோதனை வழியாக, சில அறிகுறிகளால் சில நோய்கள் தீரும் என்றும், சில அறிகுறிகளால் சில நொய்கள் தீராது என்றும், தேரையர் நீர்க்குறி நூல் வழியாக அறிந்து கொள்ளலாம்) .வேலுசாமி .துரை., சித்த மருத்துவ அகராதி - ஒரு கண்ணோட்டம், ப.ப .21 - 22). இரும்பு அறுத்தான் என்ற மூலிகையின் பட்டையை இரும்பில் போட்டு மூன்று தினங்கள் சிறுநீர் கழித்துவர இரும்பு உடைந்து இரும்புத் துகளாகமாறும் .சுடு சோற்றில் சிறுநீர் இருந்தால் மஞ்சல் காமலை இருக்கிறதா இல்லையா எனக் கண்டறிய முடியும் .பார்லி அரிசியின் நீரில் சோதனை செய்ய கருவாயில் குழந்தை தங்கியதா இல்லையா எனக்கண்டறிய முடியும்.

**நோய்**

சித்த மருத்துவத்தில் மனிதனுக்கு ஏற்படக் கூடிய நோய்களின் மொத்த எண்ணிக்கை 4448 நோய்கள் என்று வகைப்படுத்தப்பட்டுள்ளது) .வேலுசாமி .துரை., சித்த மருத்துவ அகராதி - ஒரு கண்ணோட்டம், ப.20). எல்லா காலத்திற்கும் பொதுவானது .இதுவே சித்த மருத்துவத்தில் நோயிக்கான எண்ணிக்கை முடிவாகும் .நோய்க்குறிகள், காரணங்கள், அடையாளங்கள், நோய்pன் பெயர்கள், தன்மைகள், தீர்வுகள், மருந்துகள் என்று சித்தர்கள் அட்டவணைப்

படுத்தியுள்ளனர் .வாதம், பித்தம், கபம் என்ற மூக்குற்றப்பிறப்பால், சமநிலைத்தன்மை நிலையால் கால் - அரை - முக்கால் பங்கு என்ற விகிதத்தில், ஐம்பூதவிதியில் மொத்தம் 15 என்ற விகித நிலையில் அண்டத்திலும் பிண்டத்திலும் நோயின் தன்மை தீர்மானிக்கும் .நோய்களை கண்டறிய நாடி பிடித்துப் பார்ப்பது சித்த மருத்துவத்தின் தன்மையாகும் .எடுத்துக்காட்டாக : அகத்தியர் நோயின் சாரம், தேரையர் நோய் மருத்துவ அளவை .

**கர்ப்பம்**

தமிழில் கற்பம் என்பதற்கும் கர்ப்பம் என்பதற்கும் வேறுபாடுள்ளது .சித்த மருத்துவத்தில் கருவியல் அல்லது சூல் மருத்துவம் என்று பொருள்படும் .வளி மண்டலத்தில் உலவுகி;ன்ற காந்த தூசிகளுக்கும் வளி மண்டல அழுத்தத்திற்கும் உட்பட்டே கரு தீர்மானிக்கிறது .புவி அழுத்தம், இடி, மின்னலால் எப்படி தாவரங்களின் முளைப்புத் திறன் பெருகின்றதோ, அது போல கோள்களின் காந்த விசைகள், தூசிகள் மூச்சுக்காற்றால் உள் இழுக்கப்பட்டு குழந்தையின் கரு தங்குவதை தீர்மானிக்கிறது .அண்டத்தில் அமைவதே பிண்டத்திலும் ஒன்றாக தொடர்பில் இணைந்து அமையும் .எடுத்துக்காட்டாக : அகத்தியர் கர்ப்பக் கோள், அகத்தியர் கர்ப்ப சூத்திரம், அகத்தியர் கர்ப்ப முறை சூத்திரம், திருமூலர் கர்ப்ப உற்பத்தி, போகர் கர்ப்ப விதி, கொங்கணர் வாக்கிய கர்ப்ப சூடாமணி, கொங்கணர் கர்ப்ப உற்பத்தி, கொங்கணர் 500 கர்ப்ப விபரம், கொங்கணர் கர்ப்ப விதி, கொங்கணர் கர்ப்ப 100, கொங்கணர் கர்ப்ப 110, கொங்கணர் கரு அமைப்பு அகவல், கொங்கணர் கரு சாஸ்திரம், சட்டை முனி கர்ப்பமுறை, சட்டை முனி கர்ப்ப விதி, சட்டை முனி கர்ப்ப வகை, சட்டை முனி கர்ப்பம் 100, சட்டைமுனி கர்ப்பநாத பலதிரட்டு, போகர் ஜெனன சாகரம் .

**வாகாரம்**

வாகாரம் என்பது இரசவாதமாகும்) .வேலுசாமி .துரை., சித்தர்களைப் பற்றி அறிந்துகொள்வொம், ப.9). உலோகத்தில் விலை மதிப்பு குறைவான உலோகங்களை அதிக மதிப்புள்ள வெள்ளி, தங்கமாக மற்றுவதாகும் .இதனை பற்பங்கள் செய்ய பயன்படுத்தினர் . கற்பவியலுக்கு பயன்படும் குரு மருந்தை சரியாக முடிந்துள்ளதா என்று அறிய உதவுகிறது .குரு மருந்தை பாதரசத்திலும், செம்பிலும் இட்டால் தங்கமாக மாறும் என்பது முடிவு) .வேலுசாமி . துரை., சித்த மருத்துவ அகராதி - ஒரு கண்ணோட்டம், ப.26). எடுத்துக்காட்டாக : அகத்தியர் வகாரத்திரய சூத்திரம் 200, திருமூலர் வகார சூத்திரம், திருமூலர் வகார திரவியம், திருமூலர் வகார உபதேசம் 200, கொங்கணர் வகார சூத்திரம் 50.

**கன்ம)ம்) (காண்டம் (**

கன்மம் என்பது தமிழ்ச் சொல்லின் திரிபே கர்மம் .மனிதர்களின் பிணிகளுக்கு தீர்வு கொடுக்கமுடியாத ஒன்று உண்டென்றால், அது ஊழ் விதியாம் .உலகில் மாற்றவே முடியாத விதியாம்) .வரன் வர்தன்., ப.ப .51 - 90) கண்ணேறு கழித்தல் போல பிறருடைய வயிறெறிந்த சாபமாம் .சித்தர்கள் சாபக் கட்டுக்களுக்கான தீர்வையும் குறித்துள்ளனர்) .வேலுசாமி .துரை., சித்த மருத்துவ அகராதி - ஒரு கண்ணோட்டம், ப.ப .32 - 33). ரெய்கி கலை மற்றும் வர்ம கலையில் மெய்தீண்டா காலம் போல அமைகிறது .அறிவியலால்கூட விளக்க முடியாத செயலாம் .எடுத்துக்காட்டாக : அகத்தியர் கர்மகாண்டம், அகத்தியர் கர்மகாண்டம் 300, அகத்தியர் கர்மநிவர்த்தி நடு காண்டம், அகத்தியர் கர்ம சூத்திரம், அகத்தியர் நாலுகாண்டம் 1200, அகத்தியர் சப்த காண்டம், அகத்தியர் வைத்திய கர்மகாண்டம், அகத்தியர் பெருநூல் முதற்

காண்டம், இரண்டாம் காண்டம், அகத்தியர் ஊழிக் கட்டு சூத்திரம், போக நாயனார் 2 ஆம் காண்டம், போகர் 4 ஆம் காண்டம், கொங்கணர் வாகட முக்காண்டம் 1500, கொங்கணர் வாகடம் முதற்காண்டம், கொங்கணர் கடைக் காண்டம், கொங;கணர் ஐந்நூற்றில் முதற்காண்டம், கொங்கணர் கடைக்காண்ட சூத்திரம் 60, கொங்கணர் கடைக்காண்ட சூத்திரம் 61, கொங்கணர் கடைக்காண்ட சூத்திரம் 500, கொங்கணர் கடைக்காண்டம் 1000, கொங்கணர் நடுக்காண்டம், கொங்கணர் நூல் முதல் காண்டம் 1000, கொங்கணர் நூல் இரண்டாம் காண்டம், சட்டை முனி திரு காண்டம் .

**சிந்தாமணி**

இலங்கை) தமிழ் ஈழம் (பகுதியை ஆண்ட தமிழ் மன்னன் இராவணன் .இராவணன் இயற்றிய நூல் சிந்தாமணியாம் .தம் சிந்தனைக் கருத்துக்களையெல்லாம் சிந்தாமல் சிதறாமல் சேகரித்து கோர்வையாக்கித் தரும் நூலின் தொகுப்பாம் .தமிழ் உலகம் இழந்து போன பல நூல்களுள் இதுவும் ஒன்றாம் .அதனை நினைவுகூறும் படியாக நூல்கள் சித்தர்களால் இயற்றப்பட்டிருப்பதாக அறிய முடிகிறது .எடுத்துக்காட்டாக : அகத்தியர் வைத்திய சிந்தாமணி, திருமூhலர் நவரத்ன சிந்தாமணி, சட்டை முனி வைத்திய சிந்தாமணி, (நவ (இரத்தின சிந்தாமணி .

**திறவு கோல்**

திறவு கோல் இரு பொருள் படும் .ஒன்று ஒக மார்க்கம் வீடுபேறு பற்றியது .சுழி முனை திறப்பது, ஆதாரங்களில் குண்டலினியை மேலேற்றுவது, மன ஒடுக்கமாவது குறித்தது. மற்றொன்று சித்த மருத்துவத்திற்குரியது .திறவு கோல் என்பது சாவி என்று வெளிப் பொருள் பட்டாலும், சித்தர் இலக்கியத்தில் சூட்சுமம், இரகசியம், மறைபொருள் என்பதையே பொருள் படுத்துகிறது .குருவின் மூலமே கண்டு கற்றறிய முடியும் .எடுத்துக்காட்டாக : சட்டை முனி சவுக்காரத் திறவுகோல், வள்ளுவரின் நாதாந்த திறவுகோல்.

**தண்டகம்**

தண்டு என்ற தமிழ் சொல்லின் விரிவே தண்டகமாம் .ஆசீவகச் சித்தர்கள் கையில் தண்டகம் வைத்திருந்தனர் .இந்த தண்டகமானது சரக் கலையை) மூச்சுக் காற்று (அறிய உதவியது .சரக் கலையை மாற்றும் வித்தையாம் .ஓகவியலுக்கு அடிப்படையாக அமைவது. சூரியன், சந்திரன், அக்கினி என்ற மூன்று நாடிகள் இயங்குகின்றன .இடது நாசி ஓட்டம் சந்திரகலையாம் .இட கலை நாடி குளிர்ச்சியானது .வலது நாசி ஓட்டம் சூரியகலையாம். பிங்கலை நாடியான வலது நாடி சூடும் .இருநாசிகளிலும் ஓடுவது சுழிமுனை நாடியாம் .உடலின் முதுகு தண்டுவடம் எலும்புத் தொடரில் மேல் பாகத்தில் சுழிமுனை நாடியுள்ளதாம் .சரம் மாற்றி நடக்க ஓகத்தண்டுகள் பயன் படுகின்றன .எடுத்துக்காட்டாக : நந்தி தேவர் தண்டகம், நந்தீசர் தண்டகம், அகத்தியர் தண்டகம், திருமூலர் தண்டகம், கொங்கணர் தண்டகம் 120, சட்டை முனி தண்டகம் .

**வாகடம்**

வாகடம் என்பது சமஸ்கிருத சொல்லாகத் தெரிகிறது .போக்குதல், நீக்குதல், கழித்தல் என்று பொருள்படும் .வாகடம் என்ப:து மருத்துவம் சார்ந்த நூலாகும் என்று மொழியியல் அறிஞர் முனைவர் மா.சோ.விக்டர் அவர்கள் கூறுகிறார் .எடுத்துக்காட்டாக : நந்தி சதுர வாகடம், அகத்தியர் குணவாகடம், அகத்திய நாயனார் வாகட வெண்பா, அகத்தியர் நேத்திர) கண் (

வாகடம், அகத்தியர் வாலை வாகடம், அகத்தியர் வாகடம், அகத்தியர் வாகடம் வஜ்ஜிரகாயம், அகத்தியர் வாகட சூத்திரம், அகத்தியர் வாகட திரட்டு, அகத்தியர் வாகட வெண்பா, அகத்தியர் வைசூரி வாகடம், திருமூலர் குணவாகடம், திருமூலர் வாகடம், தேரையர் வாகடம், தேரையர் திரட்டு வாகடம் .பாலர் என்றால் குழந்தைகள் என்று பொருள் .அகத்தியர் பாலவாகடம், அகத்தியர் பால சிகிச்சை .

**வைப்புச் சரக்கு**

இயற்கையான தாவரம் மற்;றும் மூலிகைப் பொருட்கள் கிடைக்காத பருவ காலச் சூழலில் கடை சரக்குகளைச் செயற்கையாக உருவாக்கிக் கொண்டு சித்த மருத்துவத்தைச் செய்தனர்) .வேலுசாமி .துரை., சித்த மருத்துவ அகராதி - ஒரு கண்ணோட்டம், ப.27). (ஆங்கிலேயர் இந்தியாவை ஆட்சி செய்யும் காலத்தில் இயற்கையான பாசாண வகைகளை இந்தியாவில் தடை செய்தனர் .எடுத்துக்காட்டு : வெள்ளைப் பாசாணம் .(செய்முறையில் மாற்று மருந்துப் பொருள்களையும் வேறுவழி காணாது, சித்த மருத்துவத்தில் பயன்படுத்தினர். எடுத்துக்காட்டாக : நந்தி கடை சூத்திரம், அகத்தியர் சரக்கு வைப்பு, அகத்தியர் வைத்திய சரக்குப் பெயர் அகராதி, போகநாதர் சரக்கு வைப்பு, போகர் சரக்கு வைப்பு, கொங்கணர் சரக்கு 100, கொங்கணர் சரக்கு வைப்பு 100, கொங்கணர் சரக்கு வைப்பு 111, சட்டை முனி சரக்கு வைப்பு 500, சட்டை முனி சரக்கு வைப்பு.

**முடிவுரை**

சித்த மருத்துவம் வாழ்வியல் கலை மற்றும் அறிவியல் அறிவுக் களஞ்சியமாகும். தற்காலங்களில் சித்த மருத்துவம் அழிந்து வரும் சூழலில், சித்த மருத்துவம் பாதுகாக்கப்பட வேண்டும் என்ற நோக்கத்தில் இந்த ஆய்வுக் கட்டுரையானது முனைப்பு காட்டுகிறது .இது பரம்பரையான மரபு அடிப்படையில் பாதுகாக்கப்படவேண்டிய தமிழரின் அறிவுக் கொடையாகும் .தமிழரின் அறிவுத் திருட்டினைச் செய்பவர்களும், பணம், பதவி ஆசையால் காட்டிக்கொடுப்பதும் தொடர்ந்து இருந்து வருக்pறது .சித்தர் இலக்கிய மருத்துவத்தை பாதுகாப்பதும், பின்பற்றுவதும் நமது கடமையும் காலத்தின் தேவையுமாகும்.

**சான்றுகள்:**

1. Santhakumar., Y. Historical And Dialectical Analysis Of PathinenSiddhar Literature (Ph.D. Thesis - 2019) Bharathidasan University, Tiruchirappalli. (p.p. page not noted. Appendices: “Books authored by Eighteen Siddhars”).
2. ----------- ,சித்த மருத்துவம் சார்ந்த தொகுதிகள்) தொகுதி - 1) (2013), தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு : சென்னை.
3. வேலுசாமி .துரை., சித்தர்களைப் பற்றி அறிந்துகொள்வொம், (2023), மணிமேகலைப் பிரசுரம், சென்னை .
4. வேலுசாமி .துரை., சித்த மருத்துவ அகராதி - ஒரு கண்ணோட்டம்) 2024), மணிமேகலைப் பிரசுரம், சென்னை .
5. சண்முகம் .மு, சித்த மருத்துவப் பயிற்சிக் கையேடு, (2023), சித்த மருத்துவம் மற்றும் ஆராய்ச்சிக்கான உலகனாவிய மையம், சென்னை மற்றும் அமெரிக்கா .
6. வரன் வர்தன்) தொ.(., ஆசீவகமும் கீழடியும், (2024), தேடல் வெளியீடுகள், திருச்சிராப்பள்ளி .

## 18. கா.பாபுசசிதரனின் 'ஆணியை நம்பும் கடவுள்' கவிதைத் தொகுப்பில் பன்முகச் சிந்தனைகள்

முனைவர் மு.செந்தில் குமார்,
உதவிப்பேராசிரியர்,செந்தமிழ்க்கல்லூரி,மதுரை-01
அலைபேசி - 9942080277 - மின்னஞ்சல் -mpputhiyavan@gmail.com

**Abstract:**

Ka. Babusasidharan, an engineering and management graduate, has founded the 'Nimir' Literary Circle and the 'Nimir' Publishing House with Tamil spirit and is working tirelessly to unite new creators interested in Tamil literature and transform them into literary gems. He has won more than 100 awards and the 'Kaviko' award in a haiku poetry competition held worldwide. He continues to publish his works as new poems and short poems in books. He continues to work in a variety of roles as a poet, writer, speaker, book critic, and editor. This article expands on the multifaceted thoughts contained in the poetry collection 'Aaniyai Nambum Kadavul', which won the 'Souma' literary award for the year 2024.

**Key Words:** Poet - Modern Literature - Personality

பொறியியல் மற்றும் மேலாண்மைப் பட்டதாரியான கா.பாபுசசிதரன் தமிழார்வத்தோடு 'நிமிர்' இலக்கிய வட்டம் என்னும் அமைப்பையும், 'நிமிர்' பதிப்பகத்தையும் நிறுவி தமிழ் இலக்கிய ஆர்வம் கொண்ட புதிய படைப்பாளர்களை ஒருங்கிணைத்து அவர்களைப் பட்டை தீட்டிய இலக்கிய வைரமாக மாற்றுவதில் அயராது பணியாற்றி வருகிறார். 100 - க்கும் மேற்பட்ட விருதுகள், உலகளவில் நடத்தப்பட்ட ஹைக்கூ கவிதைப்போட்டியில் 'கவிக்கோ' விருது பெற்றுள்ளார். தொடர்ந்து தனது படைப்புக்களை புதுக்கவிதைகளாகவும், துளிப்பாக் கவிதைகளாகவும் நூலாக வெளியிட்டு வருகிறார். கவிஞர், எழுத்தாளர், பேச்சாளர், நூல் திறனாய்வாளர், பதிப்பாசிரியர் எனப் பன்முகத்தன்மையுடன் தொடர்ந்து இயங்குகிறார். 2024 - ஆம் ஆண்டுக்கான 'சௌமா' இலக்கிய விருதுபெற்ற 'ஆணியை நம்பும் கடவுள்' என்னும் கவிதைத் தொகுப்பில் இடம்பெற்ற பன்முகச் சிந்தனைகளை விரித்துக் காட்டுகிறது இக்கட்டுரை.

**மௌனம்:**

**தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால்**
**தன்னையே கொல்லுஞ் சினம்.** **(குறள் எண்: 305)**

ஒருவன் தன்னைத் தற்காத்துக்கொள்ள வேண்டுமானால் சினத்திலிருந்து விடுபட வேண்டும். விடுபடவில்லையெனில் சினமே அவனைக் கொல்லும் என்கிறார் வள்ளுவர்.

கோபத்தைக் கட்டுப்படுத்தும் மிகச்சிறந்த மருந்து 'மௌனம்'. குடும்பப் பிரச்சனைகளிலிருந்து விடுபட வேண்டுமானால் அவசியம் கையாள வேண்டியது 'மௌனம்'. மௌனத்தை கடைபிடிப்பவரைக் கோழை என்றும், லாயக்கற்றவன் என்றும் ஏளனம் பேசலாம். மௌனத்தைக் கடைபிடித்து வென்றவருக்கு மட்டுமே மௌனத்தின் வலிமை தெரியும்.

"சோகமாக அமைதியாக
நிதானமாக, தைரியமாக…
துக்கத்தில், கோபத்தில்,

தோல்வியில், மகிழ்ச்சியில்...
பிரச்சனைகளில் பொறுமையாக
வறுமையில் சிரித்தபடி "மௌனங்கள்"
மௌனம் ஞானம்". (ப - 27)

பலர் இயலாமையின்போது மட்டும் மௌனமாய் இருந்து தப்பிக்க நினைப்பர். ஆனால், கவிஞர் சோகம், அமைதி, நிதானம், தைரியம், தோல்வி, மகிழ்ச்சி, வறுமை அனைத்திலும் 'மௌனம்' நலம் பயக்குமென அறிவுறுத்தி அதனை 'ஞானம்' என உருவகிக்கிறார்.

"இந்த மௌனத்தை
பூரணம் என்கிறேன்
எல்லோரும்
மரணம் என்கிறார்கள்" (ப - 27)

வாழ்வின் மேடு பள்ளங்களைக் கண்ட சிறுவர் முதல் பெரியவர்வரை வாழ்வின் இறுதியில் மரணிக்கின்றனர். இந்த மரணத்தைக் கவிஞர் 'பூரணம்' என்ற வார்த்தையால் வாழ்வின் நிறைவை, முழுமையை உணர்த்துகின்றார். பலரும் இதனை 'மரணம்' - 'பிணம்' எனக் கூறுவதை மறுதலிக்கிறார்.

**<u>மனிதநேயம்</u>**:

'யானைக்கும் அடி சருக்கும்' என்பதைப் போல மிகப்பெரும் செல்வந்தர்களும் காலச்சூழலில் பின்னடைவைச் சந்திப்பதுண்டு. ஒருவர் பொருளாதாரத்தில் வீழ்ந்துவிட்டால் அவரது மிகப்பெரும் சொத்துக்களும் அடிமாட்டு விலைக்கு பேசப்படும். அதற்கு ஆயிரம் காரணங்கள் கூறப்படும். விலை பேசப்படும் நேரத்தில் வீட்டின் நினைவுகள் கரைவதையும், மனிதம் வீழ்வதையும் கவிஞர் காட்சிப்படுத்துகிறார்.

"விரிசல்களை முன்னிறுத்தி, சிதிலங்களைக்காட்டி
விலையை ஏற்றியிறக்கி, முன்பணம் கேட்டு
விலை பேசிக் கொண்டிருந்தவர்களுக்குத் தெரியாது
காகம் சோறுண்ண வரும் நேரம்
தோட்டத்தில் இருப்பது யார் யார் மரங்கள்
எந்த மரத்தில் எப்பறவையின் கூடு என்றெல்லாம்
வீட்டுக்குள் எத்தனை கூடுகள்
கூட்டுக்குள் எத்தனை வீடுகள்
வீடுகளை விடவும்...
கூடுகள் ஆசீர்வதிக்கப்பட்டவை"

(ஆணியை நம்பும் கடவுள் பக்கம் - 24)

குறைந்த விலைக்கு வீட்டை விற்பதில் பிரச்சனையில்லை. நாள்தோறும் காகம் சோறு கேட்டு வரும்போது இனி யார் உணவிடுவது? காகம் என்னவாகும்? ஆசையாய் ஆளுக்கொரு மரம் வளர்த்தனர். மரங்கள் தண்ணீருக்காக ஏங்கித் தவிக்குமே. வீட்டிலும், மரத்திலும் கட்டிய பறவைகளின் கூடுகள் என்னவாகும்? எனக் கவிஞர் கேட்கும் கேள்விகள் மனதைக் கசிய வைக்கின்றன.

**உறவுகள்:**

உலகப்புகழ்பெற்ற தத்துவஞானி அரிஸ்டாட்டில் 'மனிதன் ஒரு சமூக விலங்கு' எனக் குறிப்பிடுகிறார். 'சமூகம்' என்பது ஒருங்கிணைந்து வாழ்வதாகும். சமூகக் குழுக்களுக்குள் பிரிவினைகள் உண்டு. இருப்பினும் உறவுச் சங்கிலி இறுக்கமாயிருக்கும்.

"பேச…பழக…வாழ…
சிரிக்க…அழ…உறங்க…
துணையின்றிக் கிடக்கையில்
இவையனைத்தும்…
பித்தனுக்கு மட்டுமே என உறுதியாய், தீர்க்கமாய்
சொல்ல முடியவில்லை" (ப - 29)

பல குடும்பங்களில் மனநலம் பாதிக்கப்பட்ட மனிதர்களை காசி, இராமேஸ்வரம், வேளாங்கண்ணி, ஏர்வாடி போன்ற வழிபாட்டுத் தலங்களில் விட்டுச் செல்கின்றனர். தனித்து விடப்பட்டவர்கள் ஆதரவற்ற அனாதைகளாகக் காலத்தை நகர்த்;தி இறக்கின்றனர். கூட்டுக் குடும்பங்கள் சிதைந்துபோய் தனிக்குடித்தனங்கள் பெருகியுள்ளன. இவர்கள் மனித உறவுகளை, உறவினர்களைத் துண்டித்துள்ளனர். இவர்களுக்கும் மனநலன் பாதிக்கப்பட்டவர்களுக்கும் வித்தியாசமில்லை. மனநலம் பாதிக்கப்பட்டவர்களை விடவும் சிகிச்சையளிக்க வேண்டியது உறவுகளைத் தவிர்க்கின்ற மனிதர்களுக்குத்தான் என நுண்மையாகத் தெரிவிக்கின்றார்.

**கவிதை:**

"உள்ளத்துள்ளது கவிதை - இன்பம்
உருவெடுப்பது கவிதை
தெள்ளத் தெளிந்த தமிழில் - உண்மை
தெரிந்துரைப்பது கவிதை" (கவிமணி)

என்று கவிதையின் இயல்பு குறித்து கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை குறிப்பிடுகிறார். இன்றைய இளம் தலைமுறையினர் கவிதை எழுதவேண்டுமானால் அதற்கான தனிச்சூழல் வேண்டும், மனம் இலேசாக இருக்க வேண்டும், எல்லை மீறிச் சிலர், புகைபிடிக்க வேண்டும், மது அருந்த வேண்டுமென்கின்றனர். கவிதைக்கான கருப்பொருள்கள் வயது, அனுபவத்திற்கேற்ப மாறுபடுகிறது.

"ஜன்னலின் தனிமை
வானத்தின் வெறுமை
எதை எழுதப் போகிறேன்
காத்திருந்து கண்காணிக்கிறது
கவிதை" (ப - 31)

கவிதையின் ஒவ்வொரு வரியும் மற்றொரு நீள் கவிதையை, கருப்பொருளை உள்ளடக்கியுள்ளது. ஜன்னல் தனிமைப்பட்டதற்கான காரணம், வானத்தின் வெறுமைக்கான காரணம் ஆயிரம் இருக்கலாம். திருமணம் முடியாத முதிர்கன்னி, வீட்டில் தனித்திருக்கும் முதியவர்கள், பாழடைந்த வீடு எனப் பல கோணங்களில் சிந்தனையைத் தூண்டி கவிதை காத்திருப்பதாகக் கூறுகிறார்.

**பெண்ணுரிமை:**

"மாதர்தம்மை இழிவுசெய்யும் மடமையைக் கொளுத்துவோம்"

என்பார் பாரதி. சங்ககாலம் தொடங்கி இன்றைய காலம் வரை பெண்களுக்கான அவலம் நீடிக்கின்றது. பெண்கள் காவல்துறை, இராணுவம், ஆட்சியர் பணிகள் எனப் பல வடிவங்கள் எடுத்தாலும் அவர்களுக்கு எதிரான வன் கொடுமைகள் குறைந்தபாடில்லை. பெண் கொடுமைக்கு எதிராக பெண்களே முடிவெடுக்க வேண்டுமெனக் கவிஞர் அறிவுறுத்துகிறார்.

"ஊற்றிய பாத்திர உருவெடுக்க
நீரல்ல நான்
அமிலமும் நீர்மமே
அறிவீர்தானே...?" (ப - 33)

பெண்கள் வெறும் சதைப்பிண்டமல்ல; தங்களுக்கானத் தீங்கு நேரிடும்போது போர்க் குணத்தோடு மோதத் தயாராகவேண்டும். ஊற்றிய பாத்திரமாய் உருவெடுக்க வெறும் நீரல்ல அமிலமும் நீர்தான் என்பதனைப் பெண்கள் உணர வேண்டுமென எடுத்துரைக்கிறார்.

"அவள்...
பிறந்ததும் மகாலட்சுமி எனப்பட்டாள்
குலசாமியாய் கொண்டாடப்பட்டாள்
தாயின் மறுபிறப்பு எனப்பட்டாள்
பிடித்தவனை மணந்ததும் ஓடுகாலியானாள்
மகாலட்சுமி...குலசாமி...
எல்லாம் அடங்கிக்கிடக்கும் வரைதான். (ப - 41)

ஆடு, மாடுகள் பெண் குட்டிகளை ஈன்றெடுத்தால் மகிழ்ச்சியுறும் மனிதன் தனக்குப் பெண் பிறந்தால் வருத்தமடைகிறான். நவீனத்தில் தனது சோகத்தை மறைத்து பெண் குழந்தை பிறந்ததும் மகாலட்மி, குலசாமி, தாயின் மறுவடிவம் என மகிழ்வதைப்போல் நடிக்கும் மனிதர் கூட்டம் அப்பெண் தனக்குப் பிடித்தவரை மணம் முடிக்க கேட்கும்போது சாதி, மதம், தகுதி பார்த்து மறுக்கிறார்கள். மீறி பிடித்தவனோடு சென்றுவிட்டால் 'ஓடுகாலி' எனப் பட்டம் சூட்டுவது எவ்வகை நியாயம்? எனக் கேள்வியெழுப்புகிறார்.

**மூலநூல்:**

1. கா.பாபுசசிதரன் - ஆணியை நம்பும் கடவுள்
நிமிர் புத்தகப் பட்டறை,1012 - முகப்பேர் கிழக்கு, சென்னை - 600037. பதிப்பு - 2023.

MUTHTHARASI – Art Literary Culture Tamil Journal
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
SPL-EDITION – IV VOLUME - 1
மார்ச்சு-2025 E-ISSN: 2584 - 1238

# 19. செட்டிநாடும் குடவரைக்கோயில்களும் -ஓர் பார்வை

**முனைவர்.தி.பாலசுப்பிரமணியன்,**
வரலாற்று ஆய்வாளர்
காரைக்குடி.

**முனைவர்.ஜெ.மார்ட்டின் ஜெயபிரகாஷ்,**
உதவி பேராசிரியர், வரலாற்று துறை,
அழகப்பா அரசு கலைக் கல்லூரி, காரைக்குடி
**செல்: 9600248107**

DOI 10.5281/zenodo.15066975.

**Abstract:**

The appearance of the temples varied. Some of the ancient temples were built along the coast, on the tops of small hills, and some on the banks of sacred lakes. The ancient Tamil people saw the nature of God in all the places of natural beauty. Temples were built by some kings, some nobles, and some by devotees.

**Key Words:** Ancient Temples - Devotes - Nobles

**முன்னுரை**

கோயில்களின் தோற்றம் பலவகைப்பட்டது. பண்டைக் கோயில்களில் சில கடற்கரையை ஒட்டியும், சிறு குன்றுகளின் உச்சியிலும், சில புனிதமான ஏரிகளின் கரைகளிலும் அமைக்கப்பட்டன. இயற்கை எழில் மிக்க இடங்கள் யாவற்றிலும் பண்டைத் தமிழ்மக்கள் கடவுள் தன்மையைக் கண்டனர். கோயில்கள் சில மன்னர்களாலும், சில பிரபுகளாலும் சில கடவுள் பற்று மிக்க ஒப்புரவாளர்களாலும் எடுப்பிக்கப்பட்டன.

“சங்க காலத்து கோயில்கள் யாவும் சுடுமான் கோயில்களே (மன்தளிகளே) யாதலின் அவை காலப்போக்கில் சுவடற்றுப்போயின”. சிம்ம விஷ்ணு வம்சத்தை சேர்ந்த மல்லவர்களின் ஆட்சிக்காலம் முதல் தமிழகத்தில் சமயம், கலை, இலக்கியம் முதலிய துறைகளிலும் மறுமலர்ச்சி காணப்பட்டது. இக்காலத்திலும் இதனை ஒட்டிய முற்காலச் சோழர்கள் காலத்திலும், ஆழ்வார்களும், நாயன்மார்களும் தோன்றி வைணவ மதத்தையும் சைவ மதத்தையும் நாட்டில் தழைத்தோங்கச் செய்தனர். நாயன்மார்கள் காலத்தில் 274 கோயில்கள் பாடல் பெற்ற தலங்களாகத் திகழ்நதன. ஆழ்வார்கள் காலத்தில் 108 திருப்பதிகள் பாடப்பட்டன.

தமிழ்நாட்டுக் குடைவரைகள் தமிழர் தம் கலைத்திறனின் உழைப்பின் திட்டமிடும் ஆற்றலின் மிகச் சிறந்த சான்றுகள். இங்குள்ள சிற்பங்கள் பழங்கால, இடைகாலத் தமிழ்ச் சமுதாயத்தின் சிந்தனைகளையும் பண்பாட்டையும் ஓரளவிற்கேனும் வெளிப்படுத்துவனவாய் உள்ளனமமை மறுக்க முடியாது. தமிழ்நாட்டுக் குடைவரைகள் அனைத்தையும் ஒரு வீச்சில் பார்க்க முடியுமானால் கி.பி. ஆறாம்நூற்றாண்டு தொட்டு கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு வரையிலான தமிழ்நாட்டின் கலைப்பண்பாட்டு வரலாற்றை உருவாக்குவது இயந்ததாகும்.

பல்லவர்கள் தமிழகத்தில் வடபகுதியை ஆண்டபோது முற்காலப்பாண்டியர்கள் தென் பகுதியை ஆண்டனர். அவர்களும் ஏராளமான மலைகளைக் குடைந்து குடைவரைக் கோயில்களை எழுப்பியுள்ளனர். “இன்னும் சிறப்பாகக் குறிப்போமானல் பல்லவர்களைக் காட்டிலும் முற்காலப் பாண்டியர்கள் குடவரைக் கோயில்கள் அதிகமாகவே தோற்றுவித்துள்ளனர். ஆகவே முற்காலப் பாண்டியர்கள் தமிழகத்தில் கட்டிய கோயில்கள்

முழுவதையும் ஆய்வு செய்வதில் நீண்ட எல்லையாகிவிடும் என்பதால் அவர்கள் செட்டிநாட்டு வட்டாரத்தில் கட்டிய குடைவரைக் கோயில்கள் ஆய்வது மட்டுமே கட்டுரையின் நோக்கமாகும்.

முற்காலபாண்டியர்களின் கலைப்பாணியில் குடைவரைக் கோயில் கற்றளக்கோயில் என இருவகையில் அமைகிறது. செட்டிநாட்டுப் பகுதியில் குடைவரைக் கோயில்களை பிள்ளையார்பட்டி, குன்றக்குடி, பறம்புமலை, திருகோளக்குடி, அரளிப்பட்டி, திருமயம் ஆகிய ஊர்களில் காணலாம்.

**பிள்ளையார்பட்டி குடவரை**

காரைக்குடியிலிருந்து திருப்பத்தூர் செல்லும் சாலையில் குன்றக்குடியிலிருந்து 3 கி.மீ தொலைவில் உள்ளது பிள்ளையார்பட்டி. இவ்வூரின் புகழுக்கு காரணம் இங்குள்ள தேசி விநாயகப் பிள்ளையாரின் குடைவரைக் கோயில் ஆகும். இங்குள்ள சிறிய மலையின் அடிவாரத்தில் இக்கோயில் குடையப் பெற்றுள்ளது. இக்கோயில் சுமார் 1600 ஆண்டுகளுக்கு முன் தோன்றியதாகக் கருதப்படுகிறது. மலையைக் குடைந்து அமைக்கப் பெற்று சுமார் 2 மீட்டர் உயரமுள்ள கற்பகப் பிள்ளையாரின் திருவுருவம் வடக்குத்திசை நோக்கி காணப்படுகிறது. நாட்டுக்கோட்டை நகத்தார்களின் அரிய திருப்பணிகளால் இக்கோயில் பெரிதும் வளர்ச்சியடைந்துள்ளது. பிள்ளையார்பட்டிக் குடைவரைக் கோயில் முற்கால பாண்டியர் கலைப்பாணிக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.



பிள்ளையார்பட்டி ஒன்பது நகரக் கோயில்களுள் ஒன்று என்பது மட்டுமல்ல காலத்தால் பழமையான கோயிலும் ஆகும். இது ஒரு குடைவரை கோயிலான திருப்பணி ஆகும். இந்த ஊருக்குப் பிள்ளையார்பட்டி என்பதே இன்று நாடறிந்த பெயராயினும், எருகாட்டூர், அல்லது எக்காட்டூர், மருதங்குடி, தீருவீங்கைக்குடி, திருவீங்கைச்வரம், இராசநாராயணபுரம் என்ற வேறு ஐந்து பெயர்களும் உண்டு.

இந்த குடவரைக் கோயிலுக்குள் நாம் நுழைந்தால் முதலில் உள்ள கீழ்மேல் ஓடிய பத்தி காணப்பெறும். அதற்கு அடுத்து நான்கு தூண்கள் இடைநிற்கத் தென்வடல் ஓடிய இரட்டைப்பத்தி மண்டபம் காணப்பெறும். அம்மண்டலத்தின் கீழ்புறம் பத்தியன் தென்பால் மலை நெற்றியில் 6 அடி உயரம் உள்ள கம்பீரம் நிலையில் விளங்கும் பிள்ளையாரில் இருந்த திருக்கோலம் புடைப்பு சிற்பமாக வடக்கு நோக்கி விளங்க காணலாம். இந்த மூர்த்திதான் கற்பகப்பிள்ளையார் ஆன தேசிவிநாயகப் பிள்ளையார் ஆவர்.

“கல்லைக் குடைந்தமைத்த கற்பகமே என்னெஞ்சக்“
கல்லில் உனதுருவைக் காட்டாயோ சொல்லரிய
பிள்ளையார் பட்டி பெருங்கோயில் காண்டருளும்

வள்ளலே எனைக்காக்க வா
பிள்ளையார்பட்டி பிள்ளையாரப்பா

என்பன பிள்ளையார்பட்டிக் குடைவரைக் கோயிலின் பெருமையை உணர்த்தும் பாடல்களாகும்.

**குடைவரை அமைப்பு**

தமிழகக் கோயில் கலை வரலாற்றில் மிகவும் இன்றியமையாதது இங்குள்ள குடைவரைக் கோயில் எனலாம். அதற்குகாரணம் அமைப்பிலும், அழகிலும் தனித்தன்மையுடன் இக்குடவரை கோயில் காணப்படுகிறது. கற்பக விநாயகர் வீற்றிருக்கும் இக்குடைவரைக் கோயிலின் முகப்புவாயில் வடதிசை நோக்கி அமைந்துள்ளது. பொதுகவாகக் குடைவரைக் கோயில்களின் முகப்பு, தூண்களையும் அரைத் தூண்களையும் கொண்டனவாக இருக்கும். அவற்றின் இருபுறமும் உள்ள புரைகளில் புடைப்பு சிற்பங்கள் காணப்படும். ஆனால் பிள்ளையார்பட்டி குடைவரைக் கோயில் உட்புறம் விநாயகரின் திருக்கேலம் நேரே வடதிசை நோக்கி அமைந்துள்ளது. தமிழ்நாட்டுக் குடைவரைக் கோயில்களில் மிகவும் தென்மை வாய்ந்தாக கருதப்படுகிறது. இங்குள்ள கருவரை நடுவில் பாறையிலேயே செதுக்கப்பட்ட சிவலிங்கம் ஒன்று உள்ளத. இதன் பீடம் சதுர அமைப்புடையது. இங்குள்ள லிங்கம் 1.10மீட்டர் உயரமுடையது. பாதையைக் குடைந்த பக்தி உணர்வோடு இப்படிப்பட்ட குடைவரைக் கோயில்களை அமைத்திட மனித சக்திக்குப் பெருந்துணையாக இறைசக்தி இருந்திருக்க வேண்டும் என்பதே உண்மை.

**காலம்**

கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் செதுக்கப்பட்ட இப்பிள்ளையார் உருவம், அர்த்த சித்திர வடிவம் கொண்டது. அங்கங்களின் அமைப்பும், சிற்பத்தின் பொதுத்தன்மையும ஆராய்ந்து பார்த்தல் முற்காலப் பாண்டியர்களின் எளிமைக்கும் எழிலுக்கும் எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

**குன்றக்குடி குடைவரைகள்**

குறிஞ்சிக் கிழவனாக விளங்கும் குமரன் குன்று தோறும் ஆடி அருள் வழங்குகிறான். சிவகங்கை மாவட்டம், திருப்பத்தூர் வட்டத்தில் காரைக்குடி அருகே தேவாரப் பதிகம் பெற்ற பாணப்பதிகள் பதினாக்கில்; ஒன்றாக சிறப்புற்று விளங்குவது குன்றக்குடி ஆகும்.

**குடைவரைக் கீழ்க்கோயில்**

இங்கு மலையடிவாரத்தில் தென்மேற்கில் கீழக்கோயில் அமைந்துள்ளது. கிழக்கு மேற்காக மூன்று குடைவரைக் கோயில்கள் உள்ளன. மேற்கிலிருந்து கிழக்கே வரிசையாக சுந்தரேசுவரர் கோயிலும், அண்ணாமலையார் மற்றும் மலைக்கொழுந்தீசர், சண்டேசுவரர் கோயிலும் அமைந்துள்ளது. மேற்கே மலையின் மேல் ஞானியார்மலை என்று வழங்கபெறும் இடம்உள்ளது. இங்கு பிராமிக் கல்வெட்டுகளும் சமணபாழிகளும் உள்ளன.



**குடைவரை தேனாற்றுநாதர்**

கீழ்கோயில் எழுந்திருளியிருப்பவர் சுயம்பு மூர்த்தி. அகத்தியரால் வழிபாடு செய்யப் பெற்றவர். தேனாற்றங்கரையில் இருப்பதால் தேனாற்றுநாதர் என்று பெயர் பெற்றுள்ளார். மலையின் தென்மேற்கு அடிவாரத்தில் உள்ள குடைவரைக் கோயில்கள் பழமையானது. நடுவிலுள்ள அண்ணாமலையார் குடைவரைக் கோயில் உள்ள "மசிலீச்சுரம்" என்னும் வட்டெமுத்துக் கல்வெட்டால் இந்த குடைவரைக் கோயில்கள் எட்டாம் நூற்றாண்டைச் சோந்தவை என்பது புலனாகிறது. இந்த குடைவரைக் கோயில்களிலர் முதல் இராசராச சோழன் (கி.பி.985-1014) முதல் குலோத்துங்க சோழன் (கி.பி. 1070-1120) பாண்டியன் சடையவர்மன் வல்லபதேவன் (கி.பி1115-1137) மூன்றாம் குலோத்துங்கன் (கி.பி.1178-1218) மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி1216-1237) ஆகிய மன்னர்கள் காலக் கல்வெட்டுகள் உள்ளன.

**குடைவரைச் சிற்பங்கள்**

கீழ்கோயிலின் ஒரு பகுதியாகவுள்ள குடைவரைக் கோயிலில் சிற்பக் களஞ்சியமாக விளங்குகிறது. மேற்கேயிருந்து கிழக்கே வரிசையாக (1) சுந்தரேசுவரர் கோயில் (2) அண்ணாமலையார் கோயில் (3) மலைக்கொழுந்துநாதர், சண்டேசுவரர் கோயில் ஆக மூன்று குடவரைக் கோயில்களும் இதில் உள்ள தூண்களும், கருவறைகளும் படைப்புச் சிற்பங்களும் மலையைக் குடைந்து உருவாக்கப் பெற்றவை.

**குடைவரை முருகன்**

மேற்கு காவலரின் பாரைச் சரிவில் சிறிய வடிவினாய் நான்கு கைகளுடன் சமபாத நிலையிலுள்ள முருகனை வடித்து கையில் சிறிய அளவிலான ஈட்டியும முருகனை அடையாளம்; காட்டுகின்றது. முற்கால பாண்டியர் குடைவரைக்களில் முருகனின் சிற்பங்கள் குறைந்த அளவிலேயே இடம் பெற்றிருப்பதால் இளநகை ததும்பும் இச்சிற்பம் சிறப்புக்குரியதாகிறது.

**காலம்**

கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் செதுக்கப்பட்ட இப்பிள்ளையார் உருவம், அர்த்த சித்திர வடிவம் கொண்டது. சுங்கங்களின் அமைப்பும், சிற்பத்தின் பொதுத்தன்மையுடன் ஆராய்ந்து பார்த்தால் முற்காலப் பாண்டியர்களை எளிமைக்கும் எழிலுக்கும் எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

**குடைவரைக் கல்வெட்டுகள்**

குன்றக்குடி மலையில் உள்ள குகைத்தளம் குடைவரைகள், கற்றளிகள் இவற்றிலிருந்து படியெடுக்கப்பட்டுள்ளன. கல்வெட்டுகளின் எண்ணிக்கை ஐம்பத்தொன்றாகும். இவற்றுள் நாற்பாத்தாரு கல்வெட்டுகள் நடுவன் அரசின் கல்வெட்டுத் துறையால் ஐந்து நிலைகளிலும் எஞ்சிய ஐந்து கல்வெட்டுகள் டாக்டர் மா.இராசமாணிக்கனார் வரலாற்றாய்வியல் கள ஆய்வுகளின் போதும் படியெடுத்துள்ளார்.

**திருமலை**

இம்மாவட்டத்தில் சிவகங்கையிலிருந்து திருப்பத்தூர் செல்கின்ற வழியில் ஒக்கூர் அருகில் திருமலை என்ற ஊர் உள்ளது. கிராமத்திற்கு தொலைவில் உள்ள குன்று ஒன்றில் குடைவரைக் குயிலொன்று காணப்படுகிறது. குன்றின் சரிவில் வடக்கு நோக்கிய

நிலையில் அமைக்கப்பட்டுள்ள இக்குடைவரைக்கு மேல் பகுதியில் சமணர்கள் வாழ்ந்த குடைவரைகளும் காணப்படுகின்றன. சமணர்களின் தங்கியிருந்த படுக்கைகள் காணப்படுகின்றன. இப்படுக்கைக்கு மேல் வரலாற்றுக்கு காலத்திற்கு முற்பட்ட பாறை ஓவியங்கள் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. இக்குடைவரையின் தூண்களும் அரைத்தூண்களும் சதுரம், எட்டுப்பட்டை ஆகியவை அற்று காணப்படுகின்றன. இருப்பினும் இவை கோண வடிவ தரங்கப் போதிகைகள் பெற்று விளங்குகின்றன. முகப்பை அடுத்துள்ள அர்த்த மண்டபத்தின் கீழிருந்து உயர்ந்து காணப்படுகிறது.



**மகிபாலன்பட்டி**

இம்மாவட்டம், திருப்பத்தூரிலிருந்து நெற்குப்பை செல்லும் வழியில் 13கி.மீ. தொலைவில் மகிபாலன்பட்டி அமைந்துள்ளது. ஊருக்கு வெளியே 1 கி.மீ. தொலைவில் சிறிய குன்று காணப்படுகிறது. இக்குன்றின் மேற்குச் சரிவில் குடைவரைக் கோயில் மேற்கு நோக்கிய நிலையில் காணப்படுகிறது. கருவறை மட்டுமே கொண்டுள்ள இக்குடைவரைக் கோயில் வாயிலின் இருபுறங்களிலும் இரண்டு அரைத்தூண்கள் பக்கத்திற்கு இரண்டாகக் குடையபட்டுள்ளது. இக்குடைவரைக் கோயில் காண்பதற்கு சிறி கூரை அமைப்பை போன்று திகழ்கிறது. அதற்கு ஏற்றவாறு கூரை பகுதியில் மழைநீர் விழாதவாறு ஆழமாக வெட்டப்பட்டு அமைக்கப்பட்டுள்து. கருவறையின் வெளிப்பகுதி முகப்பு போன்ற அமைக்கப்பட்டு உட்சுவர் சிறிது பின்தள்ளி இக்குடைவரை அமைக்கப்பட்டுள்ளது. கருவறையின் உள்ளே இயற்கையாக அமைந்த பாறையில் குடையப்பட்ட லிங்கம் சதுர வடிவ ஆவுடை கொண்டு காணப்படுகிறது. பூஜை செய்யும் போது வெளியேறும் தண்ணீர் வடிவதற்கு வடிகால் ஒன்றும் வெட்டப்பட்டுள்ளது. அதன் முன் பகுதியில் பிற்காலத்தில் சிறு மண்டபம் ஒன்றும் கட்டி உள்ளனர். தூண்கள் இல்லா இக்குடைவரைக்கோயில் மிக எளிய அமைப்பைப் பெற்ற பாண்டியர் குடைவரைக் கோயிலாகும். இக்குடைவரையின் முகப்பு சுவரில் பிற்காலப் பாண்டிய மன்னன் சுந்தரபாண்டியனின் கல்வெட்டு காணப்படுகிறது.

**பறம்புமலைக் குடைவரை**

திருக்கொடுங்குன்றம் என்று கல்வெட்டுகளாலும் இலக்கியங்களாலும் புகழப்படும் பாரி வள்ளலின் பறம்புமலையே இன்று பிரான்மலையாகப் பெயர் மாறி வழங்குகிறது. காரைக்குடியில் இருந்து திண்டுக்கல் செல்லும் பாதையில் சிங்கம்புணரியிலிருந்து 10கி.மீ தொலைவில் உள்ளது. இவ்வூர் மிகப் பெரும் முகடுகளுடன் ஓங்கி உயர்ந்திருக்கும். மலையின் தென்முகடொன்றின் கீழ்தான் திருங்கொடுங்குன்றத்து குடிகொண்டுள்ளார். அவர் இருக்கும் குடைவரையின் மேலே செங்கல் கட்டுமாமனமாய் கோபுரம், சிகரம், துபி

ஆகியன உள்ளன. பிரான்மலைத் திருக்கோயில் நுழைவாயில் எளிய அமைப்புடன் உள்ளது. கோயில் மேலே செல்வதற்கு பாறை வழி ஒன்று மற்றொன்று படிகட்டுகளுடன் அமைந்துள்ளது.

பிரான்மலைக் குடைவரை முக மண்டலத்திற்கு மேற்கே உள்ளது. குடைவரைக் கருவரை பாறையைக் குடைந்து நீண்ட சதுர வடிவில் தூண்களே இல்லாது அமைக்கப்பெற்றள்ளது. கருவறைக்குள் குடைவரையைச் செதுக்கும்போது பாறையிலேயே செதுக்கி உருவாக்கிய திருமேனிகள் கொண்டு அம்மையும், அப்பனும் திருமணக் திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளனர். கயிலாகப் பகுதியில் மங்கைபாகர் எழுந்தருளி உள்ள குடைவரைக் கோயில் ஆறாம் நூற்றாண்டளவில் பாண்டிய நாட்டுக் குடைவரைக் கோயில்களுக்கு மூலமாக குடைவிக்கப் பெற்றுள்ளதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். கல்வெட்டுகள் ஏதுமற்ற எளிய கட்டமைப்புள்ள இக்குடைவரையின் பெருஞ்சொத்தாக இறைவன், இறைவி திருமேனிகளாக குறிப்பிட வேண்டும். இவை பாறையில் செதுக்கப்பட்டு சுதைப்பூச்சுக் கொண்டவையொன்றே கருதுமாறு பின்வாறு ஒட்டிய நிலையில் உள்ளன. இவை கி.பி. எட்டாம் நூற்றாண்டாக கருதப்படுகிறது.

கொடுங்குன்றிற் குடைந்த கோயில்
கொண்டருள் புரிவாய் போற்றி
(பறம்புமலை திருக்கொடுங்குன்றம் வரலாறு)

என்ற பாடல் குடைவரைக் கோயிலின் பெருமையை உணர்த்தும் பாடலாகும்.

**திருக்கோளக்குடி குடைவரை**

பாண்டிப் பதினான்கு திருத்தலங்களில் திருப்பத்தூர் திருத்தலத்திற்கு வடதிதையிலும், திருக்கெடுங்குன்றமென்றும் பிரான்மலை (பறம்பு மலை)க்குக் கிழக்குத் திசையிலும் அமைந்துள்ளது திருகோளக்குடி. முல்லைக்குத் தேரீந்த வள்ளல் பாரி ஆண்ட பறம்பு நாட்டின் ஒரு பகுதியான பூங்குன்ற நாட்டில் களியன் பூங்குன்றன் பிறந்த மகிபாலன்பட்டிக்கு வடக்கில் அமைந்திருப்பது இத்திருத்தலம்.

**குடைவரை முன்பகுதி**

குடைவரையின் முன்னால் வாயிலுடன் சுற்சுவரொன்று என்று எழுப்பி அது குடைவரையின் மேலிருந்து நீளும் பாறைப் பகுதிகளுடனும் பக்கவாட்டில் உள்ள பாறைச்சுவர்களுடன் பொருந்துமாறு அமைக்கப்பட்டுள்ளது.

**குடவரைச் சிற்பங்கள்**

குடவரைச் கோயிலில் உள்ள கருவரை மூலமூர்த்தி அகத்தியர், புலத்தியர், நந்தி ஆகியவையும் இந்தக் குடவரைக் கோயிலில் அமைந்துள்ளன. அகத்தியர், புலத்தியர் இமயமலையில் பார்வதிக்கும், பரமேஸ்வரனுக்கும் திருக்கல்யாணம் நடைபெற்றது திருக்கல்யாணத்திற்கு வந்திருந்தோர் கூட்டத்தின் சுமையால் வடதிசை தாழ்ந்தது, தென்திசை உயர்ந்தது. இறைவன் ஆணையின்படி அகத்தியர் தம் அந்தரகச் சீடரான புலத்தியமுனிவருடன் பொதியமலை வந்து பூமியை சமன்பாடாக்கி விட்டு அதன்பின் புலத்தியரோடு இத்திருத்தலத்திற்கு வந்து இறைவனை முறையாக வழிபட்டார் என்பது புராணம் தரும் செய்தி. இக்குடைவரைச் சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது.

**அரளிப்பட்டி குடைவரை**

திருப்பத்தூரிலிருந்து இருந்து சிங்கம்புணரி செல்லும் சாலையில் திருப்பத்தூரில் இருந்து 13 கி.மீ தொலைவில் வலதுபுறம் செல்லும் சாலை அரளிப்பட்டிக்கு செல்கிறது. இங்கு சிறய அளவிலான இலிங்காயினம் வெட்டி அதன் முகப்பில் பிள்ளையாரரைச் செதுக்கியுள்ளனர். உற்றுப் பார்ப்பவர்களுக்கே இப்பிள்ளையாரின் தரிசனம் கிடைக்கும். மண்டபக் கூரையின் வெளிநீட்டலாய்; 10செ.மீ அளவிற்கு நீழும் பாறைப்பகுதி கபேதம் போல வடிவமைக்கப்பட்டது.

**வடக்கேட்ட லிங்க பிள்ளையார்**

இலிங்க பிள்ளையார் இடம்புரியாக கரண்டமகுடராய்க் காட்டப்பட்டுள்ளார். முற்காலப் பாண்டியர் குடைவரைகள் எவற்றி;லும் இடம்பெறாத இந்த இலிங்க பிள்ளையார் சிதைத்திருந்த போதும் சரித்திரத்தில் இடம் பிடித்துள்ளார்.

**திருமெய்யம் குடைவரை**

காரைக்குடியில் இருந்து புதுக்கோட்டை செல்லும் நெடுஞ்சாலையில் அமைந்துள்ளது. திருமெய்யம் பழமை வாய்ந்த குடைவரைக் கோயில்களுடன் திருமெய்யமும் ஒன்று. முற்காலப் பாண்டியர்களின் காலச்சுவடுகளை இன்றும் நினைவூட்டுகின்றன. தமிழகத்தில் திருமெய்யத்தில் தான் குன்றின் செங்குத்தான தென்முகச் சரிவில் சிவனுக்கும் திருமாலுக்கும் குடவரைக் கோயில்கள் அடுத்தடுத்து அறுபது அடி தூரத்தில் அமைந்துள்ளது. இங்கு ஒரு காலத்தில் ஒரு வாயிலின் வழியாகவே நீலகண்டனையும், நீலமேனியையும் தரிசிக்கும் படியாகத்தான் சந்நிதிகள் அமைந்திருந்தன. ஆனால் பிற்காலத்தில் சைவர்களுக்கும், வைணவர்களுக்கும் ஏற்பட்ட சமயச்சச்சரவுகளினால் பிரிந்துவிட்டன. தென்மையான சிறப்புமிக்க பரதநாட்டியத்தின் நுணுக்கங்களை தெரியப்படுத்தும் திருமெய்யத்துக் கல்வெட்டுகள் அவற்றின்; மேலேயே சிதைத்து ஹொய்சா நாட்டுத்தளபதி அப்பன்னா சைவர்களுக்கும், வைணவர்களுக்கும் இடையில் சமரசம் செய்து வைத்ததைத் தெரிவிக்கும் கல்வெட்டுகள் உள்ளன. ஒரே கல்லினால் ஆன சிற்பங்களை செங்குத்தான பாறைகளின் ஒற்றைக் கல் கோயில்களையும், பாறைகளைக் குடைந்து குடைவரைக் கோயில்களை உருவாக்கியுள்ளன. மலைகளை தெய்வீக கூடங்களாக அமைத்து இந்தியக் கோயில் வரலாற்றில் சரித்திரம் படைத்தவர்கள் முற்காலப் பாண்டியர்களே ஆவார்.

**குடைவரைகளின் ஒப்பீடு**

திருவண்ணாமலை ஆதினத்தின் ஆளுகையில் உள்ள கோளக்குடி, குன்றக்குடி, பிரான்மலை, அரளிப்பட்டி குடைவரைகள் எவற்றிலுமே உருவாக்கியவர்களைச் சுட்டும் கல்வெட்டுகள் இடம் பெறவில்லை. இந்நான்கினுள் எளிய குடைவரையாக அரளிப்பட்டியை குறிக்கலாம். காரணம் இங்கு சிறப்பு லிங்க பிள்ளையார்கள் ஆகும். தமிழ்நாட்டில் நான்கு குடைவரைக் கோயில்களை கொண்ட பெருமை ஒரே ஆதினம் திருவண்ணாமலை ஆதீனம் ஆகும்.

**முடிவுரை**

தமிழகத்தில் பல்லவர்களுக்கு முன்னரே குடைவரைக் கோயில்களைக் தோற்றுவித்த பெருமை முற்காலப்பாண்டியர்களையே சாரும் என்பதற்கு பிள்ளையார்பட்டி குடைவரைக் கோயிலே சான்று.

பிள்ளையார்பட்டியில் கற்பக விநாயகருக்கும் குடைவரை கோயில் வடதிசை நோக்கி அமைந்துள்ளது. தமிழ்நாட்டு குடைவரைக் கோயில்களில் மிகவும் தொன்மை வாய்ந்தாக கருதப்படுகிறது.

குன்றக்குடி குடைவரையில் சுந்தரேசுவரர், அண்ணாமலையார், மலைக் கொழுந்தீஸ்வரர் போன்ற குடைவரைக் கோயில்களிலும் உள்ள சிவலிங்கங்கள் மூன்றும் மலையைக் குடைந்து உருவாக்கப்பெற்றவை. முற்கால பாண்டியர் குடைவரையில் காணப்படாத அமைப்பாகும்.

அரளிப்பட்டி குடைவரை எளிய அமைப்பதுள்ளது. கட்டமைப்பு சிற்பங்கள் இதன் காலத்தே கி.பி. எட்டாம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதியாக கொள்ளலாம்.

திருமெய்யத்துக்கும் குடைவரைக் கோயில்கள் சிற்பங்களே முற்கால பாண்டியர்களின் கலைத்தறனைக் காட்டுவதுடன் மெய்யுணர்வையும் பெருக்குகின்றன. ஒரே கல்லினால் ஆன சிற்பங்களையும் செங்குத்தான பாறைகளின் ஒற்றைக்கல் கோயில்களையும் பாறைகளை குடைந்து குடைவரை கோயில்கள் உருவாகி உள்ளன.
பிரான்மலை குடைவரை முக மண்டபத்திற்கு மேற்கே உள்ளது. குடைவரைக் கருவறை பாறையில் குடைந்து நணி:ட நிண்ட சதுர வடிவில் தூண்களே இல்லாது அமைக்கப்பெற்றதாகும். குடைவரை செதுக்கும் போது பாறையிலேயே செதுக்கி உருவாக்கி திருக் கொண்டு அம்மையும், அப்பனும் திருமண திருக்கோலத்தில் எழுந்திருளியுள்ளனர் என்பது விளங்குகிறது.

**அடிக்குறிப்புகள்**

1. பாலசுப்பிரமணியம், எஸ்.ஆர். முற்காலச் சோழர் கலையும் சிற்பமும் ப.6
2. நாகசாமி இரா.சுந்தரமூர்த்தி மா. தமிழககோயில்களுக்கும், ப.57
3. கணேசன் சா. பிள்ளையார்பட்டி தல வரலாறு, ப.2
4. மேவாலி கோபாலன் பிள்ளையார்பட்டி பிள்ளையாரப்பா, ப.21.
5. பரமகுரு மரு.குன்றக்குடி தலவரலாறு, ப.42
6. பரமகுரு மரு.பறம்புமலை திருக்கொடுங்குன்றம் வரலாறு, ப8.
7. பரமகுரு மரு. திருக்கோளக்குடி வரலாறு,ப. 35
8. குன்றக்குடி பெரியபெருமாள், குன்றக்குடி ஆதீன ஐந்து கோயில்கள், ப.47.
9. கணேசன் எஸ். திருமயம், திவ்வியபிரமந்தமும், ப.17.
10. கந்தசாமி பி. தமிழ்நாட்டில் தலவராலாறும், பண்பாட்டுச் சின்னங்களும், ப.307.
11. டாக்டர் மணிவண்ணன் எல்.பாண்டியநாட்டு வைணவக் கோயில்களும், கலையும், கட்டிட கலைகளும், ப. 4.
12. நளினி மு. கலைக்கோயில்கள் இரா. தென் தமிழ்நாட்டுக்கு குடைவரைகள் தொகுதி.1 ப.7.
13. பாண்டியர் செப்பேடுகள் பத்து தமிழ்வரலாற்றுக்கழகம், 40, பிடர்ஸ் ரோடு, சென்னை, (1)பதிப்பு- 1967.

14. நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு சேசாத்திரசர்மா, அ. வானதி பதிப்பகம், தி.நகர், சென்னை (1) பதிப்பு 1970.

15. தென்தமிழ்நாட்டு குடைவரைகள் (நளினி மு. கலைக்கோவன்; இரா.சேகர் பதிப்பகம், 66, பெருமாள் தெரு, எம்.ஜி.ஆர் நகர், சென்னை 18 (1) பதிப்பு 2002.

16. பறம்புமலை திருக்கொடுங்குன்றம் வரலாறு, பரமகுரு திருக்கெடுங்குன்றம் வரலாறு, கபிலன் பதிப்பகம், 127 குறுக்குத் தெரு, புதுச்சேரி -8, (1) பதிப்பு 2007.

17. முற்கால சோழர் கலையும், சிற்பமும் எஸ்.ஆர்.பாலசுப்பிரமணியன் தமிழ் வெளியீட்டுக் கழகம், தமிழ்நாடு அரசு, 1966.

18. பிள்ளையார்பட்டி பிள்ளையாரப்பா மேவாணி கோபாலன்; விஜயா பதிப்பகம், 20, ராஜா வீதி, கோவை.

19. தமி;ழ்நாட்டின் தல வரலாறுகளும், பண்பாட்டுச் சின்னங்கள், கந்தசாமி வி. பழனியப்பா பிரதர்ஸ், ராஜ வீதி, கோவை -1, 1983.



MUTHTHARASI – Art Literary Culture Tamil Journal
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
SPL-EDITION – IV VOLUME - 1
மார்ச்சு-2025 E-ISSN: 2584 - 1238

## 20. முருகு - முருகன் - சேயோன் - வரலாறும் நீட்சியும்

**பேரா.க.மாரிச்செல்வம்,**
உதவிப்பேராசிரியர், வரலாற்றுத்துறை,
விருதுநகர் இந்து நாடார்களுக்குப் பாத்தியப்பட்ட
செந்திக்குமார நாடார் கல்லூரி(தன்னாட்சி),விருதுநகர்.
DOI 10.5281/zenodo.15067048.

**Abstract:**

In the ancient religious history of the Tamils, nature worship, center stone worship, ancestor worship, tree worship, mother goddess worship, and Velan worship were very important forms of worship. In the society of that time, which bore the remnants of ethnic groups, these forms of worship were intertwined, transformed, and moved with each other. Among these, mother goddess worship and Muruga worship had a worship system that carried many ritual movements and performing arts, which can be seen throughout the classical period. All these names such as Anangu, Sur, Kotravai, Pazhayol, Kadamarch Selvi, Murugu, Murugan, Velan were closely related to the feelings of the ancient society and basic psychological expressions such as fear, security, trust, anger, and current problems. These forms of worship were not associated with mythology, ideological expressions, or systems of spiritual search. Therefore, they were unique in their worship, closely associated with arts and rituals in their respective places.

**Key Words:** Worship - Murugan -Ancient Religious

**முன்னுரை:**

தமிழரின் தொல் சமய வரலாற்றில் இயற்கை வழிபாடு, நடுகல் வழிபாடு, முன்னோர் வழிபாடு, மர வழிபாடு, தாய்த்தெய்வ வழிபாடு, வேலன் வழிபாடு போன்றவை மிக முக்கியத்துவம் பெற்ற வழிபாடுகளாக இருந்துள்ளன. இனக்குழு எச்சங்களைத் தாங்கிய அன்றைய சமூகத்தில் இவ்வழிபாடுகள் ஒன்றோடு ஒன்று உறழ்ந்தும் பிறழ்ந்தும் நெகிழ்ந்தும் விளங்கின. இவற்றில் தாய்த்தெய்வ வழிபாடும் முருக வழிபாடும் பல சடங்கியல் அசைவுகளையும், நிகழ்த்துக் கலைகளையும் தாங்கிய வழிபாட்டு முறையினைக் கொண்டதாக இருந்ததைச் செவ்விலக்கியப் பரப்பெங்கும் காண முடிகிறது. அணங்கு, சூர், கொற்றவை, பழையோள், காடமர்ச் செல்வி, முருகு, முருகன், வேலன் எனும் இப்பெயர்கள் யாவும் தொன்மைச் சமூகத்தின் உணர்வுகளோடும், அச்சம், பாதுகாப்பு, நம்பிக்கை, உக்கிரம் (கோபம்) நடப்பியல் பிரச்சனைகள் போன்ற அடிப்படை உளவியல் வெளிப்பாடுகளோடும் நெருக்கம் கொண்டிருந்தன. புராணீகத்தையும், கருத்தியல் வெளிப்பாடுகளையும், ஆன்மீகத் தேடல் கொண்ட முறைமைகளோடும் இவ்வழிபாடுகள் தொடர்புபடுத்தப்படவில்லை. எனவே அதற்குரிய தளங்களில் கலைகளுடனும் சடங்குகளுடனும் நெருக்கம் கொண்டு வழிபாடுகளில் தனித்துவம் கொண்டு விளங்கின.

**சடங்குகள்:**

சடங்குகள் என்பவை குறியீட்டு ரீதியிலான சமூகச் செயல்பாடுகளாகும். தொன்மையான பழங்குடி மனம் இயற்கையினை எதிர்கொண்ட விதம் சடங்குகளாக உருவெடுத்தது. பின்பு அதன்மீது குறியீட்டு ரீதியாக மேலதிகப் பொருள் ஏற்றப்பட்டு அது நிறுவப்பட்ட ஒன்றாக மாறுகிறது. பலசமயம் அன்றாட வாழ்க்கையின் ஒரு சாதாரணச் செயல்பாடு கூட குறியீடாக உள்வாங்கப்படும் போது சடங்காக மலர்வதைக் காணமுடிகிறது.

வாழ்க்கைத் தருணங்கள், பூசைகள், கேளிக்கைகள் போன்றவற்றில் சடங்குகள் உருவாகின்றன. சடங்குகள் தொடர்ச்சியாக நிகழ்த்தப்படும் போது அவற்றில் பயிற்சி பெற்றவர்கள் உருவாகின்றனர். பழைய சமூக அமைப்பில் அவர்கள் ஒரு சாதியாக

அடையாளம் காணப்படுகிறார்கள். அவர்கள் செய்யும் போது சடங்கிற்குக் கலை என்னும் தகுதி வருகிறது. அதைச் சடங்குக்கலை என்கிறோம். சடங்குகள் குறியீடுகளாக அமைந்தவை. அவை ஆழ்மனம் சார்ந்த வெளிப்பாடுகளாகவே அமையும். எனவே வாழ்க்கைச் சூழல்கள் மாறும் போதும் அவை மாறாமல் நீட்சியாகவே அமைகின்றன. இப்பின்னணியில் வைத்துதான் நாம் வழிபாட்டுச் சடங்குகளை நோக்க வேண்டும். அவை தம்மளவில் குறியீட்டு அடையாளங்களைப் பெற்று சடங்குகளாகப் பரிணமிப்பவை.

முருக வழிபாட்டில் இடம்பெற்ற வெறியாடல், குரவையாடல் மற்றும் காவடியாடல் சடங்குகளைப் பொதுத்தளத்தில் நிறுத்தி அதன் குறியீட்டுப் பின்னணிகளையும் அச்சடங்கினை மேற்கொண்ட கலைஞர்களையும் நிகழ்த்துக் கலை செயற்பாடுகளையும் அதன் நீட்சியையும் அறியும் நோக்கில் இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

**வழிபாடும் தமிழரின் சமய வரலாறும்:**

தமிழரின் சமய வரலாற்றில் வேலன் வழிபாடு இரு தளங்களில் இயங்கியதைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்கின்றன. முதலாவது, மேற்குறிப்பிட்டவாறு தனித்துவம் பெற்ற சடங்குகளோடும், நிகழ்த்துக் கலைகளோடும் சேர்ந்து தமிழ் மரபிற்கே உரித்தான முறையில் வழிபாடு கொண்ட வேலன் வழிபாடு, இரண்டாவதாகப் புராணீகத்தோடு தொடர்பு பெற்று, வைதீக மரபும் தமிழ் மரபும் இணைந்த நிலையில் காணப்படும் முருக வழிபாடு. பிற்காலச் செவ்விலக்கிய நூற்களில் இவ்வழிபாட்டின் அடையாளங்கள் நிரம்பத் தென்படுகின்றன. இதில் கூத்திற்குப் பதிலாக வைதீகச் சாயல் கொண்ட சடங்குகளே வழிபாட்டில் வெளிப்படுகின்றன. சங்க கால இறுதியிலிருந்தே இம் மரபுகள் கலந்திருக்க வேண்டும். முருகன் கொற்றவையின் மகனாக்கப்படுதல், கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்படுதல், தெய்வயானையுடன் மணம்புரிதல், சூரன் வதம், போன்ற புராண உருவகங்கள் முருகனைச் சுப்பிரமணியனாகவும், கந்தனாகவும் வைதீகச் சாயலேற்றின. ஆக முருகன் ஸ்கந்தனானான். பின்பு முருகன் ஆரிய மரபிற்குட்பட்ட சுப்பிரமணியனாகவே பெரும்பாலும் அடையாளப்படுத்தப்படுகின்றான். திருமுருகாற்றுப்படையில் இதற்கான எச்சங்கள் நிரம்பவே காணப்படுகின்றன. மாறாக தமிழ் மரபிற்கே உரிய குணங்களாகச் சங்க இலக்கியங்கள் கூறும் முருகனின் இயல்புகள் குறிப்பிடத்தக்கவை.

1.**மலையுறைத்தெய்வம்**
2.**அச்சம் தரும் தெய்வம்**
3.**இளமை, காதல் நோய் தருபவன்**
4.**மிகுந்த கோபம் கொண்டவன். போர்க்குணம் கொண்டவன்.**
5.**பெண்களிடம் பீடிப்பவன்**
6.**உயிர்ப்பலி பெறுபவன்.**
7.**வெறியாட்டுடன் குரவைக் கூத்துடன் தொடர்பு படுத்தப்படுபவன்**

முருகனின் இப்பண்புகள் யாவும் தமிழ் மரபிற்கேயுரியவை. இதனைப் பி.எல். சாமி, நா. வானமாமலை, கபில் சுவலபில், அ.கா. பெருமாள் உள்ளிட்ட ஆய்வாளர்கள் ஆராய்ந்துள்ளனர். இவ்வாய்வுகளை அடியொற்றி தமிழ மரபிற்கே உரித்தான முருக வழிபாட்டினைக் கூத்துக்கள் கலைகள் சடங்குகள் வழியாக இனங்கண்டு, இவ்வகை வழிபாட்டுக் கூத்துக்களின் கலைகளின் நீட்சியை ஆராய்வது மிக முக்கியமானது.

சங்க இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்ட செய்திகளின் அடிப்படையில் முருக வழிபாட்டில் இடம்பெற்ற கூத்துக்களினை மூவகையாகப் பாகுபடுத்தலாம்.

1.**வெறியாட்டு**
2.**குரவைக்கூத்து**
3.**பல்வகைக் கூத்துகள்**

இதில் வெறியாட்டு என்னும் சடங்கைப் பற்றி சங்க இலக்கியங்களில் நிரம்பச் செய்திகள் உள்ளன. சங்க இலக்கியங்களில் முருக வழிபாட்டின் பெரும்பகுதி வெறியாட்டின் வழியாகவே காணப்படுகிறது. இதனைச் சடங்கில் கரைந்த கலையாகக் கூறுகிறார். ...... அ.கா. பெருமாள் (2013:19) சங்க இலக்கியங்களில் மிக விரிவாக விளக்கப்பட்ட கூத்தாகவும் இது உள்ளது. அடியார்க்கு நல்லார் இதனைத் தெய்வம் ஏறப்பட்டு நிகழும் கூத்து என்கிறார். பிங்கல நிகண்டு கூஷதேவர்க்கு ஆடும் கூத்து; என்கிறது. வெறியாட்டு நிகழ்த்துபவன் கூஷவேலன்; எனப்பட்டான். அவனே கூஷமுருகு; ஏறப்பட்ட பூசாரியாகிறான். வேலுடைய முருகனைத் தருவிக்க வெறியாடுபவன் வேலை ஏந்துவான். இதனால் வேலன் என்று அழைக்கப்பட்டான்.
தொல்காப்பியம் வெறியாடப்படும் நிகழ்வின் பின்புலத்தைப் பின்வருமாறு காட்டுகிறது.

**'களவு அலராயினும் காமம் மெய்ப்படுப்பினும்**
**அளவுமிகத் தோன்றினும் தலைப்பெய்து காணினும்**
**கட்டினுங் கழங்கினுங் வெறியென இருவரும்**
**ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்"**

**(தொல்.பொருள். 113: 1-4)**

இதற்கு உரை கூற வந்த நச்சினார்க்கினியர், 'கட்டிவிச்சியும் வேலனுந் தாம் பார்த்த கட்டினானுங் கழங்கினானுந் தெய்வத்திற்குச் சிறப்புச் செய்தாக் கால் இம்மையில் தீராதென்று கூறுதலின் அவ்விருவர் தம்மினொத்த திறம் பற்றியதனையே செய்யுஞ் செய்தியிடத்தும்" என்கிறார். (தொல்காப்பியப் பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியருரையும், ப. 509). தலைவியின் களவுக் காதல் பலரால் அறியப்பட்டு அலர் உண்டாயினும் காமத்தால் தலைவியின் உடலில் வேறுபாடுகள் தோன்றினாலும் இது முருகனால் வந்தது என்று கட்டுவிச்சியும் வேலனும் குறிசொல்லி வெறியாட்டினை மேற்கொள்வர். பெண்களை கூஷமுருகு; பற்றிக்கொள்ள, அதனால் இளைப்புற்ற அப்பெண்களிடமிருந்து முருகினை அகற்றி ஆற்றுப்படுத்துவதற்காக கூஷவேலன்; வெறியாடி, நிகழ்த்தி வந்த சடங்கு, பூர்வீகப் பண்பிலிருந்து மாறாமல் மலை வாழ் மக்களிடமும் காடுவாழ் மக்களிடமும் இருந்ததைப் பல சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

**'வெறியென உணர்ந்த அரிய அன்னையைக்**
**கண்ணினுங் கனவினுங் காட்டி இந்நோய்**
**என்னினும் வாராது மணியின் தோன்றும்**
**அம்மலைக் கிழவோன் செய்தனினிது எனின் . . .**
**நெடுவேட்கு ஏதும் உடைத்தோ"** **(நற். 273)**

எனும் நற்றிணைப் பாடல், இக்காம நோயானது என்னால் வாராது தலைவனால் தான் வந்தது என்று முருகன் அன்னையிடம் கூற மாட்டானோ? எனத் தலைவி ஏங்குவதாகக் கூறுகிறது.
இதில் முருகன் இந்நோயைத் தரத்தக்கவன் என்பது புலனாகிறது. தெய்வமேறி ஆடுதல் என்பது தொல் வழிபாட்டுக் கூறுகளுள் ஒன்று. அதன் தொடர்ச்சியாகவே வெறியாடலைக் கூற முடியும். இது அகம் புறம் என இரு திணைகளின் சார்பிலும் நடத்தப்பட்டுள்ளது. தொல்காப்பியம் தலைவி கூற்று நிகழுமிடங்களைக் குறிப்பிடுகையில்,

**'வெறியாட் டிடத்து வெருவின் கண்ணும்**
**குறியின் ஒப்புமை மருடற்கண்ணும்"** **(தொல். கள. 111)**

என்கிறது. அதாவது வெறியாட்டு அக ஒழுக்கத்தில் தலைவியின் பொருட்டு நிகழ்த்தப்படுவது. இது கட்டுக்குறி, கழங்குக் குறிகளின் பின் நிகழும் என்கிறார் தொல்காப்பியர்.
புறத்திணையியலில்,

**'வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்**
**வெறியாட் டயர்ந்த காந்தளும் முறுபகை"** **(தொல்.புறத். 60)**

இதற்கு உரைகூறிய நச்சினார்க்கினியர், கூஷதெய்வத்திற்குச் செய்யும் கடன்களை அறியும் சிறப்பினையும் உயிர்க்கொலை கூறலின் வெவ்வாயினையும் உடையவனாகிய வேலன் தெய்வ மேறியாடுதல் செங்காந்தள்; என்கிறார். (தொல்காப்பியம் பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியருரையும் ப. 162). வெட்சி வீரர்கள் நீரைக் கவரச் செல்லும் முன் தான் கொண்ட முயற்சியில் வெற்றி கிட்டுமா? என்பதை அறிய வேலனை அழைத்து வெறியாட்டு நிகழ்த்திக் குறி கேட்பர். குறி கூறுவதில் வல்லவனாகிய வேலன் காந்தள் மலர் சூடி வெறிக்களம் அமைத்து வெறியாடிக் குறி சொல்வான். இக்குறியின் வழியே வெட்சி வீரர்கள் போரைத் தொடங்குவர். எனவே வெறியாட்டுப் புறத்திணைக்கும் பொதுவானதாக இருந்ததை அறிய முடிகிறது. ஆனாலும் அகத்திணைப் பாடல்களில் மட்டுமே வெறியாட்டு விரிவாகப் பேசப்பட்டிருக்கிறது. காமம் மெய்ப்படத் தோன்றுதல், உடல் மெலிதல், பசலை பாய்தல் போன்ற நோய்க்கான அறிகுறிகள் களவுக் காலத்தில் தலைவியிடம் தோன்றுகின்றன. இதனைப் போக்கவே வெறியாடல் நிகழ்த்தப்பட்டது.

வெறியாடல் எவ்வாறு நிகழ்த்தப்பட்டது என்பதைச் சங்க இலக்கியங்கள் விரிவாகப் பதிவு செய்துள்ளன. சங்கப் புலவரான காமக் கண்ணியார், கூஷவெறிபாடிய காமக்கண்ணியார்; என்ற அடைமொழியுடன் சுட்டப்படுகிறார். அவர் பாடிய இரு அகநானூற்றுப் பாடல்கள் (22 மற்றும் 98) வெறியாடல் பற்றிய முழுச் சித்திரத்தை அளிக்கின்றன. வெறியாடலுக்கென்று தனியே களம் அமைக்கப்படுகிறது. பின்பு வேலனுக்கு மாலை அணிவித்து வளநகர் ஒலிக்குமாறு பாடி, இளஞ்செம்மறி ஆட்டினைப் பலி கொடுக்கப்படுகிறது. பின்பு பலியிட்ட இளவாட்டின் குருதியைத் தினைமாவில் கலந்து வைத்து முருகனை வரவழைப்பர். இச்சடங்கானது நள்ளிரவில் நடைபெறும் (அகம். 98). வெறிக் களத்தில் பூக்கள் பரந்து கிடக்கும் (அகம். 114) வெண்பொறி தூவப்பட்டிருக்கும். (திரு.முருகு. 230-234) கோழிக்கொடி நாட்டப்பட்டிருக்கும். களத்தின் ஒருபுறம் சந்தனம் தெளிக்கப்பட்டு ஆட்டுக்கிடா கடம்ப மரத்தில் கட்டப்பட்டிருக்கும் (பரி. 174) குருதி கலந்த தினை, தானியம், பரப்பப்பட்டிருக்கும். நெய்யும் சிறுகடுகும் சேர்த்துப் பூசியபடி வேல் நடப்பட்டிருக்கும் (திரு.முருகு. 240-244). வெறியாடுபவன் சிவப்பு ஆடை உடுத்தியும் சிவந்த மாலையினைக் கழுத்தில் அணிந்தபடியும் இருப்பான். கையில் காப்புவில் கட்டியிருப்பான் (திரு.முருகு. 230-34). இவ்வாறு செவ்விலக்கியங்களில் பரவலாக வெறியாடல் பற்றிய செய்திகள் உள்ளன.

'வெறியாட்டின் நீட்சியை நாட்டர் தெய்வ விழாக்களின் ஆட்டங்களிலும், சடங்குக் கூறுகள் கொண்ட கலைகளிலும் இன்றும் காண முடியும்" என்கிறார். நாட்டார் இலக்கிய ஆய்வாளர் அ.கா. பெருமாள் (2013: 20) துவக்க காலத்தினைச் சார்ந்தனவாக அறியப்பட்ட சங்க இலக்கியங்களில் வேலன் பக்தர்களின் வேண்டுதலுக்காக வெறியாடினான். ஆனால் பிற்காலத்தைச் சார்ந்த சங்க நூற்களான பரிபாடல் மற்றும் திருமுருகாற்றுப் படையில் முருகன் பக்தர்களின் மேல் ஏறியதாகக் குறிப்புகள் உள்ளன. அதாவது வெறியாட்டுச் சடங்கு பார்வையாளர்களை நோக்கி நகர்ந்ததை இது காட்டுகிறது. இதுவே வெறியாட்டின் நீட்சிக்கான முதல் விதையாகும். இன்று வழக்கில் உள்ள கணியான் ஆட்டத்தின் துணை ஆட்டங்களான அம்மன் கூத்து, பேயாட்டம், கரகாட்டம், சாமியாட்டம், செலாகுத்து ஆட்டம், மயானக் கொள்ளை ஆகிய ஆட்டங்களிலும் வெறியாட்டின் நீட்சியைக் காண முடியும். இவை விரிவான ஆய்வுக் களங்கள்.

### ஆறுபடை வீடு உருவான சில குறிப்புகள் :

- **திருப்பரங்குன்றம்:**

  தேவேந்திரனையும், தேவர்களையும் சிறை மீட்டதற்கு நன்றிக் கடனாக இந்திரன் தன் மகள் தெய்வானையை முருகனுக்குத் திருமணம் செய்துகொடுக்கிறான்.

- **திருச்செந்தூர் :**

 சூரபத்மன் தேவர்களையும், இந்திரனையும், அவன் மனைவியையும் சிறை செய்து கொடுமை செய்தான். அவர்களைக் காப்பாற்ற முருகன் சூரபத்மனுடன் முருகன் போர்புரிந்த இடமே திருச்செந்தூர். அவர் போர்புரிந்த காலம் கார்த்திகை மாதம் சஷ்டியாகும். அதனால்தான் கார்த்திகை மாதம் சஷ்டியின் போது விரதம் இருந்து முருகனை வழிபடுகின்றனர்.

- **பழநி :**

 ஞானப்பழம் கிடைக்காத காரணத்தால் தன் பெற்றோர்களிடம் கோபம்கொண்டு முருகன் ஆண்டியின் கோலத்தில் நிற்கும் இடமே பழநி. இத்தலத்து மூலவர் நவபாஷாணத்தால் ஆனவர்.

- சுவாமிமலை:

 தந்தைக்குப் பாடம் சொன்ன இடம் சுவாமி மலை. பிரணவ மந்திரத்திற்குப் பொருள் தெரியாத பிரம்மனை முருகன் சிறையில் அடைக்கிறார். இதைக் கேள்வியுற்ற சிவபெருமான், எனக்கும், பிரம்மாவுக்கும் கூடத் தெரியாத பிரணவமந்திரத்தின் பொருள் உனக்குத் தெரியுமா? என்று கேட்கிறார். அதன்படி உபதேசிப்பவன் குரு, கேட்பவன் சீடன் என்ற முறையில் தனது தந்தை சிவபெருமானுக்கு குருவாக இருந்து பிரணவ மந்திரத்தை உபதேசம் செய்தார். முருகன் ஆசனத்தில் அமர, அவர் கீழ் சிவன் அமர்ந்து தன் கரத்தால் வாய்ப் பொத்தி உபதேசம் கேட்ட இடமே சுவாமிமலை

- **திருத்தணி:**

 முருகன் வேடர்குலத்தில் பிறந்த வள்ளியைக் காதல் மணம் புரிந்துகொண்ட இடமே திருத்தணி

- **பழமுதிர்ச்சோலை:**

 குறிஞ்சிக் கடவுளாகிய முருகன் வயோதிகனாகத் தோன்றி நக்கீரனுக்குக் காட்சியளித்த இடம் பழமுதிர்ச்சோலையாகும். தமிழுக்கு தொண்டாற்றிய அவ்வையாருக்கு, சுட்டபழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா? என்று கேட்டு, அவரையே திகைக்கச் செய்த முருகப்பெருமான் திருவிளையாடல் நடந்த தலம் இதுவாகும். முருகக் கடவுளுக்கு கந்தன், குமாரன், வேலன், சரவண பவன், ஆறுமுகம் குகன், விசாகன், குருநாதன் என்று எத்தனையோ பெயர்கள் இருக்கிறது.

**முடிவுரை:**

கேரள மாநிலத்தின் வடபகுதியிலுள்ள மலபார் காசர்கோடு மாவட்டங்களில் பழந்தமிழ் இலக்கியங்கள் கூறும் வேலன் வழிபாட்டு முறைகளைப் பின்பற்றும் பூசாரி இனத்தவர் இன்றும் வாழ்கின்றனர். அவர்கள் கூஷவேலன்மார்; என்று அழைக்கப்பெறுகின்றனர். குறிப்பிட்ட விழாக்காலங்களில் இவர்கள் வேலன் கோலம் அயிந்து ஆடுகின்றனர். அது வேலனாட்டம் அல்லது தெய்யம் (தெய்வம்) என்று அழைக்கப்படுகிறது. மலையாள நாட்டில் வேலன்மார் செய்யும் தெய்வம் சார்ந்த வழிபாடுகள் சங்ககாலத்து வேலன் வெறியாட்டின் எஞ்சிய கூறுகளே என்றும் வேலன் வழிபட்ட களமே பல்வேறு மந்திரங்கள் செய்யும் களமாகப் பின்னாளில் மாறியது என்றும் கேரள வேலன் ஆட்டத்தைப் பற்றி ஆராய்ந்த பி.எல். சாமி குறிப்பிடுகிறார் (1990 : 81). இன்றைய நாட்டார் தெய்வ வழிபாட்டில் இடம் பெறும் கூஷசாமியாட்டம்; இதன் நீட்சியாகக் கொள்ளப்படும். அப்போது குறி சொல்லுதல் வழக்கமும் (குமரி மாவட்டத்தில் இதனை கூஷகணக்கு; என்பர்). பலியாடும் முறையும் இன்றுவரை உள்ளது. வெறியாட்டின் மரபுத் தொடர்ச்சியை இது வெளிக்காட்டுகிறது. அதைப்போல, தஞ்சை மாவடட்டத்தில் நிகழ்த்தப் பெறும் கன்னிமார் வழிபாடு வெறியாடல் நிகழ்ச்சியோடு பெரிதும் ஒத்திருக்கிறது என்கிறார் சிலம்பு நா. செல்வராசு. (2001:15). இது ஆய்வுக்குரியது. இவையனைத்தும் வெறியாட்டுச் சடங்கு

வெவ்வேறு வடிவங்களில் வழிபாடாகவும் சடங்காகவும் நிகழ்த்தப்பட்டு வருவதைக் காட்டுகின்றன.

**குறிப்புகள்**

1. கணேசையர், (ப.ஆ.) - 'தொல்காப்பியம் பொருளதிகார மூலம் முன்னைந்தியல்களும் நச்சினார்க்கினியர் உரையும்", உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,சென்னை - 13.

2. கைலாசபதி, க., - 'பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும்", குமரன் பப்பிஷர்ஸ்,வடபழனி, சென்னை - 26.பதிப்பு – 1991

3. சண்முகம்பிள்ளை, மு.,- 'சங்கத்தமிழரின் வழிபாடும் சடங்குகளும்", உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,சென்னை - 13.பதிப்பு - 2003.

4. செல்வராசு சிலம்பு, நா.,- 'தொல்;தமிழர் சமயம்", காவ்யா, டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம்,சென்னை - 24, பதிப்பு - 1991.

5. மகாதேவன் ஐராவதம்,- 'சிந்;து சமவெளிப் பண்பாடு" செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம், சென்னை.

6. ஜெகதீசன், தெ.வே., (ப.ஆ)- 'பழந்தமிழ்க் கலைகளும் நீட்சியும்", காவ்யா, டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம், சென்னை - 24,பதிப்பு - 2013.



MUTHTHARASI – Art Literary Culture Tamil Journal
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
SPL-EDITION – IV VOLUME - 1
மார்ச்சு-2025 E-ISSN: 2584 - 1238

# 21. ஜெயமோகன் அவர்களின் அறிவியல் புனைகதைத்திறன்

**முனைவர் பா.பொன்னி,**
இணைப்பேராசிரியர் மற்றும் துறைத்தலைவர்,
தி ஸ்டாண்டர்டு ஃபயர் ஒர்க்ஸ் இராஜரத்தினம் மகளிர் கல்லூரி(தன்னாட்சி),சிவகாசி.
DOI 10.5281/zenodo.15067111.

**Abstract:**

Science systematically defines the object of research. It analyzes what has been defined. It classifies the analyzed objects. It helps to know what kind of relationships they have with each other. With such science, literary genres such as short stories, novels, and plays are also being created. Science fiction was first written in the West. Nowadays, science fiction is also being created in our country. Jayamohan holds a significant place among the creators of science fiction. This article aims to examine his science fiction skills through the short story "Observing Bird" in his short story collection "Visumbu".

**Key Words:** Jayamohan - Science Fiction - Short story

அறிவியல், ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்ட பொருளை முறையாக வரையறை செய்கிறது. வரையறை செய்தவற்றைப் பகுத்துப் பார்க்கின்றது. பகுத்த பொருள்களை வகைப்படுத்துகின்றது. அவை ஒன்றோடு ஒன்று எத்தகைய உறவுகளைக் கொண்டிருக்கின்றன என்பதனை அறிந்து கொள்ள உதவுகிறது. அத்தகைய அறிவியலைக் கொண்டு சிறுகதை, நாவல், நாடகம் போன்ற இலக்கிய வகைகளும் படைக்கப்பட்டு வருகின்றன. மேலைநாடுகளில் தான் முதன்முதலில் அறிவியல் புனைகதைகள் எழுதப்பட்டன. தற்காலத்தில் நம் நாட்டிலும் அறிவியல் புனைகதைகள் படைக்கப்பட்டு வருகின்றன. அறிவியல் புனைகதை படைக்கும் படைப்பாளர்களுள் ஜெயமோகன் அவர்கள் குறிப்பிடத்தகுத்த இடம் வகிக்கின்றார். அவரது அறிவியல் புனைகதைத்திறனை அவரது விசும்பு என்னும் சிறுகதைத் தொகுப்பில் அமைந்துள்ள உற்றுநோக்கும் பறவை சிறுகதையின் வழி ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

### அறிவியல் புனைகதை

புனைதல் என்பதனை அழகுபடுத்துதல் எனலாம். ஒருவர் தன்னுடைய கதைகளில் கற்பனைகளை ஏற்றிக் கூறி அந்தக் கதையைச் சுவையுடையதாக உருவாக்குதல் புனைகதை ஆகும்.

அறிவியல் புனைகதை என்பது முன்னேற்றமும் குழப்பமும் நிறைந்த (அறிவியல்) சூழ்நிலையில் மனித இனத்தை வரையறை செய்து பிரபஞ்சத்தில் மனிதனின் இடத்தைத் தேடும் இலக்கியம்" (சுஜாதா, விஞ்ஞானச் சிறுகதைகள்,ப.9) எனச் சுட்டுவர். மெய்யான அல்லது கற்பனையான அறிவியல் நிகழ்வுகளைக் கொண்டு புனையப்படும் கதைகள், சமூகம் அல்லது தனிமனிதனை மையப்படுத்திப் படைக்கப்படும் அறிவியல் இலக்கியம் எனலாம். ஏதேனும் ஓர் அறிவியல் காரணியை அடித்தளமாகக் கொண்ட இலக்கியக் கற்பனை வடிவமே அறிவியல் புனைகதை ஆகும்.

விசும்பு சிறுகதையின் முன்னுரையில் ஜெயமோகன் அவர்கள் அறிவியல் புனைகதை என்றால் என்ன? என்பது குறித்த விளக்கத்தை அளித்துள்ளார். "என் நோக்கில் அறிவியல் கதை என்பது இருதளங்களில் செயல்படக் கூடியது. ஒன்று அறிவியலின்

கேள்விகளுக்கு இலக்கியத்தின் வழிமுறையான கற்பனையைக் கொண்டு பதில் சொல்ல முயல்வது. இது ஒரு மேலோட்டமான தளம். இரண்டு வாழ்க்கையின் அடிப்படைக் கேள்விகளுக்கு அறிவியலின் படிமங்களைப் பயன்படுத்திப் பதில் தேட முயல்வது. எப்படிப் புனைகதையானது வரலாற்றில் இருந்து படிமங்களை எடுத்துக் கொண்டு வரலாற்றுக் கதைகளை உருவாக்குகிறதோ அப்படி. காலம், மரணம், பிறப்பு மற்றும் இறப்பின் பொருள், இருத்தலின் நோக்கம், மானுட உறவுகளின் சிக்கல்கள், மானுட உணர்ச்சிகள் என எவற்றையெல்லாம் வழக்கமாக இலக்கியம் ஆராய்கிறதோ அவற்றையே அறிவியல் புனைகதைகளும் அறிவியலின் படிமங்களைக் கொண்டு ஆராய்கின்றன" (விசும்பு, இரண்டாம் பதிப்புக்கான முன்னுரை) என்ற அடிப்படையில் விளக்கம் தருகின்றார். அவரது விளக்கத்தின் அடிப்படையில் அவர் படைத்துள்ள விசும்பு சிறுகதைத் தொகுப்பு அமைந்துள்ளது.

**உற்றுநோக்கும் பறவை**

ஜெயமோகன் அவர்கள், அவர் குறிப்பிட்ட புனைகதைகளுக்கான களத்தில் இரண்டாவதான வாழ்க்கையின் அடிப்படைக் கேள்விகளுக்கு அறிவியலின் படிமங்களைப் பயன்படுத்திப்பதில் தேட முயல்வது என்ற அடிப்படையில் இச்சிறுகதையினைப் படைத்துள்ளார் எனலாம். வாழ்க்கையின் அடிப்படைக் கேள்விகளில் ஒன்று மனதின் செயல்பாடுகளுக்காகக் காரணம் என்ன? என்பது அதனை விளக்குவதாகவே இக்கதையினை ஆசிரியர் படைத்துள்ளார் எனலாம்.

பிரிட்டிஷ் ஆட்சியில் நடந்த நிகழ்வினைத் தற்காலத்தில் ஒருவர் ஆய்வு செய்வதாகக் கடந்த காலத்தையும் தற்காலத்தையும் இணைத்துக் கதைக் களமாகக் கொண்டு இக்கதையினை ஆசிரியர் படைத்துள்ளார். மாதேவன் என்னும் போலீஸ்காரர் பயந்த சுபாவம் உடையவர். எதிர்பாராத ஒரு கலவரத்தின் போது அவரது பயந்த சுபாவம் மறைந்து மூர்க்கத்தன்மை உடையவராக மாற்றம் பெறுகிறார். பின்னர் குட்டன்சாமி என்ற ஒரு சாமியாரின்பால் சேர்ந்து காலன்சாமி என்ற பெயரோடு துறவியாகி விடுகிறார். துவாத்மர் என்னும் மதத்தினை உருவாக்கித் தன்னோடு இன்னும் எண்பது பேரைச் சேர்த்துக் கொண்டு அந்த மதத்தைப் பரப்பத் தொடங்கினார். அங்கிருந்தவர்கள் மாதத்தில் 15 நாட்கள் சுக்கிலர் என்னும் பெயருடன் தூயவர்களாகவும், அடுத்த 15 நாட்கள் சியாமர்கள் என்னும் பெயருடன் கொடுமையான செயல்திறன் கொண்டவர்களாகவும் விளங்குகின்றனர்.அவர்களின் செயல்திறனை அதிகரிக்க அவர்கள் சக்ரமூலி என்ற மூலிகையைப் பயன்படுத்துகிறார்கள். சியாமர்கள் காலம் முடிந்த பிறகும் சுக்லர் ஆகாமல் சியாமர்களாகவே இருக்கத் தொடங்கிய நிலையில் அவர்களது தீயசெயல்கள் அதிகரிக்கின்றன. ஆகவே, திருவனந்தபுர மகாராஜா பிரிட்டிஷ்படை உதவியுடன் அவர்களை அழித்து விடுகிறார்.

இவர்களைப் பற்றிய தகவல்களைத் தேடும் இக்கதையின் முதன்மைப்பாத்திரத்திற்குத் திருவனந்தபுரத்தைச் சார்ந்த உளவியல் ஆய்வாளர் பங்கஜாட்சன் தம்பி என்பவரின் தொடர்பு கிடைக்கிறது. மதம் உருவாக்கிய ஆழ்மனப்படிமங்களில் இருந்தும் அகநம்பிக்கைகளில் இருந்தம் விடுதலை பெற வேண்டும் ,மனிதர்களுக்குள் சிறுவயது முதல் உருவாகியுள்ள நனவிலியை அகற்றிப்

புதுநனவிலியைக் கட்டி எழுப்பிக் கொள்ள வேண்டும் என்ற நோக்கங்களுடன் பங்கஜாட்சன்தம்பி ஆதார உளவியல் பயிற்சி மையத்தை நடத்தி வருகிறார். அவரும் தன் பயிற்சியாளர்களுக்கு இச்சக்ரமூலி மூலிகையினையே பயன்படுத்துகிறார். ஒரு வருடம் கழித்து இம்மையத்திற்குள்ளும் ஆயுதப்போலீஸ் புகுந்தது என்று கதையினை முடிக்கிறார்.

**மனித மனம்**

மனிதமனம் என்பது சிக்கலான ஒன்று. மனித மனத்தின் இயல்புகளை ஆரம்பகாலம் தொட்டே தத்துவவாதிகளும் உளவியலாளர்களும் ஆராய்ந்து வந்திருக்கிறார்கள். ஒரு கிளி பழம் தின்கிறது. இன்னொன்று அதைப் பார்த்திருக்கிறது. இது உபநிஷதவரி. மனித நடவடிக்கைகளுக்கான காரணங்களை அறிவியல் அடிப்படையில் ஆராய்வது உளவியல் .இந்த இரண்டினையும் இணைத்து இச்சிறுகதையினை ஆசிரியர் படைத்துள்ளார்.

மனிதர்கள் அனைவருக்கும் ஆதிக்கமனப்பான்மை இயல்பானது. ஒவ்வொரு நிலையிலும் மனிதர்கள் பிறரை அடக்கி ஆளவே நினைக்கின்றார்கள். அந்த ஆதிக்கமனப்பான்மையின் விளைவாகத் தம்முடைய செயல்திறன் மற்றவர்களைக் காட்டிலும் உயர்ந்ததாக இருக்க வேண்டும் என்று விருப்பம் கொள்கிறார்கள். அதன் விளைவாக ப்பல்வேறு பரிசோதனைகளை மேற்கொள்கிறார்கள். மனிதர்களின் அடக்குமுறை எண்ணங்களின் மனப்பிரதிபலிப்பு எல்லாக் காலங்களிலும் காணப்படுவதை விளக்குவதாகவே இக்கதையினை ஆசிரியர் படைத்துள்ளார் எனலாம். பிரிட்டிஷார் காலத்தில் சக்ரமூலிமூலிகையைப் பயன்படுத்தி மனிதர்கள் தங்கள் வலிமையைக் காட்ட விரும்பியது போலவே காலங்கள் மாறிய பிறகும் மனிதர்கள் தங்கள் பலத்தைப் பெருக்கிக் கொள்ள அதே மூலிகையைப் பயன்படுத்தித் தங்கள் வலிமையைப் பெருக்கிக் கொள்வதாக இக்கதையின் போக்கினை அமைத்திருப்பதன் வாயிலாக மனித மனதின் ஆதிக்கமனோநிலையை வெளிக்காட்டியுள்ளார் எனலாம்.

**அடிப்படை மனவெழுச்சிகள்**

பிரிட்ச்சு (Bridges) என்னும் உளவியல் அறிஞர் "இளங்குழுவியின் மனவெழுச்சி பண்படாத அடிப்படைக் கிளர்ச்சியாக இருக்கும் என்று கருதுகிறார். குழந்தை வளர,வளர இக்கிளர்ச்சி மகிழ்ச்சி, துயரம் என்னும் இருபிரிவுகளாக இருக்கும் என்று கருதுகிறார். துயரமானது பின்னர் அச்சம், சினம் என்னும் இரு பெருங்கிளையாகப் பிரிகிறது. இந்த மனவெழுச்சிகளே ஒன்றுடன் ஒன்று பலவாறாக இணைந்து பொறாமை போன்ற மனவெழுச்சிகளின் ஆதாரமாக அமைகின்றது" (வர்த்தமானன் தமிழ் அகராதி, ப.696) என்பார். இவ்வடிப்படை மனவெழுச்சிகளை அடிப்படைச் செயல்பாடுகள் எனவும் குறிப்பிடுவர். "உளவியலார் பொதுவாக ஒருவனிடம் பிறப்பால் அமையும் மெய்ப்பாடுகள் அச்சம், சினம், மகிழ்ச்சி எனக் கருதுகிறார்கள்" (கோகிலாதங்கசாமி, மனிதவளர்ச்சி கற்றல் உளவியல், ப.106) என்றும் குறிப்பிடுவர். இவ்வடிப்படை மனவெழுச்சிகளுள் ஒன்றான அச்சத்தின் தூண்டுதலாலேயே மாதேவன் பாத்திரத்தின் இயல்பு மாறுவதனை நாம் காணமுடிகிறது.

**அச்சம்(Anxiety)**

அச்சம் என்பது ஓர் எதிர்மறை மனவெழுச்சியாகும். விலங்கினங்களிலும் இது காணப்படுகிறது. "தனிமனிதனால் வெற்றி கொள்ள முடியாத ஆபத்தான ஒரு நிலை ஏற்படும் போது அவனுக்கு அச்சம் ஏற்படுகிறது. ஒரு குறிப்பிட்ட நிலை உண்மையிலேயே

அச்சத்தை உண்டாக்குவதாக இல்லாவிட்டாலும் கூட அது ஆபத்தானது என்று தனிமனிதன் எண்ணினாலும் அவனிடம் அச்சம் தோன்றும் ((முனைவர்.பெ. வெங்கட்டம்மாள், பொது உளவியல், ப.129) என்று அச்சம் குறித்து விளக்கமளிப்பர்.

மாதேவன் பாத்திரத்தின் மனநிலை மாற்றம் குறித்துக் குறிப்பிடும் போது,"வேளி சந்தையில் நடந்த சண்டையின் போது உயிர் தப்பும் ஆவேசத்தில் ஒருவனை வெட்டினார். அவனது மரண அலறலும் துடிப்பும் தன்னுள் உக்கிரமான உவகை ஒன்றை ஊறச் செய்வதை உணாந்தார். அதன் பின் அவரை அவராலேயே கட்டுப்படுத்த முடியவில்லை. அச்சம் அகன்றது. கோபம் கூட இல்லாமலாயிற்று. அச்செயலில் இருந்த மகிழ்ச்சியின் காரணமாகவே அவர் போரிட்டார் வெட்டினார் குத்தினார்" ( விசும்பு, பக். 87 - 88 ) என்ற பகுதியில் மாதேவன் பாத்திரத்தின் அச்சமனோபாவம் மாறிய நிலையினைப் பமிவு செய்கிறார். அச்சம் நீங்கி ஆதிக்கம் தோன்றும் நிலையில் பிறரை மண்டியிட வைக்கும் ஆதிக்க மனோபாவத்திற்கு மனித மனம் என்றுமே ஆட்பட்டது என்பதனைப் புலப்படுத்துகிறார்.

**மனப்பிளவு**

ஆசிரியர் மனதின் வேறுபட்ட நிலையினை "மரத்தைத் தறிக்க வேண்டுமென்றால் மனம் உளியாகவும், சுத்தியலாகவும் ஒரே சமயம் மாறும். தன்மனம் ஒரு செயலைச் செய்யும் போது அச்செயலை வேறு ஒரு மனம் வேடிக்கை பார்க்கிறது என்று அவர் கண்டார். (விசும்பு.ப. 88) என்ற பகுதியில் விளக்குகிறார். இப்பகுதியை ஒரு கிளிபழம் தின்கிறது. இன்னொன்று அதைப் பார்த்திருக்கிறது என்ற உபநிஷதவரியுடன் தொடர்புடையதாக அமைத்துள்ளார்.

சுக்லன், சியாமன் என்னும் இருவரும் வேறுவேறு என்பதாக முதலில் கதைப்பின்னலைக் கொண்டு சென்று பிறகு மனித மனதின் வேறுபட்ட நிலை அது என்று கொண்டு முடிக்கிறார்.

இம்மனப்பிளவிற்கு அவர்கள் சக்ரமூலி மூலிகையைப் பயன்படுத்தியமையை, "சக்ரமூலி நம் மூளையில் உள்ள டோபோமினை மிக அதிகமாகப் பெருக வைக்கிறது. மூளையின் ரசாயனப் பரிமாற்றமும் உயிர் மின்னூட்டமும் பலமடங்கு அதிகரிக்கிறது. ஒட்டுமொத்தமாகப் பார்த்தால் நடந்து கொண்டிருக்கும் மூளை சட்டென்று உக்கிரமாக ஓட ஆரம்பிக்கிறது. மூளையின் வேகம் அதிகரிக்கும் போது அதைக் கட்டுப்படுத்தும் தர்க்கஅமைப்பு அதற்குப் போதாமலாகிறது. விளைவாக சக்ரமூலியை உள்ளே எடுத்துக் கொண்டால் நம் செயல்பாடுகள் கட்டுக்கடங்காதனவாக மாறிவிடுகின்றன. அதே சமயம் மூளையின் செயல்பாடுகள் மந்தமடைந்து விட்டவர்களுக்கு அது அமுதம் போல" (விசும்பு,பக்.86 - 87) என்றும்,

"துவாத்மர்கள் ஒரு மனப்பிளவுச் சமூகம் .மனப்பிளவைத் திட்டமிட்டு உருவாக்கிக் கொண்டவர்கள் அவர்கள். அதற்குத் தான் சக்ரமூலி பயன்படுத்தப்பட்டிருக்கிறது" (விசும்பு, பக்.86 - 87) என்றும் அமைந்துள்ள பகுதிகள் வழி மனப்பிளவுமுறைக்குச் சக்ரமூலியைப் பயன்படுத்திய தன்மையை விளக்கிக் காட்டுகிறார்.

இச்சிறுகதையில் ஆசிரியர் மனப்பிளவு குறித்துக் குறிப்பிடும் இடங்களில் மனம் குறித்த உளவியல் சிந்தனைகளை ஆழமாகப் பதிவு செய்துள்ளார். மனவெழுச்சியைத்

தூண்டுவதற்கான சக்ரமூலியைக் குறிப்பிடும் இடங்களில் அம்மூலிகையின் மூளைச் செயல்பாட்டினை அதிகரிக்கும் தன்மையை விளக்கிக் காட்டியுள்ளார். இவை போன்ற அறிவியல் சிந்தனைகளை மையப்படுத்தி மனித மனதின் இயல்பினை வெளிப்படுத்தும் பாங்கில் அறிவியல் சிறுகதையாகக் கட்டமைத்துள்ளமையை அறியலாகின்றது.

**துணைமை நூல்கள்:**


1. ஜெயமோகன் (ஆசிரியர்), விசும்பு (அறிவியல் புனைகதைகள்) - கிழக்குப் பதிப்பகம், சென்னை.
2. https://study.com/academy/lesson/what-is-science-fiction-definition-characteristics-books-authors.html
3. https://www.turnerstories.com/blog/2020/1/23/how-to-write-a-science-fiction-story




# 22. “செங்கடம்பு“ நாவல் காட்டும் பண்பாட்டு சித்தரிப்பு

**செல்வி செ.பிரியதர்ஷினி,**
பதிவு எண் MKU24PFOL11417,
பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளர்,
தி ஸ்டாண்டர்டு ஃபயர் ஒர்க்ஸ்
இராஜரத்தினம் மகளிர் கல்லூரி,சிவகாசி.
அலைபேசி எண் : 6369061225
மின்னஞ்சல் : priyaselvaraj1799@gmail.com

**முனைவர் பா.பொன்னி,**
இணைப்பேராசிரியர் & நெறியாளர்,
முதுகலை மற்றும்
தமிழாய்வுத்துறைத்தலைவர்,
தி ஸ்டாண்டர்டு ஃபயர் ஒர்க்ஸ்
இராஜரத்தினம் மகளிர் கல்லூரி,சிவகாசி.

DOI 10.5281/zenodo.15067126.

**Abstract:**

The living conditions of the people are reflected in their culture. Rural people are better in culture than urban people. Labor and relationships are valued as the two eyes of rural people. Rural people shine brighter in culture than educated geniuses. In this way, this article aims to examine the culture of rural people through the study of place, time, background, customs, beliefs, and entertainment, etc., in the novel “Sengadambu” written by Semmutai Sadasivam.

**Key Words:** Novel - Modern Literature - Civilization - Relationship

## முன்னுரை

தனித்த அடையாளம் கொண்ட ஒரு சமூகத்தின் வாழ்வுமுறையின் பிரதிபலிப்பாக அமைவது பண்பாடு ஆகும். ஒரு தலைமுறை மக்கள் அடுத்த தலைமுறையினருக்கு வழங்கக்கூடிய அனைத்தும் பண்பாட்டில் அடங்கும். பண்பாடு என்ற சிக்கலான முழுமையில் அறிவு, நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள், உணவு தயாரிக்கும் முறைகள், தொழில்கள், பொழுதுபோக்கு இவையாவும் அடங்கும். இவையாவையும் செம்மூதாய் சதாசிவம் படைத்த கிராமியம் சார்ந்த நாவலான “செங்கடம்பு“ -இல் சித்தரிக்கப்பட்டுள்ள பாங்கினை இக்கட்டுரையில் காண்போம்.

## பண்பாடு விளக்கம்

பண் + படு என்ற இரு சொற்களின் கூட்டுச்சொல்லான பண்படு என்ற வினையிலிருந்து உருவான பெயரே பண்பாடு ஆகும். சமுதாயச் சிக்கல்களை நீக்கி சமுதாய முன்னேற்றத்திற்கு உதவுவது பண்பாடு. இதனையே,

“முரண்பாடுகளையும், மோதல்களையும், அழிவுகளையும் தவிர்த்து சமுதாயத்தில் ஓர் இசைவு நிலையை உண்டாக்கி உண்மையான அமைதிக்கு அடித்தளமாக இருப்பது பண்பாடு”[1] என்பர்.

பண்பாடு பல கூறுகளை உள்ளடக்கிய ஓர் முழுமை தொகுதியாகும். இதனை, “பண்பாடு என்பது அறிவு, நம்பிக்கை, கலை, ஒழுக்க நெறிகள், சட்டம், வழக்கம் முதலானவையும், மனிதன் சமுதாயத்தில் ஓர் உறுப்பினராக இருந்து கற்கும் பிற திறமைகளும், பழக்கங்களும் அடங்கிய முழுமைத் தொகுதியாகும்”[2] என்பர்.

பண்பட்ட மனமே பண்பாட்டைக் குறிக்கும் என்பதற்கிணங்க, செம்மூதாயின் புனைவுரை கூடிய அனுபவ பிழிவான “செங்கடம்பு” காட்டும் பண்பாட்டினை

- இடப்பின்னணி
- உணவு முறைகள்
- உடை
- தொழில்
- பொழுதுபோக்கு
- இறை நம்பிக்கை
- சடங்கு முறைகள்

என வகைப்படுத்தி சித்தரிக்கலாம்.

**இடப்பின்னணி**

உரைநடை, கவிதை இலக்கியங்களை காட்டிலும் நாவல் இலக்கியத்தில் இடப்பின்னணி அவசியமாகும். இடப்பின்னணி தான் மக்கள் எத்தகையச் சூழலில் வாழ்கிறார்கள் என்பதை அறிவிக்கிறது. மேலும் இலக்கியத்தை முழுமையுடையதாகவும் மாற்றுகிறது. எனவே,

"குறிப்பிட்ட மாந்தர்களின் வாழ்க்கையை இலக்கியமாக்கும் போது அந்த மண்ணின் பின்னணியில்தான் படைப்பிலக்கியம் அமைய வேண்டும். அவ்வாறு அமைவதே அவ்விலக்கியத்திற்கு சிறப்பு செய்யும் என்பர்"[3]

செங்கடம்பு நாவலில் இடப்பின்னணி நன்கு அமைக்கப்பட்டுள்ளது. இதனை

- ✓ மழை வருணனை
- ✓ கால வருணனை
- ✓ ஊர் வருணனை

**மழை வருணனை**

மழைபொழிவின் மிகுதியை, "அடைமழைக் காலம் அது. இரவு நேரம் விடாது மழை பெய்த வண்ணம் இருந்தது. ஒவ்வொரு மின்னலும் இடியும் கண்களையும் செவிகளையும் வலுவிலக்கச் செய்வது போல் இருந்தன. ஓடைகளில் நீரோட்டம் வழக்கத்தை விட அதிகரித்திருந்தன." (செங்.ப.7) என்ற வரிகளால் அறியமுடிகிறது.

**கால வருணனை**

மாலை நேரத்தை விளக்கும் விதமாக, "அந்தி வானத்தில் சூரியன் ஒளிர்ந்து கொண்டிருந்தான். மஞ்சள் வெயில் எங்கும் பிரகாசித்தது"(செங்.ப.56) எனும் வரி அமைகின்றது.

**ஊர் வருணனை**

அலங்காடு எனும் கிராமம் இயற்கை சூழலில் நிறைந்த நீர்வளம் மிகுந்த அழகிய கிராமம் என்பதை,

"வெடதாரம் பூக்கள் வெண்மையாய்ப் பூத்துக் குலுங்கின. பொன்னாவராஞ் செடிகளும் மஞ்சள் நிறமுள்ள மலர்களோடு பணிவாய் தலைச்சாய்த்து நின்றன" (செங்.ப.9)

"கானகத்தை ஒட்டிய படி சந்தனக்கொடிக்கால் என்ற பள்ளம் ஒன்றுண்டு. இதன் இருமருங்கிலும் நாவற்மரங்களும், ஈச்ச மரங்களும் நிறைந்திருக்கும்" (செங்.ப.15) இவையாவும் கிராமத்தின் இயற்கை சூழலை விளக்குவதாகவும்

"ஏரி, குளம் யாவும் நீரால் நிரம்பி வழிந்தன. இந்த வருடம் பஞ்சமே இருக்காது" (செங்.ப.7) எனும் தொடர் கிராமத்தின் நீர்வளத்தை விளக்குவதாகவும் அமைகிறது.

நாவலின் முதன் பக்கத்தில் அமையும் "இந்த வருடம் பஞ்சமே இருக்காது" (செங்.ப.7) எனும் தொடர் பஞ்சம் இருந்து வளமாக மாறிய ஊரினை சுட்டுவது போல பரிமளம், கற்பகம் இருவரின் துயரவாழ்வில் இருந்து வளமாக மாறிய தன்மையை இவ்விடப்பின்னணி உணர்த்துகிறது.

**உணவு முறைகள்**

கிராமப் புற மக்களின் உணவு முறையானது, எளிமை மற்றும் சத்து நிறைந்ததாக அமைகின்றது. கிடைக்கும் பொருளில் சிறிது மாற்றம் கொண்டு ஓரின தன்மையுடைய உணவுப் பொருட்களையே அன்றாட வாழ்வில் உண்பர். கஞ்சி, கூழ் போன்றவற்றொடு சேர்த்து உண்ண மறுமாத்தம் என்ற பெயரில் வெங்காயம், குழம்பு வகைகள் போன்றவற்றை உண்கின்றனர்.

உப்புக்கண்டம் (செங்.ப.10) கொத்தமல்லிக் காப்பி (செங்.ப.26)

கறிகுழம்பு (செங்.ப.36) புழுங்க அரிசிக் கஞ்சி (செங்.ப.73)

கலிக்கிண்டி எக்கிரி கடைஞ்சி (செங்.ப.11)

புளிச்சத் தண்ணீர் போட்டு கடிச்சிக்க இரண்டு மூன்று சிறு வெங்காயம் (செங்.ப.44)

போன்ற உணவு வகைகளும் நாவங்பழம், ஈச்சம் பழம் (செங்.ப.15) போன்ற பழவகைகளும் மேலும் கிராமத்திற்கே உரித்தான வெற்றிலை பாக்கு போடும் பழக்கத்தை,

"கிட்டோடக் கவுண்டர் வெற்றிலைக் காம்பைக் கிள்ளி எறிந்துவிட்டு இரண்டு மூன்று வெற்றிலைகளை ஒன்று சேர்த்து அளவாய் சுண்ணாம்புத் தடவி கொட்டைப்பாக்கை முதலில் வாயில் போட்டு மென்ற வண்ணமே..." (செங்.ப.49) எனும் வரிகள் புலப்படுத்துகின்றன.

**உடை**

உடுத்தும் உடையை வைத்தும் மக்களின் பண்பாட்டை அறிய இயலும் எனவே, "பண்பாடுகளின் வரிசையில் ஆடை வகைகளும் அடங்கும்"[4] என்பர்.

செங்கடம்பு நாவலில் பாவாடைச் சட்டை (செங்.ப.14)தாவணி (செங்.ப.14) போன்றன காட்டப்பட்டுள்ளன. இவ்வுடைகள் யாவும் கிராமப்புற மக்களின் எளிமையான வாழ்க்கை முறையை உணர்த்துகின்றன.

**தொழில்**

கிராமப்புற மக்கள் பெரும்பாலும் உழவுத் தொழிலையும் உழவைச் சார்ந்த தொழிலையுமே செய்து வருவர். காலை முதல் மாலை வரை ஓயாது உழைக்கும் உழைப்பாளிகள் எனலாம்.

ஆட்டுப்பட்டி அமைத்தல் (செங்.ப.8) டிராக்டர் ஓட்டுதல் (செங்.ப.11)

வயலடித்தல் (செங்.ப.12) தழை வெட்டுதல்(செங்.ப.12)

சேறடித்தல்(செங்.ப.12 ) ஆடுமேய்த்தல் (செங்.ப.15)

டீக்கடை அமைத்தல் (செங்.ப.18) கோடை உழவு (செங்.ப.53)

லோடு தொழில் (செங்கல், மணல், உளிக்கல், எருவு, தழை தாம்பு) (செங்.ப.19)

போன்ற தொழில்கள் செங்கடம்பு நாவலில் சுட்டப்படும் மக்களின் வழக்கமான தொழில்கள் ஆகும்.

**பொழுதுபோக்கு**

சிறியவர் முதல் பெரியவர் வரை அனைவரும் பொழுதுபோக்கு என்பது இன்றியமையாத ஒன்றாகும். அவ்வகையில் கிராமிய பொழுதுபோக்கு என்பது சிறியவர்களுக்கு விளையாட்டின் மூலமும் "இருவரும் ஐந்தாங்கல்லு விளையாட்டு ஆடுவது வழக்கம்" (செங்.ப.55) பெரியவர்களுக்கு மற்ற குடும்ப கதைகளை பேசி மகிழ்வதன் மூலமும் "யார்! யாரை வைத்துக் கொண்டிருக்கிறார் என்பது பற்றியும் அதனால் ஏற்பட்ட துன்பம் பற்றியும் கருத்துப் பரிமாற்றங்கள் தடையில்லாமல் புரழும். ஊர் ஊராகச் சென்று அறிந்தவர் அறியாதவர்களோடு பேசிப் பழகி வீடு திரும்புவதில் வேலையாட்களுக்கு ஒரு மன நிறைவு இருந்தது" (செங்.ப.27) பொழுதானது நிறைவடைகிறது என்பதை அறியலாம்.

**இறை நம்பிக்கை**

மனிதன் இயற்கையைக் கண்டு அஞ்சத் தொடங்கிய காலத்தில் இருந்தே இறை நம்பிக்கை ஏற்பட்டிருக்கலாம். கிராமப் புற மக்களின் இறை நம்பிக்கையாக கருதப்படுவது குலத்தெய்வ வழிபாடு ஆகும்.

"நம்ம குலதெய்வத்துக்குப் போய் கெடா வெட்டி பூசைப் போட்டு வரணும்" (செங்.ப.31)

மேலும் குலதெய்வம் பெரிய உருவங்களாக அச்சம் தரக்கூடியதாக இருப்பதையும் சிறு விலங்கு உருவம் உடன் இருப்பதையும் வேல், அரிவாள் போன்ற கூர்மையான ஆயுதங்கள் காணப்படுவதையும் "பெரிய பெரிய உருவங்களாக கோயிலில் சாமிகள் இருந்தன…" (செங்.ப.39) அறிய முடிகிறது.

குலதெய்வ கோவிலில் வழிபாடு முறைகளாக,

- ✓ பொங்கல் வைத்தல்
- ✓ தேங்காய் உடைத்தல்
- ✓ பழம் படைத்தல்
- ✓ கிடாய் பலியிடுதல்

"பொங்கல் ஆயிற்று. ஆடு பிடித்து வரப்பட்டது. பூசாரி தேங்காய் உடைத்து…" (செங்.ப.39) என வழிபாட்டு முறைமைகளை அடுக்கடுக்காக அறிய முடிகின்றது.

**சடங்கு முறைகள்**

செங்கடம்பு நாவலில் சுட்டப்படும் சடங்கு முறைகளாவன, ஒரு பெண் பூப்பெய்திய நாளை விழாவாக கொண்டாடுவது மஞ்சள் நீராட்டு ஆகும். "கிட்டோடக் கவுண்டர் 12ம் நாள் எல்லோரையும் வரச் சொல்லி விசேஷமா செஞ்சி வீட்டுக்கு அழைச்சிரலாம் என யோசனைக் கூறினார்… பரிமளத்தின் மஞ்சள் நீராட்டிற்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்து வந்தார்."(செங்.ப.57)

கிராம திருமணத்தில் வெற்றிலை பாக்கு வைத்து வீடு வீடாக சென்று அழைப்பு விடுவர். இதனை "எல்லோருக்கும் வெற்றிலைப் பாக்கு வைத்து இந்த நாள், இன்ன தேதியில், இங்கு திருமணம் நடைபெறுவதாக சொல்லி அழைத்தான்" (செங்.ப.79)எனும் தொடர் மெய்பிக்கிறது. திருமணத்திற்கு பத்திரிக்கை அடித்து அழைப்பு விடுவது கிராமப்புறங்களில் இன்றளவும் வழக்கத்தில் இல்லை.

மேலும் திருமணத்திற்கு முன் நிகழ்வான நழுங்கு வைத்தல் என்பதை "மணப்பெண்ணை நெல் பரப்பிய துணியின்மேல் அமர வைத்து நெருங்கிய உறவுகள் சில நழுங்கு வைத்தன." (செங்.ப.83) அறியமுடிகின்றது.

**முடிவுரை**

கிராமிய மக்களின் வாழ்வியல் மண் சார்ந்த மணம் நிறைந்த வாழ்வியலாகும். அவர்களின் நம்பிக்கை, பழக்க வழக்கம், உணவு முறை, உடை, தொழில் யாவும் பாரம்பரியம் மிக்கதாக அமைகின்றன. அப்பாரம்பரியமே பண்பாட்டின் எச்சமாக இன்றளவும் நீள்கிறது. செம்மூதாய் சதாசிவத்தின் "செங்கடம்பு" எனும் நாவல் கிராமிய மக்களின் பண்பாட்டு எச்சத்தை நல்உலகிற்கு படம் பிடித்து காட்டும் பெட்டகமாக காட்சியளிக்கிறதுஎன்பதை அறிய முடிகிறது.

**குறிப்புகள்**

1.பொன்.கோதண்டராமன், பண்பாட்டுக் கருத்தோட்டம், பக் - 4, 5

2.சீ.பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், பக் -160

3.ஹரி.விஜயலட்சுமி (க.ஆ), சூர்யகாந்தன் நாவல்களில் இடப்பின்னணி (க.த), சூர்யகாந்தன் படைப்பிலக்கியத் திறனாய்வுகள் - தொகுதி 2, பக் - 272, 273

4.வீ.அய்யனார், நாட்டுப்புறக் கதைகள் வகைமையும் வாழ்வியலும், பக் - 247



# 24. இல்லறம் சார்ந்த குற்றங்களும் தண்டனைகளும் (சிலப்பதிகாரம்)

**திருமதி வீ. வெள்ளைத்துரைச்சி,**
உதவிப்பேராசிரியர், முதுகலை மற்றும் தமிழாய்வுத்துறை,
தி ஸ்டாண்டர்டு ஃபயர் ஒர்க்ஸ் இராஜரத்தினம் மகளிர் கல்லூரி, சிவகாசி.
lavanyavellai10@gmail.com - 7639770943.
DOI 10.5281/zenodo.15067139.

**Abstract:**

The lifestyle of ancient people can be understood through classical literature. The lifestyle of ancient people is divided into two categories: internal life and external life. Internal life refers to family life and external life refers to war life. This essay titled Family Crimes and Punishments (Silapathikaram) is an investigation into the domestic crimes that occur in daily life and the punishments given for them.

**Key Words:** Silapathigaram - Family Crimes - Punishments

## முன்னுரை

பண்டைய கால மக்களின் வாழ்வியலை செவ்விலக்கியங்களின் வழி அறிந்துகொள்ள முடிகின்றது. பண்டையகால மக்களின் வாழ்வியல் அகவாழ்வு, புறவாழ்வு என்றஇருபகுப்பில் அடங்குகிறது. அகவாழ்வு என்பது குடும்ப வாழ்க்கையையும், புறவாழ்வு என்பது போர்வாழ்க்கையையும் குறிக்கிறது. குடும்பம் சார்ந்த குற்றங்களும் தண்டனைகளும் (சிலப்பதிகாரம்) எனும் இவ்ஆய்வுக்கட்டுரை அன்றாட வாழ்வில் நிகழக்கூடிய இல்லறம் சார்ந்த குற்றங்களையும், அதற்கு வழங்கப்பட்ட தண்டனைகளையும் பற்றி ஆராய்வதாக அமைகின்றது.

## அகவாழ்வு

அகவாழ்வு என்பது களவு, கற்பு அடங்கிய இல்லறவாழ்வு ஆகும். அகம் என்பதற்கு அகராதிகள் பலவும் பலதரப்பட்ட விளக்கங்களைத் தருகின்றன.

அகம் என்பதற்கு மாணவர் தமிழ் அகராதி "இருப்பிடம், தையலகம், உணவகம், தென்னகம், பூமி, மனை, வீடு, உள், மனம், உள்ளம், அகப்பொருள், நான் என்னும் அகங்காரம், பாவம், அகம்பாவம், மார்பு, ஏழாம் வேற்றுமையுருபு"[1] எனப் பொருள் விளக்கம் அளிக்கின்றது. பவானந்தர் தமிழ்ச் சொல்லகராதி "வீடு, மனம், பாவம்"[2] எனப் பொருள் விளக்கம் தருகின்றது.

அகம் என்பதற்கு நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி "அகக்கூத்து, அகங்காரம், அது நானூறென்னும் நூல், ஆசௌகம், இருப்பிடம், சரீரம், சீவன், ஆகாயம், ஆழம், ஆன்மா, இடம், பத்திரவம், உள், உள்ளிடம், ஏழனுருபு, ஒரு மரம், தூக்கம், நாள், பகல், மருதம், மார்பு, பள்ளம், பாம்பு, பாவம், பூமி, மரப்பொது, மலை, மனம், வீடு"[3] எனப் பொருள் தருகின்றது.

மேற்குறிப்பிட்ட கருத்துகள் வாயிலாக அகம் என்பது இல்லறத்தில் நிகழக்கூடிய வாழ்வினைக் கூறுவது என்ற கருத்தினைப் பெற முடிகின்றது.

**கணவனுக்கு துரோகம் செய்தல்**

கணவனுக்கு துரோகம் செய்து பிற ஆணுடன் இல்லற வாழ்வு நடத்தும் பெண்களைச் சதுக்கப்பூத மன்றத்தில் உள்ள பூதம் நிலத்தில் அறைந்து கொன்று தின்னும் என்பதனை,

"அவம் மறைந்து ஒழுகும் அலவற் பெண்டிர்

...............................................

காதம் நான்கும் கடுங் குரல் எழுப்பிப்
பூதம் புடைத்து உணும்பூத சதுக்கமும்"

(சிலம்பு.கா.5 : 128-134)

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன. கணவனுக்குத் துரோகம் செய்யும் பெண்களுக்கு சதுக்கப்பூதம் எந்தவகை மன்னிப்புமின்றி மரணதண்டனை கொடுத்துள்ளமையை சிலப்பதிகாரத்தின் வழி அறியமுடிகின்றது.

**பத்தினிப் பெண் மீது பழி சுமத்துதல்**

சிலப்பதிகாரத்தில், பத்தினிப் பெண் மீது வீணாகப் பொய்யாகப் பழி ஒன்றை அறிவற்ற முட்டாள் ஒருவன் அவன் கணவனிடமே சென்று கூறினான். இப்படிப் பொய் கூறி வாழுபவர்களை அடித்துக் கொன்று தின்னும் பூதம், பத்தினிப் பெண் மீது வீண் பழி சுமத்தியவனைக் கொன்று தின்னப் பாசக் கயிற்றைக் கொண்டு வீசிப் பிடித்தது. இதைக் கண்ட அந்தப் பொய்யனைப் பெற்ற தாய் வருந்தி அழுதாள். அந்தத் தாய்மனம் படும் துயர் காணச் சகியாது, கோவலன் அந்தப் பூதத்திடம் என்னுயிரை எடுத்துக் கொண்டு இவனை விட்டுவிடு என்று கெஞ்சினான். ஆனால், அந்தப் பூதமோ ஒரு தீயவனுக்காக நல்லவன் உயிரைப் பறிப்பது என்னுடைய வழக்கமல்ல என்று கூறி அந்தப் பொய்யனை அடித்துக் கொன்று தின்றது. இதனை,

"பத்தினி ஒருத்தி படிற்றுரை எய்த

...............................................................................................

ஒழிகநின் கருத்து"என உயிர்முன் புடைப்ப"

(சிலம்பு.கா.15 : 76-86)

என்ற பாடலடிகள் எடுத்துரைக்கின்றன. இதன்வழி பத்தினிப் பெண் மீது வீண் பழி சுமத்துதலுக்கு மரணதண்டனை வழங்கப்பட்டதை அறியமுடிகின்றது. மேலும் குற்றம் புரிந்தவனே தண்டனை அனுபவிக்க வேண்டும் என்று சதுக்கப்பூதம் கூறிய வழி நீதி தவறாமல் தீர்ப்பு வழங்கப்பட்டதையும் அறியமுடிகின்றது.

**மனைவியின் தவறுக்குக் கணவன் பிரிந்து செல்லுதல்**

அந்தணன் ஒருவன், தன்னுடைய வீட்டில் கீரிப்பிள்ளையை ஒன்றை வளர்த்து வந்தான். அவனுக்கு ஒரு ஆண்பிள்ளை இருந்தது. ஒருநாள் அவன் வெளியில் சென்றிருந்தான். அவன் மனைவி கைக்குழந்தையைத் தொட்டியில் தூங்கச் செய்துவிட்டு, குழந்தைக்குக் காவலாகக் கீரிப்பிள்ளையை வைத்துவிட்டு, நீராடச் சென்றாள். சென்றவள் திரும்பி வருகிறபோது, வாயிற்படியில் கீரிப்பிள்ளை வாயில் இரத்தம் வடிய நின்று கொண்டிருப்பதைப் பார்த்தாள். அதனைக் கண்டவுடன் தன் குழந்தையைக் கடித்துக் குதறிக் கொன்றுவிட்டது எனக் கருதி அதன் தலைமேல் தான் கொண்டு வந்த தண்ணீர் குடத்தை

அக்கீரிப்பிள்ளையின் தலைமேல் போட்டுக் கொன்றுவிட்டாள். பின் வீட்டினுள் சென்று பார்த்தபோது தொட்டிலில் குழந்தை அமைதியாகத் தூங்கிக் கொண்டிருந்தது. தொட்டிலின் அருகில் நாகப்பாம்பு இறந்து கிடந்தது. இதனைக் கண்டவுடன் அப்பார்ப்பினிக்கு நடந்தவை அனைத்தும் தெரியவந்தது. அதாவது தன் குழந்தையைத் தீண்டவந்த நாகப்பாம்புடன் கீரிப்பிள்ளை சண்டை போட்டு அதனைக் கொன்றதை உணர்ந்தாள். பின் மிகவும் வருந்தினாள். வெளியில் சென்றிருந்த கணவன் மீண்டும் வீடு திரும்பினான். வீட்டிற்கு வந்த கணவனிடம் நடந்தவற்றை எல்லாம் கூறினாள். கீரிப்பிள்ளையைத் தன் மனைவி அநியாயமாகக் கொன்றுவிட்டதை அறிந்தான் அவளுடைய கணவனாகிய அந்தணன். அவன் "இனி உன் கையால் உணவு உண்டு வாழ்வது கூட இழிவு" என்று அவளை இகழ்ந்து பேசிவிட்டு கங்கையில் நீராட வடதிசைநோக்கிச் சென்றுவிட்டான் என்பதை,

> "பிள்ளை நகுலம் பெரும்பிறிது ஆக
> எள்ளிய மனையோள் இணைந்துபின் செல்ல
> வடதிசைப் பெயரும் மாமறை யாளன்
> கடவது அன்றுநின் கைத்துஊண் வாழ்க்கை"
>
> (சிலம்பு.கா.15 : 54-57)

என்ற பாடலடிகள் எடுத்துரைக்கின்றன. இதன்வழி அறியாமல் அஃறிணை உயிரைக் கொன்ற தன் மனைவிக்கு கணவன் பிரிதல் என்னும் தண்டனை வழங்கியுள்ளதை அறியமுடிகின்றது.

**பிறன்மனை நயத்தல்**

குற்றம் புரிந்தவர்கள் யாவராயினும் தண்டிக்கப்பட வேண்டும் என்ற பொதுவான ஒப்பந்த முறையும் அதற்குத் தன்னை ஈடுபடுத்திக்கொள்ள வேண்டும் என்ற இயைபு முறையும் அன்று இருந்தது. எவரும் செல்வத்தையும் அதிகாரத்தையும் காட்டித் தப்பித்துக்கொள்ள முடியாது. "பண்டைக் காலத்தில் மக்களிடையே நிலவிய வழக்க நெறியை (cusvom) ஒட்டியே நியாயம் வழங்கப்பட்டது. அரசனும் ஆளப்படும் மக்களும் தருமத்திற்கு அடங்கியே நடக்க வேண்டும்."[4] அரசனும் இதற்கு விதிவிலக்கல்ல. "அனைவருக்கும் பொதுவான பாரபட்சமற்ற வேற்றுமை காட்டாத நீதிமுறையை நிலைநிறுத்த சட்டம் தன்வழிச் செல்கிறது. இதனைச்'சட்டத்திற்கு முன் அனைவரும் சமம்' (Equality Before law) என்பர். நீதி சட்டத்தின் வழிச் செல்லுகையை நல்லாட்சி முறையின் அடிப்படை விதியாகவும் கருதுகின்றனர். இதனைத்'தருமம் தன்வழிச் செய்கை கடன்' என்றும் 'அறநெறியின் செவ்விய திறம்' என்றும் சேக்கிழார் சுட்டுகிறார்."[5]

கீரந்தை என்ற அந்தணன் வெளியூருக்குச் செல்லும்போது பயந்த தன் மனைவியிடம் மன்னனின் காவல் உண்டு. அதனால் கவலைப்படாதே என்று கூறிச் செல்கின்றான் திடீரென ஒருநாள் அவ்வந்தணனின் வீட்டில் உரையாடல் சத்தம் கேட்கவும், மாறுவேடத்தில் சென்ற அரசன் கதவைத் தட்டினான். அப்பொழுது அந்தணனின் மனைவி பயந்து இதுவரைக் காத்த அரசனின் காவல் இன்று காவாதோ எனக் கேட்டாள். இதனைக் கேட்ட அரசன் கவலையுற்று, தான் செய்த தவற்றுக்கு வருந்தி தனக்குத் தானே தன் கையை வெட்டிக் கொண்டு தனக்கு தண்டனை வழங்கினான் என்பதை,

"உதவா வாழ்க்கைக் கீரந்தை மனைவி
புதவக் கதவம் புடைத்;தனன் ஒருநாள்
அரைச வேலி அல்லது யாவதும்
.........................................................
இறைக்குடிப் பிறந்தோர்க்கு இழுக்கம் இன்மை"
(சிலம்பு.கா.23 : 42-53)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

இதன்வழி தவறு செய்பவர்கள் யாராக இருந்தாலும் தண்டனை வழங்க வேண்டியது மன்னனின் இயல்பு என்பதனையும் விருப்பம் இல்லாத ஒரு பெண்ணை அடைய நினைப்பது குற்றம் என்ற அந்தக் காலமுறைமையையும் அறியமுடிகிறது.

பொற்கைப்பாண்டியன் தவறான எண்ணத்தில் பார்ப்பனனின் கதவைத் தட்டவில்லை எனினும் அவனுக்கு அவனே கைக் குறைப்புத் தண்டனை கொடுத்துள்ளான்.

**முடிவுரை**

கணவனுக்குத் துரோகம் செய்யும் பெண்களுக்குச் சதுக்கப்பூதம் எந்தவகை மன்னிப்புமின்றி மரணதண்டனை வழங்கியுள்ளதையும், பத்தினிப்பெண் மீது வீண்பழி சுமத்தியவனுக்கு மரணதண்டனை வழங்கியுள்ளமையையும், குற்றம் புரிந்தவர்களே தண்டனை பெறவேண்டும் என சதுக்கப்பூதம் கூறிய வழி நீதி தவறாமல் தீர்ப்பு அக்காலத்தில் வழங்கப்பட்டுள்ளமையையும் அறியஇயலுகின்றது.பிறர்மனை நயத்தல் குற்றத்திற்கு கைக்குறைப்புத் தண்டனை வழங்கப்பட்டுள்ளதையும்இவ்ஆய்வுக்கட்டுரையின் வாயிலாக இல்லறம் சார்ந்த குற்றங்கள் நிகழ்ந்துள்ளதையும் அதற்குத் தண்டனைகள் வழங்கப்பட்டதையும் அறிய இயலுகின்றது.

**சான்றெண் விளக்கம்**

1. ச.வே.சுப்பிரமணியன், மாணவர் தமிழ் அகராதி, ப.19.
2. ச.பவானந்தம் பிள்ளை, பவானந்தர் தற்கால தமிழ்ச் சொல்லகராதி, ப.1.
3. நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப.5.
4. மா.சண்முக சுப்பிரமணியன், குற்ற இயல் சட்டம், ப.6-7.
5. மேலது, ப.7.

**துணைநூற்பட்டியல்**

1. கதிரைவேற்பிள்ளை.நா, தமிழ்மொழிஅகராதி, செம்பதிப்பு, சாரதாபதிப்பகம், சென்னை, 2003.
2. **சண்முக சுப்பிரமணியன்.மா., குற்ற இயல் சட்டம்**,**கழக வெளியீடு**,**சென்னை**,1994.
3. சுப்பிரமணியன்.ச.வே (ப.ஆ), மாணவர்தமிழ்அகராதி, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, இ.ப - 2010.
4. பவானந்தம் பிள்ளை.ச., பவானந்தர்தமிழ்ச்சொல்லகராதி, நியூசெஞ்சுரிபுக்ஹவுஸ் (பி) லிட், சென்னை, 1925.
5. வேங்கடசாமிநாட்டார்.ந.மு., சிலப்பதிகாரம்மூலமும்உரையும், சாரதா பதிப்பகம், 2011.

MUTHTHARASI – Art Literary Culture Tamil Journal
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
SPL-EDITION – IV VOLUME - 1
மார்ச்சு-2025 E-ISSN: 2584 - 1238

# 25. சங்கப் புலவர்களின் சொல்லாளுமை (நுதலை முன் வைத்து)

முனைவர் இரா.சந்திரசேகர்
உதவிப்பேராசிரியர்,முதுகலைத்தமிழ்த்துறை
விருதுநகர் இந்து நாடார்செந்திக்குமாரநாடார் கல்லூரி (தன்னாட்சி), விருதுநகர்.

DOI 10.5281/zenodo.15067187.

**Abstract:**

The navel occupies an essential place in the body of women. It can be said that putting tilak on the navel and putting flowers in the hair is a sign of beauty. It can be seen that tilak and flowers have a place as auspicious symbols in love life. The Sangam poets have used the navel not only as a part of the body but also as a platform for women's emotional expression in Sangam literature. This article aims to examine the rhetoric of the Sangam poets who used the navel as a platform for emotional expression.

**Key Words: Sangam Literature - Sangam Poets - Women**

பெண்களின் உடலமைவில் நுதல் இன்றியமையாத இடத்தைப் பெறுவதாக அமைந்துள்ளது. நுதலில் திலகமிட்டுக் கூந்தலில் பூச்சூடுவது தோற்றத்திற்கு எழிலூட்டுவதாக அமையும் எனலாம். காதல் வாழ்வில் திலகமும் மலரும் மங்கலச் சின்னங்களாக இடம் பெற்றுள்ளதை அறிய முடிகின்றது. நுதல் என்பதனைச் சங்கப் புலவர்கள் உடலின் ஓர் உறுப்பாக மட்டும் அல்லாமல் பெண்களின் உணர்வு வெளிப்பாட்டின் களமாகவும் சங்க இலக்கியங்களில் பயன்படுத்தியுள்ளனர். நுதலை உணர்வு வெளிப்பாட்டுக் களமாகப் பயன்படுத்திய சங்கப் புலவர்களின் சொல்லாளுமையை ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

## தலைவியின் இன்ப வாழ்வில் நுதல்

தலைவன் பிரிவின்றி இருக்கும் காலத்தில் தலைவியின் உள்ளத்தில் இன்ப உணர்வு மிகுவதால் அக்காலத்தில் தலைவி நுதலில் திலகமிட்டு அறிய மணத்துடன் முழுநிலவிவைப் போன்று இருப்பாள் என்பதை,

> மதியருப் பன்ன மாசறு சுடர்நுதல் (அகம்.192.1)

என்றும்

> பிறை புரைநுதல் வர்ப்பேணி (கலி 45:23)

என்றும்,

> திலகந் தைஇய தேங்கமழ் திருநுதல் (நற்.62:6)

என்றும், சங்கப் புலவர்கள் குறிப்பிடுவதிலிருந்து அறிய முடிகிறது.

தலைவன் பிரிவின்றி இருக்கும் தன்மையால் எழுந்த இன்ப உணர்வால் தலைவி நீராடித் திலகமிட்டு இருக்கும் தன்மையினைப் பரந்து விரிந்த ஆகாயத்தின் கண்ணே, அரவினால் விழுங்கிச் சிறிது குறைக்கப்பட்ட பசிய கரிகளை உடைய திங்களின் விரிந்த கதிர் போல ஒளிவீசும் கூந்தல் சேர்ந்த நெற்றி உடையவள்" (வேங்கடராமன், நற்றிணை .உரை, ப. 684) என்பர். திலகமிட்டு இருக்கும் தலைவியின் நுதல் முழுநிலவினைப் போன்று

எழிலுடன் காணப்பட்டதை அறிய முடிகின்றது. வாசனைப் பொருட்கள் கலந்து திலகமிடுதலால் நெற்றிமணத்துடன் விளங்கியது என்பதை,

குவளையொடு பொதிந்த குளவி நாறு நறுநுதல் (குறுந். 59:3)

என்றும்

முகை யவிழ்ந் தானாறு நறுநுதல் (குறுந். 259:3)

என்றும் குறுந்தொகைப் புலவர் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது.

தலைவி நெற்றியில் திலகமிட்டு இருந்த தோற்றத்தை“ இனிய பெரிய பசிய சுனையிடத்தே மலர்ந்த தேன்கமழும் புதுமலர் போன்று நறுமணம் கமழ்கின்ற நெற்றி“ (பொ.வே.சோமசுந்தரனார், அகநானூறு உரை, ப.383) என்பர். தேன்கமழும் புதுமலர் என்று குறிப்பிடுவதன் வழி தலைவி திலகமிட்டு வரும் நிலை அவள் மனதிலுள்ள இன்ப எழுச்சியைப் புலவர் சுட்டுவதனை அறிய இயலுகின்றது. மேலும்,

சிலை யொண் காந்தள் நாறும் நறுநுதல்(அகம்.338 :7)

என்று குறிப்பிடுவதன் வழி தலைவனின் எண்ணத்தால எழுந்த இன்ப உணர்வினால் பல்வேறு மணப்பொடிகளையும் கலந்து திலகமிட்ட தன்மையை வெளிப்படுத்துகிறது எனலம். திலகமிட்டு எழிலுடனும், நறியமணத்துடனும் இருந்தால் தலைவன் பிரிவின்றி தன்னருகிலேயே இருப்பான் என்ற மனநிலையை அவள் உடையவளாக இருந்தாள் என்று புலவர் சுட்டுவதனை அறிய முடிகிறது.

**ஒளிவீசும் நெற்றி**

திலகமிட்டு எழிலுடன் காணப்படும் தலைவியின் நெற்றி ஒளியுடன் திகழும் என்பது சங்க இலக்கியம் தரும் செய்தியாகும். மனதில் எழும் இன்ப உணர்வு தரும் இனிமையினால் நெற்றி ஒளிபொருந்தி விளங்கும் எனலாம். தலைவியின் ஒளிவீசும் தன்மையுடைய நெற்றியை,

காமச்சுடர்நுதல்விளங்கும்( ஐங்.466 : 4 )

என்றும்

சுரும்பிமிர் சுடர்நுதல் நோக்கி( நற்.245: 11)

என்றும்

வெண்ணெய்க்கு மன்னளெனக் கொணடா யொண்ணுதால்( கலி.110: 6 )

என்றும் குறிப்பிடுவதிலிருந்து அறிய முடிகின்றது.

திலகமிட்டுக் காணப்படும் தலைவி “அரும்புகள் மலர்ந்து அமையாதனவாய் மணம் கமழ்கின்ற நெற்றியினை உடையவள்” (பொ.வே.சோமசுந்தரனார், குறுந்தொகை உரை,ப. 383) என்பர். மொட்டு மலராமல் வீசும் மணம் இனிமையானதாக இருக்கும். அதுபோலத் தலைவியின் நெற்றியும் மணம் கமழ்கின்றது என்பதை அறிய முடிகின்றது. இப்பண்புகளின் வழி தலைவி காண்பதற்கு இனிய தன்மையுடையவள் என்பதைப் புலவர்கள் வெளிப்படுத்துகின்றனர் எனலாம்.

**பசலையுற்ற நெற்றி**

தலைவன் அருகிலிருக்கும் போது திலகமிட்டுக் காணப்படும் தலைவியின் நெற்றி அவன் பிரிவுத் துயரால் பசலையுற்றுக் காணப்படும். பசலை என்பது "காமநோய் கொண்ட

மகளிரின் மேனியில் உண்டாகும் நிறவேறுபாடு" (மு.வரதராசன்., குறுந்தொகைச் செல்வம், ப.113 ) என்பர்.

தலைவனின் பிரிவால் உண்டான பசலையைக் கண்ட தலைவி "அவருடைய பிரிவுத் துன்பத்தால் என் நெற்றிப் பசலையுறவில்லை. யானே அவரை விரும்பினேன், என் விருப்பத்தால் ஏற்பட்ட பசலை "(மு.வரதராசன்., குறுந்தொகைச்செல்வம்,ப.113 ) என்று கூறுவதாகக் கூறுவர். தலைவன் பிரிவால் தலைவியின் நெற்றியில் பசலை ஏற்பட்டதை,

"பிறையேர் திருநுதல் பாஅய பசப்பே"(நற். 167:11.)

என்றும்,

"பிறைநுதல் பசப்பூரப் பெருவிதுப் புற்றாளை " (கலி.99:10.)

என்றும் புலவர் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகின்றது.

தலைவன் அருகில் இருக்கும் வரையிலே தலைவி இயல்புடன் இன்பமாக இருப்பாள். தலைவன் செலவு மேற்கொள்ளப் போகின்றான் என்பதைக் கேள்வியுற்ற உடனே அவள் மேனியில் பசலை பரவிவிடும். இதன் வாயிலாகத் தலைவன் தலைவியரிடத்து உள்ள அன்பின் ஆழத்தை அறிந்து கொள்ளமுடிகின்றது. தலைவனின் பிரிவால் நெற்றிப் பசலையுற்றுக் காணப்படும் தோற்றம் "பகல்பொழுதில் ஒளி குன்றிய மதியைப் போல" (காசிவிசுவநதான்செட்டியார்,கலித்தொகைஉரை,ப.448) காணப்படுகின்றது என்பர்.

**செலவு மீண்டமை**

தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன், தலைவியின் ஒளி பொருந்திய நெற்றியைக் காணும் இன்பத்தினால், வினையை முடித்து விரைவில் மீண்டதாகக் கூறுகின்றான். தலைவியின் நெற்றியின் தன்மை, தலைவன் அவனுடைய வினையைக் காலத்தில் முடிக்கக் கருவியாய் அமைந்ததெனக் கருதின் அது மிகையாகாது. இதனை,

"பாடல் சான்ற காண் கம்வாணுதலே "(ஐங்.447:4.)

என்றும்,

"நன்னுதல் அரிவை காரினும் விரைந்தே" (ஐங்.492:5.)

என்றும் சங்கப்புலவர்கள் குறிப்பிடுவதன் வழி அறிய முடிகின்றது.

தலைவனைப் பிரிந்ததால் வாடிச் சோர்வுற்று, பசலை பரவிய தலைவியின் நெற்றி "குளிர்ந்த அழகிய துறைக்கு உரிய தலைவன் வந்ததும், பொன்னினும் சிறந்த ஒரு புதிய ஒளியைப் பெற்றது"(பொ.வே.சோமசுந்தரனார், ஐங்குறுநூறு உரை,ப.141 ) என்பர். தலைவனின் செலவினால் தன் இயல்பான தன்மையினை இழந்து பசலை பெற்றது தலைவியின் நெற்றி. இது தலைவனின் பிரிவால் ஏற்படும் பிரிவாற்றாமையை வெளிப்படுத்துகிறது. வினை மேற்சென்ற தலைவன், தலைவியினது ஒளிவீசும் நெற்றியைக் காணும் ஆவலினால் வினையை விரைந்து முடிக்கின்றான். தலைவன் தொலைவில் இருந்தாலும் அவன் வினை விரைந்து முடிய, தலைவியின் நெற்றி ஏதுவாக அமைகின்றது.

வினை மீண்டு தலைவன் வந்ததும் ஏற்பட்ட இன்ப உணர்வினால் தலைவியின் நெற்றிபசலை நீங்கிப் பொன் போன்ற சிறந்த ஒளியினைப் பெறுகின்றது. அவ்வாறு தலைவியின் நெற்றி அடையும் மாற்றங்கள் அவளுடைய உள்ளத்து உணர்வுகளை வெளிப்படுத்தி நிற்பதாகப் புலவர்கள் பதிவுசெய்துள்ளமையை அறிய முடிகின்றது.

**பொறி நுதல் வியர்த்தல்**

களவுக் காலத்தில் தலைவனும் தலைவியும் முதன்முறையாக எதிர்ப்படும்போது, ஏற்படும் இன்ப உணர்வினால் நுதலில் சிறுசிறு வியர்வைத் துளிகள் துளிர்த்தல் இயல்பு. இதனைக் களவுக்காலத்தில் தோன்றும் மெய்ப்பாடுகளுள் ஒன்றெனத் தொல்காப்பியர் வகுத்துள்ளார். இதனை,

"புகுமுகம் புரிதல் பொறிநுதல்வியர்த்தல்
நகுநயமறைத்தல் சிதைவுபிறர்க்கின்மையொடு
தகுமுறை நான்கே ஒன்றெனமொழிப"
(தொல்.பொருள். மெய்ப். இளம்.நூ-13.)

என்று அவர் குறிப்பிடுகின்றார். பொறிநுதல் வியர்த்தல் என்பது அவ்வழி தலைவன் முகம்புக்கு அவனைப் பொருந்திய தலைமகள் உட்கும். நாணும் வந்துழி வரும் நுதல் வியர்ப்பு ((மு.சண்முகம்பிள்ளை, தொல். பொருள். இளம். உரை, ப.22) என்பர். இத்தன்மையினைச் சங்க இலக்கியத் தலைவியும் வெளிப்படுத்துபவளாக அமைகின்றாள் என்பதை,

"பிறைநுதல் பொறித்த சிறுநுண் பல்வியர்" (நற். 120:7.)

என்றும்,

"பெரும்புழுக்குற்ற நின்பிறை நுதற்பொறிவியர்" (நற்.136:20.)

என்று குறிப்பிடுவதன் வழி அறிய முடிகின்றது.

களவு, கற்புக் காலத்தில் ஏற்படும் இன்ப துன்ப உணர்வுகளுக்கு ஏற்பத் தலைவியின் நெற்றியில் பசலை போன்ற மாற்றங்கள் ஏற்படுதல் இயல்பு. இது காதல் வாழ்க்கையினால் உருவான அன்பின் ஆழத்தை உணர்த்துவதாகப் புலவர்கள் அமைத்துப் பாடியுள்ளமை சிறப்பு. இதன்வழி, முதன்முதலில் காண்பதில் ஏற்படும் நுண்ணிய உணர்வுகளையும் சங்க இலக்கியப் புலவர்கள் வெளிப்படுத்தி இருப்பதனை அறிய முடிகின்றது.

**துணைமை நூல்கள்;**

1. இராகவையங்கார், மு. குறுந்தொகை விளக்கம், அண்ணாமலைப் பல்கலைக் கழகம் (1959)
2. இராசமானிக்கனார், மா. டாக்டர் தமிழ்மொழியின் இலக்கிய வரலாறு பாரி நிலையம் (1965)
3. கலியாணசுந்தரம், எம்.எஸ். தென்னாட்டு மலையூர்கள், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை (1961)
4. சங்க இலக்கியத் தொகுதிகள், வர்த்தமான் பதிப்பகம், சென்னை.2018

MUTHTHARASI – Art Literary Culture Tamil Journal
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
SPL-EDITION – IV VOLUME - 1
மார்ச்சு-2025 E-ISSN: 2584 - 1238

## 25. பெண்ணிய நோக்கில் தூதிலக்கியப் பெண்கள்

முனைவர் B.மீனாட்சி,
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
எஸ்.எ.ஃப்.ஆர்.மகளிர் கல்லூரி(தன்னாட்சி),சிவகாசி.
DOI 10.5281/zenodo.15067191.

**Abstract:**

A woman is a great human power. She is full of perfection, concentration, and character. She carries a life within herself and feeds it with her own blood. Such a noble birth is forever being wounded by the poisonous thorns of men. Even if we are able to gain freedom from foreign rule, women are still struggling to free themselves from the patriarchal society. Who will be the beacon for this? When? Only questions like these have become the rightful right of women.

**Key Words:** Womens' Study - Thuudhu Literature - Perfection

பெண் என்பவள் மாபெரும் மானுட சக்தி. செம்மையும், செறிவும், பண்பும் நிறைந்தவள். ஓர் உயிரைத் தன்னுள் தாங்கி, தன் உதிரத்தை உணவாக்கித் தருபவள். இத்தகைய ஓர் உன்னதப் பிறவியை ஆண்களாகிய நச்சுமுட்கள் என்றென்றும் காயப்படுத்திக் கொண்டேதான் இருக்கின்றனர். அந்நியர் ஆட்சியிலிருந்து நம்மால் விடுதலை பெற முடிந்தாலும் கூட ஆணாதிக்கச் சமுதாயத்திலிருந்து விடுபட முடியாமல் பெண்ணினம் தவிக்கிறது. இதற்கு கலங்கரை விளக்காகப் போவது யார்? எப்போது? என்பன போன்ற கேள்விக் கணைகள் மட்டுமே பெண்ணிற்கு உரிமையுடையவையாகியுள்ளன. "ஆண்களால் இயற்றப்பட்ட சட்டங்களைக் கொண்டதும், ஆண்கள் கண்ணோட்டத்தைக் கொண்டே பெண் நடத்தையை மதிப்பிடும் நீதி முறைமையைக் கொண்டதுமான முற்றிலும் ஆண் முதன்மையான இன்றைய சமுதாயத்தில் ஒரு பெண் ஆத்ம தனித்துவமுள்ளவளாக வாழ முடியாது - ஹென்றி இப்சன்"1. சாண் பிள்ளையானலும் ஆண் பிள்ளை எனப் பாராட்டும் சமூகம் பெண்பிள்ளை என்றவுடன் கருவறையே கல்லறையாகும்படிச் சபிக்கின்றது. "அடுப்பூதும் பெண்ணிற்குப் படிப்பெதற்கென" பெண்ணை அடுப்பங்கரையில் பூட்டிய சமூக இயல்புகளை,

"காதலித்தவனைக்
கைபிடித்தால் "ஓடுகாலி"
கைவிட்டால் "வாழாவெட்டி"
கட்டில் ஆடியும்
தொட்டில் ஆடாவிட்டால் "மலடி"
கட்டியவன்
மாண்டு போனால் "விதவை"
அதென்னவோ
பாவையருக்கு மட்டும்
படிக்காமலே
இத்தனை......பட்டங்கள்"2

இவ்வரிகள் எடுத்துரைக்கின்றன.

சங்க இலக்கியம், கிறஸ்தவ இலக்கியம், இஸ்லாமிய இலக்கியமென எந்தவொரு இலக்கியமாக இருப்பினும் பெண்ணடிமைத்தனமே வலியுறுத்தப்படுகிறது. கிறிஸ்தவ இலக்கியத்தில் ஆதாம், ஏவாள் குறித்த கருத்தாக்கங்கள் இஸ்லாமிய இலக்கியத்தில் "பெண் என்பவள் ஆடவனுக்கு இன்பமளிக்க அவனுடைய சந்ததிகளை உருவாக்கப் படைக்கப் பெற்றாள். ஆகவே அவளுக்கு எந்த நோக்கமும் இருக்கத் தேவையில்லை என்பது தெளிவு. பெண்ணை அன்பாக நடத்த வேண்டும் என்று கட்டளையிடும் நபிகள் நாயகம், அவள் ஆண்மகனுக்கு அடங்கி நடக்க வேண்டும் என்று ஆணையிடுகிறார்"3. இவ்வாறு இஸ்லாமிய இலக்கியத்தில் பெண்ணடிமைத்தனக் கூறுகள் இடம் பெற்றுள்ளன.

பாரதிதாசன்,

"ஆணுக்குப் பெண்கள் அடிமை என்று
யாரோ எழுதி வைச்சாங்க - அன்று
யாரோ யெழுதி வைச்சாங்க - அதை
அமுக்கிப் பிடிச்சுக்கிட்டு விடமாட்டேன்னு
ஆண்கள் ஒசந்து கிட்டாங்க - பெண்கள்
ஆமை போல ஒடுங்கிப் போனாங்க"4

பெண்விடுதலைக்காக முழக்கமிடுகிறார். மேடையில் பெண்ணியம் பற்றிப் பேசும் சிந்தனையாளர்கள் தம் மனையாளுக்கு வீட்டில் பேசுவதற்குக் கூட அனுமதி அளிப்பதில்லை.

"வாழப் பிறந்தவன் ஆண், அவனுக்கு வழித்துணையாக வேண்டியவள் பெண். ஆளப் பிறந்தவன் ஆண். அதற்கு அடங்கி நடக்க வேண்டியவள் பெண். தலைமை இடம் ஆணுக்கு, அடிமை நிலை பெண்ணுக்கு. இப்படிப்பட்ட சமுதாயச் சிந்தனைகளுக்கு தூபமிடும் தூணாக அமைந்து பலம் சேர்ப்பவை இலக்கியங்கள்"5.

கற்பென்னும் பொற்பும், கல்வியறிவின்மையும், பரத்தமை யொழுக்கமும், வெளி உலகத் தொடர்பின்மையும் பெண்களை பெண்ணடிமையென்னும் மீளாப் புதைக்குழியில் ஆழ்த்தியுள்ளது. அதன் பொருட்டு "விறலி விடு தூது நூல்களில்" எவ்விதம் பெண்ணடிமைத்தனமும், ஆணாதிக்கச் சிந்தனையும் பதிவு செய்யப் பெற்றுள்ளது என்பதை வெளிக்கொணர்வது இவ்வியலின் நோக்கமாகும்.

**பெண்ணியம் - பொருள் விளக்கம்**

பெண் தன்னைத் தானே முதலில் நேசிக்க வேண்டும். தன்னுடைய உள, உடல் நலத்தின் மீது அவள் அக்கறை கொள்ளுதல் வேண்டும். ஆணும், பெண்ணும் இணைந்த இல்லற வாழ்வில் இருவரும் பூரணத்துவம் பெற்றிடல் வேண்டும். நீ, நான் என்கிற பாகுபாடு மறைந்து "நாம்" என ஒன்றுபடல் வேண்டும். "பெண் தன் வாழ்வின் ஒவ்வொரு நிலையிலும் ஆணைச் சார்ந்தே வாழ வேண்டியவள். ஆணே முன் நிறுத்தப்பட வேண்டியவன் என்னும் கருத்தியலுக்குள் ஆணாதிக்க வர்க்கம் பெண்ணைச் சிறை வைத்து வருகின்றது. எனவே சமுதாயத்தின் கடைநிலை உயிரியாகப் பெண் பின்னுக்குத் தள்ளப்படுகிறாள்"6. இவை அனைத்தையும் உள்ளடக்கிய பெண்ணியம் குறித்து பல்வேறு கருத்தாக்கங்கள் உள்ளன. அவை,

"பெமினிசம் (Feminism) என்ற ஆங்கிலச் சொல் Femina என்ற இலத்தீன் சொல்லிருந்து மருவி வந்ததாகும். பெமினா என்ற சொல்லுக்குப் பெண்ணின் குணாதிசயங்களைக் கொண்டுள்ள (Having the quality if Female) என்பது பொருளாகும். இச்சொல் முதலில் பெண்களின் பாலியல் குணாதிசயங்களைக் குறிப்பிடவே வழங்கப்பட்டது. பெண்களின் உரிமைகளைப் பேசுவதற்காக எடுத்தாளப்பட்டது"7.

"1889 வரை வொமனிசம் (Womanism) என்ற சொல் பெண்களின் உரிமைப் பிரச்சனையும், அதன் அடிப்படையிலான போராட்டத்தையும் உணர்த்தப் பயன்படுத்தப்பட்டது. 1890 ஆம் வருடம் வொமனிசம் என்ற சொல்லினிடத்தை பெமினிசம் (Feminism) என்ற சொல்லுக்குத் தன் வாழ்வின் மூலம் அர்த்தம் ஏற்படுத்திக் கொடுத்தவர் ரே ஸ்ரேசே (Ray Strachey) என்ற பெண்மணி ஆவார்"8.

"பெண்ணியம் என்பது பெண்களுக்கான உரிமைகளைப் பெற்றுத் தருவதோடு சமூகத்தையே மாற்றியமைக்க முயல்வதால் அதனைச் சமூகநிலை மாற்றக் கோட்பாடு என்றழைக்கிறார் சார்ல் பன்ச்.

பெண்களின் தாழ்நிலையை ஆராய்ந்து அதை மாற்ற மேற்கொள்ளப்படும் வழிமுறைகளே பெண்ணியம் என்று கார்டன் குறிப்பிடுகிறார்"9.

"சமூகத்திலும், வேலைத்தளத்திலும், குடும்பத்திலும் நிலவும் பெண் ஒடுக்குகின்ற மற்றும் சுரண்டல் பற்றிய பெண்களின் உணர்வு நிலைகளும் இந்நிலையை மாற்றுவதற்குப் பெண்களும் ஆண்களும் எடுக்கும் உணர்வுப்பூர்வமான நடவடிக்கைகளும் பெண்ணியம் எனப் பொதுவாக அழைக்கப்படுகிறது"10இவ்வண்ணம் பெண்ணியலாளர்கள் பெண்ணியம் குறித்து எடுத்துரைக்கின்றனர்.

**பெண்ணிய நோக்கில் தூதிலக்கியப் பெண்கள்**

விறலி விடு தூது இலக்கியங்களில் பதிவு செய்யப்பெற்றுள்ள பெண்ணடிமைத்தனக் கூறுகள் பெண்ணிய நோக்கில் வாழ்க்கைத் துணைநலம் என்னும் தலைப்பில் பகுத்து ஆராயப்படுகின்றன.

**வாழ்க்கைத் துணைநலம்**

அக வாழ்க்கையில் தலைவனும் தலைவியும் பிறரது பழிச்சொல் எதுவுமின்றி அறம்புரிவோராகவும், அன்புடையோராகவும் வாழ்தல் வேண்டும். கணவனிடம் குறை இருப்பினும் அதனை நிறையாகப் பார்க்கும் பண்பு உடையவளே மனைவி. ஆணினத்தைப் பெருமைப்படுத்த சில வரையறைகளை முன் வைத்த இலக்கியங்கள், மாறுபட்ட சில தனி வரையறைகளைப் பெண்ணினத்திற்கு மட்டுமே உரியதாக வரையறுத்துள்ளது. குலமகள் யாவரெனின்,

"கற்புடுத் தன்பு முடித்துநாண் மெய்ப் பூசி
நற்குண நற்செய்கை பூண்டாட்டு - மக்கட்பே
றென்பதோ ரோக்கமு முண்டாயி னில்லன்றே
கொண்டாற்குச் செய்தவம் வேறு"11

கற்பை ஆடையாகவும், அன்பை மலராகவும், நாணத்தைச் சந்தனமாகவும், நற்குண நற்செய்கைகளை ஆபரணங்களாகவும் அணிந்திருத்தல் வேண்டும் என்பதையே இலக்கியங்கள் அறிவுறுத்துகின்றன. இதே போன்று இல்லறத் தலைவனது பண்புகள்

இவையென எடுத்துரைக்கும் இலக்கியங்கள் இதுவரையிலும் எழுதப்படவில்லை. புலவர்கள் மறந்து விட்டார்கள் போலும், விறலி விடு தூது நூல்களும் இதனுள் அடங்கும்.

பிற விறலி விடு தூது நூல்களில் சொல்லப்படாத ஒரு கருத்து “தெய்வச் சிலையார் விறலி விடு தூதில்” சொல்லப்பட்டுள்ளது. அதாவது பிற நூல்களில் பரத்தையின் பொருட்டோ அல்லது மூத்தாள், இளையாளின் பொருட்டே தலைவன் தலைவியரிடையே ஊடல் நிகழ்ந்துள்ளது. தெய்வச்சிலையார் விறலி விடு தூதில் நடலிங்க பட்டன் மாமனாருடன் ஏற்பட்ட பிணக்கால் தன் மனைவி, குழந்தையை மறந்து தலப்பயணம் மேற்கொண்டான். திருமகளும் அன்றிலைப் பிரிந்த பெடை போலே வாடித் துடித்தாள். இதனை,

“சோதிநெடு
வாலினைய கண்ணிமண வாளனையே யெண்ணியொரு
நாளொருக மாயிருக்கும் நாளிலே - நீளமழுச்
செங்கரனார் கோடித் தினகரனார் போல்விளங்குஞ்
சங்கரனார் கோவிற் நலத்தாரில் - ஐங்கரனார்
..................................................................................
சங்கரனார் கோவிலிலே தன்கணவன் போனதுவு
மங்கொருத்தி கையிலகப் பட்டதுவுஞ் - செங்கைத்
திரவியத்தை வீணே சிந்துவதுங் கேட்டாள்
வரிசை பெற்ற கற்புடைய மங்கை”12

தன் பதியின் மீது கொண்ட அன்பின் காரணமாக திருமகள் ஊர் ஊராக தேடிச் செல்லும் புதிய போக்கினை இவ்வரிகள் உணர்த்துகின்றன.

“முந்நீர் வழக்கம்
மகடூஉ இல்லை”13

என்னும் தொல்காப்பியர் கூற்றுக்கு மாறுபட்ட கருத்து தெய்வச்சிலையார் விறலி விடு தூதில் இடம் பெற்றுள்ளது.

நடலிங்கப்பட்டன் திருமகளைப் பிரிந்த சில தினங்களிலே விலைமகளை நாடிச் செல்கிறான். அதோடு மட்டுமல்லாமல் தான் சேர்த்து வைத்த செல்வம் அத்தனையும் விலைமகளுக்கே ஈந்துள்ளான். தன்னை நம்பி வந்த பெண்ணைப் பற்றியோ, தன் குழந்தையின் எதிர்காலத்தைப் பற்றியோ? எவ்வித மனக்கலக்கமுமின்றிக் கலவி இன்பத்தில் கருத்தழிந்து போகிறான்.

விறலி விடு தூது நூல்களில் தலைவியைப் பிரிந்து தலப்பயணம் மேற்கொள்ளும் தலைவன் பொன், பொருள் எடுத்துச் சென்றதாக எவ்வித குறிப்பும் இல்லை. ஆனால் தேவதாசிக்குப் பன்மடங்கு பொருள் கொடுத்ததாக ஆசிரியர் கூறியிருப்பது அவரின் கற்பனைத் திறனையே வெளிக் கொணர்கிறது.

பொருட் பெண்டிரது குணமறிந்தும் தன் சுய இன்பத்திற்காக ஒரு குடும்பத்தை இழக்கக் கூட ஆணினம் தயங்குவது இல்லை என்பதையே விறலி விடு தூது இலக்கியங்கள் வாயிலாக அறிந்துகொள்ள முடிகிறது. பரத்தமையொழுக்கம் மேற்கொண்டத் தலைவனை ஏற்றுக் கொள்ள வேண்டியதும், தாய் போல் அன்பு செலுத்தி அரவணைக்க

வேண்டியதும் குலமகளின் கடமையாகும். இதனை மனுதர்ம சாத்திரம் "இழிந்த நடத்தை உடையவானக இருந்தாலும் பிற பரத்தையரோடு உடல் உறவு கொண்டவனாக இருந்தாலும் அவன் தான் அவளுக்குக் கடவுள். எல்லாமே அவளுக்குக் கணவன் தான் என்று ஒரே அடியாக அடித்துக் கூறிவிட்டது கணவனே எல்லாம் என்று தன் மணாளனைத் தவிர மற்றொருவரை மனதாலும் விரும்பாதவள் பெண்"14. நடலிங்கன் தேடியது போல் திருமகள் தனக்கு ஒருவனைத் தேடியிருந்தால் சமூகம் அதனை ஏற்றுக் கொள்ளுமா? அன்பு, பொறுமை, தியாகம் இவற்றின் மொத்த உருவமே பெண் எனக் கூறி, சமுதாயம் மரபென்னும் வாதநோயால் பெண்ணை முடக்கி வைத்துள்ள இழிவு நிலையை விறலி விடு தூது இலக்கியங்கள் முன் வைக்கின்றன.

முகத்தில் மஞ்சளும், மூளையில் கரியும் அப்பிக் கொள்வதில் ஆனந்தம் கண்ட பெண்மை இனத்திற்காக வாதாடுகிறார் கவிஞர் வைரமுத்து.

"சடங்குகள்
ஆடைகள் என்று தான்
அறிமுகமாயின
வெகு விரைவில்
ஆடைகள்
ரத்தம் குடிக்கக் கற்றுக் கொண்டன"15

என்பதே உண்மையாகும்.

"வைய்யி லடிக்கில் மணங்கோணாள் - பொய்யுரையாள்"16
"கூப்பிட்ட
சொல்லை மறுக்காத சுந்தரப் பெண்ணமுதாள்
தொல்லேறு போன்றாள் குதர்க்கமிட்டாள்"17

"பெண்டிர்க்கு அழகு எதிர் பேசாதிருத்தல்" என்னும் நொண்டிப் பழமொழியைக் கூறியே ஆணினம் தன் தேவையை நிறைவேற்றிக் கொள்கிறது. பெண்ணென்பவளை அன்பின் உருவமாக வர்ணிக்கின்றனர். அவளது அன்பை உதாசீனப்படுத்தி மற்றொரு பெண்ணை தலைவன் நாடிச் செல்கையில் அவளே ருத்ர தேவியாகிறாள் என்பதையே கலைஞர் கருணாநிதி விறலி விடு தூது நூல் சுட்டிக் காட்டுகிறது.

"நன்றெங்கள் தஞ்சாவூர் நாயகரே - என்று
நறுக்கென்று கேட்டாள்நான் நாக்கடித்துக் கொண்டேன்
சுறுக்கென்று தைத்தது சொல்லம்பு - விருப்பவள் மேல்
காட்டியதும் பேராண்மை காட்டியதும் இல்லறத்தேர்
..........................................................
..........................................................
போராடித் தீர்த்தாள் பொறுக்க முடியாமல்
கூறாமலே துறுவு கொண்டுவிட்டேன்"18

என்னும் வரிகள் ஆண் எத்தகையத் தவறு செய்தாலும் அதனைத் தட்டிக் கேட்கும் உரிமை பெண்ணிற்கு இல்லை. அடங்கிப் போதல் மட்டுமே பெண்ணிற்கு உரியது என்பதையே உணர்த்துகின்றன.

துறவறம் என்பது உலகியல் இன்பத்தில் மனம் கொள்ளாது இறை பக்தியில் தம்மைத் தாமே உணர்வது. ஆனால் ஆண்கள் துறவறம் என்கிற பெயரில் தன் அற்ப குணங்களை அடையாளப்படுத்திக் கொள்கின்றனர் என்பதை விறலி விடு தூது நூல்கள் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது. ஆணின் குணம் பிடிக்காமல் கோபத்தால் தெறிக்கும் வார்த்தைகளைப் பொறுக்க முடியாமல் பெண் துறவறம் மேற்கொள்வதென்றால் இல்லறம் ஏது? இன்பம் தரும் பொதுமகளிர் ஏது? துறவறத்தைக் கொண்டு பெண்ணினத்தைப் பூச்சி காட்டுபவர்களை நிந்தனை செய்திடல் வேண்டும்.

"பெண்ணொருத்தி பேசில் பெரும்பூமி தானதிரும்
பெண்ணிருவர் பேசில் விழும் விண்மீன்கள் - பெண் மூவர்
பேசிலலை சுவரும் பேதையை பெண்பலர் தாம்
பேசிலு கென்னமோ பின்"19

நீதிக் கருத்துக்களை எடுத்துரைக்கக் கூடிய "நீதி இலக்கியங்கள்" கூட பெண்ணிற்குப் பேச்சுரிமையை மறுத்துரைக்கிறது. ஆணினம் பெண்ணிற்குப் பெண்ணை எதிரியாக்கிவிடும் வல்லமை உடையது. தன் கைகளால் தன் கண்ணையே குத்திக் கொள்ளும்படிச் செய்துவிடுகிறது. குலமகள், பொதுமகளென்னும் ஒரு பிரிவினர் போக தூதுவர் என்னும் பாங்கில் மற்றொரு பெண்ணையும் அடிமைப்படுத்தியுள்ளனர்.

எலி பொறிக்குள் தானாக மாட்டிக் கொள்வது போல், பெண்களும் தம்மை அறியாமலே அடிமைச் சேற்றில் சிக்கிக் கொள்கின்றனர். குலமகளது ஊடலுக்குக் காரணம் பரத்தை என்கிற பெண். அவளது ஊடலைத் தணிக்கும் வாயிலாக வரக்கூடிய விறலியும் ஒரு பெண் ஆக ஆண்கள் தன் விரக தாபத்திற்காக மூன்று பெண்களையும் சடங்கு, மரபு என்னும் தொன்மங்களால் தொலைந்து போகச் செய்துள்ளனர். அழகில் சிறந்தவளை நாடிச் செல்வதென்பது ஆண்மகனிடத்துள்ள இயல்பான குணம். அதுவே பேராண்மையும் கூட. அதற்காக ஆணை வெறுத்து ஒதுக்குதல் கற்புடைய பெண்டிர்க்கு அழகல்ல. தலைவனை அவ்விதம் வெறுத்து ஒதுக்கினால் தலைவியின் வாழ்க்கை வீண்பொழுதாகும் என்பது சமூகநியதி என்பன போன்ற பெண்ணடிமைத்தனக் கூறுகளின் இருப்பிடமாக விறலி விடு தூது நூல்கள் திகழ்கின்றன.

"-திரு அழகு
காண்பரிய மாதர்களைக் கண்டளவில் ஆசை கொள்வ(து)
..........................................................................................
புத்தி சொல்ல வல்லாய்! உன் புத்தி எங்கே போச்சு(து) என்று
முத்து நகையாளை முகம் திருத்தி"20

விறலி, குலமகள் இயல்புகள் பலவற்றையும் எடுத்துரைத்து அஷ்டாவதானியின் நிலைமையைத் தலைவிக்குப் புரிய வைக்கிறாள். "சிமோன் தெபவார் "ஒருத்தி பெண்ணாகப் பிறப்பதில்லை பெண்ணாக உருவாக்கப்படுகிறாள். (One is not born rather becomes a women) என அழகாக வர்ணித்துள்ளார்"21. ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து வாழ்ந்தால் குடும்பம் கோவிலாகுமென எந்தத் தவறும் செய்யாத பெண்ணிற்கு மட்டும் அறிவுரைகள் கூறி திருத்த முயலும் சமுதாயம், தவறுகள் மட்டுமே செய்கின்ற ஆணினத்தைக் கண்டு கொள்வதேயில்லை என்பதை சிதம்பரேசர் விறலி விடு தூது நூல் தெளிவுபடுத்துகிறது.

“குணக் கோடானாலும் கொழுநன் நலக்
கோடானாலும் நாயகன்
கைநிறைய பொருள் இல்லாவிட்டாலும்
கண் நிறைந்த கணவனே மேல்”22

இவ்வரிகளை இயல்பாகப் படிக்கும் பொழுது பெண்ணினத்திற்கான இல்லற ஒழுக்கமும், ஆழ்ந்து நோக்கும் பொழுது அடிமைத்தனத்தின் குறிப்பும் வெளிப்படும். “வினையே ஆடவர்க்கு உயிர்” என்று கூறுவதைக்கூட குற்றமென கூற ஆரம்பித்தாயிற்று. நம்மால் பிறருக்குப் பயனில்லை, நம்மால் நமக்கும் பயனில்லை என்றபோது “ஆண்மகன்” என்கிற பட்டம் கொண்டு பெண்மையின் மென்மையைச் சிதைப்பது நியாயமல்ல.

“கணவனின் பேச்சை மறு பேச்சின்றிப் பெண் ஏற்றுக் கொள்ள வேண்டும். தனக்குத் தெரிந்தாலும் தெரியாதது போல் அவள் அடங்கிவிட வேண்டும். அறிவார்ந்த பெண் தவறுகண்ட போது சுட்டிக் காட்டுவாள். அதனால் அனைத்தும் உணர்ந்தவர் ஆண் என்ற ஆண்களின் ஆனந்த மமதைக்குத் தடையேற்படலாம். இதுவே அந்தகக்காலச் சமுதாயம் பெண்ணைப் புலனற்ற பேதையாய்ச் செய்வதற்கான காரணமாகலாம்”23. இக்கருத்தினையே விறலி விடு தூது இலக்கியங்களும் பதிவு செய்துள்ளன.

பெண்களை அடிமைப்படுத்த ஆண்கள் இரண்டுவிதமான வழிமுறைகளைக் கையாளுகின்றனர். ஒன்று பெண்ணின் அழகைப் புகழ்வது, மற்றொன்று கற்பு குறித்த கருத்தாக்கங்களைப் புனைந்துரைப்பது என்பவையாகும்.

“-வல்லமையாய்
மன்மதநூல் பார்க்கும் மதியுள்ள வாலிபர்க்குச்
. . .. ......... ..........................................................
வேடிக்கை வாலிபரை வித்தாரக் கொச்சிமஞ்சள்
வாடைக்குள்ளாக்கும் மருக்கொழுந்தே”24

என்னும் வரிகள் பெண்ணைப் போகப் பொருளாக மட்டும் பார்க்கும் ஆண்களது இழிவு குணத்தை வெளிப்படுத்துகின்றன. இதிலிருந்து விடுபட “சமதர்ம பெண்ணியவாதிகள் பாலியலை அடிப்படையாகக் கொண்டு (குடும்ப அழகு கொண்ட) சமூக அமைப்பைப் பொருளாதாரப் புரட்சியின் மூலம் மாற்ற முடியும் என்று நம்புகின்றனர். அதனடிப்படையில் பொருளாதார விடுதலையே பெண்களைத் தனியுரிமை உள்ளவர்களாக உருவாக்கும் என்கின்றனர்”25.

திருவள்ளுவர் இல், இல்லாள், மனை என்று மனைவியைக் குறிப்பிடுவார். ஆண்மகனைக் “கொழுநன்” என்றும் “கொண்டவன்” என்றும் குறிப்பிடுகின்றார். மனைவியாக ஏற்றுக் கொண்டவன் மனைவியை எவ்வாறு காப்பாற்ற வேண்டும். அவளிடம் எவ்வாறு அன்பு செலுத்த வேண்டும் . அவளைத் தவிர வேறு எந்தப் பெண்ணையும் நினைக்காத கற்புடையக் கணவனாக இருக்க வேண்டும் என்று அறிவுரை கூற மட்டும் திருவள்ளுவர் மறந்து விட்டார். ஏனென்றால் கற்பின் மேன்மையைத் தம் குறளால் அடையாளப்படுத்தியதோடு, பொருளுக்காக தம் உடலை விற்கும் பெண்டிர், இருமனப் பெண்டிர் போன்றோருடன் கொண்ட தொடர்பை ஆடவன் வெறுத்தொதுக்க வேண்டும் என்று மட்டும் அறம் வகுத்துக் கூறியுள்ளார்.

"தொட்டு மாலையிட்டோர் தோகையரைக் கூடியபின்
விட்டுப் பிரிந்தாலும் வேறுதிசை போனாலும்
கண்ணீரைத் தினம் சிந்திக் கண்மூடி வாழ்வது தான்
பெண்டிர்க் கற்பென்று பேசினால் அக்கற்பே
இந்த உலகத்தில் இல்லா தொழியட்டும்
சந்தையிலும் விலை போகாச் சரக்காகிப் போகட்டும்"26

எனப் பெண் விடுதலைக்காக கவிதை வரிகள் மட்டுமே போராடுகின்றன. பெண்களை நச்சுமுட்கள் என்று இலக்கியங்கள் வருணிக்கின்றன. எந்தவொரு முள்ளும் தாமாகத் துடி போய் காயப்படுத்துவதில்லை. பெண்களை அடிமைப்படுத்துவதாக எண்ணிக்கொண்டு தம்மைத் தாமே ஆண்கள் இழிவுபடுத்திக் கொள்கின்றனர்.

தொகுப்புரை

- தாய்வழிச் சமுதாயம் சிதறடிக்கப்பட்டு தந்தை வழிச் சமுதாயம் தழைத்தோங்கிய போது பெண்ணமைத்தனக் கூறுகள் எழுதா சட்டங்களாக்கப்பட்டுள்ளன. இதனை விறலி விடு தூது நூல் ஆசிரியர்களும் தத்தம் படைப்பில் பதிவு செய்துள்ளனர்.
- மரபென்னும் பூச்சால் ஆண்கள் குலமகள், விலைமகள் எனத் தரம்பிரித்துப் பெண்மையைச் சிதைக்கின்றனர். இத்தகைய ஆணாதிக்கப் போக்கு விறலி விடு தூது நூல்களில் பெரும்பாலும் இடம்பெற்றுள்ளன.
- சமூக இயல்புகள் ஒவ்வொன்றும் ஆணாதிக்கத்தினராலும் தனி உடைமையாளர்களாலும் உருவாக்கப்பட்ட கற்பிதங்களே என்பதை விறலி விடு தூது நூல்கள் வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது.

**சான்றெண் விளக்கம்**

1. கார்த்திகேசு சிவத்தம்பி, இலக்கியமும் கருத்து நிலையும், ப.84.
2. ப.மகேஸ்வரி, வாழ்வியல் நோக்கில் புத்திலக்கியம், ப.279.
3. சக்தி பெருமாள், பெண், ப.96.
4. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப.148.
5. அ.ஜெய்குமார், பெண்களும் சமூகமும், ப.5.
6. பாக்கியமேரி, வகைமை நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப.506.
7. இரா.பிரேமா, பெண்ணியம், ப.7.
8. ம.ஜெயந்தி, பெண் எழுத்து, பக்.5-6.
9. சு.சரஸ்வதி, குறவஞ்சி இலக்கியங்களில் பெண்கள், ப.11.
10. மேலது, ப.12.
11. எஸ்.எ.ராமசாமி, நீதி நெறி விளக்கம், பா.எ.8.
12. குமாரசாமி அவதானி, தெய்வச்சிலையார் விறலி விடு தூது, பக்.9-10.
13. ச.வே.சுப்பிரமணியம், தொல்காப்பியம் தெளிவுரை, ப.364.
14. சக்திபெருமாள், மு.நூ, ப.86.
15. இரா.பிரேமா, பெண்ணியம், ப.64.
16. டி.சந்திரசேகரன், தூதுத் திரட்டு, ப.70.
17. இரா.பண்டரிநாதன், கலைஞர் கருணாநிதி விறலி விடு தூது, பக்.4-5.

18. மேலது, பக்.13-14.
19. கதிர்முருகு (உ.ஆ), நீதி வெண்பா, பா.எ. 31.
20. என்.பி.எ.ஜப்பார் (பதி.ஆ), சிதம்பரேசர் விறலி விடு தூது, பக்.183-184.
21. துரை.பட்டாபிராமன் (பதி.ஆ), மு.நூ, ப.153.
22. சரோஜினி, மு.நூ, ப.48.
23. இரா.பிரேமா, மு.நூ, ப.68.
24. சரவணப் பெருமாள் கவிராயர், சேதுபதி விறலி விடு தூது, ப.88
25. முருகரத்தினம் (பதி.ஆ), மு.நூ,ப.207.



# 26. பதினெண் கீழ்க்கணக்கில் கூத்தர்களின் வாழ்வுநிலை

முனைவர் திருமதி **வீ.முத்துலட்சுமி**,
உதவிப்பேராசிரியர், முதுகலை மற்றும் தமிழாய்வுத்துறை
தி ஸ்டாண்டர்டு ஃபயர் ஒர்க்ஸ் இராஜரத்தினம்மகளிர் கல்லூரி ,சிவகாசி- 626 123
DOI 10.5281/zenodo.15067207.

**Abstract:**

The period of the Silampathikaram, Manimekalai, and the nineteen thousand books has been classified by literary historians as the 'Sangam Maruviyakalam'. Like the Sangam period, the Koothars were praised during the Sangam Maruviya period. More than the Sangam period, the Koothars were praised by the kings during the Sangam Maruviya period. The nineteen thousand books record that the Koothars were relegated to a low position.Various stories are found in the epics Silambu and Manimekalai, such as Koothukalai, Koothukalaignargar, Aadalarangam, Natakamakaliir, the title of Thalaikoli given to them, and Nataka Asan.

**Key Words:** Sangam Periods - Artist - Koothars - Life style

**முன்னுரை:**

சிலப்பதிகாரம், மணிமேகலை, பதினெண்கீழ்க்கணக்கு நூல்களின் காலத்தை இலக்கியவரலாற்று ஆய்வாளர்கள் 'சங்கம் மருவியகாலம்' என வகுத்துள்ளனர். சங்க காலத்தைப் போலவே, சங்க மருவிய காலத்திலும் கூத்தர்கள் போற்றப்பட்டு இருக்கிறார்கள். சங்க காலத்தை விட, கூத்தர்கள் சங்கம் மருவிய காலத்தில் மன்னர்களால் போற்றப்பட்டிருக்கிறார்கள். பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் கூத்தர்கள் இழிநிலைக்குத் தள்ளப்பட்டனர் எனப் பதிவு செய்கின்றன.

சிலம்பு, மணிமேகலை ஆகிய காப்பியங்களில் கூத்துக்கலை, கூத்துக்கலைஞர்கள், ஆடலரங்கம், நாடகமகளிர், அவர்களுக்கு வழங்கப்படும் தலைக்கோலி எனும் பட்டம், நாடக ஆசான் என்பன போன்ற பல்வேறு செய்திகள் காணக்கிடக்கின்றன.

**திருக்குறளில் கூத்துக்கலை :**

சங்ககால மக்கள் பரத்தையர் ஒழுக்கம், கள் உண்டு களித்திருத்தல், புலால் உண்ணல் ஆகியவற்றில் தம்மை இழந்து, அறத்தை மறந்து வாழலாயினர். அவர்களை அறநெறிக்கு அழைத்துவரவே அற இலக்கியம் உருவாயிற்று. அப்படி மக்களை அறவழிக்கு இழுத்துச் செல்லும் அறக் கருத்துக்கள் நிரம்பிய இலக்கியத்திலும் கூத்துக்கள் குறித்த செய்திகள் இடம் பெறுகின்றன. இக்காலத்தில் கூத்தர்கள் இழிநிலைக்குத் தள்ளப்பட்டனர். கூத்துக்கள் மக்களால் வெறுத்து ஒதுக்கப்பட்டன.

செல்வம் ஓரிடத்தில் நிலையாகத் தங்கியிராது. இடம் விட்டு இடம் செல்லும் என்பதற்கு நல்ல உவமை ஒன்றைத் தருகிறார் வள்ளுவர். கூத்தாடும் அவைக்கு மக்கள் கூத்துக்கள் நடைபெறும் காலம் வந்து கூடுவர். கூத்துக்கள் முடிந்தபின் அவரவர் இல்லங்களுக்குத் திரும்பிச் செல்வர். பின் கூத்தாடும் அவை வெறுமனே காலி இடமாக இருக்கும் அதுபோல, ஊழ் வினையின் காரணமாக ஒருவனிடம் சிலகாலம் செல்வம் தங்கும் பின் மங்கும் என்பதை உணர்த்த,

"கூத்தாட் டவைக் குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அது விளிந்தற்று"[1]

என்ற குறளைக் கூறுகிறார். ஆக வள்ளுவர் காலத்தில் கூத்தாடுவதற்கெனத் தனி இடம் இருந்ததென்பதும், கூத்து நடைபெறும் காலத்தே மக்கள் அனைவரும் ஒன்று திரண்டு கூடுவர் என்பது தெளிவாகிறது.

மரப்பாவைக் கூத்து என்பது மரத்தால் செய்த பாவைகளைக் கயிறுகொண்டு ஆட்டுவிக்கும் ஆட்டம் ஆகும். வள்ளுவர் காலத்தில் மரப்பாவைக் கூத்து நிகழ்த்தப்பட்டிருந்திருக்கின்றன.

"நாண்அகத் தில்லார் இயக்கம் மரப்பாவை
நாணால் உயிர்மருட்டி யற்று"2

என்ற குறட்பாவில் மக்களாகப் பிறந்த எவரும் "நாணம்" உடையவராக இருக்க வேண்டும். நாணத்தக்க பழி பாவங்களுக்கு நாணாதவர்கள் இவ்வுலகத்தில் நடமாடுவது, கயிற்றால் கட்டி இயக்கப்படும் பாவைகள் ஆடுவதைப் போன்றது என்கிறார். எனவே மக்களுக்கு நல்ல வாழ்வியல் கருத்துக்களைக் கூறும் வள்ளுவரும் இக்கூத்தை உவமையாகக் கூறியதிலிருந்து அக்கூத்துக்கலை பெற்றிருந்த முக்கிய இடமானது புலனாகிறது.

**ஏலாதியில் கூத்துக்கலை:**

கூத்துக்கலை மிக நுட்பமானகலை; மனத்தைக் கிளறச் செய்து இன்பமூட்டுவதில் அதற்கீடு இணையில்லை. இன்பத்தை மூட்டி காமத்தை மிகுவிக்கும் என சமணர்கள் வெறுத்தனர், கணிமேதாவியர் தம்முடைய ஏலாதியில்,

"------------------ நாடகம்
சேர்ந்தாற் பகைபழி தீச்சொல்லே சாக்காடே
தீர்ந்தாற்போற் நீரா வரும்"3

என கூத்துப் பார்ப்பதிலிலுள்ள கேடுகளை எடுத்துக் கூறுவதோடு அறிவுடையோர் கூத்தாடுமிடத்தில் கூடார் என்பதையும்,

"கூத்தாடுமிடத்தில் அறிவுடைய சான்றோர் எவரும் செல்லார்"4

என விளக்கி, மற்றோரிடத்தில் ஆடுகளத்தினை அணுகத் தகாக இடம் எனவெறுத் தொதுக்குவர்.

இக்கருத்துக்களையெல்லாம் பார்க்கும் போது அறஇலக்கியமான ஏலாதி எழுதப்பட்டகாலத்தில் கூத்துக்கலை மேன்மக்கள் பார்க்கச் செல்லார் என்பதும், செல்லக் கூடாத இடங்களில் கூத்து நிகழும் இடமும் ஒன்று என்று சுட்டப்படுகிறது.

இதற்கெல்லாம் காரணம் என்னவென்று ஆராய்வோமானால், அறத்தை (தர்மத்தை) மட்டுமே மனிதன் கருத்தில் கொண்டு ஒழுக்கத்தில் உயர்ந்தவனாதல் வேண்டும் என்ற நோக்கம் ஒன்றேயாகும்.

**நாலடியாரில் கூத்துக்கலை**:

உயிரின் தன்மையை எடுத்துக் கூறும் நாலடியார், ஒரு கூத்தன் எவ்வாறு பலவிதமான கூத்துச் செயல்களைச் செய்து காட்டுவானோ அதைப்போல உயிரும் உடலில் இருக்கும் வரை பலவிதமான சிந்தனைக்காட்பட்டு தொழில்கள் புரியும் என்பதை,

"தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டும் கூத்தன்"5

என்று வெளிப்படுத்தி நிற்கிறது.

**கைந்நிலையில் கூத்துக்கலை**:

பதினெண்கீழ்க்கணக்கில் அகப்பொருள் நூலான கைந்நிலையும் கூத்தினது தன்மையினை எடுத்தோதுகின்றது.பாணன் தலைவனின் நற்பண்புகளைத் தலைவியிடம் கூற வரும் போது, தலைவி பாணனை நோக்கி,

இனிய இசையைப் பாடும் பாணனே, நீ என் தலைவனின் பண்புகளை எடுத்துக்கூறவேண்டியதில்லை: அவனை எனக்கு நன்றாகத் தெரியும். அத்தலைவனையே கூத்தாடச் செய்து நீயும் கலந்து கொண்டு பாடிப் பொருள் பெற்று உண்டு வாழ்வாயாக! எனக்கூறி வெறுப்பதை,

"கூத்தனாகக் கொண்டு குறை நீ உடையையேல்
ஆட்டுவித் துண்ணினும் உண்"6

என்ற வரிகள் இயம்புகின்றன. ஆக அந்நாட்களில் கூத்தர்கள் பல ஊர்களிலும் நாடகமாடிப் பிழைத்து வந்தனர் என்ற செய்தி இதனால் அறியக்கிடக்கிறது. கூத்து பிழைப்புத்தொழிலாக நடத்தப்பட்டு வந்ததும் தலைவியின் கூற்றின் மூலம் வெளிப்படுகிறது. தலைவனையே "கூத்தனாகக் கொள்" என்று தலைவி கூறுவதிலிருந்து கூத்தினை இழித்துரைப்பதுவும் இங்கு வெளிப்படையாகிறது.

**ஐந்திணை எழுபதில்கூத்துக்கலை**:

ஐந்திணை எழுபது எனும் அகப்பொருள் நூலில் தலைவன் பரத்தையர் சேரியில் இருக்கும் போது, பாணனிடம் நான் முதுமையடைந்துவிட்டேன். அவருக்கு இங்கு வர நேரமிருக்காது: எனக்கு அவருடைய குழந்தைக்குப் பால்தரும் வேலையைத் தந்துவிட்டார்: இனி நீயும் அவரோடு பரத்தையர் சேரிக்குச் செல்;: அவருடன் சேர்ந்து கூத்தாடு: அவர் உண்பதை உண்: என தலைவி கூறுவதை,

"நீத்து நீர் ஊனவாய்ப் பாண நீ போய் மொழி
கூத்தாடி உண்ணிலும் உண்"7

என வெளிச்சம் போட்டுக் காட்டுவதிலிருந்து, பாணன், கூத்தாடும் தொழிலால் சிறந்தவனாதல் மட்டுமின்றி, தலைவனின் அந்தரங்கத் தோழனாகவும் திகழ்ந்திருக்கின்றான் என்பதும் புலனாகிறது.

**நான்மணிக்கடிகைகூத்துக்கலை**:

பதினெண்கீழ்க்கணக்கு எழுதப்பட்ட காலத்தில் 'கூத்தயர்' என்றால் 'நாடகமாடும் மகளிர்' என்று மட்டுமே பொருள். இன்றைய வழக்கில், 'கூத்தியர்' என்றால் பொருள் மாறி 'வைப்பாட்டியர்' என்றாகிவிட்டது.

கூத்தாடும் கூத்தியரின் கைகளில் வாளேந்தி ஆடுங்கால் தமது கண்களை வாள் முனைகள் மேல் விரையச் செலுத்தி பின் மீண்டும் மீண்டும் சுழலச் செய்வதை,

"வாளாடு கூத்தியர் கண்போல் தடுமாறும்
தாளாளர்க் குண்டோ தவறு"8

என எடுத்தியம்பி கூத்தாடும் பெண்களின் முக பாவணைகள் சிறப்பாக இருக்கும். வெட்டும் விழிகளைக் கொண்டு தமது பார்வையை வீசுவர் என்ற செய்தியை அறியலாம். மேலும் இவர்கள் இழிவாகவும் கருதப்பட்டனர் என்பதனையும் அறிய முடிகின்றது.

**பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஆடல்:**

கூத்துச் செய்திகள் காணப்படுவது போல "ஆடல்" பற்றிய செய்திகளும் இத்தொகை நூலில் காணக் கிடக்கின்றது.

"ஆடல் பாடு பெறும்"9
"பாடலொடு ஆடல் பயின்று"10
"படுத்தலொடு ஆடல்"11

என்ற வரிகள் இதற்குச் சான்றுகளாவன. இக்காலத்தில் நடைபெறும் ஆடல்களுக்கு அழைப்பு அனுப்பும் வழக்கம் இருந்து இருக்கிறது. குறிப்பிட்ட சிலருக்கு அழைப்பும், இலவச நுழைவு அனுமதியும் இணைத்து அனுப்புவார்கள். இவ்வழக்கத்தை ஒருபாடல் குறிப்பிடுகிறது. அழைப்பு அனுப்பாதவர்கள் ஆடலைக் காண்பதற்குச் செல்வதில்லை என்பதை,

"விளியாதான் கூத்தாட்டுக் காண்டலும்"12

என்ற பாடற் பகுதியால் அறியலாம். வள்ளுவர் கூத்தாடும் இடத்தைக் "கூத்தாட்டவை" எனக் குறிப்பதுபோல இப்பாடலும் ஆடலைக் "கூத்தாட்டு" என்றே குறிக்கிறது.

ஆடல் அரங்குகள் பற்றிய குறிப்புக்கள் திணைமாலை நூற்றைம்பதிலும் காணப்படுகிறது.

"ஆடா அரங்கினுள் ஆடுவாள்"13

ஏலாதியிலும் ஆடலரங்கை,

"அரங்கின் மேல் ஆடுநர் போல்"14

எனச் சுட்டுகிறது. பதினெண்கீழ்க்கணக்கில் பல்வேறு இடங்களில் கூத்தர், கூத்து, கூத்தாட்டவை பற்றிய குறிப்புக்கள் உள்ளன. சங்ககாலம் காட்டும் கூத்துக்கலையின் மேன்மையைப் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் காண இயலவில்லை.

கூத்துக்கும் கூத்தர்களுக்கும் சங்ககாலத்தில் இருந்த பீடும் பெயரும் பின்னாளில் குறைந்து கொண்டே வந்தது. அதற்குப் பிறகு வந்த நாட்களில் இழிவான நிலைக்குத் தள்ளப்பட்டு உள்ளது என்பதைப் பின்னாளில் வந்த இலக்கியச்சான்றுகள் புலப்படுத்துகின்றன.

சமூக மதிப்பில் கூத்துக்கலைக்கும் கலைஞர்களுக்கும் காலமாற்றத்தால் உயர்வு தாழ்வு ஏற்பட்டாலும், கூத்துக்கலையானது பெருவழக்கில் இருந்து வந்துள்ளது என்பது மட்டும் தெளிவாகப் புலனாகிறது.

**சிலப்பதிகாரத்தில் கூத்தர்களின் வாழ்வு நிலை:**

சிலப்பதிகாரத்தில் "நாட்டுதும் யாம் ஓர் பாட்டுடைச் செய்யுள்" என்று கூறப்பட்டிருந்தாலும் அதனை நாடகக் காப்பியம், முத்தமிழ்க்காப்பியம் என்றழைப்பதில் பெரும் விருப்பம் கொள்கின்றனர். அதற்குக் காரணம் காப்பிய அமைப்பும், உள்ளே அக்கலைகள் தொடர்பாக நிறையச் செய்திகள் இருப்பதுமே காரணமாகும்.

சிலப்பதிகாரம் இருமுறை திரைப்படமாக்கப்பட்டதோடு மட்டுமல்லாமல், நாடக வடிவில் நாட்டிய வடிவம் கொண்டு பல்வேறு குழுக்களால் ஆடப்பட்டு வருகிறது. சிலப்பதிகாரக் கதையை அடிப்படையாகக் கொண்டு பலர் இலக்கிய நாடகங்களும்

எழுதியுள்ளனர். சான்றாக, புலவர்.கு. திருமேனி எழுதிய சிலப்பதிகார நாடகத்தைக் கூறலாம். ஒரு சிலர் ஓரிரு காதைகளை எடுத்து ஓரங்க நாடகங்களாக எழுதியுள்ளனர்.

சிலம்பின் சிதைந்த ஓர் அமைப்பு இன்றும் 'கோவலன் கதையாகச்' சிற்றூர்களில் கூத்து வடிவில் நடிக்கப்பட்டு வருகிறது. எனவே இவை அனைத்தையும் பார்க்கும்பொழுது சிலப்பதிகாரம் ஓர் கூத்துக்களஞ்சியமாகத் திகழ்கிறது எனலாம். இரட்டைக் காப்பியக் காலத்தில் கூத்துக்கள் போற்றப்பட்டன. கூத்தர்களும் வளம் பெற்றிருந்தனர். கூத்தர்களின் செல்வாக்கு உச்சத்தை அடைந்திருந்த காலம் என்று இதனைக் குறிப்பிடலாம்.

ஆடல், பாடல், அழகு இம் மூன்றிலும் குறைவுபடாத மாதவி என்ற ஆடல் நங்கையின் ஆடல் அரங்கேற்றம் பற்றி 'அரங்கேற்றக்காதை' குறிப்பிடுகிறது. கூத்துக்கள் அரங்கேற்றம் செய்யப்படும் இந்நாடக மேடையின் அமைப்பை,

"ஓவிய விதானத்து உரைபெறு நித்திலத்து
மாலைத் தாமம் வளையுடன் நாற்றி
விருந்து படக் கிடந்த அருந்தொழில் அரங்கத்து"[15]

எனச் சிற்பக் கட்டடக் கலை வல்லுநர்கள் வகுத்து வைத்துள்ள விதிமுறைகள் குறையாது, அரங்கம் அமைத்து இருந்த பாங்கினைச் சுட்டுகிறது.

பலவகையான கூத்துக்களைப் பற்றிய செய்திகளைச் சிலப்பதிகாரத்தின் துணைகொண்டு அறிந்துகொள்ள முடிகின்றது.

"இருவகைக் கூத்தின் இலக்கணம் அறிந்து
பல்வகைக் கூத்தின் விலக்கினிற் புணர்த்து"[16]

என்ற பகுதிக்கு அடியார்க்கு நல்லார் இருவகைக் கூத்து என்ற நிலையில் இரண்டு இரண்டாக முரண்பட வரும் ஆறுபிரிவுகளைக் குறிப்பிடுகிறார். இவை தவிர சிலம்பில் வரும் ஆய்ச்சியர் குரவை, குன்றக் குரவை போன்ற பாடல்கள் கதை தழுவி வரும் கூத்து வகைகளாகவே அமைந்து இன்பம் நல்குகிறது.

**கூத்துக்களின் வளர்ச்சி :**

சங்கம் மருவிய காலத்தின் பிற்பகுதியில் கூத்தர்கள் தொழில் திறமை உள்ளவர்களாகக் காட்டப்பட்டுள்ளனர். சிலப்பதிகாரத்தில் கூத்துக்கலைக்கு மட்டும் விளக்கமளித்ததோடு குழலாசிரியன், யாழ்ப்புலவன், ஆடலரங்கம், தலைக்கோல் வழங்கும் நிலை, வாரப்பாடல் அமைப்பு, இசை முழக்கம் போன்றவற்றிற்கும் இலக்கணம் கூறுகிறது. தேசிக் கூத்து, மார்க்கக் கூத்து இவற்றோடு மாதவியாடிய பதினோரு ஆடல் வகைகள் ஆகிய அனைத்தையும் எடுத்தியம்பி இன்பமூட்டுகின்றன.

இவற்றைத் தவிர்த்த ஏனைய பகுதிகளில், இந்திரவிழாவில் கலைஞர்களின் பங்கு, மாதவி காவிரியை நோக்கிப் பாடிய முகம் உடைவரி, ஆற்று வரி, சார்த்து வரி, முகச்சாத்து, முகம்இல்வரி, காலை வரி, நில வரி, முரிவரி மயங்குதிணை நிலவரி, வேட்டுவவரி, வள்ளிக்கூத்து, வென்றிக்கூத்து, ஊர்சூழ்வரி, வாழ்த்துப்பகுதி போன்ற வரிப்பாடல் வகைகளுக்கும் விளக்கம் தந்து, நாட்டியம் நன்றாக அமைய வேண்டுமாயின் நாட்டிய மங்கை எவ்விதப் பயிற்சி பெற்றிருக்க வேண்டும் என்பதையும் விளக்குகையில்,

"மீத்திறம் படாமை வக்காணம் வகுத்துப்
பாற்பட நின்ற பாலைப் பண்மேல்
நான்கின் ஒரீஇய நன்கணம் அறிந்து"[17]

மங்கலப் பண்ணாகவும் நரம்படைவுடன் நிற்கும் பாலைப்பண்ணை அதன் அழகு கெடாதபடி நான்கு உறுப்பும் சேர்ந்த சொற்களை நன்கு அறிந்து தாளத்திற்கு ஏற்ப அவிநயம் பிடித்து பாடல்களுக்கு இசைய அழகு நடம் ஆடக்கூடிய திறமை மிக்கவளாக மாதவியானவள் அரங்கேற்றுக்காதையில் காட்டப்படுகிறாள்.

**தலைக்கோலி பட்டம் பெறுதல் :**

மாதவியின் நடனமானது நாட்டிய நூற்களில் கூறும் விதிமுறைப்படி, குற்றம் குறைவில்லாது அமைந்திருந்தது. எனவே அவளுடைய நடனத்தைக் கண்டமன்னன் தலைக்கோலி பட்டம் அளித்துச் சிறப்பித்தான் என்பதை,

"நாட்டிய நன்னூல் நன்கு கடைப்பிடித்துக்
காட்டினள் ஆதலின் காவல் வேந்தன்
இலைப் பூங்கோதை இயல்பினில் வழா அமைத்
தலைக்கோல் எய்தித் தலை அரங்கு ஏறி"18

என்பதன் மூலம் தலைக்கோலி என்ற சிறந்த ஆடல் நங்கைக்குரிய பட்டத்தைப் பெற்றதுடன் ஆயிரத்தெட்டுக் கழஞ்சுப் பொன்னும் பரிசாக மாதவி பெற்றதை சிலம்பு சுட்டுகிறது.

ஆக சிறந்த நடனமங்கைக்கு பட்டமும் பரிசும் கொடுக்கும் பழக்கம் சிலப்பதிகாரம் காலத்தில் காணப்பட்டுள்ளது. இன்று திருவிழாக்களில் கரகாட்டம் ஆடும் பெண்களுக்கு ரூபாய் கொடுக்கும் பழக்கம் காணப்படுவது அதன் மிச்சமாகக் கூட இருக்கலாம் எனக் கருதத்தோன்றுகிறது.

**குறிப்புகள்**

1. குறள், 332.
2. மேலது, 1020.
3. ஏலாதி, 25.
4. மேலது, 62.
5. நாலடி. 26.
6. கைந்நிலை 42-1.
7. ஐந்திணை எழுபது 45.
8. நான்மணிக்கடிகை. 84.
9. மேலது, 86.
10. ஏலாதி, 51.
11. மேலது, 69.
12. திரிகடுகம், 11.
13. திணைமாலை நூற்றைம்பது, 129.
14. ஏலாதி, 24.
15. சிலம்பு, 3; 111-113.
16. மேலது, 3; 12-13.
17. மேலது, 3; 147-150.
18. மேலது, 160-163.

# 27. குறுந்தொகையும் சூழலியல் சார் வழிபாடும்

**முனைவர் ஜெ.குணசீலி,**
உதவிப்பேராசிரியர் - மொழியியல்துறை,
பிராவிடன்ஸ் மகளிர் கல்லூரி,குன்னூர்.
அலைபேசி : 9894584596
DOI 10.5281/zenodo.15067223.

**Abstract:**

The ancient Tamils, with their ecological perspective, realized that if trees are protected, they will not die. The ancient Tamils, who had the concept of 'Paddy is life and water is life', were determined that trees should be cut only for ploughing and sacrifice, and therefore they destroyed only a few types of trees. Only trees like sandalwood, vakulam, akil, venkai, vikasi, and surapunnai were destroyed for cultivation. Sandalwood trees were used to rub their hands against the heat during the time of the Thinai Punakaval to ward off birds and to avoid the heat. It is necessary to capture and show the good thoughts expressed in Kurunthogai, one of the works of the ancient Tamils who led such an ecologically natural life.

**Key Words:** Ancient Tamil - Kurunthogai - Ecological - worship

**முன்னுரை :**

சூழலியல் முதலில் 'உயிரினங்கள் வாழுமிடம் பற்றிய கல்வி' எனப்பட்டது. தற்போது, 'உயிரற்ற காரணிகள் உயிருள்ள காரணிகள் மீது செலுத்தும் தாக்கம் மற்றும் விளைவு' என வரையறுக்கப்படுகிறது.சூழல்காப்பு, சூழல்கேடு, தீர்வு, மக்கள்தொகைப்பெருக்கம், சூழல் சார்ந்த விழிப்புணர்வு இவை பற்றியே பெரிதும் தற்போது ஆய்வுகள் நிகழ்த்தப்பட்டு வருகின்றன. தமிழ்ச் சங்க மற்றும் சங்கம் மருவிய இலக்கியங்களில் சூழல் குறித்த விழிப்புணர்வு தகவல்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன.

**பழந்தமிழர் இயற்கை அறிவு**

நெருப்பின் பயனை அறிந்த நாள் முதலே சூழல் மீதான மனிதனின் ஆதிக்கம் தொடங்கிவிட்டது. பழந்தமிழரிடையேயும் காடு கான்று நாடாக்கி வாழ்வது நாகரிகமாகக் கருதப்பட்டது. இருப்பினும், பழந்தமிழர் அழித்த காடுகளுக்குப் பதிலாகக் குளம் தொட்டு வளம் பெருக்குவதை மேன்மையான அறமாகக் கருதி இயற்கைச் சமன்மையைப் பேணிப்பாதுகாத்துள்ளனர். இயற்கையின் பேராற்றலை உணர்ந்து அதைப் பேணிப் பாதுகாத்ததோடு, அவற்றோடு நட்பும் உறவும் பூண்டு உறவாடி மகிழ்ந்துள்ளனர்.ஆழிப்பேரலையின் அழிவைப் பலமுறை அனுபவித்திருந்தாலும் ஐம்பூதங்களில் ஒன்றான நீரின் இன்றியமையாமை உணர்ந்து 'நீரின்றியமையாது உலகு' (குறள்.20)என நீர்வளத்தின் மேன்மையுடன் பிற பூதங்களின் அவசியத்தையும் சுட்டிச் சென்றுள்ளனர்.

**"மண் திணிந்த நிலனும்**
**நிலம் ஏந்திய விசும்பும்**
**விசும்பு தைவரு வளியும்**
**வளித்தலை இய தீயும்**

**தீ முரணிய நீரும் என்றாங்கு**
**ஐம்பெரும் பூதத்து இயற்கை போல**"(புறம்.2)

என்ற பாடல் ஐம்பூதங்களும் மானுடத்தின் தேவைக்குப் பயன்படவேண்டும் என்கிறது.

**நீரும் நிலனும்**

நீர் வளமே ஒரு நாட்டின் அடிப்படை வளமாகும். உலகின் முதல் உயிரி நீரிலிருந்தே தோன்றியுள்ளது என்பது அனைவரும் அறிந்ததே. நீரே புவியின் பெரும்பாலான உயிரினங்களின் வாழிடமாகவும் உணவாகவும் உள்ளது. நீருக்கும் நிலத்திற்கும் உள்ள தொடர்பானது உடம்பிற்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு போன்றது.

நிலம் என்பது உடம்பு. நீர் என்பது உயிர். 'உடம்பால் அழியின் உயிரால் அழிவர் 'என்ற திருமூலரின் கருத்து ஈண்டு நினைத்துப் பார்க்கத்தக்கது. நிலம் எனப்படும் உடம்பு அழியாமல் காக்கப்பட வேண்டுமாயின், நீர்நிலைகளான உயிரைப்பேணவேண்டும். நீர் நிலைகளைப் பாதுகாப்பது உலகையே பாதுகாப்பது ஆகும். எனதோன், பழந்தமிழர் நீரின் சிறப்பை பலவகைகளில் எடுத்துரைக்கின்றனர் .மிகினும் குறையினும், நீரும் உலகிற்குக் கேடு தரும். உலக நீர் ஆதாரத்தில் 97.5 சதவீதம் கடல்நீராகும் 2.5 சதவீதம் மட்டுமே நல்லநீர். பனிப்பிரதேசத்தில் உள்ள நீர் நமக்குப் பயன்படுவதில்லை. நல்ல நீர் குறைவாக இருப்பது ஒருபுறம் என்றால்; நாட்டின் வறட்சி மற்றும் வெள்ளப் பெருக்கிற்காக இந்தியா போன்ற நாடுகள் மறுபுறம் பெருந்தொகையை ஒதுக்கவேண்டியுள்ளது.

பண்டைய தமிழர் பலவகையான நம்பிக்கைகளைக் கொண்டிருந்தனர். இயற்கையை வழிபடுவதும் அவற்றிற்கு உருவம் கொடுப்பதும் நம்பிக்கையில் ஒன்று. நம்பிக்கை மனிதனுடைய மனத்தின் விருப்பத்தால் தோன்றியவை ஆகும். இயற்கையின் சீற்றங்களுக்குப் பயந்த மனிதன் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள எண்ணி, அவ்வியற்கையை வழிபடத் தொடங்கினான். இவ்வழிபாட்டின் தொடக்கமே நம்பிக்கை எனக் கூறலாம். மேலும் தன் வாழ்க்கையில் நிகழும் ஒவ்வொரு நிகழ்வையும் நம்பிக்கையின் அடிப்படையிலேயே எண்ணத் தொடங்கினான். இந்நம்பிக்கை பற்றிய சூழலியல் சார்ந்த செய்திகள் குறுந்தொகை இலக்கியத்தில் இடம் பெற்றிருக்கும் சிறப்பினைப் பற்றிக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**இயற்கை வழிபாடு:-**

சமுதாய வாழ்வில் குறுந்தொகைத் தமிழர்களின் வழிபாட்டு உணர்வு இடம் பெறுகிறது. இயற்;கையை அம்மக்கள் வழிபட்டுள்ளனர். குறிப்பாகப் பிறைவழிபாடு அவர்களிடம் இருந்தது. இதை,

**"தொழுது காண்பிறையின் தோன்றி"** (குறுந்-178:5)

என்னும் பாடலடியானது அனைவரும் தொழுது வணங்குகின்ற வழிபாட்டை எடுத்துரைக்கிறது. அதுபோல் ஒளியை வேறு வடிவிலும் அவர்கள் வழிபட்டுள்ளனர். இதனைத் தங்கள் மனைகளில் மாலை நேரத்தில் பெண்கள் விளக்கேற்றி வழிபட்டதை,

"-------------------------- **கணங்குழை மகளிர்**
**கையுறையாக நெய்பெய்து மாட்டிய சுடர்** ". ((குறுந்-398:3-4)

என்னும் வரிகளால் அறியமுடிகிறது. அது போல்,

**"-------------------------- விறல்கொழு சூலிக்குக்**
**கடனும் பூணாம், கைந்நூல் யாவாம்" . (குறுந்-218:1-2)**

எனக் காப்புநூல் கட்டி, பலிக்கடன் நேர்ந்து கொற்றவையையும் வழிபட்டதையும் அறிய முடிகிறது.

**இறை நம்பிக்கை:-**

இறை பற்றிய நம்பிக்கை இயற்கை வழிபாட்டின் அடிப்படையில் தோன்றியது. சூரியவழிபாடு, பிறை வழிபாடு போன்றவை மேற்கூறிய கடவுள் நம்பிக்கையைக் கொண்டதாகும். உலகம் முழுவதும் மூன்றாம் பிறை சந்திரனை வணங்குவதைக் காண முடிகின்றது. பிறையினை உடைந்த வளையலுக்கு ஒப்புமைப்படுத்திப் பலர் வழிபட்ட நிகழ்வினை

**"வளைஉடைத் தனையது ஆகிபலர் தொழ,**
**செவ்வாய் வானத்து ஐயெனத் தோன்றி,**
**இன்னாப் பிறந்தன்று, பிறையே, அன்னோ**
**மறந்தனர் கொல்லோ தாமே" (குறுந்-307:1-4)**

எனவும், பிறைநோக்கி வழிபட்டு கண்ட நிலையினை அதன் காட்சி அருமை விளங்கப் பேசியிருப்பதும் பிறையை வழிபடும் நம்பிக்கை தமிழ் மக்களிடையேயும் இருந்துள்ள நிலையைக் காட்டுகிறது. மூன்றாம் பிறை சந்திரனில் சிவன் இருப்பதாகக் கருதி, இன்றும் தமிழ் மக்கள் வழிபடுவதையும், வளர்பிறை நாளில் தொழில்களைத் தொடங்கும் நிலையும் காணப்படுகிறது. மூன்றாம்பிறை நாளன்று பெண்கள் தலைமுடியின் நுனியைக் கத்தரித்துக் கொள்வதும் நம்பிக்கையினால் எழுந்த செயலாகும். இங்கு, பிறை வளர்ந்து முழு மதியாவதைப் போல் தங்கள் மேற்கண்ட முயற்சி பயனளிக்கும் என்ற நம்பிக்கையே அடிப்படையாக அமையக் காணலாம்.

**"புனவன் துடவைப் பொன்போல் சிறுதினைக்**
**கடிஉண் கடவுட்கு இட்ட செழுங்குரல்**
**அறியாது உண்ட மஞ்ஞை, ஆடுமகள்**
**வெளிஉறு வனப்பின் வெய்துற்று, நடுங்கும்**
**சூர்மலை நாடன் கேண்மை**
**நீர்மலி கண்ணொடு நினைப்பு ஆகின்றே" (குறுந்-105:1-6)**

இப்பாடலில் குறவன் தன் புனத்தில் தோன்றிய முதல் கதிரைக் கடவுளுக்குப் படைக்க நினைத்திருந்த நிலையில் அக்கதிரை மயில் உண்டு வெறியாடியதாகக் காட்டப்பட்டுள்ளது. இங்கு மயிலோடு தொடர்புடைய செயல் கற்பனைக் காட்சி என்றாலும், அக்கற்பனை தோன்றுவதற்கு அடிப்படையான கடவுளுக்குப் படைத்தல் என்ற நம்பிக்கையினை அறிய முடிகின்றது.

**"விடர்முகை அடுக்கடுத்து விறல்கெழு சூலிக்குக்**
**கடனும் பூணாம், கைந்நூல் யாவாம்,**
**புள்ளும் ஓராம், விரிச்சியும் நில்லாம்,**
**உள்ளலும் உள்ளாம் அன்றே - தோழி**
**உயிர்க்கு உயிர் அன்னர் ஆகலின், தம்இன்று**

**இமைப்புவரை அமையா நம்வயின்**
**மறந்து ஆண்டு அமைதல் வல்லியோர் மாட்டே"** (குறுந்-218:1-7)

தலைவனைப் பிரிந்த மகளிர் அவன் மேற்கொண்ட வினை நன்கு முடிந்து விரைவில் வீடு வந்து சேரவேண்டுமென்று கருதிக் கொற்றவைக்குப் பலிக் கொடுத்தல், நோன்பிருத்தல், அந்நோன்பு நோற்கும் போது காப்பு நாண் அணிந்தமை ஆகிய செய்திகள் இப்பாடலில் இடம் பெற்றுள்ளன. இந்நம்பிக்கைகள் இன்றைய மக்களின் வாழ்க்கையிலும் காணமுடிகிறது.

பண்டைய மக்கள் இயற்கையாய் விளங்கும் பஞ்ச பூதங்களைத் தான் முதலில் வழிபட்டனர். இயற்கை வழிபாட்டிலிருந்துதான் இன்றைய உருவ வழிபாடு அமைந்தது. இதனை இரா.சாரங்கபாணி அவர்கள் தம் நூலில், "முதலில் மரங்களை வழிபட்டனர், பின் மர நிழலில் தூணை நிறுத்தி இறைஞ்சினர். தூண்- கந்து எனப்படும். கந்து இலிங்கமாயிற்று. இங்ஙனம் மரவழிபாட வளர்ந்து கடவுள் வழிபாட்டிற்கு இடமளித்து ஆலமர் கடவுள் சிவவழி பாட்டிற்கும், கடம்பமர் கடவுள் முருக வழிபாட்டிற்கும், கானமர் செல்வி கொற்றவை வழிபாட்டிற்கும் இடந்தந்து சமய வளர்ச்சிக்குத் துணை நின்றன" என்று காட்டுகின்றார்.

**"மறிக்குரல் அறுத்துத் தினைப்பிரப்பு இரீஇ**
**செல்லாற்றுக் கவலைப் பல்லியம் கறங்க**
**தோற்றம் அல்லது நோய்க்கு மருந்து ஆகா**
**வேற்றுப் பெருந் தெய்வம் பலவுடன் வாழ்த்தி**
**பேஎய்க் கொளீஇயள் இவள் எனப்படுதல்"** (குறுந்-263:1-5)

என்ற பாடலில் ஆடுவெட்டி, தினைப் பிரப்பு வைத்துப் பல்லியம் முழங்க தெய்வங்களை வழிபட்டனர் என்ற செய்தியைப் பெருஞ்சாத்தனார், தாய் வெறியாட்டு எடுத்தல் என்ற நிலையில் காட்டுகின்றார்.

**முடிவுரை:-**

குறுந்தொகை, சங்க இலக்கிய அகத்திணை நூலாகத் திகழ்ந்தாலும் அதிலும் இயற்கை சார்ந்த இறையுணர்வு பற்றிய பாடல்கள் காணப்படுகின்றன. அதனைத் தேடி எடுத்து பாட்டைப் படித்துப் பரமனைக் கண்டு பாரிடைப் பரப்ப வேண்டும். தமிழ்மொழியைப் பக்தியின் மொழி என்று போற்றுவர். இத்தகைய சூழலியல் உணர்வைப் பழைய இலக்கியங்களில் பெரும்பானமையும் கண்டு மகிழலாம்.

**துணைமை நின்றவை :**

1. உ.வே.சா(உ.ஆ), குறுந்தொகை (மூலமும் உரையும்), டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம்,சென்னை
2. ____________________, நற்றிணை(மூலமும் உரையும்), டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம், சென்னை.
3. http://nallakurunthokai.blogspot.com/2015/09/blog-post_10.html
4. https://temple.dinamalar.com/news_detail.php?id=17604

# 28. சங்க இலக்கியங்களில் உணவுசார் பண்பாட்டுப் பதிவுகள்

**உ.ச.எ.தமிழரசன்,**
உதவிப் பேராசிரியர்,தமிழ்த்துறை,
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி,சிவகாசி
அலைபேசி எண்: 9092249472 மின்னஞ்சல் முகவரி: ezhiltamil91@gmail.com
DOI 10.5281/zenodo.15067254.

**Abstract:**

The people of the Sangam period lived in harmony with nature. Culture is a set of behaviors, habits and traditions learned by a group from generation to generation. The word 'culture' is associated only with humans, and such high cultural values distinguish humans from other creatures and show them as superior. In this way, this article aims to highlight the food culture records of the people of the Sangam period recorded in Sangam literature.

Key Words: Sangam literature - Food - Cultural

## முன்னுரை

சங்க கால மக்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வு வாழ்ந்தனர்.தலைமுறை தலைமுறையாகக் குழுவாகச் சேர்ந்து கற்ற நடத்தை முறைகளும் பழக்கங்களும் மரபுகளும் சேர்ந்த ஒரு தொகுதியே பண்பாடு ஆகும். 'பண்பாடு' என்னும் சொல் மனிதனோடு மட்டுமே தொடர்புடையது, அத்தகைய உயர்;ந்த பண்பாட்டு அறங்களே மனிதனைப் பிற உயிரினங்களிடமிருந்து பிரித்துக்காட்டி அவனை உயர்ந்தவனாகக் காட்டுவது ஆகும். அவ்வகையில் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ள சங்க கால மக்களின் உணவுசார் பண்பாட்டுப் பதிவுகளை எடுத்துரைப்பதாக இக்கட்டுரை அமைகின்றது.

## உணவு

மனிதனுக்கு இன்றியமையாத அடிப்படைத் தேவைகளில் உணவு மிகவும் முக்கியமான ஒன்றாகும்.தமிழர் வாழ்க்கையை விளக்கும் தொல்காப்பியம் நிலத்தை நான்காகவும் பொழுதை இரண்டாகவும் பாகுபாடு செய்துள்ளது. மேலும் கருப்பொருளைத் தொல்காப்பியர்,

> "தெய்வம் உணாவே மாமரம் புட்பறை
> செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
> அவ்வகை பிறவும் கருவென மொழிப"(தொல்.பொருள்.அகம்.நூ.964)

என்று வகைப்படுத்துகின்றார்.தெய்வத்திற்கு அடுத்த நிலையில் உணவைக் குறிப்பிடுகின்றார்.இதன் மூலம் மனிதனுக்கு உணவு அடிப்படைத் தேவையாக கருதப்பட்டது.

சங்ககால மக்கள் பலவகையான உணவினை உட்கொண்டனர்.பால், தயிர், மோர், நெய் போன்ற பால் சார்ந்த உணவு வகைகளை உண்டனர்.கள் உண்ணுவது சங்ககாலத்தில் முதன்மை பெற்றிருந்தது.கள் உண்ணும்போதே பல வகையான ஊன் வகைகளையும் உடனுண்ணும் பழக்கம் காணப்பட்டது.காய், கனி, ஊறுகாய் போன்றவற்றையும் தங்கள் உணவு முறையில் சேர்த்து உண்டுள்ளனர்.தங்கள் இல்லங்களுக்கு வரும் விருந்தினருக்கும் பல வகையான உணவுகளை வழங்கினர் என்பது சங்க இலக்கியத்தின் வழி புலப்படுகின்றது.

"தேம்கலந்து அளைஇய தீம்பால் ஏந்திக்
கூழை உளர்ந்து மோழைமை கூறவும்,
மறுத்த சொல்லள் ஆகி,
வெறுத்த உள்ளமொடு உண்ணா தோளே" (அகம்.207: 14-18)

தேன் கலந்த இனிய பாலை ஏந்திக் கொண்டு கூந்தலைக் கோதி விரும்பு மொழி கூறிப் பருகுக எனக் கூறியும், வெறுத்த உள்ளமொடு மறுத்த சொல்லாளாகிப் பருகாதவன், உப்பு நீரைப் பெருமூச்செறிந்து சினத்தோடு பருகினாளோ என மகட்போக்கிய தாய் வருந்திக் கூறுவதாக அமைந்துள்ளது.

"குடவர் புழுக்கிய பொங்குஅவிழ்ப் புன்கம்,
மதர்வை நல்ஆன் பாலொடு, பகுக்கும்
நிரைபல குழீஇய நெடுமொழிப் புல்லி" (அகம்.393: 16-18)

குடவர் தம் தாயார் தீட்டிய வரகரிசியைப் புழுக்கியதால் மலர்ந்த பூ போன்ற சோற்றைச் செழித்த நல்ல பசுவின் பாலுடன் கலந்து பலர்க்கும் பசிதீர அளிப்பர்.

"வல்லுநள்கொல்லோ தானே - தேம் பெய்து
அளவுறு தீம் பால் அலைப்பவும் உண்ணாள்" (அகம்.89: 19-20)

தலைவி சிறுமியாக இருக்கும் பொழுது தேனை ஊற்றிக் கலந்த இனிய பாலினை வற்புறுத்தி ஊட்டியும் உண்ணாமல் அங்கும் இங்கும் ஓடுவாள். ஆய்மகள் தயிர் கொணர்ந்த பானையை வேட்டுவன் முகந்து கொடுப்பர் என்பதை

"தயிர் கொடு வந்த தசும்பும் நிறைய," (புறம்.33: 3)

என்னும் புறப்பாடல் வழி அறியமுடிகின்றது.சங்ககால மக்களின் உணவு முறையில் பால் சார்ந்த உணவு அதிக அளவில் இடம்பெற்றிருந்தது.

"ஊனும் ஊணும் முனையின், இனிது என,
பாலின் பெய்தவும், பாகின் கொண்டவும்,
அளவுபு கலந்து மெல்லிது பருகி,
விருந்துறுத்து, ஆற்றி இருந்தனெம் ஆக" (புறம்.381: 1-4)

ஊனும் ஊணும் தெவிட்டி வெறுத்ததால் பாலில் செய்தனவும் வெல்லப்பாகு கொண்டு செய்தனவுமாகிய பண்ணியங்களை இனிது என்று நன்கு கலந்து மெல்லிதிற் பருகி விருந்தாகிப் பசி போக்கினர் என்பதை மேற்கூறிய சான்றுகள் வழி அறிய முடிகிறது.

காய் கனி உணவுகள்

சங்ககால மக்கள் பால் , பால் சார்ந்த உணவுகள், இறைச்சிப் பொருட்கள் மட்டுமின்றி இயற்கை உணவானகாய், கனிகளையும் உணவாக உட்கொண்டனர் என்பதை சங்கப்பாடல்கள் வழி அறிந்து கொள்ள முடிகின்றது.

"பைங் காய் நெல்லி பல உடன் மிசைந்து,
செங் கால் மராஅத்த வரிநிழல் இருந்தோர்" (ஐங்.381: 1-2)

நீர்வேட்கை தாங்காதவராய், நீருள்ள இடமறிந்து சென்று நீரினைப் பெறுவதற்கும் இயலாதவராய் மிகவும் வாடியோர், வழியிடையே கிடைத்த நெல்லிக்காய்களைத் தின்றபடி, மரத்தின் நிழலிலே அமர்ந்து இளைப்பாறியதைக் கண்டு இரங்குவர் என்பதாக இப்பாடல் அமைந்துள்ளது.

"சுவைக் காய் நெல்லிப் போக்கு அரும் பொங்கர்
வீழ் கடைத் திரள் காய் ஒருங்குடன் தின்று.
வீ சுனைச் சிறு நீர் குடியினள், கழிந்த" (நற்.271: 5-7)
"மிஞிறு புறம் மூசவும் தீம் சுவை திரியாது,
அரம் போழ்கல்லா மரம் படு தீம் கனி
அம் சேறு அமைந்த முண்டை விளை பழம்
ஆறு செல் மாக்கட்கு ஓய் தகை தடுக்கும்.
மறாஅ விளையுள் அறாஅ யாணர்," (பதி.60: 4-8)

வண்டுகள் நறுமணத்தால் மொய்க்கவும் இனிய சுவை மாறாத, அரிவாளாலும் பிளக்கவியலாத மரங்களில் சாறு நிரம்பிய விளைந்த, முட்டை போல முதிர்ந்த பலாக் கனிகள் வழிச் செல்வோர்க்கு உணவாகி அவர்தம் களைப்பைப் போக்கும் என்பதையும்

"அத்தப் பலவின் வெயில் தின் சிறு காய்,
அருஞ் சுரம் செல்வோர், அருந்தினர் கழியும்" (ஐங்.351: 1-2)

அருஞ்சுரத்தைக் கடந்து செல்லுவோர் வழியிலுள்ள பலாவின் உலர்ந்த சிறுகாயை உண்டு செல்வர் என்பதும் பெறப்படுகிறது.

கள்ளும் மீன் உணவும்

சங்ககால மக்கள் மயக்கமும் உற்சாகமும் கொடுக்கக்கூடிய ஊன் வகைகளையும் நீர்ம உணவுகள் பலவற்றையும் உண்டு மகிழ்ந்திருந்தனர். பழந்தமிழ் இலக்கியங்களில் புலால் விலக்கும் கள் விலக்கும் கூறப்படவில்லை. சுட்ட மீனைத் தின்று கள்ளைக் குடித்ததை

"விழவு இன்றாயினும், உழவர் மண்டை
இருங்கெடிற்று மிசையொடு பூங்கள் வைகுந்து" (புறம்.384: 8-9)

இப்பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன.

பரதவர் பருவகாலத்தில் கடல்வேட்டம் செல்லாது மடிந்து தத்தம் மகளிரோடு பனைமரத்தின் கள்ளை உண்டு பகல்பொழுதில் விளையாடுவர்.

"மட்டப் புகாவின் குட்டுவர் ஏறே!" (பதி.90: 26)

கள் உணவினையுடைய குட்ட நாட்டினரின் தலைவன் இளஞ்சேரலிரும்பொறை என்பதை அறியமுடிகின்றது.கொழுத்த மீனும் மிகுந்த கள்ளும் கொண்டு விளங்குகிற நாட்டிற்கு உரிமையுடையவன் தலைவன் என்பதைக் கீழ்க்காணும் பாடலடி விளக்கி நிற்கின்றன.

"கொழுமீன், விளைந்த கள்ளின்,
விழு நீர் வேலி நாடு கிழவோனே," (புறம்.13: 12-14)

பாரியின் குன்றில் பாணரின் கலங்கள் நிறைய ஊற்றிய கள்ளின் தேறல் வழிந்து கல்லையுருட்டிச் செல்லும் என்பதை,

"பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்,
வாக்க உக்க தேக் கட் தேறல்
கல் அலைத்து ஒழுகும் மன்னே! - பல் வேல்," (புறம்.115: 3-4)

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. மேலும்,

"எமக்கே கலங்கல் தருமே தானே
தேறல் உண்ணுமன்னே நன்றும்" (புறம்.298: 1-2)

வீரனொருவன், தன் வேந்தன் கலங்கிய கள்ளை எமக்குத் தந்து தெளிந்த தேறலைத் தான் உண்பான்.ஆனால் பகைவருடைய மதிலைச் சூழ நீ முந்திச் செல்க என்று கூறாமல் வேந்தன் முன்னே சென்றான் என்று கூறுவதாக அமைந்துள்ளது. நெல் விளைந்த வயலில் பறவைகளை ஓட்டும் உழுகுடியோர், பனைமட்டையை நெருப்பிட்டு அதில் மீனைச் சுடுவர் அதோடு கள்ளையும் குடிப்பர் என்பதை,

"ஒழி மடல் விறகின் கழி மீன் சுட்டு,
வெங் கள் தொலைச்சியும், அமையார், தெங்கின்" (புறம்.29: 14-15)

என்னும் அடிகளின் மூலம் அறியமுடிகின்றது.

கள் மிகுந்த வீதிகளில் நீண்ட கொடிகள் அசைந்தாடிக் கொண்டிருந்தன. பாணர்கள் வைகறையில் வேட்டையாடிய வரால் மீனினை விற்று, கள்ளுண்டு மகிழ்ந்திருந்தனர், அவர்கள் மீண்டும் வேட்டைக்குச் செல்லுதலை மறந்து உறங்கினர் என்பதை,

"நாள்துறைப் பட்ட மோட்டு இரு வராஅல்
துடிக்கண் கொழுங்குறை நொடுத்து, உண்டு ஆடி" (அகம்.196: 2-3)

எனும் பாடல் மூலம் அறியமுடிகிறது.

கடலில் பரதவர் கொண்ட சுறாமீனின் வற்றலும், நீந்துவதற்கு அரிய கழியிடத்தே கிடைத்த இறாமீனின் வற்றலும், நிலவினது நிறத்தையொத்த வெள்ளிய வெண்மணல் பரப்பில் புலால் நாற்றத்தை உண்டாக்கின என்பதனை,

"பெருங்கடற் பரதவர் கோள்மீன் உணங்கலின்
இருங் கழிக் கொண்ட இறவின் வாடலொடு,
நிலவு நிற வெண்மணல் புலவ, பல உடன், "(குறுந்.320: 1-3)

எனும் பாடல் தெளிவுறுத்துகிறது.

**கறி வகைகள்**

குன்றில் முழக்கம் செய்யும் காளையை மறவர்கள் கொன்று அதன் கொழுப்புள்ள பகுதியை நெருப்பில் சுட்டுத் தின்பர்.அவர்களின் தண்ணீர் வேட்கை நீங்க நெல்லால் சமைத்த தோப்பிக்கள்ளைக் குடிப்பர்.சங்ககாலத்தில் எலிக்கறி உண்டனர் என்பதை சங்கச் சான்று புலப்படுத்துகின்றது.

"மை ஊன் தெரிந்த நெய் வெண் புழுக்கல்,
எலி வான் சூட்டொடு, மலியப் பேணுதும்;" (நற்.83: 5-6)

கடுங்குரல் செய்யும் கூகையிடம் ஆட்டுக்கறியோடு நெய்கலந்த வெண் சோற்றையும், வெள்ளெலியின் சூட்டிறைச்சியும் அதிகம் கொடுத்து உன்னைப் பாதுகாப்போம் அமைதியாக இருப்பாயாக என்று கூறுவதன் மூலம் எலிக்கறி உண்டதை அறியமுடிகின்றது. முள்ளம் பன்றியைக் கொன்ற பேரொளியை உடைய ஆண்மக்கள்,

"முளவுமாத் தொலைச்சிய முழச்சொல் - ஆவர்" (புறம்.325: 6)

என்பதன் மூலம் முள்ளம் பன்றியை வேட்டையாடி உண்டதை அறியமுடிகின்றது.

அறுத்து எடுத்த உடும்பின் தசையை ஒரு மரத்தால் கட்டிய சிறிய இல்லத்தின் முற்றத்தில் வைத்துப் பங்கிட்டுக் கொடுப்பதற்காகத் தீயைமூட்டி, அதில் உடும்பினை வாட்டுவதால்

பிறக்கும் கொழுவிய நிணத்தின் நாற்றம், அச்சிற்றூர்களின் தெருக்கள் எங்கும் கமழ்ந்தது என்பதை,

> "உடும்பு இழுது அறுத்த ஒடுங்காழ்ப் படலைச்
> சீறில் முன்றில் கூறுசெய்திடுமார்" (புறம்.325: 7-8)

என்று புறநானூறு எடுத்தியம்புகிறது.

மேலும் சங்க இலக்கியங்களின் வழி கள் வண்டி (அகம்.116). தொடரிக்கள் (புறம்.328), இல்லத்தில் காய்ச்சப்படும் கள் (புறம்:329), கரிய காளைக் கறி (புறம்.364), கள்ளும் காளைக்கறியும் (புறம்.366), வரால் மீனும், சுறா மீனும் (புறம்.399), மான்கறி (புறம்.398), பனை ஓலைக்கள் (புறம்.290), ஆமைக்கறியும், ஆரல்மீனும் (புறம்.212). நாரை உண்டு எஞ்சிய ஆமைக்கறி (ஐங்.81), கலைமான்கறி (அகம்.107), பன்றிக்கறி (புறம்.379), உடும்புக்கறி (புறம்.326), தினைக் கள்ளொடு மான்கறி (அகம் 284), பசுப்பலி (அகம்.309). மான் உப்புக் கண்டம் (ஐங்.365), யானைக்கறி (அகம்.169), ஆட்டு இறைச்சி (புறம்:261), காளைக்கறி (புறம்.262), சுட்டகறி (அகம்.315), உறத்தூர்க்கள் (அகம்,266), உறையூர்கள் (அகம்.137), கள்ளும் காளையும் (அகம்.105) போன்ற சான்றுகள் மூலம் பலவகையான கள், கறி வகைகளை பல்வேறான பொழுதுகளில் மக்கள் பக்குவப் படுத்தி உண்டதை அறிய முடிகின்றன.

**துணை நின்ற நூல்கள்:**

1. சங்க இலக்கியம் முழுவதும், வர்த்தமானன் பதிப்பகம் தியாகராய நகர், சென்னை.
   முதற் பதிப்பு, 2003.
2. கைலாசபதி, சு., பண்டைத் தமிழரின் வாழ்வும் வழிபாடும்,பாரி நிலையம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1966.
3. தமிழண்ணல், தொல்காப்பியர் பொருளதிகாரம் (தொகுதி 1,2), மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, முதற்பதிப்பு,2010.

# 29. சங்கத் தமிழரின் நம்பிக்கைசார் பண்பாட்டுப் பதிவுகள்

உ.ச.எ.முகிலன்,
உதவிப் பேராசிரியர்,தமிழ்த்துறை (சுயநிதி),
எஸ்.பி.கே. கலைக் கல்லூரி,அருப்புக்கோட்டை.
அலைபேசி எண்: 8110025460 - மின்னஞ்சல் முகவரி:ezhilmukil89@gmail.com

DOI 10.5281/zenodo.15067303.

**Abstract:**

The Sangam literature is a repository of the culture and lifestyle of the people of the Sangam period. It was the custom of the ancient Tamils to look at the Nimitham before starting any activity. Nimitham is a prediction. "Nimitham is the foreshadowing of the good and bad things that will happen later in life through some symbols. Nimitham is the basis of faith. Showing the connection between our actions and the events of nature that are beyond our control is the function of Nimitham. Thus, this article is an investigation into the Nimitham and beliefs that the people of the Sangam period adopted in their lives.

**Key Words:** Sangam literature - Nimitham - Life style

## முன்னுரை

சங்க கால மக்களின் பண்பாட்டையும் வாழ்வியலையும் எடுத்துரைக்கும் பெட்டகமாக சங்க இலக்கியங்கள் விளங்குகின்றன.எந்த ஒரு செயலையும் தொடங்குவதற்கு முன்பு நிமித்தம் பார்ப்பது பண்டைய தமிழரின் வழக்கமாகும்.நிமித்தம் என்பது வருபொருள் உரைப்பதாகும். "வாழ்வில் பின் நிகழவிருக்கும் நன்மை தீமைகளைச் சில குறியீடுகளின் வாயிலாக முன்னுணர்த்துவது நிமித்தம் என்;பர். நிமித்தங்கள் நம்பிக்கையின் பாற்பட்டன.நம் செயல்களுக்கும் நம் வயப்படாத இயற்கையின் நிகழ்வுகளுக்கும் தொடர்பு காட்டுவது நிமித்தங்களின் செயல்பாடுகளாகும்.அவ்வகையில் சங்க கால மக்கள் தங்கள் வாழ்க்கையில் கைக்கொண்ட நிமித்தங்களை, நம்பிக்கைகளை ஆராய்வராக இக்கட்டுரை அமைகின்றது.

## நிமித்தம் சொல் பொருள்

நிமித்தம் என்பது பின்னர் நிகழும் நன்மை தீமைகளை முன்னரே அறிவிக்கும் குறி என்பர்.அரசரின் உறுதிச் சுற்றத்தார்கள் ஐவருள் வருவது கூறவல்ல குறி சொல்பவரை நிமித்திகன் என்று கூறுவதுண்டு.நிகழ்ச்சிக்கு தோன்றிய காரணத்தை நிமித்த காரணம் என்று கூறுவர். இதனை,

"நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்" (தொல்.பொருள்.புறத்.நூற்.30)

என்ற பாடலிலும்,

தலைவியும் தலைவனும் உடன்போகிய காலத்து அம்மகளை நினைத்துப் பயந்த நற்றாய் தன்னையும் தலைவனையும் தன் மகளையும் குறித்துக் காலம் மூன்றுடன் நிலைபெற்றுவரும் நல்ல வினை தீவினைக்குரிய காரணத்தைத் தன் நெஞ்சிற்கு விளக்கி வருந்திக் கூறுவதனை,

"தன்னும் அவனும் அவளுஞ் சுட்டி
மன்னும் நிமித்தம் மொழிப் பொருள் தெய்வம்
நன்மை தீமை அச்சஞ் சார்தலென்று
அன்ன பிறவு மவற்றொடு தொகைஇ"(தொல்.பொருள்.அகத்.நூ.39)

என்ற பாடலடிகள் மூலம் அறியலாம்.

**நன்னிமித்தமும் தீ நிமித்தமும்**

நற்செயலையும் நற்பயனையும் காட்டும் குறியினை நன்னிமித்தமாகவும், தீச்செயலையும் தீமையையும் காட்டும் குறியினை தீ நிமித்தம் என்வும் வழங்குவர்.இந்நிமித்தங்கள் பல்வேறு பொருட்கள் பற்றியும் செயல்கள் பற்றியும் எழுந்தன.மரம், பறவை விலங்குகள்இ மாந்தரை அடியொற்றி எழுந்தன. மாந்தர்கள் கண்ட கனவுகளும் நிமித்தங்களாகத் தோன்றின. முரசு முழங்குதல், பல்லியின் ஒலி, பனையின் உச்சியில் உள்ள குயிலின் கூவல், குருவிகள் விசும்பில் எழுந்து பறத்தல், வண்டுகள் புதரில் சூழ்ந்து ஊதுதல், முன்கை வளையும் தோள்வளையும் இறுகுதல், இடக் கண் துடித்தல், ஆயரது குழல் ஒலி இவையெல்லாம் நன்னிமித்தங்களாகக் கருதப்பட்டன என்பதனை

> "இடூஉங்கண் இனிய படூஉம்
> நெடுஞ்சுவர்ப் பல்லியும் பாங்கில் தேற்றும்
> மனைமா நொச்சிமீ மிசைமாச் சினை
> வினைமான் இருங்குயில் பயிற்றலும்" (நற்.246: 1-4)

என்றும்

> "நுண் ஏர் புருவத்த கண்ணும் ஆடும்
> மயிர் வார் முன்கை வளையும் செறூஉம்" (ஐங்.218: 1-2)

என்ற பாடலிலும்

> "அணி மாலைக் கேள்வற் தரூஉமார் ஆயர்
> மணிமாலை ஊதுங் குழல்" (கலி.101: 34-35)

என்;ற பாடல் வரிகளால் அறியமுடிகிறது.

**விரிச்சி கேட்டல்**

ஒரு செயலைச் செய்ய துணிந்தோர் அதன் முடிவினை அறிய விரிச்சிக் கேட்பதுண்டு. விரிச்சிக் கேட்டல் என்;பது நற்சொல் கேட்டல் எனப் பொருள்படும். இது பழந்தமிழ் மக்களிடம் நிலவிய ஒரு நம்பிக்கை ஆகும். தாம் விரும்பி மேற்கொள்ளும் செயல் நன்கு முடியவேண்டுமென்ற விருப்பத்துடன் அதற்கான நல்ல நிமித்தம் பெறும் வகையில் ஊரினர் நெல்லும் மலரும் கொண்டு சென்று தெய்வத்தை வழிபட்டு நிற்பர். அப்போது அப்பக்கம் செல்வோர் அல்லது பிறர் கூறும் பலன் அறிந்து கொள்வர்.இதனை விரிச்சிக் கேட்டல் என்பர்.

> "கொடுங்கோற் கோவலர் பின்னின் உய்த்தர
> இன்னே வருகுவர்இ தாயர்இ என்;போள்
> நன்னர் நன்மொழி கேட்டனம்" (முல்லை. 16-17)

தலைவனைப் பிரிந்த தலைவி வருந்தியிருக்க, முதுபெண்டிர் நெல்லும் மலரும் கொண்டு சென்று தெய்வத்தைத் தொழுது நற்சொல் கேட்டு நின்றனர். அப்போது கோவலர் கன்றினை நோக்கி இரைதேடச் சென்ற நின் தாய்மார்கள் இப்போதே வந்துவிடுவார்கள் என்று கூறிய சொல்லை நற்சொல்லாக ஏற்றுக்கொண்டு தலைவிக்கு ஆறுதல் கூறுவர்.

தும்பிகள் ஒலித்தலையும், வீட்டில் விளக்கு அணைவதையும், அச்சம் தருகின்ற கூகை கூவுவதையும் தீ நிமித்தங்களாகக் கருதி புலம்புகிறாள். நெல்லும் நீரும் தூவி விரிச்சிக் கேட்டு இவன் பிழைப்பான் என்;று கூறிய செம்முது பெண்டிரின் சொல்லும், இறக்கும் தருவாயில் துன்புறுவோர் பிழைக்கும் பொருட்டு முதுபெண்டிர் விரிச்சி கேட்ட நிலையானது இருந்தது புலனாகிறது.

**பல்லியும் நிமித்தமும்**

பல்லி ஒலித்தலைச் சகுனமாகக் கருதுவதைச் சங்க காலம் தொட்டு இன்றுவரை வழக்கமாகக் கொண்டுள்ளனர்.சங்க நூற்களில் பல்லியின் சொல்லை நன்னிமித்தமாகக் கொண்டதற்கான சான்றுகள் மிகுதியாக உண்டு.

தலைவனைப் பிரிந்த நிலையில் தலைவி அவன் சென்ற நாள் முதல் ஒவ்வொரு நாளும் சுவரில் குறியிட்டு அதனை நாள்தோறும் எண்ணி வருத்தத்துடன் வாழ்கிறாள்.வருத்தத்தின் காரணமாக தன் முன் கையை கன்னத்துடன் சேர்த்து ஊன்றிக் கொண்டு படுக்கையில் பிரிவு எண்ணி அழுத கண்ணினளாய் வருந்துகிறாள்.அந்நேரம், அவள் துயரம் நீங்குவது போல பல்லி ஒலித்தது.அச்சொல் அவளுக்கு ஆறுதலைத் தந்தது.இதனை,

“பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி,
நல்ல கூறு என் நடுங்கி
புல்லென் மாலையொடு பெரும்கொல் தானே? (அகம்.289: 15-17)

என்னும் அடிகளால் அறியலாம். அதுபோலப் பல்லியின் சொல் நல்ல நிமித்தமாகக் கணவன் வருகையை உறுதி செய்வதாகவும் நம்பினர். இதனை,

“இனைநலம் உடைய கானம் சென்றோர்
புனைநலம் வாட்டுநர் அல்லர்; மனைவயின்
பல்லியும் பாங்கு ஒத்து இசைத்தன
நல் எழில் உண்கணும் ஆடுமால் இடனே” (கலி.11: 19-22)

என்னும் அடிகளால் அறியலாம்.

**பச்சோந்தியின் நிமித்தம்**

பச்சோந்தி என்பது ‘ஓந்தி’ என வழங்கப்படும்.சங்க நூற்களில் ஓந்தி என்ற சொல் தான் இடம் பெற்றுள்ளது.ஓந்தி நன்னிமித்தத்திற்குரியதாகக் கூறப்படுகின்றது.நிறம் மாறுகின்ற வியத்தகு பண்பின் அடிப்படையில் இது நிமித்தம் கூறாகக் கருதப்படுகின்றது.

பொருள் பிரிவினால் தலைவனைப் பிரிந்த தலைவி தன் காதலன் பாலைநிலத்துச் சென்ற காட்சியினைக் கூறும்போது தலைவன் கருக்கரிவாளைப் போன்ற முதுகையுடைய முதிய ஆண் ஓந்தியை பாலை வழிச் செல்லும் மனிதர்கள் நிமித்தமாக அறிந்தனர் என்பதனை,

“வேதின வெரிநின் ஓதி முது போத்து
ஆறுசெல் மாக்கள் புள் கொள பொருந்தும்
சுரனே சென்றனர் காதலர்” (நற்.140: 1-3)

என்ற பாடலிலும்,

"உள்ளார் கொல்லோ - தோழி - துணையொடு
வேனில் ஓதிப் பாடு நடை வழலை
வுரி மரல் நுகும்பின் வாடி, அவண
வுறன் பொருந்து குன்றத்து உச்சிக் கவி அன்" (நற்.92: 1-4)

என்ற பாடலிலும்,

"கானம் வெம்பிய வறம்கூர் கடத்திடை
வேனில் ஓதி நிறம் பெயர் முதுபோத்து
பாண் யாழ் கடைய வாங்கி பாங்கர்
நெடுநிலை யாஅம் ஏறும் தொழில்" (நற்.186: 4-7)

என்ற அடிகளிலும் ஓந்தியின் நிமித்தங்களைப் பற்றி அறிய இயலுகின்றது.

**உன்ன மரம் காட்டும் நிமித்தம்**

உன்னம் என்பது ஒரு வகை மரமாகும்.இதனை இலவமரம் என்று கூறுவது மலைநாட்டு வழக்கெனவும் போர்செய்வதற்கு செல்பவர் நிமித்தம் பார்த்தற்குரிய மரமெனவும் குறிப்பார்கள்.

உன்னமரமானது தளிர்த்துத் தழைத்திருப்பின் அரசனுக்கு போருக்குச் செல்வது நன்மையாம்.கரித்துக்காட்டினால் தீமையாகும். வேந்தனும் படை மறவர்களும் இந்நிமித்தம் பார்த்து புறப்படுவர் என்பதனை,

"ஓடாக்கழல் நிலை உளப்பட ஓடா
ஊடல்வேந்து அடுக்கிய உன்னநிலையும்" (தொல். பொருள்.63: 7-8)

என்ற அடிகளால் அறிய முடிகின்றது.பகைவரோடு போர்செய்யக் கருதி நிமித்தம் பார்த்த வழி உன்னம் கரிந்து காட்டியது.இதனை,

"புன் கால் உன்னம் சாய தெண்கண்
வறிது கூட்டு அரியல் இரவலர்த் தடுப்ப
தான் தர உண்ட நனை நறவு மகிழ்ந்து" (பதிற்.40: 17-19)

என்ற பாடல் அடிகள் எடுத்தியம்புகின்றன.சேர மன்னன் நார்முடிச் சேரலை வெற்றி கொள்ள விரும்பிய பகைவர்கள் உன்ன மரத்தினை நிமித்தம் வேண்டினர்.விரிந்து தழைக்க வேண்டிய உன்னம் கரிந்து உதிர்ந்து காட்டி அவர்கள் பெறும் தோல்வியினை முன்னரே காட்டியது.இதனை,

"ஓவத்து அன்ன வினை புனைதல் இல்
பாவை அன்ன நல்லோள் கணவன்
போன்னின் அன்ன பூவின் சிறியிலை
புன்கால் உன்னத்துப் பகைவன் எம் கோட்" (பதிற்.61: 3-6)

என்ற அடிகளால் அறிய முடிகின்றது.

**முடிவுரை**

ஒரு செயலைத் தொடங்கும் முன் அச்செயல் நல்லமுறையில் நடைபெறவேண்டும் என்றும் எந்த விதமான தீமையும் நடந்துவிடக் கூடாது என்றும் புள் நிமித்தங்கள் மற்றும் பறவைகளின் ஒலியினைக் கொண்டு நிமித்தங்கள் பார்த்தனர் என்ற செய்தியும் புலனாகிறது. நிமித்தங்களைப் பறவைகள், விலங்குகள், மரங்கள் போன்றவற்றோடு

தொடர்புபடுத்திப் பயன்படுத்திய முறைகளும் தொன்றுதொட்டு நம்பப்பட்டு வருவதை அறிந்து கொள்ள முடிகிறது. மேலும் நம்பிக்கைகளை, மரபு சார் செயல்பாடுகளைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்ற விருப்பமே பண்பாட்டை நிலைநிறுத்துகின்றன என்பதை ஆய்வின் வழி அறிய முடிகிறது.

**துணை நின்ற நூல்கள்:**


1. சங்க இலக்கியம் முழுவதும்,வர்த்தமானன் பதிப்பகம், தியாகராய நகர், சென்னை - முதற் பதிப்பு, 2003.
2. கைலாசபதி, சு., பண்டைத் தமிழரின் வாழ்வும் வழிபாடும்,பாரி நிலையம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1966.
3. தமிழண்ணல்., தொல்காப்பியர் பொருளதிகாரம் (தொகுதி 1,2) மீனாட்சி புத்தக நிலையம், மதுரை,முதற்பதிப்பு, 2010.
4. சண்முகம் பிள்ளை, மு., சங்க தமிழரின் வாழ்வியல், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 2004.
5. பெருமாள், அ.கா., உணவுப் பண்பாடு, நியூ செஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை, முதற் பதிப்பு, 2012.




# 30. கிராமத்து நதிதனில் தோன்றிய சிப்பிக்குள் தாய்மையெனும் முத்து

**முனைவர் க.சரவணன்**
கௌவர விரிவுரையாளர், தமிழ்த் துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழக் கல்லூரி, மதுரை -21

Abstract :

Culturally, women have developed to the same level as men in today's context. Women were praised for their motherhood. The poet Natha Vinayagam Pillai sang that women should do good deeds to be born as girls, and the writings and speeches of Thiru. V. K. and Bharathiyar about women's welfare are accepted and rejected and discussed in today's context. However, women should be held in a higher position. We should accept the idea that they should behave differently from the restrictions built by men. In the fifty to sixty years since feminist thought emerged and developed, women have developed in various fields. This article highlights how these women are embodied in folk songs.

**Key Words :** Poet - Mothers' Life - Sirpi.

## முன்னுரை

பண்பாட்டு நிலையில் பெண்கள் ஆண்களுக்கு நிகராக இன்றைய சூழலில் வளர்ச்சி பெற்றிருக்கின்றனர். பெண்கள் தாய்மைப் பேறடைவதால் அதன்பாலால் போற்றப்படும் நிலை இருந்தது. மங்கையராய் பிறப்பதற்கே நல்ல மாதவம் செய்திட வேண்டுமம்மா என்று கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை பாடியதும், பெண்மை நலம் பற்றி திரு.வி.க, பாரதியார் போன்றோர் எழுதியதும் பேசியதும் இன்றைய சூழலில் ஏற்கப்பட்டும் மறுக்கப்பட்டும் விவாதிக்கப்படுகின்றன. ஆயினும் பெண்கள் உயர்வான நிலையில் வைத்து எண்ணப்பட வேண்டியவர்களேயாவர். ஆண்மக்களால் கட்டமைக்கப்படும் கட்டுப்பாடுகளுக்கு மாறுபட்டு நடக்க வேண்டும் என்ற கருத்தை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும்.பெண்ணியச் சிந்தனைகள் உருவாகி வளர்ச்சி பெற்ற ஐம்பது அறுபது ஆண்டுகளில் பெண்கள் பல்வேறு துறை சார்ந்த வளர்ச்சியை பெற்றிருக்கிறார்கள். அப்பெண்கள் நாட்டுப்புறப் பாடல்களில் எவ்வாறு உருவகம் கொள்கின்றனர் என்பதை இக்கட்டுரை எடுத்துரைக்கிறது.

## தாலாட்டுப்பாடலில் பெண்களின் நிலை

தாலாட்டுப்பாடலில் பெண்கள் விரதத்திற்குச் செல்வதை ஆராயும்போது குழந்தையில்லை என்பது முதற்காரணம். இரண்டாவது காரணம் ஆண்குழந்தையைப் பெற்றெடுக்க வேண்டும் என்பதை நோக்கமாகக் கொண்டுள்ளனர்.

'மங்கை பிறந்தாலே மனக்கவலை வச்சாளே
மன்னன் பிறந்தானே மனக்கவலை தீர்த்தானே"

இந்தத் தாலாட்டுப் பாடல் சமூகத்தில் பெண்கள் மதிக்கப்படும் நிலையினை வெளிக்காட்டுவதாக அமைகிறது. பெண் குழந்தையை வெறுத்து ஒதுக்கும் மனப்போக்கு கடந்த காலங்களில் இருந்தது. இன்றைக்கும் இருக்கிறதா என்பது கேள்விக்குறியே. ஏனென்றால் இன்றைக்குப் பெண்கள் பல்வேறு துறைகளில் கொடி நாட்டி வருகின்றனர். ஆயினும் சில கிராமப்புறங்களில் ஆண் குழந்தைகளையே பெரிதும் விரும்புகிறார்கள். அதற்குக் காரணம் நிலவுடைமைச் சமூகத்தில் ஆண் வாரிசுக்கே சொத்தை பராமரிக்கும் ஆகுருதி இருக்கிறது என நம்பப்படுவதாகும். அரசுரிமை போல சொத்துரிமைக்கு ஆண் வாரிசு வேண்டும் என்ற நிலையில்தான் இவ்வாறு பெண் வெறுப்பை உமிழ வேண்டிய

நிலை இருக்கிறது. இந்தத் தாலாட்டுப் பாடல்; பெண் குழந்தையைப் பெற்றெடுக்கும் பெண் மனக் கவலை கொள்வதாகவும் கணவனால் தான் துரத்தப்படுவோம் என்று அச்சம் கொள்வதாகவும் அமைகிறது. அதே வேளை ஆண் குழந்தை பிறந்தால் அந்த மனக் கவலை நீங்கி விடும் என்ற நிலை உணர்த்தப்படுகிறது.

**பணிச்சுமையும் மனச்சுமையும்**

தமக்குப் பிறந்த குழந்தைகளைப் பேணி வளர்க்கும் முறை இருபாலினருக்கும் உரியதாகும். இருவரும் நன்றாகவே வளர்க்கின்றனர். இருந்தபோதிலும் பெண்களுக்கே அதிகச்சுமை உள்ளது என்பதை அவர்களின் ஒடுஒடு சங்கலி என்ற தலைப்பிலான கவிதைகளில் காணலாம்.

‘ஒற்றையடிப் பாதையில்
நடக்கச்சலித்த குழந்தையை
முன்னால் நடத்தி
ஒடு ஒடு சங்கலி
ஓடோடு............
காலை மிதிப்பேன்
கையை மிதிப்பேன்
ஓடு ஓடு சங்கிலி
ஓடு ஓடு என்று பாடித்துரத்துவாள்”

தாய் ஒன்றிற்கு மேற்பட்ட குழந்தையைப் பெற்றவளாக இருக்கும் காரணத்தாலும் வாகன வசதியில்லை என்பதையும் நமக்கு இப்பாடல் மற்றொரு குழந்தையைச் சுமக்க முடியாது என்ற காரணத்தால் விளையாட்டுக் காட்டி குழந்தையை நடக்கச்செய்கிறாள் என்பதைச் கவிதையின் வாயிலாக உணர முடிகின்றது. விவசாயத்தை முக்கியத் தொழிலாகக் கொண்ட பெண்களின் நிலை இதுவே எனலாம். தலையில் உணவுப் பாத்திரத்தைச் சுமந்து கொண்டு கையில் கைக்குழந்தையை வைத்துக்கொண்டு நடக்கும் குழந்தையை விளையாட்டுக்காட்டிக் கூட்டிச் செல்லும் பழக்கம் இன்னும் சிற்சில ஊர்களில் கிராமத்து ஓவியமாகக் காணக் கிடக்கின்றன. தற்போது மின்சாரம் வருகையாலும் இயந்திரத்தின் உதவியாலும் இந்நிலை மாறியிருக்கலாம். ஆனால் வறுமையில் உழலும் பெண்கள் இன்றைக்கும் இருக்கவே செய்கிறார்கள் என்கிற உண்மையை மறுப்பதற்கில்லை.

அழித்து எழுதமுடியாத சித்திரம்

ஒரு படைப்பாளனுக்கு இருக்கவேண்டிய குணத்தைக் கவிஞர் சிற்பி கவிதையின் வாயிலாக உணர்த்துகிறார். படைப்பாளி அல்லாதவர்கள் கண்டுணர்ந்த நிகழ்ச்சிகளை மறந்துவிடுவார்கள். ஆனால் படைப்பாளியோ மனதில் பாதித்ததை படைப்போவியமாக வரைந்து விடுவர் என்பதற்கு இக்கவிதை ஒரு உதாரணமாகும்.

‘அழித்து எழுத முடியாத
சித்திரம் ஒன்றுண்டு
அம்மா
எப்போதும் பெண்களெனில்
இளக்காரம் ஆண்களுக்கு
காயம் பட்டாக்கூட
ரத்தம் வர்ரதில்லே

டாக்டர்கிட்ட அவளெக்
காட்டுங்கடா………………”

கவிஞர் சிற்பி தாயின் நிலையில் இருந்து பெண்களின் நிலைமையை எடுத்துக் காட்டுகிறார். தன் தாயை மறக்காமல் பிற பெண்களையும் நேசிக்கிறார் என்பதை இக்கவிதையின் வாயிலாக உணரலாம். கடுமையான உழைப்பின் காரணமாக பெண்களுக்கு ஏற்படும் நிலைமையைப் புரிந்துகொண்ட கவிஞர், எப்போதும் பெண்களெனில் இளக்காரம் ஆண்களுக்கு' இதில் மதிக்கப்படவில்லை. இரண்டாந்தர குடிமக்களாக நடத்தியும் வருகிறார்கள் என்பதைக் குறிப்பிடுகிறார்.

ஆண்களில் ஒரு சிலருக்கு மட்டுமே பெண்களின் நிலைமையைப் புரிந்துகொண்டு“அவர்களும் சமூகத்தின் அங்கத்தினர்களே டாக்டர் காட்டுங்களடா” என்ற வரியின் மூலம் தனது தந்தையின் குரலை கவிஞர் ஒலிக்கிறார்.

பிறர்நலம் பேணுதல்

தனக்காக வாழாமல் பிறருக்காக வாழும் தன்மை உடையவர்கள் பெண்கள் என்பதற்கு எடுத்துக்காட்ட கீழ்க்காணும் கவிதையைக் கூறலாம். தன் வீடு தன் பெண்டு, தன் சுற்றம் என்ற வாழும் நாட்டில் பிறருக்காக வாழ வேண்டும் என்ற உயரிய சிந்தனையை உளமாறக் கூறுகிறார் கவிஞர். தனக்குப் பிடிக்கவில்லையானலும் தன் குழந்தைகளுக்கும் கணவனுக்கும் சமைத்துப்போடும் தாய்மார்கள் குணநலன்களைக் கவிதை எடுத்துக்காட்டுகிறது.

'நேசிப்புக்கு எடுத்த ஜென்மம்
கறி தின்னும் அப்பாவுக்குக்
கை கூசாமல் சமைத்தளிக்கும்
கடும் சைவக்காரி'

கணவன் அசைவப்பிரியர் என்பதால் தான் கடைபிடிக்கும் சைவப் பழக்கத்தைக் கூட மறைத்துக் கொண்டு சமைத்துப் போடும் பாங்கு சிறந்தது. இது தாய்மைக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் சிறந்த பெண் ஆவார்.

**நேசிப்பு**

“தன்னைப் போல பிறரையும் நேசி” என்பது விவிலியக் கூற்றாகும். தன் உடம்மையும் தன் உள்ளத்தையும் எவ்வாறு நேசிக்கிறேன அதைப்போலவே பிற உயிர்களையும் நேசிக்க வேண்டும் என்பதை சமூக உணர்வாகக் கொள்ளலாம். உடம்புக்கு அமுதனையோ உயிருக்கு அமுதனையோ” என்ற வரியின் அடிப்படையில் உயிருக்கு அமுதாய் என்றால் அந்த உயிர் பிற உயிர்களிடம் அடைக்கப்பட்டிருக்கும் உடம்பை நீதான் தீயிட்டு அழித்தாய் என்று பழம்பாடல் கூறுகின்றது.

**மனிதர்கள் பிற உயிர்களிடம் நேசிப்பு**

'நேசிப்பு நேசிப்பு
புருசனைப் போலவே
புண்ணியத்தையும்
குழந்தைகளைப் போலவே
எருமைகளையும்
உறவுகளைப் போலவே
அக்கம்பக்கத்தையும்

ஆறறிவுடைய மனித உயிர்களை நேசிப்பதைப் போலவே விவசாயத்தையும், தன் குழந்தைகளைப் போலவே ஆடுமாடுகளையும் நெருங்கிய உறவினர்களைப் போலவே உறவினர் அல்லாதவர்களை மனித நேயத்தோடு பார்க்க வேண்டும் என்ற எண்ணத்தை அம்மாவின் வாயிலாகப் பிறருக்கு உரைக்கின்றார் கவிஞர்.

**கோபம்**

'ஆலமரத்தின் அடியிருக்கும் வண்டே ஒருவாத்த பொறுத்தால் ஏன்வருது சண்டே" என்ற முதுமொழிக்கு ஏற்ப நமது தாய்மார்கள் கோபத்தை கட்டுப்படுத்திக் கொள்ளும் சிறந்த பண்புடையவர்களாக விளங்குகின்றனர். ஒருவர் கோபத்தோடு பேசும்பொழுது தனது பொன்மொழியாலும் புன்சிரிப்பாலும் அம்மனநிலையை மாற்றும் பக்குவம் உடையவர்கள் பெண்கள்.

'ஊரையே தூக்கும்
அப்பாவின் கோபத்தை
ஒற்றைப் பார்வையால்
செதுக்கி ஊமையாக்குவாள்

தாய்மார்கள் கடுமையான கோபக்காரையும் ஓரப்பார்வையால் அல்லது மௌனமொழியால் ஒன்றும் இல்லாது செய்து விடும் ஆற்றல் கொண்டவர்கள் பெண்கள் என்பதை இக்கவிதை வரி எடுத்துரைக்கிறது.

**மரியாதை**

'உயர்வுக்கு வித்தாகும் நல்லொழுக்கம் என்பதைப் பேசு அனைவரிடமும் மனிதநேயத்தோடும் மரியாதையோடும் நடந்தால் போற்றும். அன்பாய் அறிவாய் பணிவாய் நடந்தால் உலகமே உன்னை வணங்கும் என்ற வரிகளுக்கு ஏற்ப தாய்மார்களுக்கே உரிய பண்புநலன்களை கவிஞர் தாயின் ஊடாக மக்களுக்கு எடுத்துக்காட்டி கருத்து சிறப்பாக உள்ளது எனலாம்.

'எழுபது வயதிலும்
மூத்தவரைக் கண்டால்
தலைகுனிந்து நிலம் கீறும்
அம்மா ஓர் அதிசயம்
மட்டு மரியாதையும்
கொட்டிய களஞ்சியும்"

மனிதர்களுக்கு பணிவும், துணிவும், ஒழுக்கம் என்ற அணிகலன்களாய் திகழும் என்ற உண்மை மேற்குறிப்பிட்ட கவிதையின் மூலம் வெளிப்படுகிறது. அன்பாய் இரு அடிமையாகிவிடாதே என்ற கருத்தையும் இங்கே குறிப்பிட்டாக வேண்டும். மூத்தோர்களுக்குப் பண்பு வேண்டும் என்ற கருத்தை ஏற்றுக் கொண்டாலும் அடக்கி ஒடுக்கும்போது எதிர்ப்பையும் தெரிவிக்க வேண்டும் என்பது நல்ல நடத்தை என்பதை அறிஞர்களின் கருத்துக்களில் வெளிப்படுகின்றன எனலாம்.

**முடிவுரை**

பெண்களைப் பாராட்டிப் பேசுவதும், புகழ்வதும் வெறும் வாய்ச்சொல்லாகவே இருந்து வருகிறது. நாட்டுப்புற இலக்கியமான தாலாட்டில் விவாகரத்திற்குச் செல்ல வேண்டிய காரணம் என்பதை அறியமுடிகிறது. பெண்களுக்கு மட்டுமே அதிகப்பணிச்சுமை உள்ளது. தன்னலம் கருதாது பிறர்நலம் பேணுதல் போன்றவற்றை கவிதையில்

காணமுடிகின்றது. எத்தொழிலையும் நேசித்துச் செய்ய வேண்டும் என்பதையும் கூறுகின்றது. கோபம் மரியாதை போன்ற குணாதிசயங்கள் கொண்டவர்கள் என்று பெண்களின் பண்புநலன்களை எடுத்துரைக்கப்படுகிறது.

**துணைமை நூல்கள் :**

1. சிற்பி, கிராமத்து நதி, புதுமைப் பதிப்பகம், சென்னை.
2. https://www.youtube.com/watch?v=PGYgPw3evec
3. https://keetru.com/index.php/2014-03-08-04-35-27/2014-03-08-12-20-13/24940-2013-09-16-06-53-22



MUTHTHARASI – Art Literary Culture Tamil Journal
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
SPL-EDITION – IV VOLUME - 1
மார்ச்சு-2025 E-ISSN: 2584 - 1238

# 31. அனுபூதி நூலில் அருளாளன் முருகன்

**க.ராஜா,**
உதவிப் பேராசிரியர்,முதுகலைத் தமிழ்த்துறை,
வி.இ.நா.செ.நா.கல்லூரி (தன்னாட்சி),விருதுநகர்.
DOI 10.5281/zenodo.15067468.

**Abstract :**

The root of the essence of humanity is the mind. Religion can be called the religion that emerged to remove the hardness of this mind and to cook and mature the mind. The religion of devotion, which believed that all humans are equal and that God is common to all, emerged in ancient times and grew and reached a high level during the Pallava period. From that time on, the Lord and Lord Shiva were worshipped as the supreme god of Hindu religion. Many centuries before this (during the Tolkappiya period), the worship of Lord Muruga, which had spread as the worship of Seyon, was revived by Arunagirinathar in the Middle Ages and reached a very high level. During his lifetime, Arunagirinathar made the worship of Lord Muruga the main one and made Muruga the supreme god and wrote many books. Among them, it is considered a storehouse of philosophy. This article aims to explore and discuss the merits of Lord Murugan's grace as revealed through the Anubhuti book, and the devotional dignity of humanity that arises from receiving that grace.

**Key Words :** Worship - anuboothi - Arunagirinathar

## முன்னுரை

மனிதம் என்னும் பொருண்மைக்கு வேர்சொல்லாக விளங்குவது மனம். இந்த மனத்தின் கடினத் தன்மையை நீக்கி மனதை சமைத்துப் பக்குவப்படுத்த தோன்றிய நெறியே சமயம் எனலாம். மனிதர் அனைவரும் சமம், இறைவன் அனைவருக்கும் பொதுவானவன் என்னும் முறையினை பக்தியை நெறி, பழங்காலத்திலேயே தோன்றி பல்லவர் காலத்தில் வளர்ந்து உயர்ந்த நிலையை அடைந்து அக்காலம் தொட்டு இந்துச் சமய முழுமுதற் கடவுளராக திருமாலும், சிவபெருமாலும் போற்றப்பட்டனர். இதற்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்பே (தொல்காப்பியக் காலத்தில்) சேயோன் வழிபாடு என்று முகிழ்ந்தது பரவியிருந்த முருகப் பெருமான் வழிபாடு பின்னர் இடைக்காலத்தில் அருணகிரிநாதரால் புத்துயிர் அடைந்து மிக உயரிய நிலையை எய்தியது, அருணகிரியார் அவர் வாழ்ந்த காலத்தில் முருக வழிபாட்டை, முதன்மையாக்கி முருகனை முழுமுதற் கடவுளாக்கி பல நூல்களை அருளிச் செய்தார். அவற்றுள் தத்துவக் களஞ்சியமாக விளங்கும். அனுபூதி நூல் வழி வெளிப்படும் முருகனின் அருள் கொடைச் சிறப்பையும், அவ்வருள் பெற்று உய்யும் மனித குலத்தின் பக்தி மாண்பையும் ஆராய்ந்து உரைப்பதாய் இக்கட்டுரை அமைகிறது.

## அனுபூதி நூலும் அருளாளன் முருகனும்

முருக நாயனார் என்று அடியார்களால் அன்போடு அழைக்கப்படுபவர் அருணகிரிநாதர். இவர் திருப்புகழ் கந்தர் அந்தாதி, வேல் விருத்தம், மயில் விருத்தம், கந்தர் அலங்காரம் என பல நூல்கள் இயற்றி இருந்தாலும் அவர் பெற்ற மெய்யுணர்வின் அடிப்படையில் முருக பெருமானின் அருளை விதந்து கூறி பாடிய ‘கந்தர் அனுபூதி என்னும் நூல் மிகவும் புகழ் பெற்ற நூலாக காணப்படுகிறது. இந்நூலில் 51 பாடல்கள் உள்ளன. இந்நூலில் 51 பாடல்கள் உள்ளன. இந்நூல் முழுமையும் மனதால் மட்டுமே

உணர்ந்து என்னுதற்க்குரிய மெய்யுணர்வு நிலை பற்றி குறிப்பிடப்பட்டுள்ளதால் இந்நூலை தத்துவக் களஞ்சியம் என்று கூறலாம்.

அனுபூதி என்னும் சொல்லுக்கு நேரடி அனுபவம். (சொந்த அனுபவம்) என்பது பொருள். இதை மெய்யுணர்வு என்றும் குறிக்கலாம்.

பிறபென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு (1)

என்பதற்காக குறள் காட்டும் மெய்யுணர்வை பதிவு செய்யும் இந்நூலில், பெரும்பாலும் முருக பெருமான் அருளாளன் என்றே வர்ணிக்கப்படுகிறான். சான்றாக,

'கின்னங் களையும் கருபைசூழ் சாரே"

கந்தர் அனுபூதி பாடல் எண். 49

என்ற பாடலும்,

'கந்தர் முருகா கருணா கரனே"

கந்தர் அனுபூதி பாடல் எண். 33

என்ற பாடலும்,

'கங்கா நதி பால கருபா கரனே"

கந்தர் அனுபூதி பாடல் எண். 44

என்ற பாடலும் முருகனை அருளாளன் என்றே பதிவு செய்கிறது. அருள் என்பது 'தொடர்பு இல்லார் மாட்ட தோன்றும் மனவுணர்வு என்று பழந்தமிழ் இலக்கண நூல்கள் பதிவு செய்கின்றன. மனித குலம் பாசம் என்னும் பற்றாலும், ஆணவத்தாலும் இறைவனோடு தொடர்பு இல்லாதது இருந்தாலும் இறைவன் (முருகன்) தன் அருற்க்கொடையால் மனிதரையும் இறைத்தன்மை உடையவர்களாய் மாற்றுகிறான் என்பதை இந்நூல் முழுமையும் தக்க சான்றுகளுடன் காண முடியும்.

**அறிவும் அவனே ஆசானும் அவனே**

மனித குலம் பக்தி நெறிக்கு உட்பட்டு உயர் சமய அறங்களை பின்பற்றும் போது தன் அடி முதல் நுனி வரை அனைத்து அக மற்றும் புற உணர்வுகளும் இறைவனே ஆவான் என்று என்னுவதும் அதே வெளிப்படுத்துவதும் மிகு பக்தி நிலையின் இயல்பாகும்.

முருகனின் அருளை பெற்று சமய வாழ்வில் உயர்நதோங்கிய அருணகிரியாரும் தன் வாழ்வின் அனைத்து கூறாகவும் முருகனே விளங்குகிறான் என்று எண்ணுகிறார் எண்ணியவாறே பதிவு செய்கிறார் சான்றாக்

'கரவாகிய கல்வி யுளார் கடைவசன்
நிவரா வகை மெய்ப் பொருள் குவையோ
சிரவா சிவயோக தயா பரனே"

கந்தர் அனுபூதி பாடல் எண். 45

என்ற பாடலில் கல்வி மறுக்கும் மனிதரிடையே தானே வந்து, உவந்து கல்வி அளிக்கும் அருளாளன் முருகன் என்று எடுத்துரைக்கிறார். இதன் வழி மெய்யறிவாக விளங்குபவனும் முருகனே தன் அருள் குணத்தின் காரணமாக மனிதனுக்கு மெய் ஆசானாகவும் விளங்குகிறான் என்பதை உய்த்துணர முடிகிறது. மேலும்,

'யாமோதிய கல்வியு மெய் மறிவுந்
தாமே பெற வேலவர் தந்தனாற்"
கந்தர் அனுபூதி பாடல் எண். 17

என்ற பாடலும் முருகன் அறிவின் முதல்வனாகி நின்ற போதும், அடியார்க்கு ஆசானாக விளங்கும் அருற்குணத்தைச் சாட்டுகிறது.

'அறிவானும் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்றான் தானே - அறிகின்ற
மெய்ப்பொருளும் ......................" (2)

என்ற காரைக்கால் அம்மையார் கற்றும் இங்கு கருத்து ஒப்புமை கருதி எடுத்துக்கூற தக்கதாகும்.

**அனைத்துமான அருளாளன்**

பக்தி நெறியின் அடிப்படையில் பார்த்தால் இவ்வுலகின் படைப்பிற்கும், இயக்கத்திற்கும் காரணம் இறைவனே ஆவான். இக்கருத்தாக்கத்தை பக்தி நிலை மேலோங்கிய போது உலகத்தை படைததவன் இறைவன் என்று கூறாமல், உலகத்தின் அனைத்துமாய் ஆனவன் இறைவன் என்று அனைத்தையும் இறைவனாய் பார்க்கும் மரவு உருவாகி நிலைபெற்று விட்டது.

'உலகம் யாவையும் தாம் உளவாக்கலும்
நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா" (5)

என்ற கம்பரின் கூற்றிலிருந்து இறைவனை அனைத்துமாய் பார்க்கும் மரபின் நிலைப்பாட்டை அறிந்து கொள்ள முடியும்.

அருணகிரியாரும் இவ்வனுபூதி நூலில் முருக பெருமானை அனைத்துமாய் நின்ற அருளாளனாக காண்கிறார் இதனை,

'உருவா யருவா யுளதா யிலதாய்
மருவாய் மலராய் மணியா யொளியாய்
க்கருவா யுயிராய்க் கதியாய்
விதியாய்க் குருவாய் வருவாயருள்வாய் குகனே"
கந்தர் அனுபூதி பாடல் எண் 51

என்ற பாடலின் வழி அறிய முடிகிறது. அருணகிரியார் முருகனை ஆறுமுகமும் பன்னிருதோளும் கொண்ட சகல வடிவாயும், குணம், குறி, நாமம் அற்ற அகலமாயும் உண்டு என்பவருக்கும் உள் பொருளாகவும், இல்லை என்பாருக்கு இல் பொருளாகவும், மலராகவும், அம் மலரின் மணமாகவும், மாணிக்கமாகவும், அதன் ஒளியாயும், சகல ஜீவன்களுக்கும் உயிருக்கு உயிராகவும் ஆன்மாகவாகவும் திகழ்பவனும், அந்த உயிர்களின் வினைப் பயனாகவும், முத்தி நிலையில் அந்த உயிர்கள் சென்றடையும் நிலையாகவும் உள்ள முருகக் கடவுளே என் குருவாக வந்து ஆட்கொண்டவன் என்பதாக பேரருட்செல்வனாக நோக்கும் நிலை இங்கு புலனாகிறது.

'வானாகி மண்ணாகி வளிஆகி ஒளிஆகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய் " (4)

என்ற மாணிக்கவாசகரின் கருத்து, மேற்கூறிய அருணகிரியாரின் கருத்துக்கு வலிமை சேர்ப்பதாய் அமைகிறது.

**அருளாளன் முருகனின் அருட்கொடை**

பக்திமை நெறியின் உச்சநிலையாய் கருதப்படுவது மெய்யுணர்வு நிலையாகும். இந்நிலை நான் என்னும் நிலை முற்றிலுமாக ஒழியபெற்று பிறப்பென்றும் பந்தம் அறுபட்டதாய் ஒருவர் உணரும் நிலை என்று விளக்கிக் கூறலாம்.

அருணகிரியார் தான் தன் உணர்வு நீங்கி மெய்யுணர்வு அடைந்த நிலையை,

'நேசா முருகா நினதன் பருளால்
ஆசா நிகளந் துகளாயின் பின்
பேசா அனுபூதி பிறந்ததுவே"

கந்தர் அனுபூதி பாடல் எண் 43

என்ற பாடல் வழி கூறிப்பிடுகிறார். அதாவது முருகப் பெருமானே, நீ காட்டிய அன்புடன் கூடிய அருளினால், ஆசையாகிய விலங்கு, தூள் தூளாக பொடியான பின் மௌன நிலையுடன் கூடிய அனுபூதி நிலை எனக்குக் கிடைத்தது, என்ற அருணகிரியாரின் நேரடி அனுபவத்தின் வழி முருகனை மிகச் சிறந்த அருட்கொடையாளனாக வெளிப்படுத்துகிறார்.

மேலும் இவர் மற்றொரு பாடலில் இறைவனின் அருட்கொடையால் கொடுத்த மெய்யுணர்வை,

'செறிவந்றுலகோடுரை சிந்தையுமற்
றறிவற் றறியா மையு மற்றதுவே"

கந்தர் அனுபூதி பாடல் எண் 42

என்பதாக நுட்பமாக வெளிப்படுத்தக் காணலாம். முருக பெருமான் நேரடியாகவே அருணகிரியாருக்கு மெய்யுணர்வை அருளி செய்கிறார். அவ்வாறு வேலை உடைய கடவுள் மௌன குருவாய் வந்து உள் நின்று உணர்த்திய உடனே, உலகத்தாரோடு நெருங்கும் உறவு நீங்கி, வாக்கும் அற்று, நினைவும் அற்று, சுட்டி அறிகின்ற அறிவும் அற்று, அறியாமையும் முற்றிலும் நீங்கிவிட்டன என்னும் பொருண்மை வழி இறையருளால் கிடைத்த மெய்யுணர்வை தத்துவார்த்த நிலையில் அணிந்து கொள்ள முடிகிறது.

'முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்,
மூர்த்தி அவன் இருக்கும் வண்ணம் கேட்டாள் ;
தன்னை மறந்தாய் தன் நாமம் கெட்டாள்
தலைப்பட்டான் நங்கை தலைவன் தாளே !

என்ற நாவுக்கரசரின் அகத்துஐற பாடல் மேற்கூறிய அருணகிரியாரின் மெய்யுணர்வின் நிலையோடு ஒருங்கு வைத்து என்னர்க்குரியது.

**பிரிதல் அறியா பேரருளாளன்:**

அடியார்களுக்கு முப்பொழுதும் அருள்பாலிக்கும் முருகனை, தலைவனாகவும், இறைவனாகவும் மட்டும் பாவிக்காமல் அருளாளனாகவும் காதன்மை பொருந்திய உறவோனாகவும் பார்க்கும் மரபு ஆன்மீக அடியார்களால் பெரிதும் விரும்பபட்டது. மனித வாழ்க்கையின் இருநிலை இல்லறம் மற்றும் துறவறம் ஆகும். இல்லறத்தில் காதல்

சுற்றத்தைப் பற்றி பிரியாமல் இருப்பதும் அதற்கு துறவறத்தில் பற்றற்ற இறைவனை பற்றி பிரியாமல் இருப்பதும் இன்றியமையாதவையாக இறைவனுக்கும்

பக்தி இலக்கியங்களில் இறைவனுக்கும் அடியாருக்கும் உள்ள உறவை காதன்மை சிறப்பாக புனைத்து உரைப்பது மிகச்சிறந்த இலக்கிய மரபாக கொள்ளப்பட்டது சான்றாக அருணகிரியாரின் ;

'அறிவொன் றற்றின் றறிவா ரறிவிற்
பிறிவொன் றறறின் றபிரா னலையோ"
கந்தர் அனுபூதி பாடல் எண் - 48.

என்ற பாடலைக் குறிப்பிடலாம். உலக பற்றை ஒழித்து முருகனே சரண் என்று அவன் திருவடியை அடைந்தவர்களின் சிந்தையில் இருந்து முருக பெருமான் எப்போதும் பிரிதலை அறியாதவன். அடியார் சிந்தையில் இரண்டற கலந்திருப்பவன் என்றும் பொருண்மையை வெளிப்படுத்தும் மேற்க்கறிய பாடலின் வழி முருகப்பெருமானை சிறந்த காதலனாகவும் பிரிவறியா பேரருளாளனவும் அருணகிரியார் கண்டு, துய்த்த வெளிப்படுத்தி இருப்பதைக் காண முடிகிறது.

பழந்தமிழ் இலக்கியமான நற்றிணையில் அக வாழ்வின் ஆழத்தை விளக்குவதற்காக இயற்றப்பட்ட

'என்றும் என் தோள் பிரிவு அறியவரே" (6)

என்ற பாடல் மேற்கூறிய பக்திமை காதல் பாடலோடு ஒருங்கு வைத்து எண்ணி இன்புறத்தக்கதாகும்.

**முடிவுரை**

மனிதனின் இம்மை வாழ்வை செம்மை செய்து மறுமை வாழ்வுக்கு வாயிலாய் அமைவது உயர் சமய அறங்கள். இவ்வறங்களை முறையாக பின்பற்றி ஒழுகி இறைவனின் திருவடியை நானும் போது இறையருள் மனிதர்களுக்கு முழுமையாய் கிடைக்கும் என்பதை முருகப்பெருமானை கடவுளாக வழிபட்டு உயர்த்தும் கந்தர் அனுபூதி நூல் எடுத்துரைக்கிறது.

முருகன்பால் உள் அன்பு வைத்து உலக பற்றை ஒழித்ோருக்கும் நெறி நின்று இல்வாழ்க்கை வாழ்வோருக்கும் முருகனின் அருள் வேண்டியபோதெல்லாம் கிடைக்கும் என்பதையும் முருகனும் தம் அடியார்காக பேரருளாளகாக பற்றருக்கும் தலைவனாக பிரிவறியாத உறவோனாக வெளிப்பட்டு அடியாரை ஆட்கொள்வதில் பெரு விருப்பம் உடையவன் என்பதையும் இக்கட்டுரை தெளிவாக எடுத்துரைக்கிறது.

**அடிக்குறிப்பு:**

1. திருக்குறள், மெய்யுணர்தல் -குறள் - 358
2. காரைக்கால் அம்மையார் அற்புதத் திருவந்தாதி பாடல் எண் - 20.
3. கம்பராமாயணம் பாயிரம் பாடல் எண் -1.
4. மாணிக்கவாசகர் திருவாசகம், திருச்சதகம் பாடல் எண் -19.
5. திருநாவுக்கரசர் தேவாரம் திருஆரூர் திருத்தாண்டகம் பாடல் எண் - 258
6. நற்றிணை பாடல் எண் -1.

# 32. சங்க இலக்கியங்கள் காட்டும் தமிழர்கள் உணவு முறை

Dr. **Jaya Prema Parvathi**,
M.A (Tamil)., M.A (Journalism)., M.Phil., Ph.D., B.F.A (Dance) Founder & Managing Director Narthaki Yazh Academy Chettikulam, Tirunelveli.
Cell.8903933646 - Suruthicharan@gmail.com
DOI 10.5281/zenodo.15076590.

**Abstract:**

**The traditional diets of a society can be found widely in Sangam literature. All the food items needed by humans to survive are gifts given by nature. A man without clothes is half a man, but a man without food becomes an inanimate object. The basic needs of humans are food, clothing, and shelter. In this, it is possible to live as a nomad without clothing and shelter. It is impossible to survive without food, which is considered the primary source of income. The primary occupation of primitive man was to wander in search of food. In this article, Sangam lodging. In this article, it is the purpose of Sangam literature to explain how rich the food, hospitality, and culture of the Tamils were through many sources.**

**Key Words : Traditional Food - Sangam literature - Shelter**

## முன்னுரை

உலகில் தோன்றிய முதல் இனம் தமிழ் இனத்தின் தனிப்பெரும் சிறப்பு பண்பாடாகும். அந்தப் பண்பாட்டில் முதன்மை இடம் பெற்று விளங்குவது உணவு மற்றும் விருந்தோம்பல்; பண்பாடு என்ற சொல்லுக்குப் பண்படுத்துதல் அல்லது பக்குவப்படுத்துதல் என்பது பொருளாகும் மனிதனை மனிதனாகப் பக்குவப்படுத்துவது பண்பாடு ஆகும் அந்தப் பண்பாட்டில் முதன்மையிடம் பிடிப்பது உணவு மற்றும் விருந்தோம்பல் பண்பு கலித்தொகையில் நல்லந்துவனார் “பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகுதல்“ என்று குறிப்பிட்டுள்ளார். மனிதன் உணவு உடை உறைவிடம் விருந்தோம்பல் இல்லற வாழ்க்கை பொதுவாழ்க்கை என அனைத்திலும் அனைவரிடத்திலும் அன்பாக நடந்து கொள்வதே பண்பாடாகும். அந்தப் பண்பாட்டுடன் ஒரு அங்கமாக விளங்குவது உணவு மற்றும் விருந்தோம்பல் பண்பு பண்பாட்டின் பெட்டகமாக காலக் கண்ணாடியாக விளங்குகின்ற இலக்கியங்கள் அந்த இலக்கியங்களை படைத்த படைப்பாளர்கள் (புலவர்கள்) அவர்கள் காலத்தில் வாழ்ந்த மக்களின் வாழ்வியலை அப்படியே பிரதிபலிக்குமாறு தனது இலக்கியங்களை படைத்துள்ளார்கள் மனிதனின் உணவு முறைகளுக்கும் பண்பாட்டிற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு, பண்பாடும் உணவு முறைகளும் ஒரு தனி மனிதநேயம் சார்ந்துள்ளது. பண்பட்ட ஒரு சமுதாயத்தின் பாரம்பரிய உணவுமுறைகள் சங்க இலக்கியங்களில் பரவலாக காண முடிகின்றது மனிதர்கள் உயிர் வாழ்வதற்கு வேண்டிய அத்தனை உணவுப் பொருள்களும் இயற்கை தருகின்ற நன்கொடையை ஆகும் ஆடை இல்லாத மனிதன் அரை மனிதன்தான் ஆனால் உணவு இல்லாத மனிதன் உயிரற்ற பொருளாகிறான் மனிதர்களின் அடிப்படைத் தேவைகளில் உணவு, உடை,உறைவிடம் இதில் உடை உறைவிடம் இல்லாமல் நாடோடியாய் வாழ்ந்திடலாம் முதன்மை ஆதாரமாக வைத்து கருதப்படும் உணவு இல்லாமல் உயிர் வாழ இயலாது ஆதி மனிதன் முதன்மை தொழிலாக இருந்தது உணவு தேடி அலைவதே ஆகும் இக்கட்டுரையில் சங்க உறைவிடம் இதில் உடை உறைவிடம் இல்லாமல் நாடோடியாய் வாழ்ந்திடலாம் முதன்மை ஆதாரமாக

வைத்து கருதப்படும் உணவு இல்லாமல் உயிர் வாழ இயலாது ஆதிமனிதன் முதன்மை தொழிலாக இருந்தது உணவு தேடி அலைவதே ஆகும் இக்கட்டுரையில் சங்க இலக்கியங்கள் வழியாக தமிழர்களின் உணவு முறைவிருந்தோம்பல் பண்பு பண்பாடு எத்தனை செழிப்புற்று இருந்தது என்பதனை ஆதாரங்கள் பலகொண்டு விளக்குவதே நோக்கமாக அமைந்துள்ளது.

உபசாரித்து விருந்து பேணுவதற்கேயாகும். இவ்வாறு விருந்தோம்பதும் விழாக்களும் மக்களை ஒன்றிணைக்கும் ஆக்க சக்திகளாக விளக்குகின்றன இத்தகைய விருந்துகளிலும், விழாக்களிலும் தமிழ் மக்கள் எத்தகைய பாரம்பரிய உணவு வகைகளை உண்டு மகிழ்ந்தனர் என்பதை விளக்குவதே இக்கோயில் நோக்கமாகும்.

**விருந்தோம்பல்**

தமிழர்களின் தலையாயப் பண்பாடுகளில் ஒன்று விருந்தோம்பல் ஆகும். தொல்காப்பியர் விருந்தினைப் பற்றிக் குறிப்பிடும் போது.

“விருந்து தானே
புதுவது கிளந்த யாப்பின் மேற்றே”

என்று கூறுவார். விருந்து என்பது உறவினர்களுக்குக் கொடுப்பது மட்டுமல்லாமல் அறிந்தவர், அறியாதவர், தங்கள் இல்லம் தேடி வந்தவர்கள், வழிப்போக்கர்கள் ஆகிய அனைவருக்கும் இன்முகத்தோடு சிறந்த உணவினை அளிப்பதாகும். விருந்தோம்பல் பண்பினை அரசர்கள் முதல் சாதாரண குடிமக்கள் வரை அனைத்துத் தரப்பு மக்களும் மேற்கொண்டனர் பழந்தமிழ் இலக்கியங்களில் குறிப்பிடுகின்றன.

பொருநராற்றுபடை என்ற ஆற்றுப்படை இலக்கியம் கரிகால் பெருவளத்தான் என்று சோழ மன்னனின் விருந்தோம்பல் பண்பினை எடுத்துரைக்கிறது. அம்மன்னன் தன்னை நாடி வந்த பொருநர்களும் புலால் உணவை அவர்கள் வேண்டிய அளவு கொடுத்தான் என்பதனை.

“துராஅய்துற்றியதுருவைஅம்புழுக்கின்
பராஅரைவேவைபருகுஎனத்தண்டி
காழின்சுட்டகோழ்ஊன்கொழுங்குறை
ஊழின்ஊழின்வாய்வெய்துஒற்றி"

என்ற பாடலடிகள் இதனை உணர்த்துகின்றன. மேலும் அவர்கள் ஓயாது புலால் உணவு உண்டு. அசைவ உணவு வேண்டாம் என்ற போது சைவ உணவையும் வழங்கினான் என்ற செய்தியை,

“முரவை போகிய முரியா அரிசி
விரலென நிமிர்ந்த நிரலமை புழுக்கல்
பரல்வறைக் கருணைக் காடியின் மிதப்ப”

என்ற பாடல் வரிகள் குறிப்பிடுகின்றன.

மலைவாழ் மக்கள் தினையால் செய்யப்பட்ட இனிப்புப் பொருளை விருந்தினர்களுக்குக் கொடுத்தனர். இக்குறிப்பு பதிற்றுப்பத்து என்ற நூலில் காணப்படுகிறது. தினைமாவானது ‘நுவணை’ என்று அழைக்கப்பட்டது இடித்து நுண்ணிதாக்கப்பட்ட மாவினால் ஆனப் பொருள் என்பதால் ‘மென்றினை நுவணை என்று அழைக்கப்பட்டது’. இதனைக்

"கான்மிகு குளவிய வன்புசேர் இருக்கை

மென்றினை நுவணை முறைமுறை பகுக்கும்"

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

குறிஞ்சி நில மக்கள் தினை அரிசியில் மரையான் என்னும் காட்டுப் பசுக்களின் பாலைக் கறந்து ஊற்றி மான் கறியை அதில் கலந்து புன்கம் என்று சொல்லப்படுகின்ற பொங்கலைச் சமைப்பர். அதனைத் தங்கள் வீட்டிற்கு வரும் விருந்தினர்க் கெல்லாம் வாழை இலையில் வைத்துப் பங்கிட்டுக் கொடுப்பார்கள் என்ற கருத்தினை,

"மரையான் கறந்து நுரைகொள் தீர்ப்பால்

மான்தடி புழுக்கிய புலவுநாறு குழிசி

வான்கேழ் இரும்புடை கழாஅது, ஏற்றிச்

சாந்த விறகின் உவித்த புன்கம்,

கூதளங் கவினிய குளவி மூன்றில்

செழுங்கோள் வாழை அகல் இலைப் பகுக்கும்"

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

**இன்புளி வெஞ்சோறு**

விருந்தோம்பலின் போது 'இன்புளி வெஞ்சோறு' என்ற உணவு வகை பரிமாறப்பட்டதை அகநானூறு, சிறுபாணாற்றுப்படை போன்ற நூல்கள் எடுத்துரைக்கின்றன. அகநானூற்றுப் பாடலில் முல்லை நிலத்தைச் சேர்ந்த தோழி தலைவனைத் தங்கள் வீட்டிற்கு விருந்திற்கு அழைக்கிறாள். களாப்பழம் புளித்து இனிக்கிறது. விளாம்பழம் பழுத்துள்ளது. சிறிய தலையை உடைய செம்மறி ஆட்டு பால் பழுப்பு நிறம் ஏறி தயிராக விளைந்துள்ளது.

இதமானப் புனத்தில் விளைந்த வரகரிசி அவலில் கார்காலத்தில் புற்றிலிருந்து பறக்கும் ஈசலைப் பிடித்துப் போட்டு சமைத்த இன்புளி வெஞ்சோறு இருக்கிறது. பசுமாட்டு வெண்ணெயும் இருக்கிறது. அதனை உருக்கிய நெய்யும் உள்ளது. அதனை இளையர் உண்ணலாம் என்று கூறித் தலைவனை விருந்திற்கு அழைக்கின்றாள். இதனை,

"சிறுதலைத் துருவின் பழுப்பு உறு விளைதலின்

இதைப்புன வரகின் அவைப்பமாண் அரிசியொடு

கார்வாய்ந்து ஒழிந்த ஈர்வாய்ப் புற்றத்து"

ஈயல் பெய்து அட்ட 'இன்புளி வெஞ்சோறு' (அகம் 394 2-5) என்ற பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

இதிலிருந்து பழங்காலத்தில் 'இன்புளி வெஞ்சோறு' என்ற உணவு வகை விருந்தின் போது பரிமாறப்பட்டது என்பதை உணர முடிகின்றது.

சிறுபாணாற்றுப்படையும் இன்புளி வெஞ்சோறு பற்றிக் குறிப்பிடுகின்றது. எயினார் குலப்பெண்களான எயிற்றியர் இனிய புளிக்கறி சேர்த்துச் சமைத்த உணவினைக் காட்டுப்பசுவின் இறைச்சியோடு சேர்த்து விருந்தினர்களுக்கு உண்ணத் தருவர் என்ற கருத்தினை,

"எயிற்றியர் அட்ட இன்புளி வெஞ்சோறு

தேமா மேனிச் சில்வளை ஆயமொடு

ஆமான் நாட்டின் அமைவரப் பெறுகுவீர்"

என்ற பாடல் வரிகள் குறிப்பிடுகின்றன.

**ஊன் துவை அடிசில்**

பழங்காலத்தில் 'ஊன்துவை அடிசில்' என்ற உணவு வகை விருந்தினர்களுக்குப் படைக்கப்பட்டது. ஊன் துவை அடிசில் என்ற சொல்லானது தற்போது பிரியாணி என்று சொல்லப்படுகின்ற உணவு வகையைக் குறிக்கும் சொல்லாகும்.

பதிற்றுப்பத்து 'ஊன்துவை அடிசில்' என்ற உணவு வகை பற்றிக் குறிப்பிடுகிறது. பரணர் போர்க்களத்தில் வெற்றி பெற்ற வீரர்களுக்கு இவ்வளவு பரிமாறப்பட்ட செய்தியினை,

"சோறு சோறு என்னா ஊன்துவை அடிசில்
ஓடாப் பீடர் உள்வழி இறுத்து"

என்று குறிப்பிடுகின்றனர். சேரன் செங்குட்டுவன் தன் வீரர்களுக்கு விருந்தளிக்க போது வழங்கிய ஊன்துவை அடிசிலானது சோறு வேறாகவும், இறைச்சி வேறாகவும் பிரித்தறிய முடியாத அளவிற்குக் கலந்து காணப்பட்டது என்று பெருமையுற எடுத்துரைக்கிறார்.

சேரமன்னன் செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் புகழ்ந்துரைக்கும் பாடலிலும் 'ஊன்துவை அடிசில்' பற்றிய குறிப்பு உள்ளது. கபிலர் இவ்வுணவானது விருப்பத்திற்குரிய உணவாக உள்ளது என்று குறிப்பிடுகின்றனர்.

"புலவு நாற்றத்த பைந்தடி
பூ நாற்றக்த புகைக் கொளீஇ ஊன்துவை
கறிசோறு உண்டு விருந்து தொழில் அல்லது
பிறிது தொழில் அறியா ஆகலின்

என்று தனது கைகள் ஊன் துவைக் கறிச்சோறை உண்ணுவதைத் தவிர வேறு எந்தத் தொழிலையும் செய்வதில்லை. அதனால் தனது கைகள் மிகவும் மென்மைத்தன்மை வாய்ந்தனவாக உள்ளன என்று பெருமையுடன் கூறுகின்றனார்.

கபிலர் பாரி இறந்த பின்பு பாரியின் பெருமைகளைக் குறிப்பிடும் போது, தேன் நிறைந்த குவளைகளைத் திறந்து அளவற்ற தேனை, கரிய நிறம் கொண்ட ஆட்டுக்கடாவின் கொழுத்த தசைத் துண்டங்களோடு கலந்து சமைக்கப்பட்ட ஊன் சோற்றினை உண்ணத் தருவான் என்று கூறிகின்றார். இதனை,

"மட்டு வாய் திறப்பவும் மைவிடை வீழ்ப்பவும்
அட்டு ஆன்று ஆனாக் கொழுந்துவை ஊன்சோறும்
பொட்டாங்கு ஈயும்"

என்ற பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றன. இன்றைக்கும் கேரளப் பகுதியில் ஊன்துவை அடிசிலில் இனிப்புச் சுவைக்காக அன்னாச்சிப்பழம், மாதுளம்பழம், உலர்திராட்சை போன்றவற்றைப் பயன்படுத்துகின்றனர். இனிப்புச் சுவை நிறைந்த ஊன்துவை அடிசில் திருமண விழாக்களில் பரிமாறப்படுகின்றது. இவ்உணவில் உள்ள இனிப்புச் சுவை செரிமான சக்தியை அதிகரிப்பதற்கு உதவியாக உள்ளது என்று கூறுகின்றனர்.

**திருமண விழாவில் இடம் பெறும் உணவு வகைகள்**

நல்லாவூர் கிழாரால் பாடப்பெற்ற மருதத்திணைப் பாடலில் திருமண வீட்டில் அளிக்கப் பெற்ற விருந்துணவு பற்றிய கருத்து காணப்படுகிறது.

“உழுந்து தலைப்பெய்த கொழுங்களி மிதவை
பெருஞ்சோற்று அமலை நிற்ப”

என்ற பாடல் வரிகளில் உளுத்தம் பருப்பைக் கூட்டிச் சமைத்த பொங்கல் போன்ற பெரிய சோற்றுத்திரளை, விருந்தாக திருமண விழாவிற்கு வந்த மக்களுக்கு அளித்தனர். உளுந்தஞ் சோறு என்பது மிகவும் சத்துள்ள உணவுப் பொருளாகும். இதில் அதிக அளவு புரதச்சத்து, கால்சியம், மெக்னீசியம் போன்ற சத்துக்கள் இருப்பதால் உடல் வலிமை பெற உதவியாக உள்ளது. இதன் நன்மை கருதி பழந்தமிழர்கள் இதனை உணவாகப் பயன்படுத்தியுள்ளனர்.

அகநானூற்றில் இடம் பெறும் விற்றூற்று மூதெயினனார் பாடலில் திருமண விழாவில் விருந்து அளிக்க செய்தியானது இடம் பெற்றுள்ளது. ஆட்டின் ஊனையும் அரிசினையும் கலந்து செய்த உணவு அனைவருக்கும் கொடுக்கப்பட்டது வெண்ணிறச் சோற்றில் புழுங்கிய ஆட்டு இறைச்சியில் அதன் நெய் கனிந்துகாணப்பட்டது. அவ்வுணவானது மேலோர்களைப் பேணி வழிபட்டப் பின்பு வழங்கப்பட்டது. இதனை,

"மைப்பு அறப்புழுக்கின் நெய்க்கனி வெண் சோறு
வரையா வண்மையொடு புரையோர்ப் பேணி"

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இவ்வுணவு அளித்த பின்பே திருமண விழா தொடங்கியது என்ற கருத்தினையும் அறிந்து கொள்ள முடிகின்றது.

திருமண விழா முடிந்த பின்பு விழா விருந்தாக தலைவி தன் தலைவனுக்கு பாலுடை அடிசில் படைத்தாள் என்ற குறிப்பும் அகநானூற்றில் காணப்படுகிறது.
இதனை,

“புனை இருங் கதுப்பின் நின்மனையோன் அயர
பாலுடை அடிசில் தொடீஇய”

**முடிவுரை**

இவ்வாறு பழந்தமிழர் வாழ்வில் விருந்தோம்பலிலும் விழாக்களில் உணவானது முக்கியமான இடம் பெற்றிருந்தது.

**அடிக்குறிப்புகள்**

1. தொல்காப்பியம், செய்யுளியல் 231
2. பொருநராற்றுப்படை பா.வ 103-106
3. பொருநாற்றுப்படை பா.வ - 113 - 116
4. பதிற்றுப்பத்து 30; 23-24
5. புறநானூறு 168; 8-13
6. அகநானூறு 394; 2-5
7. சிறுபாணாற்றுப்படை 175-177
8. பதிற்றுப்பத்து 45; 13-14
9. புறநானூறு 14; 12-15

MUTHTHARASI – Art Literary Culture Tamil Journal
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
SPL-EDITION – IV VOLUME - 1
மார்ச்சு-2025 E-ISSN: 2584 - 1238

# 33. சங்க இலக்கியத்தில் பழந்தமிழர் வாழ்வியல் அறங்கள்

ஆய்வாளர்
ரா. வசந்தபவானி
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
ஸ்ரீ எஸ். ராமசாமிநாயுடு ஞாபகார்த்தக் கல்லூரி, சாத்தூர் - 626 203

நெறியாளர்
முனைவர் ரா. பூங்கோதை
இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறைத்தலைவர்
ஸ்ரீ எஸ். ராமசாமிநாயுடு ஞாபகார்த்தக் கல்லூரி,சாத்தூர் - 626 203

DOI 10.5281/zenodo.15074596.

**Abstract:**

The last Sangam from two thousand years ago. They were thoroughly studied and compiled by the Tamil scholars. Among them, the Sangam literature of the Eighth and the Tenth Songs are the best. The poets have sung the rich life techniques, historical news, and wealth of knowledge of the Tamil people in the way of virtue. The way to live a special life in a complete state, even as an individual, is the class of moral thoughts. This article aims to examine the nature of such moral thoughts in Sangam literature.

**Key Words** : Sangam Literature - Life Style - Life History - Ethics

**முன்னுரை:**

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்திலிருந்து கடைச்சங்கம். அத்தமிழ்ச் சான்றோர் அவையில் திட்டமாக ஆராயப் பெற்றுத் தொகுக்கப்பட்டன. அவற்றுள் சங்க இலக்கியமான எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் மிகச் சிறந்தனவாகும். தமிழ் மக்களின் செறிவான வாழ்வியல் நுட்பங்களையும், வரலாற்றுச் செய்திகளையும், அறிவுச் செழுமையும், அறத்தின் வழியில் புலவர்கள் பாடியுள்ளனர். தனிமனிதனாயினும் முழுமையான நிலையில் சிறப்புடன் வாழவழி வகுப்பன அறச்சிந்தனைகள் ஆகும். அத்தகைய அறச்சிந்தனைகள் சங்க இலக்கியங்களில் குறிக்கப்பெறும் தன்மை குறித்து ஆராயும் நோக்கில் இக்கட்டுரை அமைகின்றது.

**அறம்:**

நாற்பொருள்களுள் முதலாவதாகச் சுட்டப்படும் அறமே எல்லாவற்றுக்கும் தொடக்கமாகச் சொல் அறு என்னும் முதனிலை வினை அடியாகப் பிறந்து தீவினையை அறுப்பதெனப் பொருள்படும். அறியாமையால் விளைவது வினை அறியாமையாவது இருள்; அவ்விருளை அகற்றுவதே அறத்தின் பயன் என்பர். மனதளவில் குற்றமில்லாமல் இருப்பதையே அறம் என்று திருக்குறளும் வலியுறுத்துகிறது. இதனையே “அறம் கையறம் தருமம் நீர்மை நூற்பயன் நாளகிளென்று பேரியாரியல் பிளென்று” 1 என்று தமிழ்அகராதி கூறுகிறது.

அறம் எனப்படுவது உலகில் வாழும் உயிர்களுக்கெல்லாம் உணவும், உடையும் இருக்க இடமும் தரல் என்கிறது மணிமேகலை.

“அறமெனப்படுவது யாதுஎனக் கேட்பின்
மறவாது அதுகேள் மன்னுயிர்க்கெல்லாம்

**உண்டியும் உடையும் உறையுளும்**
**அல்லது கண்டது இல்"2**

என்னும் அடிகள் மேற்கண்ட கருத்துக்குச் சான்று பகர்கின்றன. "அறம் என்னும் சொல்லிற்கு 1.**நல்வினை** 2.**ஐயம் (பிச்சை)** 3.**ஏழைகட்கு இலவசமாகக் கொடுப்பது** 4.**நோயாளிகட்கு இலவசமாக மருந்தீகை** 5.**நலமானது** 6.**இன்பம்(சுகம்)** 7.**தகுதியான** 8.**கற்பு** 9.**நோன்பு** 10.**அறப்பயன் (பண்ணியம்)** 11.**சமயம்** 12.**ஓதி (ஞானம்)** 13.**அறப்பயன்** 14.**அறத்தெய்வம்** 15.**நடுநிலையறம் பேணும் கூற்றுவன் என்னும் பல்வேறு பொருட்களைப் பேரகராதி தருகிறது.**"3,

இவைபோன்ற அறத்திற்குப் பலகருத்துக்களை இலக்கியங்கள் கூறுகின்றன.

**சங்க இலக்கியம்:**

சங்ககால இலக்கியங்கள் மக்கள் ஒழுக்கத்தையே பாடுப்பொருளாகக் கொண்டது. மக்கள் யாவருக்கும் இயல்பாக அமைந்த காதலுணர்ச்சியும், வீரஉணர்ச்சியுமே அக்கால இலக்கியங்களில் சிறப்பிக்கப்படுகின்றன. ஒழுக்கம் நிகழ்வதற்கு முதற்பொருள் நிலைக்களமாகவும், கருப்பொருள் அதற்கு உதவுமாறு செய்யுட்கள் செயல்பட்டன. உயர்ந்த காதலுணர்ச்சி, புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என ஐந்தாக வகுக்கப்பட்டு அவ்வந்நில இயற்கைக்கு ஏற்ப குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பவற்றிற்கு முறையே சிறப்பாகக் கொள்ளப்பட்டது. பத்துப்பாட்டில் இல்லறத்தாருக்கும், துறவறத்தாருக்கும், அரசருக்கும், உரிய அறநெறிக் கருத்துக்கள் நூலின் பலபாடல்களில் பாடுபொருளாக இடம்பெற்றிருக்கின்றன. எட்டுத்தொகையில்,புறநானூற்றில் அறம் பற்றிய சிந்தனையுடன் கூடிய பாடல்கள் மிகுதியாக உள்ளன.

**"செல்வத்துப் பயனேஈதல்**
**துய்ப்பேமெனினேதப்புந பலவே"4**

என்ற பாடல் அடிகளின் வழி ஈகை அறமே செல்வத்தின் பயனாகும் என்பதை அறியமுடிகிறது.

**கொடைத்திறம்:**

தன்னை நாடி வந்த இரவலர்க்கும், புலவர்களுக்கும் நல்ல மனதோடு பொருட்களைக் கொடுத்து வறுமையை நீக்கும் உயர்ந்த உள்ளம் படைத்தவர்கள் சங்ககால மன்னர்கள். இவற்றில் கடையெழு வள்ளல்களின் கொடைத்திறம்

உலகம் அறிந்த உண்மையாகும். இரவலராக வந்து கையேந்தி நின்ற போது கைநிறையப் பொருட்களைக் கொடுத்துத் தொடர்ந்து வரும் இரவலர்களுக்குப் புதிய புதிய பொருட்களையும் கொடுத்து மகிழ்ந்தனர்.

**"இரப்போர் ஏந்து கைநிறையப் புரப்பேர்**
**புலம்பில் உள்ளமொடுபுதுவதந்துவக்கும் பெரும் பொருள"அகம்** 389 (11-13)

பொருளை உருவாக்கியவர் அதனைப் பிறருக்குக் கொடுத்தாலும் இல்லாதவர்கள் இருப்பவரிடம் செல்வது இயல்பு. இதனை ஆவூர் மூலங்கிழார்

**"படைவேண்டு வழி வாள் உதவியும்**
**வினைவேண்டு வழி அறிவுஉதவியும்**

**வேண்டுப வேண்டுப வேந்தன் தேஎத்து” புறம்** 179 (6-9)

வேண்டுபவர்க்கு வேண்டுவன கொடுத்தலே கொடையாகும். துனக்கு வேண்டாதவரை ஒதுக்குதல் கொடையின் சிறப்பன்று எனக் கூறுகிறார்;

போர்அறம்:

பண்டைய காலத்தில் மன்னராட்சியில் புகழ்பெற வேண்டும் என்னும் ஆர்வம் இயல்பாகவே இருந்தது. அவர்களின் போர் முறையில் சமயநெறி கடைபிடிப்போர், புண்பட்டோர், முதியோர், இளையோர் போன்றவர்களைத் தாக்குவது அறமற்ற செயலாகும். இரவில் போர்புரிதல் அறமாக ஏற்றுக் கொள்ளவில்லை.

“அரசன் தொழிலாவது நாடு காவல், போர் வினையும் நாடு காவலுக்கு உட்பட்டதே அதனால் அக்காலத்து அரசர் பெரும்பாலும் தம் வினைகளிலெல்லாம் அறத்தைக் கடைபிடித்தனர்” 5 என்கிறார் தேவநேயன். அதனால் எல்லாச் செயல்களிலும் அறத்தைக் கடைபிடித்துள்ளனர். போர்க்களத்தில் விலங்குகளின் மேல் படைக்கலன்களைஏவுதல் அறமாகப் போற்றப்படவில்லை ,தனைவீரர்கள் அவமானமாகக் கருதினர்.

**விருந்தோம்பல்:**

நற்றிணையில் பலபாடல்களில் தமிழர்களின் விருந்தோம்பல் பண்பாட்டைக் காணலாம். எனக்கும் என் கணவனுக்கும் ஊடலே உண்டாவதில்லை என்று ஒரு பெண் சொல்கிறாள். ஊடல் உண்டாகாமைக்கு அவள் கூறும் காரணம் என்னுடைய நல்ல வீட்டிலே ஏராளமான விருந்தினர்கள் எப்பொழுதும் தங்கியிருக்கின்றனர். அவர்களை உபசரிப்பதிலேயே எங்கள் நேரம் கழிகிறது. ஓய்வேயில்லை. ஆகையால் ஊடல் தோன்றுவதற்கே ,இடமில்லை” என்று கூறுகிறாள்.

**“நன்மனை நனிவிருந்து அயரும்**
**கைதூவின்மையின் எய்தாம் ஆறே” (நற்.பா.**280)

என்ற பாடலடியில் அறியலாம்.

அன்பினாற் சமைத்த நல்லுணவினை மிகவும் இனியது என்று சொல்லத் தன் கணவன் உண்ணுதலைக் கண்டுமகிழ்தலைக் காட்டிலும் மனைவி ஒருத்தி பெறுதற்குரிய சிறந்த மகிழ்ச்சி வேறொன்றுமில்லை.

**தலைமகள்;**

ஒருத்தி சுவைமிக்க புளிக்குழம்பினைச் சமைத்துத் தன் கணவனை உண்பித்த திறத்தினைக் குறுந்தொகைப் பாடலில்

**“முளிதயிர் பிசைந்தகாந்தள் மென்விரல்,**
............
**நுண்ணிதின்மகிழ்ந்தன்றஒண்ணுதல் முகனே” (குறுந்.பா.**167)

எனக் காண முடிகின்றது.

**குழந்தைபராமரிப்பு:**

செவிலி தலைவியை அரவணைத்து வளர்த்ததோடு மட்டுமல்லாமல் தலைவியின் குழந்தையையும் அரவணைத்து அன்புகாட்டி வளர்க்கும் நிலையினையும்,

**"வெறி உறவிரிந்த அறுவை மெல்அணைப்**
**புனிறுநாறு செவிலியொடு புதல்வன்**
**துஞ்ச ஐயவி அணிந்த நெய்யாட்டு**
**ஈரணிப் பசுநெய் கூர்த்தமென்மையாக்கைச்**
**சீர்கெழி மடந்தைஈர் இமை பொருந்த"6**

எனும் வரிகள் வழி அறியமுடிகிறது.

**வெறியாட்டு:**

தலைவி தினைப்புனம் காக்கச் செல்கின்றாள். சென்ற இடத்தில் தலைவனுடன் நட்பு ஏற்பட்டுப் பின்னர் களவு நிகழ்கின்றது. ஆனால்தாய் சென்ற இடத்தில் தலைவிக்கு அணங்கு ஏறப் பெற்றாள் என்று எண்ணி வேலனை அழைத்து வெறியாட்டு நடத்துகின்றாள். இதனை

**"தோழிவேறுஉணர் அணங்கு**
**அறிகழங்கின் தோட்டம் காட்டி வெறி**
**எனஉணர்ந்தஉள்ளமொடுமறிஅறுத்து**
**பொன்நேர் பசலைக்குஉதவாயாறே"7**

என்ற அடிகள் வழி அறிய முடிகிறது.

**அறத்தொடுநிற்றல்:**

தலைவியின் செயல்பாடுகளில் மாற்றத்தினைத் தமது நுண்ணுணர்வினால் அறிந்த செவிலித்தாய் நற்றாயிடம் அறத்தொடு நிற்கின்றாள்.

**"பறைபடப் பணிலம் ஆர்ப்ப இறைகொன்பு**
**தொல்மு தாலத்துப் பொதியில் தோன்றிய**
**நால் ஊர்க் கோசர் நல்மொழிபோல**
**வாய் ஆகின்றேதோழிஆய்கழல்**
**செயலைவெள்வேல் விடலையோடு**
**தொடுவளைமுன்கைமடந்தைநட்பே"8**

இப்பாடலில் தலைவி உடன்போக்குப் போன பிறகு தோழி செவிலித்தாயிடம் அறத்தொடு நிற்கின்றாள். பிறகு செவிலித்தாய் நற்றாயிடம் அறத்தொடு நிற்கின்றாள்.

**முடிவுரை:**

பண்டைய அரசியல் அறத்தன்மை உடையதாகத் திகழ்ந்தமைக்குப் பல்வேறு புறநானூற்றுப் பாடல்கள் சான்று பகர்கின்றன. நாட்டை எப்படியும் ஆளலாம் என்ற நிலை மாறி நல்ல வரைமுறையோடு வாழ்ந்துள்ளனர் குறிப்பிடத்தக்கது. அரசியல் தொடர்பான செயல்களில் அறவழிச் சிந்தனை உடையவராகத் திகழ்ந்துள்ளனர். நாட்டைக் காக்கும் பணிதொடங்கி அன்றாடச் செயல்பாடுகள் வரை கவனம் செலுத்திய பண்டைய அரசியல் அறம் பிற்கால அரசியலுக்குக் காரணமாக அமைகிறது. தலைவியின் களவினைத் தோழி கூறுவதற்கு முன்பு செவிலித்தாய் தமது நுண்ணறிவினால் அறியும் மனநிலை உடையவளாக இருக்கின்றாள். இற்செறிப்பின் மூலம் செவிலி தமது குலப் பெருமையையும் குடிப் பெருமையும் காக்கும் கடமை உணர்வுமிக்கவளாகக்

காணப்படுகிறாள். வெறியாட்டுப் பற்றிய செயல்களைக் காணும் போது தலைவி மீது கொண்டுள்ள பாசஉணர்வு வெளிப்படுகிறது. செவிலி மனஉணர்வும்

கடமையுணர்வும் பொறுப்புணர்வும் வெளிப்படுவதனை அறியமுடிகிறது. இன்றைக்கும் கிராமப்புறச் சமுதாயங்களில் ஒருதாயின் குழந்தையை மற்றொரு தாய் பராமரித்தலும் பாலூட்டி வளர்த்தலும் போன்ற நிகழ்வுகளைக் காணமுடிகிறது. இவற்றையெல்லாம் காணும்பொழுது ஒரே கணத்தினைச் சார்ந்தவர்களால் மட்டுமே இவ்வாறு உள்ளத்து உணர்வுடன் செயல்படமுடியும் என்பதைக் கண்டு கொள்ள முடிகிறது.

**அடிக்குறிப்புகள்:**

1. தமிழ்மொழிஅகராதி, ப. 35
2. சீத்தலைச்சாத்தனார், மணிமேகலை, ஆபுத்திரனோடு மணிபல்லவம் அடைந்த காதை.ப. 306
3. செந்தமிழ்சொற்பிறப்பியல் பேரகரமுதலி,அகரமுதலித்திட்ட இயக்க வெளியீடு,
   சென்னை– 1985, ப. 5231
4. புறம் :189, அடி 7-8
5. ஞா. தேவநேயன்,பழந்தமிழர் ஆட்சி,கழகவெளியீடு,சென்னை, 1961 ப. 109
6. அ.ப.பாலையன், நற்றிணை,பா. எண் 40
7. மேலது,பாடல் எண் 47
8. தொல்,பொருள்,களவு, நூ.அ 112



# 34. பாண்டியர் வரலாறு

டாக்டர் கவிஞர் .இரா.உமா பாரதி
மகாகவி பாரதியார் வம்சாவளி, சென்னை.
7338997938 91+, uma251069@gmail.com

DOI 10.5281/zenodo.15076352.

Abstract :

Civilized nations in the world have been researching the histories of their ancestors in various ways and publishing them in their mother tongue so that everyone can understand the true stories. The histories of the Chera Chola Pandyas, the Tamil dynasties who ruled in Tamil Nadu in the past, are capable of giving us joy and emotion. It is a well-known fact that this article has been written based on inscriptions, seppei, Tamil books and other research books.

Key Words : Pandiyas' history - Inscriptions - Emotions - Dynastics

உலகில் நாகரீகம் பெற்ற நாட்டினர் தம் முன்னோர் வரலாறுகளைப் பலவகையாலும் ஆய்ந்து உண்மைச் சரிதங்களை மக்கள் எல்லோரும் உணருமாறு தம் தாய்மொழியில் வெளியீட்டுப் போற்றி வருகின்றனர் .நாம் தமிழகத்தில் முற்காலத்தில் ஆட்சி புரிந்த தமிழ் வேந்தர்களான சேர சோழ பாண்டியர்களின் வரலாறுகள் நமக்கு மகிழ்ச்சியும் உணர்ச்சியும் அளிக்க வல்லன .என்பது யாவரும் அறிந்த ஒன்றாகும் .கல்வெட்டுகளையும், செப்பேஉகளையும் தமிழ் நூல்களையும் பிற ஆராய்ச்சி நூல்களையும் ஆதாரமாகக் கொண்டு எழுதப்பெற்றது இந்தக் கட்டுரை .

பாண்டியர் வரலாறு பற்றிய புத்தகம் ஒன்றை முதன்முதலில் தமிழில் எழுதியவர் பண்டிட் அரிகர அய்யர் .'பாண்டியராஜ வம்ச சரித்திரம்' (1926) என்ற பெயரில் அதை வெளியிட்டார் .இந்நூலிற்கு அணிந்துரை வழங்கியவர் கே.ஏ .நீலகண்ட சாத்திரியார் .1917-இல் கே.வி .சுப்பிரமணிய அய்யர் எழுதிய The Historical Sketches of Ancient India எனும் நூல் பாண்டியர் வரலாற்றினை அறிந்து கொள்ள உதவும் .எஸ். கிருட்டிணசாமி அய்யங்கார் எழுதிய South India and Under Muhammadan Invaders (கல்கத்தா 1923) மற்றொரு பயனுள்ள நூலாகும் .1929-இல் பேராசிரியர் நீலகண்ட சாத்திரியார் எழுதிய "Pandiyan Kingdom" ஒரு முக்கிய நீண்ட ஆராய்ச்சி நூலாகும் .1940-இல் பாண்டியர் வரலாற்றினைத் தமிழில் எழுதியவர் தி.வை .சதாசிவ பண்டாரத்தார் ஆவார் .கே.வி .இராமன் அவர்களால்) 1971-72இல்(, சுப்பிரமணிய அய்யர் சொற்பொழிவின் பயனாக எழுதப்பட்ட Some Aspects of Pandiyan அறக்கட்டளை History in the light of recent discoveries என்ற நூலும், 1977-இல் எழுதப்பட்ட" பாண்டியர் வரலாறு "என்ற நூலும் மிகவும் பயனுள்ளவை .கே.கே .பிள்ளை அவர்கள் எழுதிய" தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும்" என்ற நூலும், மதுரைத் திருக்கோயில் திருக்குட நீராட்டுப் பெருவிழா மலரில் இவர் எழுதியுள்ள மதுரை பாண்டியர்கள்) ஆங்கிலம் (என்னும் கட்டுரையும் புதுச்செய்திகளைத் தருகின்றன .கொங்குநாட்டில் பல பகுதிகளில் காணப்பெறும் பாண்டியர் கல்வெட்டுகளைக் "கொங்கு' இதழிலும், 'தேனோலை "இதழிலும் வெளிக்கொண்டு வந்துள்ளார் புலவர் செ .இராசு அவர்கள்.

கல்வெட்டறிஞர்களான கே.ஜி .கிருஷ்ணன், இரா .நாகசாமி .முத்துக்கோனார், தேவகுஞ்சரி, கே.ஆர் .சீனிவாசன், இரா.கலைக்கோவன், கே.வி .சௌந்தரராசன், ஒய்.சுப்பராயலு, மயிலை சீனி .வேங்கடசாமி போன்ற அறிஞர்களால் வெளியிடப்பட்ட புத்தகங்களும், கட்டுரைகளும் பாண்டியர் வரலாற்றின் போக்கை அறிந்து கொள்ள உதவும் தரவுகள் அடங்கிய பெட்டகங்களாகும்.

வெனிஸ் நாட்டவரான மார்க்கோபோலோ 13-ஆம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டிற்கு வந்து அங்குள்ள ஆட்சியைப் பற்றியும் .பழக்கவழக்கங்களைப் பற்றியும் எழுதியுள்ளார் .காயல் என்னும் துறைமுகப்பட்டினம் சிறந்து விளங்கிற்று என்கின்றார் .முத்துக்குளிப்புத் தொழில் விவரங்களும் அவரது நூலில் உள்ளன.

வடமேற்கு ஆப்பிரிக்காவிலிருந்து வந்த இபின்பட்டுவா என்பவர் மதுரை சுல்தான்களின் விருந்தாளியாக மதுரையில் தங்கியிருந்தார் .தில்லி சுல்தான் துக்ளக் தனது படைத்தலைவனான ஜலாலுதீன் அசன்ஷாவை மாபாரின்) தமிழகத்தைக் குறிக்கும் சொல் ( தலைவனாக அமர்த்தினான் .இபின்பட்டுவா ஜலாலுதீன் அசன்ஷாவின் சகோதரியை மணந்தார். அவர் தென் இந்தியாவைப் பற்றி விரிவாக எழுதியுள்ளார் .குறிப்பாக, முகமதியர்களால் இந்துக்களுக்கு ஏற்பட்ட இன்னல்களைப் பற்றி எழுதியுள்ளார்.

பாரசீக நாட்டுக் கவிஞன் வாசப்பும், டெல்லி சுல்தான் அல்லாவுதீன் கில்ஜியின் அரசவைக் கவிஞர்களான அமீர்குசுருவும்) கி.பி .1253-இல் பிறந்தவர் (பர்னியும் எழுதிய குறிப்புகள் மிகப்பயனுள்ளவையாகும் .இங்கிலாந்தின் பேராசிரியர்களான எல்லியட், டௌஸன் ஆகிய இருவரும்) கி.பி .1871இல் (ஆங்கிலத்தில் எழுதிய The History of India as told by its own Historians என்னும் நூலில் இக்குறிப்புகளைக் காணலாம் .அமீர்குசுரு கி.பி .1325-இல் மறைந்துவிட்டார் .பர்னி கி.பி .1350-இல் காலமானார் .மாலிக்காபூரின் தமிழ்நாட்டுப் படையெடுப்பைப் பர்னியும் கண்ணுற்றார்.

அவர் தாம் கண்ட காட்சிகளை 'டாரிசி பிரோஸ்ஹாஹி "என்னும் நூலில் கி.பி .1340-இலிருந்து 1350 வரை எழுதினார் .மாலிக்காபூர் தாக்கிய நகரங்கள் பற்றியும் அவன் எடுத்துச் சென்ற ஏராளமான செல்வங்கள் பற்றியும் விவரமாக எழுதியுள்ளார்.

வாசப் கி.பி.1300-இலிருந்து எழுதத் தொடங்கினார் .அவர் நான்கு தொகுதிகளை உருவாக்கினார் .அந்நூல்களைப் பாரசீகத்தின் சல்தானிடம் சமர்ப்பித்தார் .அவனது அரசவைப் புலவரான இவர் இந்தியா, சீனா, மங்கோலியா போன்ற நாடுகளில் ஆண்ட முகமதிய மன்னர்களைப் பற்றி 'அந்நாடுகளுக்குச் செல்லாமலேயே "எழுதி வைத்தார் .செவிவழிச் செய்திகளை எல்லாம் நம்பி எழுதினார் .வாசப் இந்தியாவிற்கு நேரில் வரவேயில்லை .குதிரை வியாபாரிகளும், கப்பல் மாலுமிகளும் சொன்னதையும், நண்பர்கள் கூறியதையும் கேட்டு எழுதியதாக அவரே ஒப்புக்கொண்டுள்ளார் .ஆனால் அவருடைய கூற்றினை ஆதாரமாக வைத்துப் பாண்டிய வரலாறு எழுதப்பட்டுள்ளது .மாபாரில் கலேஸ்தேவர்) குலசேகரதேவர்(க்குச் சுந்தரபாண்டியன் என்ற பட்டத்து அரசியின் மகன் இருந்தான் எனவும், குலசேகரனின் ஆசைநாயகியின் மகன் வீரபாண்டியன் எனவும், பட்டத்துக்கு உரிய சுந்தரபாண்டியனுக்கு முடிசூடாமல், தவறான வழியில் பிறந்த வீரபாண்டியனுக்கு முடிசூட்டினான் என்றும், இதனால் கோபங்கொண்ட சுந்தரபாண்டியன்) 1310) (ஹிஜ்ஜிரா 709இல் (தன் தந்தை குலசேகரனைக் கொன்றுவிட்டான் என்றும் கூறுகின்றார் .ஆனால் உண்மை அதுவல்ல .கல்வெட்டுகளின்

ஆதாரங்களைக்கொண்டு அண்மைக்கால ஆராய்ச்சியாளர் என் .சேதுராமன் இச்செய்திகள் முற்றிலும் தவறானவை என்று உறுதிப்படுத்தியும் இரு சகோதரர்களுக்கும் இடையில் பிணக்கில்லை என்றும் இருவரும் ஒற்றுமையுடன் அரசாண்டனர் என்றும் அவர்கள் தம் தந்தை குலசேகரன் நலம்பெற கோயில்களில் சிறப்பு வழிபாடுகளுக்கு ஏற்பாடுகளைச் செய்தனர் என்றும் கல்வெட்டு ஆதாரங்களின் துணைகொண்டு குறிப்பிடுகின்றார் .

**கல்வெட்டுகள்**

இக்காலப் பாண்டியரது வரலாறு எழுதுவதற்குக் கல்வெட்டுகள்தான் தலைசிறந்த சான்றுகளாக அமைந்துள்ளன .பொதுவாகத் தமிழ்நாட்டிலும் குறிப்பாக முந்தைய பாண்டிய நாட்டுக் கோயில்களிலும் உள்ள நூற்றுக்கணக்கான கல்வெட்டுகள் வரலாற்றுப் பெட்டகங்களாகவே அமைந்துள்ளன .மேலும், சோழர் காலத்தில் வெளியிடப்பட்ட திருவாலங்காடு செப்பேடுகளிலும் அவர்களது கல்வெட்டுகளிலும் பாண்டியர்களைப் பற்றிப் பல முக்கியக் குறிப்புகள் காணப்படுகின்றன.

**பாண்டியப் பெருவேந்தர் காலம்**

இரண்டாம் பாண்டியப் பேரரசின் காலத்தில் பெரிய கல்வெட்டு வாசகங்கள் எழுதப்பட்டன .அரசரின் பெருமையை மெய்க்கீர்த்திகள் மிகைப்படுத்திக் கூறினாலும், அவற்றில் சில உண்மைகள் மறைந்திருப்பதைக் கண்டறியவேண்டும்) .கி.பி .985-1014ஆண்டுக்கு( இராசராசசோழன் காலத்திற்குப் பின்னர், அம்முறை மிகவும் முன்னரே செப்பேடுகளில் மெய்க்கீர்த்தி முறை கையாளப்பட்டாலும், அதிகரித்தது .கல்வெட்டுகளில் காணப்படும் அரசனின் ஆட்சியாண்டு, நாள், நட்சத்திரம், கோள், திதி போன்ற காலநிலைகளைக் கணக்கில் புத்தகங்களும், கட்டுரைகளும் அண்மைக்கால ஆராய்ச்சிக்குச் கொண்டு ஆய்வு செய்து என் . சேதுராமன் வெளியிட்டுள்ள சிகரம்போல் அமைந்துள்ளன .முன்னரே செருமன் பேராசிரியர் கீல்ஹெர்ன்) 1907), ஜகோபி) 1913), இராபர்ட்சீவல்) 1913), சுவாமிக்கண்ணுபிள்ளை (1915) போன்ற பெரியோர்கள் பாண்டியர்காலக் கல்வெட்டுகளை ஆய்வு செய்துள்ளனர்.

இந்தியத் தொல்லியல் ஆய்வுத்துறையினரால் வெளியிடப்பட்ட தென்னிந்தியக் கல்வெட்டுகள், ஆண்டுதோறும் வெளியிடப்பட்டுவரும் கல்வெட்டுக் குறிப்புகள், திருவனந்தபுரம் தொல்லியல் இதழ்கள், எபிகிராபிகா இண்டிகா, நினைவுச் சின்னங்கள் அல்லது அகழ்வு ஆய்வுக் குறிப்புகள் ஆகியவை பயனுள்ளவை .தென்னிந்தியக் கோயில் தமிழகத் தொல்லியல் கல்வெட்டுகளும் பயனுள்ளவையே .துறையினரால்) சென்னை ( வெளியிடப்பட்டுவரும் கல்வெட்டு இதழ்கள், புதிய கண்டுபிடிப்புகள் போன்றவை தக்க சான்றுகளாக உள்ளன .புதிய கல்வெட்டுகள் படியெடுக்கப்பட்டு அண்மைக்காலத்தில் நூலாக வெளியிடப்பட்டு வருகின்றன.

பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகளில் மன்னனின் ஆட்சி ஆண்டு கொடுக்கப்பட்டிருக்கும் .சேதுராமன் குறிப்பிட்டுள்ளது போல சுந்தரபாண்டியத் தேவர்க்கு "யாண்டு "பன்னிரண்டாவது என்று எழுதப்பட்டிருக்கிறது என்றால் சுந்தரபாண்டியன் முடிசூடி 11 வருடங்கள் சென்றுவிட்டன என்று கொள்ளவேண்டும் .எனவே இதற்கு 12-ஆவது ஆட்சி ஆண்டு நடந்து கொண்டு இருக்கிறது என்று பொருள் கொள்ளவேண்டும் .கல்வெட்டில் யாண்டு என்பது நடப்பு வருடத்தைக் குறிக்கும் .கல்வெட்டைப் பொறுத்தமட்டில் ஆண்டு என்பதும் யாண்டு என்பதும் வேறானவையாகும்.

கல்வெட்டுகளில் யாண்டு, மாதம், சந்திரதிதி, நட்சத்திரம், கிழமை ஆகியவை கையாளப்பட்டிருப்பதைக் கொண்டுதான் மன்னரின் ஆட்சியாண்டுகளைக் கணக்கில் எடுத்துக்கொள்ளவேண்டும் .ஒரு கல்வெட்டின் மூலமாக ஒரு மன்னனின் ஆட்சித் தொடக்கத்தை அறிந்தால், மற்ற கல்வெட்டுகளின் துணைகொண்டு அந்த மன்னனின் முடி ஆட்சிக்காலத்தை அறிந்து கொள்ளமுடியும் ..காலக் கணக்கீட்டு முறைகள் சரியாக வரவில்லை என்றால் அதே பெயரில் வேறொரு மன்னன் இருந்தான் என்றுதான் கொள்ளவேண்டும் . பஞ்சாங்கக் குறிப்புகளை மட்டும் வைத்துக் கொண்டு காலத்தைக் கணிப்பதும் தவறுதலாக முடியும் .ஏனெனில் அத்துடன் மன்னனின் விருதுப்பெயர் .மெய்க்கீர்த்தி, கூறப்பட்ட செய்திகள், சரித்திர நிகழ்ச்சிகள் .முடிந்த நிகழ்ச்சிகள் ஆகிய அனைத்தையும் கருத்தில் கொள்ளவேண்டும்.

பாண்டிய மன்னர்களுக்குச் சுந்தரபாண்டியன் .விக்கிரமன், குலசேகரன், வீரபாண்டியன், பராக்கிரமன், ஸ்ரீவல்லபன் என்று ஆறு பெயர்களே வரும் .மாறவர்மன் அல்லது சடையவர்மன் என்று முன்னொட்டாக மாறிமாறிவரும் போக்கு பாண்டிய மன்னர்களுக்கே உரித்தாகும் .ஒரே சமயத்தில் பலர் அரசாண்டுள்ளனர் .ஒரே பெயரில்கூட இருக்கலாம் .சிலருக்கு மெய்க்கீர்த்திகளும், விருதுப் பெயர்களும் இருக்கும் .ஒரே விருதுப்பெயர் பலருக்கு இருக்கும் . இவர்களைப் பற்றிய வானிலைக் குறிப்புகளையும் ஆராய்ந்து பார்க்கவேண்டும் .அண்மைக்கால ஆய்வுகள் கி.பி .1100லிருந்து 1400 வரை ஆண்ட 47 மன்னர்களைப் பற்றிக் கூறுகின்றன .சில சமயங்களில் “பாண்டிய சகோதரர்கள்" கூட்டாகவோ வெவ்வேறு இடத்திலிருந்தோ ஆட்சி செய்த குறிப்புகள் கிடைக்கின்றன.

**பாண்டியரின் நாணயங்கள்**

பிற்காலப் பாண்டியர் வெளியிட்ட நாணயங்கள் நமக்குக் கிடைத்துள்ளன .அவர்களைப் பற்றிய குறிப்புகளும் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன .முற்காலப் பாண்டியரது நாணயங்கள் சதுரவடிவில் அமைந்தவை .பிற்காலப் பாண்டியரின் நாணயங்கள் வட்டவடிவில் அமைந்துள்ளன .அவற்றில் பாண்டிய அரசர்களது விருதுகள் பொறிக்கப்பட்டுள்ளன . “கலியுகராமன்”, “கோதண்டராமன்”, “கச்சி வழங்கும் பெருமாள்", “சமரகோலாகலன்”, “எல்லாந்தலையானான்”, "எம்மண்டலமும் கொண்டருளிய "என்பன போன்ற சிறப்பு விருதுகளைக் கொண்ட நாணயங்கள் பல இடங்களில் கிடைத்துள்ளன .“சுந்தர பாண்டியன்”, “குலசேகரன்', 'வீரபாண்டியன்' என்ற பெயர் பொறிக்கப்பட்ட செப்பு நாணயங்களும் கிடைத்துள்ளன .பலவற்றில் அவர்களது சின்னமாகிய கயல் பொறிக்கப்பட்டுள்ளது .குடை, சாமரம், விளக்கு போன்ற மங்கலக் குறிகளும் அவற்றில் காணப்படுகின்றன.

இக்காலக் கல்வெட்டுகளில் வழக்கிலிருந்த பல நாணயங்களின் பெயர்கள் நமக்குக் கிடைக்கின்றன .அச்சு, ஆணை அச்சு, காசு, பழங்காசு, நற்புதுக்காசு, ஈழக்காசு, பணம், திரமம் போன்ற காசுகள் புழக்கத்தில் இருந்தன .பாண்டியர் நாணயங்களைப் பற்றி டி.தேசிகாச்சாரி, பிட்டுல்ப், சட்டோபாத்யாயா போன்ற அறிஞர்கள் நல்ல ஆராய்ச்சி நூல்களை எழுதியுள்ளனர்.

**பாண்டியர் கலைச்சின்னங்கள்**

தமிழ்நாட்டில் பல கோயில்களில் பாண்டியர் கட்டிய கோபுரங்கள், விமானங்கள், மண்டபங்கள் ஆகியவை அவர்களது வரலாற்றிற்கு அழியாச் சின்னங்களாக அமைந்துள்ளன . மதுரை மீனாட்சியம்மன் கோயிலிலுள்ள கிழக்குக் கோபுரங்களும்) கிழக்கு - மேற்குக் கோபுரங்கள் (உள்ளேயுள்ள சன்னதிகளும், மண்டபங்களும், அழகர் கோயிலிலுள்ள வெளிக்

கோபுரமும் உள்ளேயுள்ள சுந்தரபாண்டிய திரு மண்டபமும்; தில்லை நடராசர் கோயிலிலுள்ள சுந்தரபாண்டிய கோபுரமும் பாண்டியர்கள் கலைச் சிறப்பை அறிவிக்கின்றன .மேலும் திருவரங்கம், திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில், திருவில்லிபுத்தூர் ஆண்டாள் கோயில், குற்றாலத்திலுள்ள திருக்குற்றாலநாதர் கோயில் போன்ற கோயில்களிலுள்ள சில கோபுரங்களும், மண்டபங்களும் சிற்பங்களும் பாண்டியரது கலைப்படைப்புக்குச் சான்றுகளாகத் திகழ்கின்றன.

**இடைக்காலப் பாண்டியர்கள்**

**சான்றுகள்**

கடுங்கோன் வழிவந்த பாண்டியர்களின் கடைசி மன்னன் வீரபாண்டியனாவான்) கி.பி .946 -966). இராசசிம்ம பாண்டியன் பராந்தக சோழனால் கி.பி .915ஆம் ஆண்டு தோற்கடிக்கப்பட்டு ஈழநாட்டில் தஞ்சம் புகுந்தபின் அவனது மகனான வீரபாண்டியன் கி.பி .946இல் அரியணையேறினான் .கி.பி .949இல் நடந்த தக்கோலப்போரில் சோழர்களை வென்று மூன்றாம் கிருட்டிணன் என்ற இராட்டிரகூட மன்னன் தஞ்சையைக் கைப்பற்றியதாகக் கூறிக்கொள்கிறான் . இவ்வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு, வீரபாண்டியன் கி.பி .956இல் சோழரிடமிருந்து மதுரையை மீட்டுத் தனியாட்சி செலுத்தினான் .இவன் தனது 6ஆவது ஆட்சியாண்டில்" சோழன் தலைகொண்ட கோவீர பாண்டியன்" என்ற பெயர் பெற்றான்" .சோழந்தகன் "என்ற பெயர் பெற்றதினால் “சோழந்தக சதுர்வேதி மங்கலம்) "இன்றைய சோழ வந்தான், மதுரை மாவட்டம் ( என்ற ஊரை ஏற்படுத்தினான் .இவன் எந்தச் சோழனைக் கொன்றான் என்பது புலப்படவில்லை . மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம், தென்திருவாங்கூர் போன்ற மாவட்டங்களில் இவனுடைய கல்வெட்டுகள் கிடைக்கின்றன.

சோழர்களின் கல்வெட்டுகள் இப்பகுதிகளில் கி.பி .962-966க்குப் பின்னர்தான் கிடைக்கின்றன .கி.பி .966ஆம் ஆண்டில் இரண்டாம் ஆதித்த கரிகாலசோழன் வீரபாண்டியனை வென்று பாண்டிய நாட்டினை ஓரளவு சோழநாட்டுடன் இணைக்க முயன்றான்.

முதலாம் இராசராசசோழன்) கி.பி .985 - 1012) பாண்டியநாட்டை முழுவதும் வெற்றி கொண்டு 'பாண்டிய குலாசனி' என்ற பட்டம் பெற்றான் .பாண்டிய நாடு இராசராச மண்டலம் எனப் பெயரிடப்பட்டு இணைக்கப்பட்டது .இவன் பஞ்சவன் மாதேவி என்ற பாண்டிய இளவரசியை மணம் செய்து கொண்டான்,

**சடையவர்மன் சுந்தரசோழ பாண்டியன்**

முதலாம் இராசேந்திரசோழன்) கி.பி .1012 - 44) பாண்டிய நாட்டின் ஆட்சிப்பொறுப்பையும் ஏற்றுக் கொண்டான் .பின்னர் தனது மகனையே பாண்டிய நாட்டிற்குப் படிநிகராளியாக) அரசப் பிரதிநிதியாக (நியமித்து, சோழபாண்டியன் என அழைத்தான் .இவனது மகன் சடையவர்மன் சுந்தரசோழ பாண்டியனாவான்) கி.பி .1018 - இவனுடைய கல்வெட்டுகள் மதுரை மாவட்டம், திருநெல்வேலி மாவட்டம், புதுக்கோட்டை, தென் திருவாங்கூர் ஆகிய பகுதிகளில் 1040) கிடைக்கின்றன.

**மாறவர்மன் விக்கிரம சோழபாண்டியன்**

இவன் முதலாம் இராசேந்திரனின் மகன் .இவனது கல்வெட்டுகள் திருநெல்வேலிப் பகுதிகளில் கிடைத்துள்ளன .ஆற்றூரில்) திருச்செந்தூர் வட்டம் (கிடைத்த கல்வெட்டு இவனது

25ஆவது ஆட்சியாண்டைக் குறிப்பிடுவதாக உள்ளது'. ஆற்றூர் இராசராச சதுர்வேதி மங்கலம் என்று பெயரிடப்பட்டது.

**சடையவர்மன் சோழபாண்டியதேவன்) கி.பி .**1062 - 1070)

வீரராசேந்திரனின்) கி.பி .1063 - 69) மகனான இவன் மூன்றாவது சோழப் பிரதிநிதியாவான் .அடுத்ததாக வீரராசேந்திர சோழனின் மற்றொரு மகனான கங்கைகொண்ட சோழன் அரசப் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டான் .மாறவர்மன் பராக்கிரம பாண்டியன் என்ற பெயரிலும் சோழ பாண்டியனின் கல்வெட்டுகள் சில கிடைத்துள்ளன.

சோழ பாண்டியப் பிரதிநிதிகளை நியமிக்கும் வழக்கம் குலோத்துங்க சோழனின் ஆட்சித் தொடக்கம்) கி.பி .1070) வரை நீடித்திருந்தது.

இப்படி அரசப் பிரதிநிதிகளை நியமித்து, பாண்டியநாட்டைக் கண்காணித்து வந்தாலும், பாண்டிய வழித்தோன்றல்கள் ஆங்காங்கே சோழரின் மேலாதிக்கத்தை எதிர்த்துக் கலகம் செய்தவண்ணம் இருந்தனர்.

முதலாம் இராசாதிராச சோழனின்) கி.பி .1018 - 54) 29ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டில்) மெய்க்கீர்த்தியில் (மானாபரணன், வீரகேரளன், சுந்தரபாண்டியன் ஆகிய மூவரின் படையொன்றினை இவன் வென்றதாகக் கூறப்பட்டுள்ளது .இப்போரில் மானாபரணனும், வீரகேரளனும் கொல்லப்பட்டனர் .சுந்தரபாண்டியன் முல்லையூர் என்னுமிடத்தில் ஓடி ஒளிந்து கொண்டான் .இக்கலகத்தில் பங்கு கொண்ட விக்கிரமபாண்டியன் தோல்வியுற்று ஈழமண்டலத்தில் தஞ்சம் புகுந்தான் .சீவல்லப பாண்டியன்

இரண்டாம் இராசேந்திர சோழனின்) கி.பி .1052 - 63 ) காலத்தில் சோழருக்கு அடங்கிய சிற்றரசனாகப் பாண்டிய நாட்டை ஆண்ட மன்னன் சீவல்லப பாண்டியனாவான்.

**பாண்டிய வீரகேசரி**

இவன் சீவல்லப பாண்டியனின் மகனாவான் .இவன் கி.பி .1065இல் வீர இராசேந்திர சோழனுடன்) கி.பி .1063 - 1069) போரிட்டு இறந்தான் .வீர இராசேந்திரனுக்குப் பின் அதிராசேந்திர சோழன் ஆட்சிக்கு வந்தான் .ஆனால் அவன் சோழ அரியணையில் பல வருடங்கள் நீடிக்கவில்லை .இவன் நோய்வாய்ப்பட்டு இறந்தபின் அரியணையேறும் தகுதியில் சோழநாட்டு இளவரசர்கள் ஒருவரும் இல்லாமையால் குழப்பம் ஏற்பட்டது .பாண்டிய நாட்டை ஆளும் அரசப்பிரதிநிதிகள் நியமிக்கப்படவில்லை .இவ்வாய்ப்பைப் பயன்படுத்திப் பாண்டிய வழித்தோன்றல்கள் சோழராட்சியினின்று விடுபட்டுத் தனியாட்சியை ஏற்படுத்தும் முயற்சியில் ஈடுபடலாயினர் .இதை அடக்கும் வகையில் கி.பி .1081இல் முதற் குலோத்துங்க சோழன் பாண்டியநாட்டின் மேல் படையெடுத்துச் சென்று அங்கு ஆண்டு கொண்டிருந்த பாண்டியர் ஐவரை வென்றான் என்னும் செய்தியை அவனது மெய்க்கீர்த்தியும், கலிங்கத்துப்பரணியும் கூறுகின்றன .சடையவர்மன் ஸ்ரீவல்லபன்) கி.பி .1101 - 1124)

இவன் முதலாம் பாண்டியனின் வழித்தோன்றல் என்று கூறலாம் .இவனுடைய மெய்க்கீர்த்தி “திருமடந்தையும் ஜயமடந்தையும்...' என்று தொடங்குகிறது .இவனது தலைநகரம் மதுரை .இவனது மகனே சுந்தரபாண்டியன் .சுந்தரபாண்டியனே மானாபரணன் ஆவான். ஸ்ரீவல்லபனுக்கு முன்னர் பராக்கிரம பாண்டியன் என்ற ஒருவன் இருந்தான்.

இவ்வரசனைத் தொடர்ந்து சுந்தரபாண்டியன்) கி.பி .1104 - 1131, சடையவர்மன் ஸ்ரீவல்லபன்) 1131 - 1143) (புகழ்மாது புணர என்னும் மெய்க்கீர்த்தியுடையவன்(, மாறவர்மன்

பராக்கிரம பாண்டியன்) 1143- 1166) (திருமகள் புணர எனும் மெய்க்கீர்த்தி பெற்றவன்(, மாறவர்மன் ஸ்ரீவல்லபன்) 1145-1162) (பூமகள் ஜெயமகள் எனும் மெய்க்கீர்த்திக்கு உரியவன்(, சடையவர்மன் குலசேகரன்) 1162 - 1177) (பூதலமடந்தை எனும் மெய்க்கீர்த்தி உடையவன்(, சடைய வர்மன் வீரபாண்டியன்) 1170 - 1195), சடையவர்மன் ஸ்ரீவல்லபன்) 1158-1185), மாறவர்மன் விக்கிரமபாண்டியன்) 1186 - 1190) போன்ற பாண்டிய மன்னர்கள் மதுரையிலிருந்து ஆட்சிபுரிந்தனர் .இவர்கள் சோழர்களுக்குக் கட்டுப்பட்டு அவர்களின் மேலாதிக்கத்தை ஏற்று நடந்தனர் .பாண்டிய வழித்தோன்றல்கள் சிலர் இலங்கைப் படைகளுடன் சேர்ந்து அவ்வப்போது கலகம் விளைவித்து வந்தனர் .முதலாம் சடையவர்மன் குலசேகரன்) கி.பி .1190) காலத்திலிருந்து இரண்டாவது முறையாகப் பாண்டியர் எழுச்சியைக் காணமுடிகிறது.

சடையவர்மன் குலசேகரன்) கி.பி .1162-1177)

இவன் மாறவர்மன் ஸ்ரீவல்லபனின் மகன் ஆவான். "பூதலமடந்தை "என்னும் மெய்க்கீர்த்தியுடன் இவனது கல்வெட்டுகள் தொடங்குகின்றன .இவன் திருநெல்வேலியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தான் .அந்தச் சமயத்தில் மதுரையில் பராக்கிரம பாண்டியன் ஆண்டு வந்தான் .குலசேகரன் மதுரையைக் கைப்பற்ற எண்ணிக் கி.பி .1168 - 69இல் மதுரையை முற்றுகையிட்டான் .பராக்கிரம பாண்டியன் இலங்கைவேந்தன் பராக்கிரமபாகுவின் உதவியை நாடினான் .ஆனால் உதவி வருவதற்கு முன்னமே பராக்கிரமபாண்டியனையும் அவன் மனைவி மக்களையும் கொன்று குலசேகரன் மதுரையைக் கைப்பற்றி னான் .ஆனால் சிங்களப்படை இலங்காபுரி தலைமையில் வெகுவாக முன்னேறியது .குலசேகரன் தோற்கடிக்கப்பட்டு நாட்டிலிருந்து வெளியேற்றப்பட்டான் .பராக்கிரமபாண்டியனின் மகன் வீரபாண்டியன் அரசனாக்கப்பட்டான் .ஆனால் குலசேகரன் சோழர்களின் உதவியை நாடினான் .சோழ அரசன் இராசாதிராசன் பல்லவராயன் தலைமையில் பெரும்படையை அனுப்பினான் .ஆனால் பயன்கிட்டவில்லை .தொண்டி, பாசிப்பட்டனம் போன்ற இடங்களில் நடந்த போர்களில் சிங்களப்படையினரே வெற்றிகண்டனர் .வீரபாண்டியனே மீண்டும் மதுரையில் அரசனாக்கப்பட்டான் .ஆனால் இது நீண்ட நாள் நீடிக்கவில்லை .இறுதியில் சிங்களப்படையினர் பல்லவராயர் படைவீரன் தலைமையில் இயங்கிய சோழர் படையினால் தோற்கடிக்கப்பட்டனர் என்று ஆர்ப்பாக்கம் கல்வெட்டும், இராசாதிராசனின் பல்லவராயன் பேட்டைக் கல்வெட்டும் கூறுகின்றன .ஈழத் தளபதிகளைக் கொன்று அவர்களது தலைகளை மதுரைக் கோட்டை வாயிலில் வைத்தான் என்றும் கல்வெட்டு கூறுகின்றது .குலசேகர பாண்டியன் கி.பி .1169இல் பாண்டிய அரசனாக முடி சூட்டப்பெற்றான் .“பாண்டிய நாடு ஈழநாடாகாதபடி பரிகரித்து' என்று கல்வெட்டு கூறுகிறது.

சிங்கள அரசன் மீண்டும் மதுரையைக் கைப்பற்ற முயற்சி செய்தான் .இதையறிந்த சோழ அரசன் தனது படையை ஈழத்திற்கே அனுப்பிப் புலைச்சேரி, மாதோட்டம் போன்ற இடங்களைத் தாக்கிப் பலத்த சேதம் உண்டாக்கினான் .பாண்டிய அரசனான குலசேகரன் சோழர்கள் செய்த உதவிகளை மறந்து, சிங்கள அரசன் பராக்கிர பாகுவுடன் நட்புறவு கொள்ளத் தொடங்கினான் . சோழர்க்குத் துணை புரிந்து வந்த மறவப்படை வீரர்களைப் பாண்டிய நாட்டை விட்டு வெளியேற்றினான் .இவற்றை அறிந்த சோழ அரசன் குலசேகர பாண்டியனை அகற்றுமாறு தனது படைத்தலைவன் பல்லவராயனுக்குப் பணித்தான் .அவ்வாறே குலசேகரன் அகற்றப்பட்டு

வீரபாண்டியன் என்பவன் முடி சூட்டப்பெற்றான் .இவை சுமார் கி.பி .1177 அளவில் நடைபெற்று இருக்க வேண்டும் என்று பேராசிரியர் நீலகண்ட சாத்திரியார் கூறியுள்ளார்.

கி.பி .1178-இல் மூன்றாம் குலோத்துங்கன் பதவி ஏற்றான் .அவன் மீண்டும் குலசேகரனின் மகன் விக்கிரமபாண்டியனைப் பாண்டிய நாட்டின் அரசனாக்கினான் .வீரபாண்டியன் நெட்டூர் போரில் தோற்கடிக்கப்பட்டான் .அவன் வீரபாண்டியனை அழைத்துக்கொண்டு குலோத்துங்க சோழனிடம் அடைக்கலம் புகுந்தான் .அதை ஏற்று வீரபாண்டியனுக்குப் பாண்டிய நாட்டில் ஒரு பகுதியையும் கொடுத்தான் .இது கி.பி .1189 - 90 இல் நடந்தது" மதுரையும் முடித்த, பாண்டியன் முடித்தலையும் கொண்டருளிய' என்ற விருதைக் குலோத்துங்கன் பெற்றான் .இச்செய்திகளைத் திருவக்கரை, திருவரங்கம் போன்ற இடங்களிலுள்ள கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

**முடிவுரை:**

சிலப்பதிகாரத்தில் நாடுகாண் காதை வரி58 லும் பெரியபுராணத்தில் திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம் பாடல்கள்400 ,421; மூர்த்தி நாயனார் புராணம்12 , 13 லும் கம்பராமாயணம் நாடவிட்ட படலத்திலும் பாண்டிநாட்டையே செந்தமிழ் நாடு என்று தம் அறிய நூல்களில் குறித்திருப்பது நாம் உணர வேண்டியது .தமிழ் மொழிக்கு இருபெருங்கண்களாகவுள்ள தொல்காப்பியமும் திருக்குறளும் பாண்டியர் தலைமையில் அரங்கேற்றப் பெற்ற பெருநூல்கள் என்பது நாம் யாவரும் நான்கு அறிந்ததேயாகும் .எனவே நாம் தமிழ்த் தாய்க்குத் தொண்டு புரிந்த பெருமை பெற்ற பாண்டியர்கள் குறித்த ஒரு கட்டுரையாகவே இது பெருமையுடன் சமர்ப்பிக்கபடுகிறது .

**துணைமை நின்ற நூல்கள் :**

1. https://www.tamildigitallibrary.in/bookdetail?id=jZY9lup2kZl6TuXGlZQdjZM1lhyy&tag=%E0%AE%AA%E0%AE%E0%AE%A3%E0%AF%8D%E0%AE%9F%E0%AE%BF%E0%AE%AF%E0%AE%B0%E0%AF%8D%20%E0%AE%B5%E0%AE%B0%E0%AE%B2%E0%AE%BE%E0%AE%B1%E0%AF%81
2. https://www.dinamani.com/specials/noolaragam/2022/Oct/10/%E0%AE%AA%E0%AE%BE%E0%AE%A3%E0%AF%8D%E0%AE%9F%E0%AE%BF%E0%AE%AF%E0%AE%B0%E0%AF%8D%E0%AE%B5%E0%AE%B0%E0%AE%B2%E0%AE%BE%E0%AE%B1%E0%AF%81-3929925.html
3. https://www.tamilvu.org/courses/degree/a031/a0311/html/a0311555.htm

# 35. பழந்தமிழரின் தொழில் ஆளுமை

**முனைவர் வீ.ச.அசோக்குமார்,**
உதவிப் பேராசிரியர், முதுகலைத் தமிழ்த்துறை,
வி.இ.நா. செந்திக்குமார நாடார் கல்லூரி,விருதுநகர்.
DOI 10.5281/zenodo.15074884.

Abstract :

Tamil society is a society that has lived, lives and will live as 'Vinyae Aadavarkku Aayoey'. Starting from the Kurinji people who lived by hunting animals and sowing millet etc., they are a race that has acquired industrial leadership. The industrial leadership of the ancient Tamils has undergone changes in traditions over time and has undergone various changes due to the influence of the flow of time. The literatures of the respective period have recorded them. In this way, the purpose of this article is to try to understand the industrial leadership of the ancient Tamils on the basis of tradition - change.

Key Words : Tamil Society - Personality - Tradition - Job

## முன்னுரை

'வினையே ஆடவர்க்கு உயிரே' என வாழ்ந்த, வாழ்கிற, வாழும் சமூகம் தமிழ்ச் சமூகம். விலங்குகளை வேட்டையாடி, தினை முதலியன விதைத்து வாழ்ந்த குறிஞ்சி நில மக்கள் தொடங்கி இன்றளவும் தொழில் ஆளுமை கைவரப் பெற்ற இனம். பழந்தமிழரின் தொழில் ஆளுமை இடை இடையே மரபுகளில் மாற்றம் பெற்று கால ஓட்டத்தின் தாக்கத்தினால் பல்வேறு மாறுதல்களைப் பெற்று வந்துள்ளது. அவற்றைப் பதிவு செய்துள்ளவை அந்தந்தக் கால இலக்கியங்கள். அவ்வகையில் மரபு - மாற்றம் என்ற அடிப்படையில் பழந்தமிழரின் தொழில் ஆளுமையை அறிய முற்படுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

## தொழிலும் கலையும் :

பழங்காலத்தில் உடல் உழைப்பு அனைவரின் கடமையாகக் கருதப்பட்டது. அந்த உழைப்பின் அனுபவ வெளிப்பாடு கலை. 'உழைப்பாற்றலின் போது இயற்கையோடு இயைந்தும், இயற்கையோடு போராடியும் இயற்கையை எதிர்த்தும் உழைப்பைச் செலுத்த வேண்டி உற்பத்தியை அடைய நினைத்த மக்களின் அழுத்தத்தைக் கடின உழைப்பின் வலிகளைப் போக்கும் சிந்தனையில் கலைகள் பிறந்திருக்கின்றன. மனித குல வளர்ச்சிக்கும், சமுதாய உற்பத்திக்கும் உயிரூட்டும் பங்களிப்பைக் கலைகள் செய்திருக்கின்றன" (க.அ. ஜோதிராணி, சங்க இலக்கியத்தில் சமூக ஆய்வுகள், ப.76). கற்றுக் கொண்டு செய்யும் தொழில்கள் அனைத்தும் கலையே. பழந்தமிழர் தொழில்களை 64 என வகுத்து அறுபத்து நான்கு கலைகள் என்றனர். அவ்வகையில் படித்தோ, படிக்காமலோ பார்த்து, உணர்ந்து தொழில்களைக் கற்றுக் கொண்டனர். தங்கள் வாழ்க்கைக்குத் தேவையான அனைத்தையும் தாங்களே உருவாக்கும் திறன் கொண்டவர்களாக இருந்தனர். வசிக்கும் வீட்டைக் கட்டும் தொழில் கட்டடக்கலை ஆனது, உடுத்தும் உடையை நெய்யும் தொழில் நெசவுக்கலை ஆனது, அணிமணிகளைச் செய்யும் தொழில் ஆபரணக் கலை ஆனது, வேளாண்மை உழவுக்கலை என்றானது. இப்படித் தொழில் கலைகளாகக் கருதப்பட்டன.

**திணையும் தொழிலும்**

இயற்கை நெறிக் காலமான திணைக் காலமே தமிழ் மரபின் அடையாளமாக அமைந்துள்ளது. சான்றோர் கவியாகக் கருதப்படும் அகவல் பாடல்களே அதற்குச் சாட்சியாக அமைந்துள்ளன. 'சங்க இலக்கியங்கள் பேசும் பண்டைய தமிழ் மக்கள் ஐந்திணைகளில் வாழ்ந்தாலும் அனைவரும் அவரவர் இயல் மரபுடன் தன்னியல்பான முறையில் தோன்றி வளர்ந்தவர்கள். இவர்களின் வாழ்வுமுறை இயல்முறை வளர்ச்சியைக் (முசவாழபநெைஉ னநஎநடழிஅநவெ) கொண்டிருந்தது. இந்த இயல் மரபை அறிவது தமிழ் மரபின் தனித்துவத்தையும் சுயத்தன்மையையும் அறிவதாக அமையும்." (பக்தவத்சல பாரதி, பண்டைத் தமிழ்ப்பாண்பாடு, ப.3)

இயற்கையில் விளைந்த உணவுப்பொருட்களை உண்டு விலங்குகளை வேட்டையாடி வாழ்ந்தனர் குறிஞ்சித்திணை மக்கள். உணவிற்கான விதைகளை புன்செய் நிலங்களில் விதைத்து, ஆடு மாடுகளை வளர்த்து, அதனால் கிடைக்கும் பால் பொருட்களைப் பண்டமாற்று முறையில் வாழ்ந்தனர் முல்லைத்திணை மக்கள.; காடுகளைத் திருத்தி நாடாக்கி நன்செய் நிலங்களாக மாற்றி உழவுத் தொழில் செய்து மேன்மை அடைந்தனர் மருதத்திணை மக்கள். கடல் பரப்பிலே படகுகளைச் செலுத்தி மீன் பிடித்து, உப்பு விளைவித்து, பண்டமாற்றும் வணிகத் தொழிலும் செய்தனர் நெய்தல் திணை மக்கள். இவ்வாறாகத் திணைத் தொழில் பெருகப் பெருக சிற்றூர்கள் பேரூர்களாக வளர்ச்சி அடைந்தன.

**வேட்டைத் தொழில்**

எளிய அமைப்புடன் இயற்கையோடு இயைந்த குடிச் சமூகத்தில் ஆதி மனிதனின் தொழிலாக இருந்தது வேட்டைத் தொழில். 'சங்க காலம் வரை நன்கு அறியப்பட்ட குறவர்குடி, எயினர் குடி, கானவர் குடி, ஆயர்குடி, இடையர் குடி, யாதவர் குடி, உமணர் குடி என ஐந்திணைக் குடிகளும் சுதேசியானவை." (பக்தவத்சல பாரதி, மேலது, ப.19) இந்த இனக்குழு சமூக மரபில் விலங்காடிகளாக இருந்த மனிதன் மான், பன்றி, முயல், உடும்பு, முள்ளம்பன்றி, புலி, யானை, பறவைகள் போன்றவற்றை வேட்டையாடினான். புலிவேட்டை வீரத்தின் அடையாளமாகப் பார்க்கப்பட்டது. யானை தினைப் புனம் காப்பதற்காகவும், பயிற்சிக்காகவும், தந்தங்களுக்காகவும் வேட்டையாடப்பட்டது. பிற உயிரினங்கள் உணவுக்காக வேட்டையாடப்பட்டன. உணவுக்காக வேட்டையாடப்பட்டவை தீயில் சுடப்பட்டு உணவாகப் பயன்படுத்தப்பட்டன.

'பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் பல்வேறு திணைகளில் புராதனப் பொதுவுடமை காணப்பட்டதைப் புறநானூறு வெகு இயல்பாகப் பேசுகிறது. வேட்டையாடி உணவு சேகரிக்கும் குறிஞ்சித் திணை வாழ்வில் குழு வாழ்க்கை, கூட்டுழைப்பு, கூட்டுறவு, பகுத்தளிக்கும் பாதீடு, பகுத்துண்ணுதல், கொடைக் கடன் முதலான இனக்குழுப் பண்புகள் மேலோங்கி இருந்தன" என்பர். (பக்தவத்சல பாரதி, மேலது, பக் 20,21) வேட்டுவச் சிறுவர்கள் பிடித்துக் கொண்டு வந்த உடும்பின் தசையுடன் சேர்த்து சமைத்த உணவை பாணருக்கும் அவனது உறவினர்களுக்கும் தந்துள்ளனர். இதனை,

'வேட்டைச் சிறார் சேட்புலம் படராது
படுமடைக் கொண்ட குறுந்தார் உடும்பின்

விழுக்கு நிணம்பெய்த தயிர்க்கண் விதவை
யாணர் நல்லவை பாணரொடு ஓராங்கு
வருவிருந் தயரும் விழுப்பினள்" (பாடல் எண் 326, புறநானூறு)

என்ற பாடலடிகள் எடுத்துரைக்கின்றன. உடும்பின் தசையில் சத்து அதிகம் என நம்பினர். மேலும் அது நாய்க்கடிக்கு மருந்தாகப் பயன்பட்டதை,

'ஆர்க்கும் அருவிமலைநாட நாய்கொண்டால்
பார்ப்பாரும் திண்பர் உடும்பு".(பாடல் எண் 36, பழமொழி நானூறு)

என்ற அடிகள் உணர்த்துகின்றன. இதனை 'நாய் கொண்டு வந்தால்; எனப் பொருள் கொள்வாரும் உளர்.

விலங்கினங்களின் இறைச்சியினைப் பண்டமாற்று முறையில் கொடுத்துத் தங்களுக்குத் தேவையானவற்றைப் பெற்றுக் கொண்டனர். தினை விதைத்தும் தேனெடுத்தும் தங்கள் வாழ்வாதாரத்தைப் பெருக்கிக் கொண்டனர் குறிஞ்சி நில மக்கள.; புலி வேட்டையின் போது தன் கணவர் மார்பில் காயம் பட்டதை,

'கொடுவரி பாய்ந்தெனக் கொழுநர் மார்பில்
நெடுவசி விழுப்புண் தணிமார் காப்பென…"(மலைபடுகடாம், அடிகள்: 302,303)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. ஆண்கள் நிகழ்த்திய வேட்டை விலங்கின உணவாதாரத்தையும் பெண்கள் நிகழ்த்திய உணவு சேகரித்தல் தொழில் தாவர உணவாதரத்தையும் பெற்றுத் தந்தது. நாய்களைக் கொண்டும் வில், அம்பு, கல் போன்ற கருவிகளைக் கொண்டும் பழந்தமிழர் வேட்டைத் தொழிலில் ஆளுமை பெற்றிருந்தனர். 'தினைப் புனங்களில் விளைந்த மகசூலை யானை, பன்றி, மான், மந்தி, பறவைகள் முதலானவை மேய்ந்து அழித்தன. (நற்.82, 98, 108, 119, 336, அகம.; 292, 392, கலி. 41, ஐங். 284, குறு. 346) பயிர்களைக் காப்பதற்காக இந்த விலங்குகளை விரட்டியும் வேட்டையாடியும் தடுத்தனர். இவ்வகை வேட்டையும் உணவுக்காகப் பயன்பட்டது".(பக்தவத்சல பாரதி,மேலது, ப.40)

மேய்ச்சல் தொழில்

குறிஞ்சி நிலக் கானவர்கள் செய்த எரிபுன விவசாயம், மலைச் சரிவு விவசாயம் அடுத்த படிநிலையை அடைந்தது. அது இடம்பெயர்வு விவசாயமாகவும் வன்புல விவசாயமாகவும் வளர்ச்சி அடைந்தது. ஆயர்கள் மேய்ச்சல் நிலங்களைத் தேர்ந்தெடுத்து இடம் பெயர்ந்து மேய்ச்சல் தொழிலைச் செய்து வந்தனர். 'சங்க கால ஆயர்களின் பொருளாதாரம் உபரியை மையமிடாத, பிழைப்புக்கு மட்டும் ஆதாரத்தைத் தேடுகின்ற பொருளாதாரமாக இருந்தது. ஆனால் ஒரு கட்டத்தில் கொல்லைக் கோவலர்கள் வன்புல மேலாண்மையையும் செய்ய ஆரம்பித்தனர். (நற்.266: 1-3) இதனால் இக்கட்டத்தில் ஆயர்கள் கலப்புப் பொருளாதாரத்தை ஏற்றுக் கொண்டவர்களாக மாறினார்கள். முல்லை நிலத்தில் புன்செய் விவசாயம் செய்தவர்களை அகநானூறு (194: 73) கொல்லை உழவர் என்று குறிப்பிடுகிறது". (பக்தவத்சல பாரதி, மேலது, ப.47) என்ற கூற்று இங்கு குறிப்பிடத்தக்கது.

மனிதர்களின் பெருக்கத்திற்கு ஏற்ப உணவு உற்பத்திக்கான முயற்சியாகவே கால்நடை வளர்ப்பு பார்க்கப்படுகிறது. இப்புதிய விவசாயப் பகுதிகள் புறவு, கானம், இதை, முதை புனம் எனப் பல்வேறு பெயர்களில் அழைக்கப்பட்டன. அவ்வாறு வாழும் மக்கள் அண்டர், ஆயர், இடையர், குடவர், கோவலர், பூழியர், பொதுவர் என்று பல்வேறு

பெயர்களில் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. அவர்கள் பசு, எருமை, ஆடு, காளை ஆகியவற்றை வளர்த்து அதன் மூலம் கிடைக்கும் பால், மோர், தயிர், வெண்ணெய், நெய் போன்றவற்றை மற்ற திணை மக்களிடம் பண்டமாற்றாகக் கொடுத்துத் தங்களுக்குத் தேவையானதைப் பெற்றுக்கொள்ளும் ஆளுமை பெற்றிருந்தனர். இதனை,

**'பறியுடைக் கையர் மறியினத் தொழியப்**
**பாலொடு வந்து கூழொடு பெயரும்**
**ஆடுடை இடைமகன் சென்னி..."(குறுந்தொகை, 221)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

**வேளாண்மைத் தொழில்**

மனிதன் வாழ இன்றியமையாதது உணவு. நிலத்தை உழுது, நீர் பாய்ச்சி பயிர்த்தொழில் செய்யும் வேளாண்மையே உலகின் தலைமைத் தொழிலாகப் போற்றப்படுகிறது. தமிழரும் இதனையே தலையாக வைத்துச் சிறப்பித்தனர். அதற்காகப் பழந்தமிழர் கையாண்டது ஆழ உழுதல் உத்திமுறையாகும். அதற்காகப் பல வகை நுட்பங்களைக் கொண்டு திருத்தமாகச் செய்தனர். எருதுகளைப் பழக்கினர்.

குறிஞ்சி, முல்லைத் திணை போன்று மருதத்திணை வாழ்வு அமையவில்லை. அதனினும் மாறுபட்டதாக அமைந்துள்ளது. குடி நிலைச் சமூகம் அரசு உருவாக்கச் சூழலை எட்டுகிறது. ஷமன்னர்; என்ற அமைப்பு முறை உருவாகத் தொடங்குகிறது. உற்பத்தியும் உபரியும் அதிகரிக்கும் பொழுது இந்த நிலை ஏற்பட்டுவிடுகிறது. வணிகம் வலுவடைந்து அதிகமான தொழிற்பெருக்கம் உழுதுண்போர், உழுவித்து உண்போர் என்னும் வர்க்க வேறுபாடுகள் தோன்றக் காரணமாகின்றன. இதனோடு இரும்புக் கண்டுபிடிப்பு, உற்பத்திக் கருவிகள் மற்றும் உற்பத்தி முறையில் மாற்றங்களைக் கொண்டு வந்தன. அதனால் சமூகம் தோன்றி ஆண்டான் அடிமை நிலையை எட்டும் நிலை ஏற்பட்டது. நெல்லும் கரும்பும் முதன்மைப் பயிர்களானது. 'ஆதிப் பொதுவுடமைச் சமூகத்தில் தனியுடைமை இல்லை. அரசதிகாரம் இல்லை, இனக்குழுக்கள் எனச் சொல்லப்படும் சமூகத்தில் தலைவர்கள் இருந்தனர். எல்லோரும் கூடி உழைத்தனர். உழைப்பின் விளைவைக் கூடிப் பகிர்ந்து கொண்டனர். சமூகத்தில் குறைந்த அளவிற்கே வேலைப் பிரிவினைகள் இருந்த போதிலும் சமூகம் பிளவுபடவில்லை. தனியுடைமை, அரசதிகாரம் என்பதன் அடிப்படையில் மருத நிலத்தில் நகர நாகரீகத்தோடும் தொழில் வளர்ச்சி மற்றும் வணிகத்தோடும் புதிய நாகரீகம் தோன்றியது". க. பஞ்சாங்கம் (கட்டுரை ஆசிரியர்), தமிழ்ச் செவ்வியல் இலக்கியம் மார்க்சிய ஆய்வுகள், ப.43) அந்நாகரீகத்தில் பொதுவுடமைச் சமுதாயத்திற்கான இடம் மிகவும் குறைவாக இருந்தது.

வயல்வெளிகளில் நன்றாக விளைந்த மகசூல் பிரிவினைவாதம், நில நம்பிக்கைகள் காரணமாக அதிகார மையத்தில் குவியத் தொடங்கியது. வானம் பொய்த்து மகசூல் குறைந்த போது அப்பாதிப்பு உழைப்பாளிகளை மட்டுமே பாதித்தது. அதற்கு வர்க்க பேதம் காரணமாக அமைந்திருந்தது. உழவன் தன் சுற்றத்தாருடைய வறுமையைப் போக்க வரகைக் கடனாகப் பெற்ற செய்தியும் விதைத்தினையை சமைத்து உண்ட செய்தியினையும் புறநானூற்றுப் பாடல்கள் 327 மற்றும் 333 ஆகியன எடுத்துரைக்கின்றன. ஆண்டான் அடிமை சமூகம் உருவான பிறகு அடிமைத் தொழிலாளிகள் ஓய்வில்லாமல்

உழைத்த செய்தியினையும், சங்கப்புறப் பாடல்பள் எடுத்துரைக்கின்றன. விளைந்த மகசூல் நிறைந்த குதிர்கள் யானைக்கூட்டம் போல் காட்சியளித்தன என்று பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

**நெசவுத் தொழில் :**

பழந்தமிழர் இலை தழையினை ஆடையாக உடுத்தியிருந்த காலம் மாறி நுண்ணறிவுத் திறனால் பருத்தி மற்றும் பட்டிலிருந்த நூல்நூற்று ஆடை நெய்து உடுத்திக் கொண்ட செயல் அவர்களின் தனி ஆளுமையைக் காட்டுகிறது. மிகவும் மெல்லிய ஆடைகள் நெய்வதில் சிறந்தவர்களாக இருந்தனர். அவர்கள் ஷகாருகர்; என்ற பெயரால் அழைக்கப்பட்டனர். கண்ணால் பார்த்துமு இழைகளைப் பிரித்து உணரமுடியாத அறுவை, மடி எனப்படும் ஆடை நெய்யும் ஆளுமை பெற்றிருந்;தனர். இதனை,

**'பாம்புஉரி அன்ன வடிவின" (புறநானூறு, 383)**

**'பூக்கனிந்து அரவுஉரி அன்ன அறுவை". (பொருநர்ஆற்றுப்படை,அடி எண்.83)**

ஆகிய பாடலடிகள் உணர்த்துகின்றன.

**கட்டிடத் தொழில் :**

பழந்தமிழரின் கட்டிடத் தொழில் ஆளுமைக்கு கீழடியே ஒரு பெரும் சாட்சியாக விளங்குகிறது. மேலும் தமிழர்கள் அமைந்திருந்த பெருநகரங்கள், கோட்டைகள், அகழிகள், நீர்நிலைகள், வேனிற்பள்ளி, கூதிர்ப்பள்ளி ஆகியன தமிழர்தம் பெருமைக்குச் சான்றுகளாகும். உயர்ந்த மாளிகைகளுடன் நகர அமைப்பு இருந்ததை,

'விண்பொர நிவந்த வேயா மாடத்து"

(பெரும்பாணாற்றுப்படை, அடி எண்.348)

'வென்றுஎழு கொடியொடு வேழம் சென்றுபுகக்
குன்றுகுயின்று அன்ன ஓங்குநிலை வாசல்…"

(நெடுநல்வாடை, அடிகள்.87, 88)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. உயர்ந்த கோபுர வாயில்கள், மண்டபங்கள், தூண்கள், கோயில்கள், அரண்மனைகள், சிற்பங்கள் போன்றவற்றின் அழகைத் தமிழ் இலக்கியங்கள் எடுத்துக் காட்டுகின்றன.

**ஆலைத் தொழில்கள் :**

பழந்தமிழகத்தில் ஆலைத் தொழில் போலச் செயல்பட்டவை,

1. மரத் தச்சுத் தொழில்
2. கல் தச்சுத் தொழில்
3. இரும்பு உருக்குத் தொழில்
4. சங்கு ஆபரணத் தொழில்
5. மணி ஆபரணத் தொழில்
6. பொன் ஆபரணத் தொழில்
7. செம்பு மற்றும் உலோகப் பொருட்கள் தொழில் ஆகியனவாகும்.

விதவிதமான தேர்கள், அழகான சங்கு வளையல்கள், செப்புப் பாத்திரங்கள், வாள், ஈட்டி முதலிய போர்க்கருவிகள் பற்றிய குறிப்புகள் அதிகமாக சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. வெண்கலத்தை உருக்கிப் பாத்திரங்கள் முதலியன செய்பவர்கள்

ஷகஞ்சகாரர்; என அழைக்கப்பட்டனர். முத்துக் குளிக்கும் கொற்கைத் துறைமுகம் உலக நாடுகளுக்கு முத்துக்களை வழங்கியுள்ளது.

**முடிவுரை :**

தமிழர் தம் வாணிபத் தொழில்;, கப்பல் கட்டும் தொழில், மண்ணால் ஆன சுதைச் சிற்பங்கள், மட்பாண்டங்கள் செய்யும் தொழில், தோல் பதனிடும்தொழில், கூடை முடைதல், பனை ஓலை பின்னுதல் போன்ற கைவினைத் தொழில்கள், பூக்கட்டும் தொழில், காலணிகள் செய்யும் தொழில், தோல்-நரம்பு மற்றும் காற்றால் ஒலி எழுப்பும் இசைக் கருவிகள் செய்யும் தொழில், இசை நாடகத் தொழில், சமையல் தொழில் என தமிழர் தம் தொழில் ஆளுமைக்குச் சான்றாகும் பட்டியல் எல்லையில்லாத நீண்ட ஒன்றாகும்.

**துணை நின்ற நூல்கள் :**

1. சாமி சிதம்பரனார் - பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,சென்னை - 2020.
2. பக்தவத்சல பாரதி - பண்டைத் தமிழர் பண்பாடு, அடையாளம் பதிப்பகம், சென்னை - 2020.
3. கோவை வாணன்(ப.ஆ) - தமிழ்ச் செவ்வியல் இலக்கியம்;,மார்க்கிசிய ஆய்வுகள், நியு செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,சென்னை - 2011.
4. க.அ. ஜோதிராணி - சங்க காலத்தில் சமூக ஆய்வுகள்;உலக தமிழாராய்ச்சி நிறுவனம்,சென்னை - 2011.
5. வெ. பெருமாள் சாமி - சங்க காலத் தமிழகத்தின் சமூகநிலை, பாரதி புத்தகாலயம், சென்னை - 2007.

## 36. புதுக்கவிதைகளில் புதிய சிந்தனைகள்

**ந.சிதம்பரம், M.A., M. Phil.,**
ANJAC கல்லூரி, சிவகாசி,
ஆங்கிலத்துறை (ஓய்வு).
DOI 10.5281/zenodo.15074776

Abstract :

Since the emergence of the new poetry movement in Tamil, many new poems have come out with good thoughts. Many contemporary political poems like "We bought at night, it is still not dawn". Poems on love, class, society, science, Marxism, feminism, nationalism, Dravidianism, Dalitism, and ecology are continuously being written by poets. The purpose of this article is to talk about some of these poems on feminism, Dalitism, and ecology. There are many feminist writers like Ambai, Kamaladas, Amritha Pritham, Ismat Suktai in our motherland. They have written many novels and short stories. Many Dalit novels have been published in languages like Tamil, Kannada, and Marathi. Amitakoshi's novel on the environment is a very famous novel.
Key Words : New poem - Modern Literature - Dalithiyam - Dravisiarism

**முன்னுரை:-**

தமிழில் புதுக்கவிதை இயக்கம் தோன்றிய காலம் முதல் இன்று வரை பல புதுக்கவிதைகள் நல்ல சிந்தனைகளைக் கொண்டு வெளிவந்துள்ளன. ***"இரவில் வாங்கினோம் இன்னும் விடியவே இல்லை"*** என்பது போன்ற பல சமகால அரசியல் அங்கதக் கவிதைகள் பல வந்துள்ளன. காதல், வர்க்கம், சமூகம், அறிவியல் சார்ந்த கவிதைகளும், மார்க்சீயம், பெண்ணியம், தேசியம், திராவிடம், தலித்தியம், சுற்றுச் சூழலியம் சார்ந்த கவிதைகளும் கவிஞர்களால் தொடர்ந்து எழுதப்பப்பட்டு வருகின்றன. இவற்றில் பெண்ணியம், தலித்தியம், சுற்றுச் சூழலியம் சார்ந்த சில கவிதைகளைப் பற்றிப் பேசுவது இக்கட்டுரையின் நோக்கம். நம் தாய்த் திருநாட்டில் அம்பை, கமலாதாஸ், அமிர்தா பிரீத்தம், இஸ்மத் சுக்தாய் போன்ற பெண்ணிய எழுத்தாளர்கள் பலர் உண்டு. இவர்கள் நாவல்களும், சிறுகதைகளும் நிறைய எழுதி உள்ளனர். தமிழ், கன்னடம், மராத்தி போன்ற மொழிகளில் நிறைய தலித் நாவல்கள் வெளிவந்துள்ளன. அமிதாகோஷியின் சுற்றுச்சூழல் பற்றிய நாவல் மிகவும் புகழ்பெற்ற நாவலாகும்.

**பெண்ணியம்:-**

தமிழ் மொழியில் சல்மா, குட்டிரேவதி, கனிமொழி, சுகிர்தராணி போன்ற பல பெண் கவிஞர்கள் உள்ளனர். அம்பையின் சிறுகதையில் ஒரு 40 வயதுப் பெண் தான் ஒருலட்சம் தோசைகளுக்கு மேல் சுட்டுவிட்டதாக நினைக்கின்றாள்.

அ.சங்ககிரியின் கவிதை இப்படி ஆரம்பிக்கின்றது:-

**"சமையல் செய்தல்,**
**படுக்கை விரித்தல்,**
**குழந்தை பெறுதல்,**
**பணிந்து நடத்தல்."**

இவைகளே எனது கடமைகள் ஆகும். இடதுசாரி சிந்தனையாளரும் கவிஞருமான கந்தர்வனின் கவிதைஇது:-

**"நாளும் கிழமையும் நலிந்தோர்க்கு இல்லை**
**ஞாயிற்றுக்கிழமையும் பெண்களுக்கு இல்லை"**

ஏழைகள் பண்டிகைகள், திருவிழாக்கள் கொண்டாட முடியாமல் பொருளாதாரச் சிக்கலில் தவிக்கின்றனர். பணியில் இருக்கும் அனைவரும் ஞாயிற்றுக் கிழமை அன்று ஓய்வில் இருப்பர். ஆனால் பெண்கள் சமையலில் இருந்து ஓய்வு பெற முடியாது.

**ஆனந்தனின் நறுக்கவிதை இது:-**

**"மானும், மீனும், பூவும் தெரியும்,**
**தெரிவதில்லை, அவள் கண்களின் கண்ணீர்."**

பொதுவாக கவிஞர்கள் பெண்களின் கண்ணழகை மீன்விழியாள், மான்விழியாள், என்று புகழ்கின்றனர். அவர்களின் கண்களில் உள்ள கண்ணீர் துளிகள் பற்றி பேசக் கவிஞர்களுக்கு விருப்பமில்லை.

**தலித்தியம்:-**

தலித்தியம் பற்றிப் பேசும் பொழுது, சுகிர்தராணியின் தலித்திய கவிதை நினைவுக்கு வரும். சிலர் சுகிர்தராணியிடம் அவரது தந்தையின் பெயர், அவரது வேலை, அவரது வசிப்பிடம், பற்றி விசாரிப்பர். இக்கேள்விகளுக்குப் பின்னால் ஓர் ஆர்வம் உள்ளது. அவர்கள் மறைமுகமாக அவரது சாதியின் பெயரைத் தெரிந்து கொள்ள விரும்புகிறார்கள். **இதை உணர்ந்த கவிஞர்:-**

**"பளிச்சென்று சொல்லிவிடுகிறேன்,**
**நான் பறையச்சி என்று"**

எனக் கவிதையை முடிக்கின்றார். இது எதார்த்தமாக அனைத்து இடங்களிலும் நடக்கும் ஒரு நிகழ்வு தான். *அன்பாதவன்* என்ற கவிஞர் ஒரு மேல் ஜாதி வங்கி அதிகாரி மற்றொரு கீழ்சாதி வங்கி அதிகாரியுடன் பேசுவதாக எழுதியுள்ள கவிதை இது:-

**"-------உங்களுக்கென்ன**
**உங்களுக்கெல்லாம் தான்**
**ரிசர்வேஷன் இருக்குதே**
**எங்களவா தான் இப்போ**
**பாம்பே, டெல்லி, அமெரிக்கா என்று**
**போயிட்டு ரொம்ப கஷ்டப்படுறா"**

கீழ்சாதி மக்கள் அரசுப் பணியில் மகிழ்ச்சியாக இருப்பதாகவும், மேல் சாதியினர் தனியார் துறையில் பலஊர்களிலும் நாடுகளிலும் அவதிப்படுவது போன்ற ஒரு பிரமை உருவாக்கப்பட்டுள்ளது. இரண்டு வருடங்களாக நடந்த ஜாதிக் கொடுமைகளுக்குக் கொடுக்கப்படும் சிறிய நிவாரணம் தான் ரிசர்வேஷன் என்ற உண்மை மறைக்கப்படுகின்றது. காசிஆனந்தன் கட்டளையிடுவது போல் ஒரு கவிதை எழுதியுள்ளார்:-

**"உன்னை ஒதுக்கவும்**
**வெளியே வைக்கவும்**
**இவன் யார் சொல்**
**இனி எங்கள் சேரிக்கு**
**வெளியே உங்கள் ஊர்"**

ஒதுக்குதல், தொட்டால் தீட்டு என்று கூறுவது, தேனீர்கடையில் தனிக்குவளை போன்ற ஒடுக்குமுறைகளை எதிர்த்துப் போராடச் சொல்லும் கவிதை இது. பாமா என்ற பெண் எழுத்தாளர் 'அண்ணாச்சி' என்ற சிறுகதை எழுதியுள்ளார். அக்கதையில் வரும் தலித் கதாநாயகன் தன்னைவிட உயர்ந்த ஜாதிக்காரரையும் தாழ்ந்த ஜாதிக்காரரையும், அண்ணாச்சி என்று ஒரே பாணியில் அழைத்தான் என்ற காரணத்தால், தண்டிக்கப்படவும், கேலிசெய்யவும் படுகின்றான். எந்தசாதி என்றாலும், மனிதன் மனிதன்தானே எனஅவன் கூறுவதுடன் கதை முடிகிறது.

**சூழலியம்:-**

மனிதனின் சுயநலமும், பேராசையும், இயற்கையை அளவில்லாமல் சுரண்ட வைக்கின்றது. இதனால் நிலம், நீர், காற்று மாசு படுகின்றது. பலவித நோய்கள் உற்பத்தி ஆகின்றது. அதிகவெப்பம், அதிகமழை போன்றவற்றால் மக்கள் பல இன்னல்களுக்கு ஆளாகின்றனர்.

இயற்கையை மனிதன் நேசிக்கலாம்; ரசிக்கலாம்; ஆனால் இயக்க முடியாது. பூக்களைப் பூக்க வேண்டும் என்று கட்டளை இடமுடியாது. பூ மலரும் அழகை மனிதன் கண்டு ரசிக்கலாம். ரசிக்காமலும் இருக்கலாம். மனிதன் இயற்கையை இயக்க நினைத்ததன் பேரழிவுதான்: சுனாமி, பூகம்பம் போன்ற இயற்கைப் பேரிடர்கள் ஆகும்.

மரங்கள் மனிதனுக்குச் சுவாசக் காற்றையும், நிலத்திற்கு வளமான உரத்தையும் தருகின்றது. நிலச்சரிவைத் தடுக்கும் தடுப்பரணாகவும் திகழ்கின்றது. பலவித நோய் தீர்க்கும் மருந்தினையும், மக்களின் முதல் தேவையான உணவையும் தந்து உதவுகின்றது. மனிதன் பிறப்பிலிருந்து இறப்பு வரை மரத்துடன் பயணிக்கின்றான். இத்தகு சிறப்பு வாய்ந்த மரங்களைப் பற்றிய *பாலசாண்டில்யன்* எழுதிய கவிதை இது:-

**'மரங்களை வெட்டி**
**காகிதம் செய்து**
**அதில் எழுதி வைக்கிறான்**
**மரங்களைக் காப்போம் என்று"**

இது மனிதனின் இரட்டைநிலையைக் காட்டுகின்றது:- "பேச்சு ஒன்று, செயல் ஒன்று."என்ற நிலைப்பாட்டினைக் கூறுகிறது. கவிஞர் வைரமுத்துவின் தண்ணீர் தேசம், மூன்றாம் உலகப்போர் போன்ற இரண்டு நாவல்களில் சுற்றுச்சூழல் பற்றி எழுதியுள்ளார். சூழலியல் பற்றி அதிகம் சிந்திக்கும் வைரமுத்துவின் 'வாழத் தெரியவில்லை' என்ற கவிதையின் ஒருபகுதி:-

**"இயற்கையின் மடியைத் தாண்டி**
**செயற்கையில் விழுந்து**
**சொந்தச் சிறகுகள் இழந்து**
**போதை மயக்கத்தில் கிடந்து**
**வாழ்வின் மகுடத்தை இழந்ததம்மா**
**இயற்கை மடிக்கு மீண்டும்**
**இறங்கித் தான் ஆக வேண்டும்"**

இரசாயன உரங்கள், வாகனப்புகை, தொழிற்ச் சாலை கழிவுகள், போன்றவற்றால் இயற்கையை மாசுபடுத்திய மனிதன் தன் தவறை உணர்ந்து இயற்கை வாழ்வுக்குத் திரும்ப வேண்டும்.

**மூன்று இயக்கங்கள்:-**

பெண்களுக்கும், கீழ்சாதியினருக்கும் சமஉரிமை, சமமரியாதை அளிக்கவேண்டும். இதனால் அடிமைத்தனம் நீங்கி சமூக ஒற்றுமை வளரும். இயற்கையோடு இணைந்த வாழ்க்கை வாழும் போது, சுற்றுச்சூழல் பாதுகாக்கப்படும். பெண்ணியம், தலித்தியம், சூழலியம் என்ற மூன்றையும் இணைத்த காசிஆனந்தனின் கவிதை:-

**“வதைக்கப்படும் பெண்ணுக்காக**
**பெண்தான் போராட வேண்டும்**
**ஒதுக்கப்படும்**
**தாழ்த்தப்பட்டவனுக்காகத்**
**தாழ்த்தப்பட்டவன் தான்**
**போராட வேண்டும் என்கிறாய்**
**அழிக்கப்படும் காட்டுக்காக**
**காடு தான் போராட வேண்டும்**
**என்பாயோ”**

பெண்களுக்காக தாழ்த்தப்பட்டவர்களுக்காக மனிதநேயம் கொண்ட மனிதர்கள் யாவரும் போராடலாம். இயற்கை நேயம் கொண்ட மனிதர்கள் இயற்கையைப் பாதுகாக்க வேண்டும். இதனால் தான் *பாரதி:-* “தையலை உயர்வுசெய்” - என்றும், பாரதிதாசன்:- “தெருவெல்லாம் மரம் வளர்”- என்றும் எழுதினார்கள். ஜெயகாந்தனும், ஜானகிராமனும் மறக்க முடியாத பெண் கதாப்பாத்திரங்களை உருவாக்கியுள்ளனர்.

**முடிவுரை:-**

சங்கஇலக்கியம், காதல், வீரம் பற்றி பேசுகின்றது. அறஇலக்கியங்கள் வாழ்வின் நெறிகள் பற்றி பேசுகின்றது. ஒவ்வொரு காலத்திலும் இலக்கியத்தின் உள்ளடக்கமும், உருவமும் வேறுபடுகின்றது. இன்று பெண்ணியம், சூழலியம், தலித்தியம் பற்றி பேசும் நாம், நாளை செயற்கை நுண்ணறிவு, நானோ தொழில்நுட்பம் பற்றி பேசலாம். இலக்கியத்தில் மாற்றங்கள் உருவாக சமூக மாற்றங்களும், அறிவியல் மாற்றங்களும் துணைபுரியும்.

**எதுமாறினாலும் மனிதனின் அன்பு, கருணை,மகிழ்ச்சி**
**என்றும் அவனுடன் மாறாமல் இருக்கும்.**
**தொடர்ந்து பயணிக்கும் அவனுடன்.**

**உதவிய நூல்கள்:-**

1. ஆத்திசூடி, சாரதாபதிப்பகம்,சென்னை 14, 2005.
2. சரஸ்வதி களஞ்சியம் மூன்று பாகங்கள், கலைஞன் பதிப்பகம்,19, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை.

# 37. Ancient Kaval system in Tamilnadu- A study

**Dr. K. Paul Duraichi**
Assistant Professor
Department of History
V. H. N. SenthikumaraNadar College ( Autonomous )
Virudhunagar-626 001.
DOI 10.5281/zenodo.15077016.

**Abstract**

*The process of development of the Kavalkarars becoming more powerful and independent in their respective regions, during the times of political instability and administrative weakness, was a common phenomenon, finding expression through out the history of Tamilnadu.*

**Keywords** : Kaval system, Nagara kaval and Kudi kaval

## The Kaval system in Tamilnadu

The word Kaval means "watch". It is also used to denote the functionary who performs this duty. It was an ancient and indigenous institution of Tamilnadu. This was a hereditary village police office bestowed with well defined rights and responsibilities. Ample references are available regarding Kaval system in Sangam literature, and in the inscriptions of Pallava, Chola and Pandia kings. The terms like Ur Kappar (Protector of the Village) in Purananooru, (Sangam literature) and Nadu Kaval (nadu means bigger or wider territorial division), Padi Kaval (Padi means village or land) and Perum Padi Kaval (Perum means bigger or wider) in the inscription of ancient kings of Tamilnadu proved the existence of Kaval system in Tamilnadu right from the sangam period. Those who were engaged in this duty were known as Kavalkarar (guardian or protector).

Kaval system in Tamil Nadu is based on an ancient system of governance. From the high level appropriate to Chiratrasan, gradually there were various types of guard, it is evident that the power of the government has been consistent regardless of the status of the police. For this, Desakaval, Nagara kaval and Kudi kaval . Temple guard; Names like lake guard, pond guard, canal guard, forest guard, village guard, water guard, etc., the person who accepts the responsibility of guarding will accept it according to the government order. The hairy Sethu king of that time had the title SethuKavalan. Evidence suggests that Kavalan was a special title for a great emperor like this.

During the handover of policing responsibilities to the government; Tamil literature illustrates the primacy of national martyrs: those who affected the good will of kings. All these in those days; eyelids; The names given to the forts, inns, huts, devasthanas, villages, etc., are evident from the charters established, grants granted, etc. How the kaval system was used in later times is illustrated by the Nawabs of Karnataka, the Nawabs of Arcot, the Nayaks of Madurai, the Kumbiniyars and the administration of the British authorities. Most notably: Arianathamudi, TirumalaiNayak and Khan Sahib.

In times of change in the history of policing; Along with the kaval system the autocratic regime that developed during the time of the Tamil kings i.e. Velirs, small land kings, the rule was destroyed at the beginning. Most importantly, it was ThirumalaiNayak's regime that destroyed the country and the 10 national leaders from around Madurai. Tirumala Binnathevar is an example of how many presidents who were left unscathed helped the country. An example of this is the rule system, If they have remained unoppressed as small land kings, the decline of the Nayak regime is not a reason for not supporting them.

Let us now look at the evidence of how the Kaval system has survived. Those from the charge of police administration; The natives called them patriots or Ambalakarars. For example, among the western side of Thanjavur district, we can say "KangayaAmbalakkar first. They had police villages up to Chennaipatnam. Next, we can say Rayamundar, Cholakar, Cholakankar, Melaliya, NataraiyarSembianMutharasu, Vannimundar, Kodumrayar and Kandirayar etc. Let us see what are their rights and duties.

The primary function of a Kavalkarar whether, Men Kavalkarar or KudiKavalkarar, was to protect the grain, cattle, standing crops and other domestic properties of the inhabitants in the villages under their Kaval control from thieves and petty plunderers and to guard the public places like temples, highways, markets, trade fares, choultries and to keep an eye over the strangers and travellers. If any robbery occurred, it was the responsibility of the Kavalkarars to trace the culprit and recover the stolen properties, failing which he had to compensate the loss.

There were three classes of village police in the Tirunelveli district.

a. Taliyaris – These are the government village police paid by the government at rates of ranging from Rs.2/- to Rs.4/- per mensem from the village cess fund levied at the rate of one anna per rupee on land revenue assessment.
b. Kavalgars – Zamindar and Devasthanam village Police. These receive no regular pay for their services. Some receive 'Sutantrams' fees and emoluments at intervals, others enjoy maniems or inam lands, which are supposed to support countless relations, and connections termed pangalies (share holders) while nearly all receive some payment in kind at harvest.
c. KudiKavalgars – These are private watchmen employed by villagers on their own account for the greater safety of their property. They are usually paid in kind in the understanding that they return an equivalent in values for anything stolen. An agreement to this entered into when the KudiKavalgars are appointed.

The popular method of investigation followed by the Kavalkarars to find out the offenders was by tracing and following the footprints of the offenders and locating their whereabouts. In case the footprints of the offenders crossed the borders of a particular village or villages, it became the responsibility of the Kavalkarars of those villages to trace the offenders. Another method was to pass the information to the fellow Kavalkarars of the neighbouring villages. By using this Kavalkarar network, they were able to monitor the movement of the offenders and locate their hiding places.

இதன்மூலம் உற்றுணர்தல், வழிகாட்டும் பண்பு, இருவர் மீதான அன்பின் வெளிப்பாடு, சரியாகப் பேசும் தன்மை ஆகிய ஆளுமைப் பண்புகள் தோழியிடம் புலப்படுவதை நன்றாக அறிய முடிகின்றது.

**அறமும் பொருளும்:**

இல்வாழ்க்கையில் பொருளீட்டுதல் என்பது இன்றியாமையாப் பணியாகும் அதனால்தான் வள்ளுவர்

**'அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு**
**இவ்வுலகம் இல்லாகி யாங்கு'**

[திருக்குறள் மூலமும் ஆய்வுரையும் - பக் 78, பாடல்-24]

என்றார் பொருள் இல்லையென்றால் வாழ்க்கைச் சிக்கலாகிவிடும் என்பதால் பொருள் ஈட்டுதல் இல்வாழ்க்கையில் மிக முக்கியமான பணியாகும். பொருள் இன்றியமையாதது என்றாலும் அது தலைவியுடனான அன்பிற்கு இடையூறாக அமைந்துவிடக் கூடாது என்ற எண்ணம் உடையவளாகத் தோழி இருப்பதைப் பல பாடல்களில் அறியமுடிகின்றது. பொருள் ஈட்டச் செல்லும் தலைவன் தலைவியைப் பிரிய நேரிடுகிறது இதைத் தலைவியால் ஏற்றுக்கொள்ள இயலாத சூழலில் அந்தப் பொருள் ஈட்டுவதற்கான பிரிவைத் தோழி அற மீறலாகவே உணர்கிறாள். அற மீறல் இல்லையென்றாலும் உண்மை அன்பின் மீது அது பெரிய தாக்கத்தை, வலியை ஏற்படுத்துவதால் அப்பொருள் ஈட்டலை அறமீறல் என்றே தோழி குறிப்பிடுகின்றாள். அறமே அறமீறல் என்று தோழி தலைவனுக்கு அறிவுறுத்தும் பாங்கு சிறப்புக்குரியது.

**"அறன் இன்றி அயல் தூற்றும் அம்பலை நாணியும்**
**வறன் நீந்தி நீசெல்லும் நீள் இடை நினைப்பவும்**
**இறைநில்லா வளைஓட இதழ் சோர்வு பனி மல்கப்**
**பொறைநில்லா நோயோடு புல்என்ற நுதல்இவள்**
**விறல்நலன் இழப்பவும் வினைவேட்டாய்! கேளினி"**

[கலித்தொகை தெளிவுரையுடன்(2)-பக்–பாலைக்கலி-2-பக்30]

கடமையே கண் எனத் துணிந்து செயல்படும் தலைவனே நான் கூறுவதைக் கேட்பாயாக என்று தோழி தலைவனை விளித்துக் கூறும்போது, பிரிவுத் துயரைத் தாங்க முடியாமல் வருந்தும் தலைவியிடம் இரக்கம் காட்ட வேண்டும். அன்பு காட்ட வேண்டும் என்று அறநெறி மறந்து செயல்படுபவனாகியன தலைவனிடம் கூறுகிறாள் தோழி. இவ்வாறு அன்பின் மேன்மையை உயர்த்திக்காட்ட அறத்தையே அறமீறல் என்று சுட்டிக்காட்டும் தோழியின் பாங்கு சீர்தூக்கிப் போற்றத்தக்கது ஆகும்.

அதே சமயம் தோழியின் இந்தக் கூற்று 'அன்பு' என்ற பண்புக்குச் சிதைவும் இல்லாமல், வாழ்க்கைச் சிக்கலுக்கு இடம் தராமலும் அமைந்து அறத்தை விளக்குவதாக அமைந்துள்ளது.

**அறமும் உணர்ந்துகொள்வதும்**

பொதுவாக ஒன்றைப் பார்த்து, தன் அறிவையும் அதனோடு பயன்படுத்திஉண்மையை ஓரளவுக்கோ, முழுமைக்கோ அறிந்துகொள்ளக் கூடியவர்கள் மிகச் சிலரே. அதில் தோழி என்பவள் தலைவி, செவிலி, நற்றாய் ஆகியவரோடு நெருங்கிப்

பழகும் வாய்ப்புடையவள். ஆகவே தோழி, தலைவி தன்னிடம் எதையாவது மறைக்க முயன்றாலும் அதைத் தோழி அறிந்து உணர்ந்துகொள்வாள்; அத்தகைய ஆற்றலுடையவள். அந்த வகையில் தலைவி ஒருத்தித் தன் காதலை மறைத்துத் தோழிக்குத் தெரியாத வகையில் தான் இருந்து கொண்டிருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறாள். ஆனால் தலைவியின் காதலை உணர்ந்த தோழி, அதனைத் தலைவியின் வாயாலே பெற வேண்டும் என்று கருதி, தலைவி எவ்வாறு காதல் கொண்டாள் என்பதைத் தோழி தலைவியிடமே நடித்துக் காட்டுகிறாள். "கலையுணர்ச்சி மிக்க கலைஞர்கள், அறிவின் வாயிலாக உலகத்தை அறிவதைவிட புலன்களின் வாயிலாக உலகத்தைக் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று உணர்வதே மிகுதியாகும்" [இலக்கியத்திறன், பக்-39], என்பதற்கிணங்க தோழியும் புலன்கள் வாயிலாகப் பெற்ற அனுபவத்தைக் கொண்டு தலைவியின் காதலை உணர்ந்து கொண்டாள். தலைவியே அதைக் கூற வேண்டுமென்று, தலைவி எவ்வாறு காதல் வயப்பட்டாளோ அதேபோல் தானும் காதல் வயப்பட்டதாகக் கூறி நடிக்கிறாள். தோழி, தலைவி தன் காதலை அவள் வாயாலேயே கூற வைக்க வேண்டும் என்ற நோக்கில் மேற்கொள்ளும் செயலாக இருந்தாலும் இது தலைவியைக் காத்துக்கொள்ளத் தோழி செய்யும் அறச் செயலே.

> ....................................................
> **பெண்அன்று உரைத்தல் நமக்காயின், இன்னதூஉம்**
> ........................................
> **ஐய சிறிது என்னை ஊக்கி எனக் கூறத்**
> **தையால்! நன்று என்று அவன் ஊக்க, கைநெகிழ்பு**
> **பொய்யாக வீழ்ந்தேன் அவன் மார்பில்! வாயாச் செத்து**
> **ஒய்யென ஆங்கே எடுத்தனன் கொண்டான் மேல்**
> ..........................................................

[கலித்தொகை தெளிவுரையுடன் (1)குறிஞ்சிக்கலி 1- பக்-129]

இவ்வாறு தலைவனின் காதலை அறியவில்லை என எண்ணும் தலைவியிடம் உண்மையை அறிந்துகொள்ள தோழி மேற்கொள்ளும் ஓர் உளவியல் தந்திரமே அன்றி வேறெதுவும் இல்லை. இது அன்பும் அறமும் கலந்த ஓர் உணர்ச்சி நிலையே.

**முடிவுரை:**

இவ்வாறு தோழி என்பவள் அறத்தை எவ்வாறு பார்க்கிறாள், உணர்ந்துகொள்கிறாள்,பயன்படுத்துகிறாள், கற்பிக்கிறாள், என்பதை இந்த ஆய்வுக்கட்டுரை ஓரளவுக்குப் புலப்படுத்துகிறது. அவ்வாறாகத் தோழியின் மேன்மைகளை, செயல்களை, எண்ணங்களை அறத்தின் புதிய பார்வையில் பார்க்கவும், சிந்திக்கவும் தூண்டுகிறது என்பதை ஒரு சில கலித்தொகைப் பாடல்களின் வழி இக்கட்டுரை நிரூபித்திருக்கிறது. இந்த நோக்கில் இன்னும் ஆழமாக ஆராய்ந்தால் "கற்றறிந்தோர் ஏத்தும் கலி" என்ற தொடரின் மேன்மையை இன்னும் நுட்பமாக அறிந்துகொள்ள முடியும்.

**பயன்பட்ட நூல்கள்:**

1. இராசமாணிக்கனார்.மா, கலித்தொகை தெளிவுரையுடன் (1), 2002, வள்ளுவர் பண்ணை சி.ஐ.டி. நகர், சென்னை-35.
2. இராசமாணிக்கனார்.மா, கலித்தொகை தெளிவுரையுடன் (2), 2002, வள்ளுவர் பண்ணை சி.ஐ.டி. நகர், சென்னை-35.
3. சுப்பிரமணியம்.ச.வே, தொல்காப்பியம் முழுவதும் விளக்கவுரை, 2005, மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம் -608001.
5. பெரியண்ணன்.கோ, திருக்குறள் பெரியண்ணன் உரை, 2012, வனிதா பதிப்பகம், தி.நகர், சென்னை-17.
6. மருதநாயகம்.ப, திருக்குறள் மூலமும் ஆய்வுரையும், 2024, செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம், பெரும்பாக்கம், சென்னை-100.
7. வரதராசன்.மு, இலக்கியத் திறன், 2000, பாரிநிலையம், 184, பிராட்வே, சென்னை -108.

